# விடியுமா?

(வங்க நாவல்)

ஸதீநாத் பாதுரி

தமிழாக்கம் :

என். எஸ். ஜகந்நாதன்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

புது டில்லி

1982 (*Saka* 1904)
Reprinted 1986 (*Saka* 1907)



விலை ரூ. 19–75

*Original Title :* **JAGARI (Bengali)**
*Tamil Translation :* **VIDIYUMA**

Published by the Director, National Book Trust, India, A-5 Green Park, New Delhi-110016 and printed at Saraswati Art Printers, 8247/2 New Anaj Mandi, Delhi-110006

# முன்னுரை

**வங்க நாவல் யுகமும், ஜாகரியும்**

வங்க நாவல் இலக்கியம் 'ஆலாலேர் கரேர் துலால்' (1858) என்ற நவீனத்துடன் தொடங்குவதாகப் பொதுவாகக் கணிக்கப்படுகிறது. இந்த நூலில் ஆசிரியர் ஓரளவு விஷய ஞானமும் உணர்ச்சிப் பாங்கும் வெளியிட்டுள்ளார். எனினும், வங்க நாவல் இலக்கியத்தின் முதல் முக்கிய புருஷர் பங்கிம் சந்திர சட்டோபாத்யாயா தாம் என்பதில் சந்தேகம் இல்லை.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு விஷயத்தை ஏற்றுக்கொள்வது உசிதம். ஒரு நாவலுக்கு உரித்தான லட்சணங்களை 'ஆலாலேர் கரேர் துலால்' கொண்டிருக்கிறது என்றாலும், ஒரு நாவலுக்குத் தேவையான உயிர்த் துடிப்பு அதில் இல்லை. வங்காள நாவலை ஒரு சக்தி வாய்ந்த கலைப் படைப்பாக உருவாக்கியது பங்கிம்சந்திரர் தாம். அவர் படைத்த பாத்திரங்களின் பொங்கியெழும் தனிமனித வேட்கைகளைப் பற்றிச் சந்தேகமே இல்லை. இந்தப் பாத்திரங்களின் வாழ்க்கை நெறிகள், வெற்றி தோல்விகள் ஆகியவற்றின் சம்பந்தமாய் நூலாசிரியரின் பத்தொன்பதாம் நூற்றாண்டு நோக்குகள் பற்றியும் சந்தேகம் இல்லை.

அவருடைய சமூக நாவல்களில் நடமாடும் பாத்திரங்கள் அந்த யுகத்தில் புதிதாக எழுச்சி பெற்ற 'பத்ரலோக்' வர்க்கத்தின் மனப் பாங்கைப் பிரதிபலிக்கின்றனர் என்பதிலும் ஐயமில்லை. எனினும், நூறு வருஷங்களுக்குப் பிறகு திரும்பிப் பார்த்தால், அந்த யுகத்து உயர் வர்க்கத்து மக்களான அவருடைய பாத்திரங்கள் ஒரு குறுகிய, அடைசலான, சமூக அமைப்பில் அகப்பட்டுக்கொண்டு தங்களை அநாவசியமாக அந்தவலையில் வதைத்துக் கொண்டார்கள் என்று தான் தோன்றுகிறது. இருந்தாலும், அவர் படைத்த பெண் பாத்திரங்களை மறக்கவோ ஒதுக்கித் தள்ளிவிடவோ முடியாது.

தனித்துவத்திலோ, தொனியிலோ குண அமைப்பிலோ, ஜீவத் துடிப்பிலோ, அன்றாட வாழ்க்கையைப் பிரதிபலிப்பதிலோ சைபலினீ (சந்திரசேகர், 1875) மறக்க முடியாத படைப்பு. ரோஹிணி (கிருஷ்ணகாந்தரின் உயில், 1878) இணையில்லாதவள். மிருண்மயி (கபாலகுண்டலா, 1866) கணத்துக்குக் கணம் ஆச்சரிய மூட்டுபவள். அவரது உயர் வர்க்கத்து ஆண் பாத்திரங்கள் ஒரு போலி ஒருமையைத்

தேடி வீணே அலைந்தனர் என்றாலும், அவருடைய பெண் பாத்திரங்கள் —'தேவி சௌதுராணி' (1884)யில் கூட, அதன் குறுகிய கற்பனையில் கூட—துடிப்புடன், உண்மையினின்று பிறழாத உணர்ச்சியுடன், வாழ்க்கையை நுகர்ந்தனர்.

வீட்டுக்குள்ளேயே இருக்கும் பெண்களுக்கும் வெளியுலகில் நடமாடும் ஆண்களுக்குமிடையேயுள்ள வேற்றுமை—சாரமற்ற ஆண் மகனுக்கும் துடிப்புள்ள பெண்மணிக்கும் இடையே உள்ள தூரம்—தங்கள் தேவைக்காகப் பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் ஏற்படுத்திக்கொண்ட காலனி ஆட்சிச் சூழலில் உழலும் இந்திய மத்திய வர்க்கத்தின் சாபக்கேடு போலும்.

ரவீந்திரநாதரைப் பொறுத்தவரை, நமது மத்திய வர்க்கத்தின் சிதைவுகளை அவர் சோகேர் பாலி (1903)யிலேயே இனம் கண்டு விட்டார். அவருடைய ஆண் பாத்திரங்கள் இந்த முழுமையின்மையை எதிர்த்துப் போராடியுள்ளனர். கதாநாயகர்களைப் பற்றிய இத்தகைய நோக்கின் காரணமாக ,அவருடைய நாவல்கள் மெலோ ட்ராமா போன்றிருந்தாலும், உண்மையில் இந்தப் பாத்திரங்கள் உள்மன இறுக்கங்களுடன் போராடிக் கொண்டிருக்கும் தனி மனிதர்கள். இத்தகைய உயிர்ப்புள்ள பாத்திரங்களில் கோரா, சதீஷ், அதிந்திரா, மறக்க முடியாதவர்களாக எப்பொழுதும் இருப்பர். மேலும், இவரது பெண் பாத்திரங்களின் விசேஷத்துவத்தை நாம் மனத்தில் கொள்ள வேண்டும். பிரேைதினி, ஸுசரிதா, தாமினி, குமு, ஏலா— இவர்களில் எவருமே செல்வமும் செழிப்பும் நிறைந்த சூழ்நிலையிலிருந்து வந்தவர்கள் அல்ல. வறுமையிலும், துன்பத்திலும் உழன்று வெளிவந்த வாழ்க்கை, இவர்களுடையது.

நம் நாட்டில் கட்டுப்பாடுகளால் முடக்கப்பட்ட வாழ்க்கைகளின் வரம்புகளுக்கு உள்ளே இருந்து கொண்டே தம் தனித்துவத்தை வளர்த்துக் கொண்டவர்கள் இவர்கள். அவருடைய கடைசிக் காலத்தில் எழுதிய சேஷர் கபிதா (1929) என்ற 'ரொமான்டிக்' நாவலின் நாயகி லாவண்யா, தானே சம்பாதித்து வாழ்க்கை நடத்தும் governess. உண்மையிலேயே, சோகர் பாலி என்ற நாவலுடன்தான் வங்காள நாவலின் இருபதாம் நூற்றாண்டுக் காலகட்டம் துவங்கியது என்று சொல்லவேண்டும்.

இதற்குப் பிறகு தான் பங்கிம் சந்திரர் வளர்த்த, பாத்திரங்களையும், நிகழ்ச்சிகளையும் புறத்திலிருந்து வர்ணிக்கும் நாவல் உத்தி வழக்கிலிருந்து விலக்கப்பட்டது. இறுக்கம் நிறைந்த மனப் போராட்டங்கள் கூடிய நாவல்களின் காலம் தொடங்கியது. தனி மனிதத்துவம் முதலிடம் பெற்றது. இதையெல்லாம் துவக்கி

வைத்தவர் ரவீந்திரநாத் தான். அவரது கோரா, (1910) சதுரங்க் (1915) என்ற இரண்டு நாவல்களில் நாயக நாயகிகள் மனங்களில் வெதும்பும் தனி வேதனைகள் உன்னத கவலைக்கே உரித்தான உண்மையுடன் சித்திரிக்கப்பட்டுள்ளன. இரண்டும் பல நூற்றாண்டு களுக்கு முன் எழுதப்பட்டவையென்றாலும், இன்றும், கௌரவத்துக் குரிய கலைநயமும் கட்டுக்கோப்பும் கொண்டவையாகக் காட்சி தருகின்றன.

பங்கிம் சந்திரரின் நாயக நாயகிகள் மலை போன்ற நிகழ்ச்சிகளால் எழுப்பப் பெற்று கீழே விழுகின்றனர். ரவீந்திரநாதரின் நாவல்களில் இத்தகைய பரிமாணத்தில் நிகழ்ச்சிகள் இல்லை. ஆனால் அசாதாரண பாத்திரங்களின் தனித்துவத்தின் ஸ்பரிசத்தால் சாதாரண சம்பவங்கள் கூட அசாதாரணமானவைகளாகி விடுகின்றன. ரவீந்திரநாத் நிகழ்ச்சி களில் எழும் இறுக்கங்களை — தனிமனிதன் உண்மையான வாழ்க்கை லயத்தைக் கண்டுபிடிக்கும் உத்தேசத்துடன் — தேடுகிறார். கோரா வின் பூர்விகத்தை வாசகர்களிடமிருந்து மறைக்கும் மெலோ ட்ராமா ரவீந்திரநாதரின் ஒப்புதலுடன் செய்யப்பட்டதல்ல. வங்காள நாவல் என்ற கலைப்படிமத்தின் சிருஷ்டிகர்த்தா பங்கிம் சந்திரர் தாம் என்றாலும், ரவிந்திரநாதரே இதை வங்க மத்திய வர்க்கம் தன் வேட்கைகளை வெளியிட்டுத் தன்னை இனம் கண்டுகொள்ளும் சாதன மாக மாற்றியவர்.

தசை ரத்த நாளங்களாலாகிய மனிதர்களின் பேரார்வங்கள், நிராசைகள் ஆகியவற்றின் உருவங்களைப் பங்கிம்சந்திரர் வடித்தெடுத் துள்ளார். ரவீந்திரநாதரோவெனில் ஒரு தனிமனிதனின் நிறைவுக்கு ஏற்படும் தடங்கல்களைப் புரிந்து கொள்ளுவதற்கு மீண்டும் மீண்டும் முயன்றார். இதன் காரணமாகத்தான் அவர் நாவல்களில் எவை இரண்டுமே ஒன்றைப் போல் மற்றொன்று—அதன் தொனியில், அதன் அமைப்பில்—இருப்பதில்லை.

பங்கிம்சந்திரரின் நாவல்கள் classical architecture போன்றவை. அவரது எந்த முக்கியமான அத்தியாயங்களிலும் நிகழ்ச்சிகள் நாடக பாணியில் விரிந்து வளரும் தன்மை நினைவு கூறத்தக்கது. ரவீந்திர நாதரின் நாவல்களில் ஓர் அறிவு ஜீவியின் 'தேடலுக்கு' (Intellectual quest) முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. எனவே 'சார் அத்யாய்' (1934) என்ற நாவலின் கடைசி அத்தியாயத்தைத் தவிர்த்து அவருடைய படைப்புகளில் எங்கும் 'மெலோ ட்ராமா' இல்லை.

ஏற்கெனவேயே பாரதி என்ற பத்திரிகையில் நெடுங்கதையாகப் பிரசுரிக்கப்பட்டிருந்தாலும், சரத்சிந்திரரின் 'பரோதீதி' புத்தக வடிவில் முதல் முதலாக 1913இல் வெளிவந்தது. ரவீந்திரநாதரின்

'சதுரங்க்' 1915இல் பிரசுரிக்கப்பட்டது. பரோத்தியைப் போல் சதுரங்க் ஜனரஞ்சக மதிப்பைப் பெறவில்லை என்பதைச் சொல்லத் தேவையில்லை. குறிப்பிட வேண்டிய விஷயம் என்ன வென்றால் சரத்சந்திரர் நன்கு வடித்த, திருப்தி அளிக்கும் முடிவுகளுடன் கூடிய கதைகள் எழுத ஆரம்பிப்பதற்கு முன்னரே, ரவீந்திரநாதர் நாவல்களைத் திருப்திகரமான முடிவுகளுடன் கூடிய கதைகள் என்ற எல்லைக்கு அப்பால் எடுத்துச் சென்றுவிட்டார். சதுரங்கிலிருந்தே அவர் நாவலின் வடிவத்தை (form) உடைக்கத் தொடங்கி விட்டார். அவர் விஷயத்தில் ஒன்று ஊர்ஜிதமாயிற்று: ஒரு சிறந்த எழுத்தாளர் சாதாரண நியதிகளையோ, பழக்கத்தில் இருக்கும் உத்திகளையோ கையாளவில்லை யென்றால் அதற்குக் காரணம் ஏதோ சோதனைக்காகவே சோதனை செய்யும் லாகிரி என்பது அல்ல. வாழ்க்கையின் சிக்கல்களை ஆழ்ந்து பரிசீலித்து வெளியில் கொண்டு வரவேண்டும் என்ற உத்வேகம் தான் காரணம். ரவீந்திரநாதர் சதுரங்கின் அமைப்பில் புதிய பாணிகளைக் கையாளத் தொடங்கிய காலத்தில் தான் ஐரோப்பாவிலும்—முக்கியமாக இங்கிலாந்தில்—நாவல்களின் அமைப்பு முறைகளில் மாறுதல்கள் தோன்ற ஆரம்பித்தன.

இத்தகைய சிக்கல்களால் சரத்சந்திரர் தம்மைக் குழப்பிக் கொள்ள வில்லை. சொல்வதற்கென்று விசேஷமாக எதுவும் அவரிடம் இல்லை. நர, நாரிகளின் உடல்களிலிருந்து வேறெடுத்து வளர்ந்த தவிர்க்க முடியாத பலாபலன்களைப் பங்கிம்சந்திரர் படம் பிடித்துக் காட்டினர். ரவீந்திரரோ தனிமனிதனின் உள்மனப் பரிணமங்கள் பற்றி எழுதினர். சரத்சந்திரரோ என்றால் மானிடருக்கு, முக்கியமாகப் பெண்களுக்கு, அன்புக்கும் ஆதரவுக்கும் மறுக்க முடியாத உரிமை உண்டு என்பதைப் பற்றிப் பேசினர். சாதாரண வாசகர் கூட்டம் ரவீந்திரநாதரின் உயர் வர்க்கத்தைச் சேர்ந்த பக்குவப்பட்ட கதா நாயக நாயகிகளை எட்டிப் பிடிக்க முடியாதவர்களாக இருந்த நிலையில்; 'பாரதி'க் குழு எழுத்தாளர்களின் செயற்கைப் பட்டினவாடை, போலிப் பொலிவு பெற்ற 'ரொமான்டிஸிஸம்' நிறைந்த எழுத்துகளில் அன்றாட வாழ்க்கை பிரதிபலிக்காமல் இருந்த காலத்தில்; இதை உடனடியாகத் தொடர்ந்து வந்த, மிகவும் பாராட்டப்பட்ட 'கல்லோல்' இயக்கம், வெளிநாட்டு மவுசை நகல் செய்வதாக அமைந்த நிலையில்; சரத்சந்திரர் தான் நமது மலினமான வாழ்க்கையின் மீது யதார்த்தமும் கவிதையும் கலந்த ஒளி பாய்ச்சினர்.

கட்டுப் பெட்டிகளான வங்க மத்திய வர்க்கம் தங்கள் வாழ்க்கையைத் துக்க ஒளி நிறைந்த ஒரு கவிதையாகச் சரத்சந்திரரின் நாவல்களில் கண்டு அநுபவித்தனர். 'கிருஹதாஹம்' (1920) தவிர, மற்ற

எல்லா நாவல்களுக்கும் இது பொருந்தும். எந்தச் சமுதாயத்தின் பொருளாதார அமைப்புகள் தகர்ந்து சிதறிக் கொண்டிருக்கின்றனவோ அந்தச் சமுதாயத்தின் மூலங்களைப் பற்றி அவர் ஒரு வினாக்கூட எழுப்பிய தில்லை, சிதைந்து வரும் சமுதாயத்தின் நடுவில் நின்று கொண்டு அவர் செய்ததெல்லாம், டிக்கன்ஸ் மாதிரி, தனிமனிதனின் அநுதாபத்தை யும் நியாய உணர்ச்சியையும் யாசித்ததுதான். டிக்கன்ஸ் மாதிரியே, சரச்சந்திரர் ஒரு great entertainer. அவரது விசால இதயத்தைப் பற்றிச் சந்தேகமேயில்லை. எனினும், அநுதாப உணர்ச்சியினால் மட்டுமே ஒருவர் சிறந்த இலக்கியாசிரியாராகி விடமுடியுமா என்பது சந்தேகம்.

## II

தனது மூன்றாவது கட்டத்தை வங்காள நாவல் இந்த நூற்றாண்டின் நாற்பதுகளில் எட்டிப் பிடித்தது. இந்தக் காலத்திய வங்காள நாவ லாசிரியர்கள் என்று குறிப்பிடப் படுபவர்கள், இனிமேல் வங்காள நாவல், பங்கிம், ரவீந்திரர் போன்ற மேதைகள் திளைக்கும் களன் அல்ல என்பதை நிரூபித்தனர். எனினும், கணிசமான எண்ணிக்கையில் நாவலாசிரியர்கள் வங்காள நாவலைப் பல வகையில் இந்தக் கால கட்டத்தில் வளப்படுத்தினர். பிராந்திய நாவல் பிறந்தது. ஃப்ராய்டின் மனோதத்துவமும், மார்க்ஸின் சமூகக் கருத்துகளும் சகபாடிகளாக வங்காள நாவல்களில் வசித்தன. தேசீயப் பிரச்னைகள் இடம் பெற்றன. இவையெல்லாம் கல்லோல் (1923) காலத்து வேட்கைகளின் சிறகடிப்பு என்று தோன்றலாம். ஆனால், கல்லோல் குழுவில் சிறிதளவே பங்கு பெற்றவர்கள்—சிலர் சம்பந்தப்பட்டவரை, அது கூட இல்லை—கைகளில் தான் மேலே சொன்ன விஷயங்கள் உருப்பெற்றன.

பிராந்தீய இலக்கியமென்பது சைலஜானந்தாவுடன் தொடங்கியது என்றாலும், அதற்கு முழுமை கொடுத்தது தாராசங்கர் பந்தோ பாத்யாயாதான். புறக்கணிக்கப்பட்ட வர்க்கத்தினர் முதல் முதலாகப் ப்ரேமேன் மித்ராவின் படைப்புகளிலும் ஜுபனாஷ்வர் எழுதிய படல்டாங்கார் பாஞ்சாலியிலும் தென்பட்டனர் என்பது என்னவோ உண்மைதான். ஆனாலும் மாணிக்பந்தோபாத்யாவின் படைப்புகளில் தான் இவர்கள் முறையாக நாவல் வடிவில் வருவதைப் பார்க்கிறோம்.

விபூதிபூஷன் பந்தோபாத்யாயா 'பதேர் பஞ்சாலி' *(1922)*, 'அரண்யக்' *(1938)* என்ற இரண்டு நாவல்களிலும் ஒரு புதிய வழியை வகுத்துக்கொடுத்தார். தாராசங்கரின் 'கணதேவதா' *(1942)*, 'கவி' *(1942)*, மாணிக் பந்தோபாத்யாவின் 'பூதுல் நாசேர் இதிகதா'

(1936) 'பத்மா நதீர் மாஞ்சி' (1936), விபூதி பூஷன் பந்தோபாத்யாயாவின் மேலே குறிப்பிடப்பட்ட இரண்டு நாவல்கள்—இவையெல்லாம் இந்தக் காலகட்டத்தின் சில குறிப்பிடத்தக்க நாவல்கள். இந்நாவல்களுக்கு இடையேதான் எவ்வளவு வித்தியாசங்கள்! விஷயத்திலும், உத்திகளிலுந்தான் எத்தனை வேற்றுமைகள்! எனினும், முப்பதுகளில் பெயரெடுத்த, தன்னடக்கம் மிக்க நாவலாசிரியர்கள் தமது உழைப்பு, கூர்நோக்கு, அயராது விறுவெழுப்பும் தன்மை, ஆகியவற்றால் வாழ்க்கையின் பல ரூபங்களையும், நமது தேசத்தின் எல்லைகளில் சிதறி வாழும் மக்களையும் நமக்கு அறிமுகப்படுத்தியுள்ளனர். மேலும், இந்த நாவலாசிரியர்கள் ஒரு தனிப்பாத்திரத்தையும் அவனது இனத்தையும் தனிமைப்படுத்துவதில்—இவைதான் இந்நாவல்களின் சிறப்பு—வெற்றி கண்டுள்ளனர்.

பனபூல் (இவரது உண்மைப் பெயர் பலாய்சந்திர முகோபாத்யாய) இக்காலத்திய மற்றுமொரு நாவலாசிரியர். சந்தேசம் அல்லது படிப்பினையை விடப் பல வண்ணப்பாங்குடன் கூடிய பொருள் செறிவு, சுயவுணர்வுடன் உத்திகளைக் கையாடல் இவையே இவர் நாவல்களின் தனிச்சிறப்பு. எனினும், மொத்த நோக்கில், இவர்கள் எல்லாரிலும் தாராசங்கர் ஒருவர்தாம் மாபெரும் நாவலாசிரியர் என்று சொல்லக்கூடிய அளவுக்கு இருக்கிறார். ஆரம்ப காலத்தில் மாணிக் பந்தோபாத்யாயா, மனிதனைத் தனிமையில் வாடும், விதியின், செயலற்ற பதுமையாகச் சித்திரித்திருக்கிறார். பின்னர், வாழ்க்கையை மார்க்ஸீய நோக்கில் பரிசீலிக்கத் தொடங்கினார். இதிலிருந்து இவருடைய இலக்கிய ஆளுமை விரிந்து வளரும் தன்மையுடையது என்பது தெளிவாகிறது. இந்த மாறுதல் இவருடைய சிறுகதைகள் சிலவற்றிற்கு அனுகூலமாக இருந்தது என்றாலும், இவரது நாவல்களுக்கு உதவியாக இருந்ததா என்பது சந்தேகத்துக்குரியது. விபூதி பூஷனோவெனில், இயற்கையின் முடிவற்ற லீலைகள், ஏழை எளியவர்கள் வாழ்க்கையில் பரம் பொருள் பரிணமிக்கும் சில கணங்கள், ஆகியவற்றைப்பற்றி எழுதுவதுடன் திருப்தியடைந்து விட்டார்.

ஆனால் தாராசங்கர் காட்டுவதோ பாரத மக்களின் ஆன்மிய நோக்கு, அதில் வாழும் பலவண்ண இனக்குழுக்கள்; இவை எல்லா வற்றுக்கும் மேலாக, தற்கால வரலாற்றின் வளர்ந்து விகசிக்கும் ரூபங்கள். இந்த விஷயத்தில் தாராசங்கரின் நோக்கு ஆடலற்று ஸ்திரமாக இருந்த காரணத்தால், இவருடைய முற்காலத்திய மார்க்ஸீயச் சார்புகள், பிற்காலத்திய காந்தீய வழிபாடுகள் ஆகியவை இவருடைய படைப்புகளைப் பாதிக்கவில்லை. பாரத மக்களின் வாழ்க்கை, அதன் இந்தியத்

தன்மை, இவ்விரண்டையும் அவர் ஒருபோதும் மறந்ததில்லை. இது தான், மொத்த நோக்கில் அவரது மாபெரும் சாதனையின் காரணம்

# III

முப்பதுகளின் நாவலாசிரியர்கள் இலக்கியத்தில் தங்களிடங்களை உறுதிப்படுத்திக் கொண்டிருந்த கால கட்டத்தில், 1945-ஆம் வருஷத்தில் சதிநாத் பாதுடியின் 'ஜாகரி' பிரசுரமாயிற்று. சதிநாத் 1906 ஆண்டில் பிறந்து 1965இல் காலமானார். அவரது சிறுகதைகள் நாவல்களின் பின்னணிச் சூழல் பிஹார் ராஜ்யத்தின் ஒரு சிறு பகுதி. அவரது நாவல்களில் மற்றுமிரண்டு ''டோரய சரித்மானஸ்'' முதல் பாகம், இரண்டாம் பாகம் (1945–51), அசின் ராகிணி (1954). செயற்கையற்ற நடை, கையாளும் விஷயங்களில் ஒரு புதுமை, வினாக்கள் எழுப்பும் மனிதாபிமான நோக்கு—இவையே இவருடைய நூல்களின் தனிச்சிறப்பு. ஜாகரி தான் இவரது முதல் படைப்பு. பிரசுரமானவுடனேயே வாசகர்களைக் கவர்ந்து விட்டது. இந்நாவல் வெளி வருவதற்கும் வெற்றி அடைவதற்குமிடையே தவக்கமில்லாததற்கு இரண்டு காரணங்கள். கனல் கக்கிய 1942 இயக்கத்தைப் பற்றிய அர்த்த புஷ்டியுடன் கூடிய முதல் நாவல் இதுதான். இரண்டாவது இந்நாவலின் வடிவப் புதுமை. இந்நாவல் வெளிவருவதற்கு மூன்றாண்டுகளுக்கு முன்புதான் 42-ஆம் ஆண்டின் மக்களெழுச்சி நடைபெற்றிருந்தது. எனவே மக்கள் மனத்தில் நேரில் கண்ட உண்மையின் ஒளி மங்காமல் இருந்தது. பல தேச பக்தர்கள் இருளடைந்த சிறைகளில் வைகறையில் உயிர்களைத் தியாகம் செய்திருந்தனர். அக்கால கட்டத்தின் உண்மை பொலியும் யதார்த்த சித்திரமாக அமைந்துள்ளது இந்நாவல். பீலு, தந்தை, தாயார், நீலு ஆகிய நால்வரும் ஒரு பயங்கர இரவின் முடிவை எதிர்நோக்கி இருக்கின்றனர். இவ்விரவின் இறுதியில் பீலு தூக்கிலிடப்படவிருக்கிறான். இந்நால்வரின் நான்கு வகைப்பட்ட ஆத்ம சம்பாஷணைகளின் தொகுப்புத்தான் இந்த நாவல். இந்த உத்தி பற்றிய ஆய்வுக்குப் பின்னர் வருவோம். முதலில் இதன் விஷயத்தை எடுத்துக்கொள்வோம்.

1921-க்கும் 1942-க்கும் இடையே மக்கள் எழுச்சி என்ற பேரலை பாரதத்தைத் தாக்கியது. இதன் விளைவாக, அரசியல், பத்திரிகைகளின் பக்கங்களை நிரப்பும் விஷயமாக மட்டு மல்லாமல் சாதாரண மக்களின் வாழ்க்கையின் பகுதியாகவும் ஆயிற்று. 'மாஸ்டர் ஸாஹப்' போன்ற தேசியக் குடும்பங்கள் வளர்ந்தன. இத்தகைய கொந்தளிப்பு வங்காளத்தில் 1955-ஆம் ஆண்டின் சுதேசி இயக்க சமயத்தில்

எழுந்திருந்தது. அந்த இயக்கம் வங்காளிகளின் வாழ்க்கையைக் குடும்ப மட்டத்திலும், சமூக மட்டத்திலும் பாதித்திருந்தது. எனவே, அரசியல் நாவல் என்று குறிப்பாகச் சொல்லக்கூடிய படைப்புகள் இருபதாம் நூற்றுண்டின் இருபதுகளிலிருந்து தவிர்க்க முடியாத ஒன்ருயின. 'கரே பாயிரே' (1916) என்ற நவீனத்தின் பின்னணி வங்கப் பிரிவினை காலத்திய அரசியல் உத்வேக வண்ணத்தால் ரவீந்திர நாதரால் தீட்டப்பட்டது. அந்த நவீனமும் பல பாத்திரங்களின் ஆத்ம சம்பாஷணைகளின் தொகுப்பாக அமைந்திருந்தது. அரசியல் சூழ்நிலையின் பாதிப்பு இருந்ததென்ருலும், ஒரு குடும்பத்தில் நிகழ்ந்த நெருக்கடி தான் இந்நாவலின் முக்கிய விஷயம். வங்காள இலக்கியத்தில் இரண்டாவது புகழ்பெற்ற அரசியல் நாவல்—'பதேர் தாபி' (1926) சரத்சந்திரர் எழுதியது. வன்முறைத் தீவிரவாதிகளின் அக்னிக் குழம்பின் கொந்தளிப்பு ஒரு சராசரிக் (average) கதையின் வண்ணக் கவர்ச்சியுள்ள அட்டை (wrapper) யாக அமைந்துள்ளது. இதுதான் இந்நாவலின் எளிய ஜன ரஞ்சகத்துக்குக் காரணம்.

ரவீந்திரநாதர் மற்றுமோர் அரசியல் நாவல் 1934-இல் எழுதியுள்ளார். அதன் பெயர் 'சார் அத்யாய்'. 'கரே பாயிரே,' 'சார் அத்யாய்' என்ற இரண்டு நாவல்களிலும், கட்சி போன்ற நிறுவனங்களைத் தனி மனிதனின் சுதந்தரத்தின் எதிரியாக நோக்கியுள்ளார். இரண்டிலும், எப்படிக் கட்சித் தலைவர்கள், கட்சி ஆணைகள் மனிதனின் தனித்துவம் விரிவடைவதை தடை செய்கின்றன என்று விளக்கியுள்ளார்.

வாழையடி வாழையாக வளர்ந்துள்ள பாரதக் கலாசாரப் பரம்பரையினுல் உருவாக்கப்பட்ட குடும்ப வாழ்க்கையை மக்களெழுச்சி இயக்கங்கள் எப்படிப் பாதித்தன என்ற பிரச்னைக்குத் தாரா சங்கர் 'தர்தி தேவா' (1939) என்ற நாவலில் உருக் கொடுத்திருக்கிருர். தர்தி தேவா ஒரு மாபெரும் ஓவியம். இதில் வன் செயல் தீவிர இயக்கம் எப்படிக் கொஞ்சம் கொஞ்சமாகத் தன்னை மாற்றி அமைத்துக் கொண்டது, அவ்வியக்கத்தின் உயிர்நாடி போன்ருேர் எப்படிச் கொஞ்சங் கொஞ்சமாகத் தனிநபர் வன்முறை வழிகளை ஒதுக்கி காந்திஜியின் மக்களியக்கத்தில் சேர்ந்தனர் என்பது சித்திரிக்கப் பட்டிருக்கிறது. இது மட்டுமல்ல. தர்தி தேவதா ஓர் அரசியல் குடும்ப நாவல். 'ஜாகரி'யில் ஒரு 'தேசீயக் குடும்பத்தை'ப் பார்க்கிருேம். ஆனுல் தர்தி தேவதாவில் ஒரு தேசீயக் குடும்பத்தின் பிறப்பின் விருத்தாந்தத்தைக் காண்கிருேம். நாவலின் நாயகன் ஸ்ரீநாத்துடன் கூடவே அவன் மனைவி கௌரி, அவன் அத்தை, மட்டுமல்லாமல், அவனுடைய மழலை மாருத குழந்தை எல்லாரும் எப்படி வந்தே மாதரம்-மந்திரோபதேசம் பெற்று தீட்சை பெற்றனர் என்பது தான்

இந்த நாவலின் கடைசிச் சொல். இந்த முடிவுக்கு முன் நிகழ்ந்த மனோதத்துவ மோதல்களிலிருந்து எழுந்த சம்பவக்கோவைகளே தர்திதேவதா. சாதாரண மனோ வேற்றுமைகளில் எழும் குழப்பங்களின் காரணமாக நசித்துச் சிதைந்து போய் கொண்டிருக்கும் ஒரு குடும்பம் எப்படி, தேசீய இயக்கத்தின் விளைவாகச் சீர்திருந்தி புதியதும் விசால மானதுமான ஒரு விழிப்புணர்வினால் தீண்டப்பட்டுச் சிலிர்த்தெழுந்தது என்ற உண்மையைத் தாராசங்கரை விட வேறு ஒருவரும் இவ்வளவு அழகாகச் சித்திரித்ததில்லை.

சதிநாத் பாதுரியின் 'ஜாகரி' வங்காள அரசியல் நாவல் இலக்கியத் துக்கு ஒரு புதிய பரிமாணம் கொடுத்துள்ளது. 1942-ஆம் ஆண்டிலேயே பாரத அரசியல் விழிப்புணர்வின் ஒருமை சிதறி வேற்றுமைகள் தனித்துவம் பெற்று வளர ஆரம்பித்து விட்டன. காங்கிரஸ் இசைத்து வந்த 'கோஷ்டிகான' அமைப்பில், சி.எஸ். பி., அதாவது காங்கிரஸ் ஸோஷலிஸ்ட் பார்ட்டி, கம்யூனிஸ்ட் பார்ட்டி ஆகியோர் தங்கள் தனி ஸ்வரங்களை மீட்ட ஆரம்பித்துவிட்டனர்.

ஆகஸ்ட் இயக்கத்தின் உசிதத்தைப் பற்றியே காங்கிரஸுக்கும், கம்யூனிஸ்ட் கட்சிக்கும் கடும் கருத்து மோதல்கள் எழுந்தன. காங்கிர ஸுக்கும், ஸி.எஸ்.பி.-க்கும் இடையே, இயக்கத்தின் கதிவிதிகளைப் பற்றிப் பல கருத்து வேறுபாடுகள் இருந்தன. ஜாகரியில் வர்ணிக்கப் படும் 'மாஸ்டர் ஸாஹிப்'பின் குடும்பம் அன்றைய அரசியல் உலகில் ஒரு நுணுக்க ஓவியமாக (miniature painting) அமைந்திருக்கிறது. பீலு ஒரு காங்கிரஸ் சோஷலிஸ்ட். அவன் பெற்றோர் முதிர்ந்த காங்கிரஸ்வாதிகள். நீலு ஒரு கம்யூனிஸ்ட். ஆகஸ்ட் இயக்கத்தின் மாபெரும் சக்தி இந்தக் குடும்பத்தைத் தாக்கியது, இதற்கும் பெரிய பரிமாணத்தில் பாரதம் முழுவதையும் தாக்கியது போலவே. ஜாகரி ஆசிரியரின் முதல் நாவல். ஆனால் அரசியல் சூழ்நிலையை மற்றுமிரு நாவல்களிலும் பயன் படுத்தியிருக்கிறார். 'சித்ரகுப்தேர் பைல்' (1949) மற்றும் 'தனோரை மானஸ்' (1947) என்ற நாவலின் இரண்டாம் பகுதி. என் கணிப்பில் 'தனோரை'தான் ஆசிரியரின் சிறந்த படைப்பு. இதன் இரண்டாம் பாகத்தில் வெகுண்டெழுந்த 42-ஆம் இயக்கத்தைப் பின்னணியாக உபயோகித்திருக்கிறார். இதிலிருந்து இந்த இயக்கத் தினால் எவ்வளவு தூரம் இவர் பாதிக்கப்பட்டிருக்கிறார் என்பது தெளிவாகிறது.

ஒரு கால கட்டத்தின் முடிவைப் பறைசாற்றும் மாபெரும் அக்னிக் குழம்பின் மேலிருக்கும் மூடிகளை விலக்கி அவ்வொளியின் பிரகாசத்தில் மக்களைக் காணும் துடிப்பு இதில் தெரிகிறது. ஒரு அரசியல் நாவல் என்ற பாண்டத்தில் மனித குலத்தின் பல வண்ணத்திய உணர்ச்சிகளை

வடித்தெடுத்திருக்கிருர். இதுதான் ஜாகரியின் மற்ருெரு தனிச்சிறப்பு. அதிலுள்ள அரசியல், பிரச்சார அரசியலல்ல. அதன் உத்தி முறைகளை விவரித்தால் இது தெளிவாகும். இந்த நாவலின் அமைப்பு முறையில் ஆசிரியருக்குக் கிட்டியுள்ள தோற்றமான காலப் பரிமாணம் மாலைக்கும் வைகறைக்குமிடையே உள்ள பன்னிரண்டு மணி நேரம். ஆனுல் ஆத்ம சம்பாஷணை என்ற உத்தியின் விளைவாக இந்தப் பன்னிரண்டு மணி நேரத்தின் மீது வெகு காலத்திய ஞாபகங்களின் சாயை படருகிறது.

ஆத்ம சம்பாஷணை என்ற காரணத்தால் நினைவுகளைக் காலவரிசைக் கேற்பச் சீர்படுத்தத் தேவையில்லாமல் போய்விட்டது. ஒரு நாளின் சம்பவங்களைக் கோபால் ஹல்தாரின் 'ஏகதா' (1939)-வில் படித்து இருக்கிருேம். அந்த நூலிலும் கதாநாயகனின் நினைவோட்டம் பல இணைப்புகளால் (associations) பன்னிரண்டு மணி கால அளவை மீறி இயங்கியுள்ளது. ஆனுல் மற்ருெரு காரணத்துக்காகவும் ஜாகரியின் அமைப்பு தவிர்க்க முடியாது, முன்னரே நிர்ணயிக்கப்பட்டதாக அமைந்துள்ளது. இங்கு வர்ணிக்கப்பட்டுள்ள முழு இரவும் ஒரு நாடகத்தின் கடைசிக் காட்சியாக அமைந்துள்ளது. கடைசித் திரை விழவிருக்கும் நிலையில், பாத்திரங்களின் உரையாடல்களைவிட அவர் களின் நீண்ட ஆத்ம சம்பாஷணைகளைக் கேட்க வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது.

பயங்கரமான, தவிர்க்க முடியாத கடைசி விநாடிக்காக கணங்களை எண்ணிக்கொண்டிருக்கும் நேரத்திலேயே, ஒன்ருேடு ஒன்று பின்னிப் பிணைத்திருக்கும் நான்கு நபர்களின் உலகங்கள், அல்லது நான்கு உலக நோக்குகள் நம் முன் உருப்பெறுகின்றன. ஆசிரியர் கையாளும் உத்தியின் காரணமாக நாவலின் உயிர்த்துடிப்புடன் கூடிய முடிவு கடைசி வரை மறைக்கப்படாமலே இருக்கிறது. இந்த உத்தி தவிர்க்க முடியாமல் இருப்பதற்கு மற்றுமொரு காரணம் உண்டு. இந்நாவல் ஏதோ ஓர் அரசியல் உள்நோக்குடன் எழுதப்பட்டதல்ல. நீலுவின் குணத்தின் உண்மை சொரூபத்தை விளக்க இந்த உத்தி அவசிய மாகிறது. சாதாரண உபயோகத்திலிருக்கும் உத்திகள் மூலமாக நீலுவின் அந்தரங்க ஆத்மாவை இந்த அளவுக்கு வாசகர்களுக்குப் புரியவைத்திருக்க முடியாது. ஜாகரியின் மூலப் பொருள் மனிதன்— கட்சித் தொண்டன் அல்ல.

87, அரவிந்த் ரோட்,
நைஹாடி,
24, பர்காளுஸ்,
மேற்கு வங்கம்

ஸரோஜ் பந்தோபாத்யாய

# தூக்குத் தண்டனை செல்

மங்கிய மாலை ஒளி இரண்டாம் நம்பர் வார்ட் அசோக மரத்தின் கிளைகளிடையே ஊடுருவிக் கொண்டிருக்கிறது. பறவைகள் ஒரு விநாடி கூட ஓய்வின்றிக் கிளைக்குக் கிளை தாவி விளையாடிக்கொண் டிருக்கின்றன. சிறிது நேரத்திற்குள்ளேயே நான்கு பக்கங்களிலும் இருள் படர்ந்து விடும். பிறகு இரவு முழுவதும் நிசப்தந்தான். இத்தனை சிறகடிப்பும் இதனாலேயே தான் என்று நினைக்கிறேன். கடைசி சில விநாடிகளில் கிட்டும் இந்தக் கோலாகலம், காலத்தின் கையிலிருந்து கிடைத்த மட்டும் களிப்பைப் பிடுங்கிக் கொள்ளவேண்டும் என்ற ஆவேசந்தான்.

இந்தத் தனி அறைக்கு வருவதற்கு முன், இரண்டாம் நம்பர் வார்டில் நான் இருந்தபோது, இந்தப் பறவைகளைப் போலவே நானும் மற்றச் சக கைதிகளும் மாலை 'லாக்-அப்'புக்குப் பிறகு திறந்த வெளிக்காற்றைச் சிறிது அநுபவிப்பது வழக்கம். இது தவிர்க்க முடியாத ஒரு தேவை யென்று சொல்ல முடியுமா என்ன? உஹூம். உள்ளேயே உட்கார்ந் திருக்கலாம். வெளியே வருவதற்கு ஒருவித அவசியமும் இல்லை. இருந்தாலும் ஒரு முறையாவது வெளியில் சென்று வரவேண்டும் என்ற அற்ப ஆசை. இந்த மனோபாவத்தைப் பெரும்பாலும் அரசியல் கைதிகளிடையேதான் பார்த்திருக்கிறேன். வார்டர்களுக்கு இதனால் ஒரே எரிச்சல். தங்களுக்குள் இதைப்பற்றிக் காதைக் கடித்துக் கொள்வார்கள். ''இந்தச் சுதேசிப் பயல்கள் தங்கள் இஷ்டம் போலச் செய்யலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்'' என்று முணு முணுத்துக் கொள்ளுவார்கள். ஆனால் வார்டர்களுக்குத் தொந்தரவு தர வேண்டுமென்று எந்தக் கைதியும் இப்படிச் செய்யவில்லை. ''கிடைத்த அற்ப சுகத்தை விடுவானேன்?'' என்ற எண்ணந்தான்.

அதோ—அந்தப் பறவைகள், காகங்களாகத்தான் இருக்க வேண்டும். இத்தனை தூரத்திலிருந்து சரியாகத் தெரியவில்லை. இரவு முழுவதும் ஏனோ சிறகடித்துக் கொண்டே இருக்கின்றன.

முன்பு ஒரு தடவை பக்ரிகோலில் மீட்டிங் முடிந்து திரும்புகையில் காமாக்ஷி என்ற கிராமத்தில் பரந்த ஆலமரத்தடியில் இரவு முழுவதும் தங்கும்படி நேர்ந்தது. அங்கிருந்த புழுதியில் புரண்டால் குஷ்ட ரோகம் பறந்தோடிவிடுமாம். எங்கெங்கெல்லாமிருந்தோ எவ்வளவோ பேர்கள் இதற்காக அங்கு வருவார்கள். பல குஷ்ட ரோகிகள் பக்கத்து மரத்தடிகளில் படுத்துக் கொண்டிருந்தனர். நான், நீலு இருவர். சகதேவனும் கூட இருந்தான் என்று நினைக்கிறேன்.

இரவு முழுவதும் பறவைகளின் சிறகடிப்பு ஓயவேயில்லை. ஒரே சத்தம்! மரத்தடியில் நாங்கள் மூவரும் சேர்ந்தாற்போல் படுத்துக் கொண்டிருந்தோம். இரவைக் கழிக்க இந்த மரத்தடியை நாடியது நீலுவிற்குப் பிடிக்கவில்லை என்று நினைக்கிறேன். ''ஏன் இப்படி அடித்துக் கொள்ளுகின்றன என்று உன்னால் சொல்லமுடியுமா?'' என்று கேட்டேன். உடனே அவன் வெடுக்கென்று, ''ஒரு வேளை எறும்பு கடித்திருக்கும்'' என்றான். பதில் சொல்ல ஒரு விநாடிகூடத் தயங்க வில்லை நீலு. எந்த விஷயத்திலும் அவனுக்கு உறுதியான அபிப்பிராயம். அந்த அபிப்பிராயங்களிலிருந்து அணுவளவும் அசைய மாட்டான். எப்போதும் அவன் அப்படித்தான்.

மாலையின் செந்நிறம் மங்குகிறது. அசோக மரத்தின் உச்சியில் மட்டும் ஆகாயத்தின் செவ்வொளி சிறிதே படர்ந்திருக்கிறது. இலை களில் பசுமை கொஞ்சம் கொஞ்சமாக மங்குகிறது. இங்கிருந்து கண்ணில் படும் இச்சிறு பசுமையும் இன்னும் சில விநாடிகளில் மறைந்து விடும். போகட்டும். இப் பசுமையும் ஒரு கரு நீல ஆகாயத் துண்டுமே இவ்விரும்புக் கம்பிகளின் இடையேயிருந்து தெரியும், இரும்பு டோஸ்டரில் இருக்கும் ரொட்டித் துண்டைப் போல. தூக்குத் தண்டனைக் கைதிகளுக்கான இந்த செல்லில் இருப்பவனுக்கு இதுதான் உண்மையிலேயே ரொட்டியாகப் படும். இது எப்படியிருப்பினும் ''ஸி'' வகுப்புக் கைதிக்குக் கிடைக்கும் ரொட்டியைவிட இந்த ரொட்டி மேலானது. இங்கிருந்து ஜெயிலின் 'ஸெண்ட்ரல் டவரி'ன் மாடியும் தெரியும். அதன் சுவர்களில் கொட்டை எழுத்தில் ஆங்கிலத்தில் எழுதியிருக்கிறது: 'பூர்ணியா ஸெண்ட்ரல் ஜெயில், பிஹார்'.

ஆகாயத்தின் அச்சிறு நீலத்துண்டு எனக்கு மட்டுமே சொந்தம். எவ்வளவு நேரம் முடியுமோ அவ்வளவு நேரம் இந்த நிர்மல நீல ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டே இருக்கிறேன். நான் செய்வது போலவே வேறு யாரேனும் இந்த ஆகாயத்தின் துண்டைத் தனதாக்கிச்

கொண்டிருப்பார்களா? எனது நீல ஆகாயம் விநாடிக்கு விநாடி உரு மாறியவாறு இருக்கிறது. ஸிந்தூர வண்ணம் சிவப்புக் கத்திரிக்காய் நிறமாய் மாறி, பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஊதா நிறமாகி மங்கிவிடுகிறது. சிறிது நேரத்திலேயே எல்லாம் பேரிருளில் முழுகி விடும். எல்லாம் இழந்த ஒரு கைதி இத்தகைய விசித்திர ரஸாநுபவங்களைத் தனதாக்கிக் கொள்வதை எப்படி இந்த ஜெயிலர் துரை அநுமதிக்கிறார் என்பது எனக்கு ஒரு புதிராக இருக்கிறது. ஒரு வேளை இந்த விஷயம் அவருக்குத் தெரியாதோ என்னவோ? தெரிந்து விட்டால், நாளையே என் ஸெல்லிற்கு எதிரே உள்ள சுவரை உயர எழுப்பும்படி ஜெயில் மேஸ்திரிக்கு உத்தரவு போட்டுவிடுவார்! கட்டளைகள் பறக்கும்: ''ஊம்! இன்னும் உயரமாகக் கட்டு! இன்னும் உயரமாகக் கட்டு. தேவைப்பட்டால் ஆகாயம் வரை சுவரை எழுப்பு'' என்று. இந்த மரத்தின் பசுமை, இந்த நீல ஆகாயத் துண்டு இவை இரண்டும் தவிர, கண்ணுக்கு எட்டிய தூரம் வரை, இரும்பு, செங்கல், சிமெண்ட். சிமெண்ட், செங்கல், இரும்புதான். இவை கண்ணைக் கவர்ந்திழுக்கும் அழகுப் பொருள்கள் அல்ல. கண்ணைக் காயப்படுத்தி அதனிடமே திருப்பி அனுப்பிவிடும், குரூரப் பொருள்கள். ஸெல்லின் சுவர்கள் எல்லாம் வெளிறிப் போய் மங்கியிருக்கின்றன. சுண்ணும்பு அடித்து எத்தனை காலமாயிற்றோ? யாருக்குத் தெரியும்? இச்சுவர்களில் பல கறைகள்—துப்பல் கறைகளே அதிகம்—சிவப்புக் கறைகள். எனக்கு முன் இருந்த கைதிக்கு வார்டர்கள் கஞ்சா புகையிலை கொடுத்திருக்கவேண்டும். அந்தக் கைதி, எல்லாவற்றையும் துறந்து, யாரும் அறியாத இடத்துக்குப் போய்ப் பல காலமாகிவிட்டது. ஆனால் வார்டர்களின் உதவிக்குத் தன் நன்றியின் முத்திரையை மட்டும் இந்த ஸெல்லின் சுவர்களில் விட்டுச் சென்றிருக்கிறான்.

பேசுவதற்கு ஆள் இல்லை. ஆகவே இந்த ஸெல்லிற்கு வெளியே இருக்கும் ஜெயில் உலகத்துக்கும் எனக்கும் உள்ள ஒரே உறவு என் காதுதான். பேசுவதற்கு என்று ஓர் ஆள் உண்டு என்றால் அது வார்டர்தான். ஆனால் அவனுடன் பேசப் பிடிக்கவில்லை. நாலா பக்கமும் சுவர். எங்கே கண்ணைச் செலுத்தினாலும் சுவரில் முட்டிக் கொண்டு திரும்பி வருகிறது பார்வை. ஆனால் காது மட்டும் வெளியிலிருந்து ஏதாவது சப்தம் வருகிறதா என்று உஷாராக இருக்கிறது.

பதினறு அடி நீளம், பத்தடி அகலம் இந்த அறை. முன்னால் கனத்த கம்பி போட்ட இரும்புக் கதவு. தெற்குச் சுவரில், கிட்டத்தட்ட கூரைக்குப் பக்கத்தில் ஒரு சிறிய ஜன்னல். அதற்குக் கீழே, தரையில் பதித்துச் சுவரோடு இணைத்த ஒரு கஜ நீளம், ஒரு கஜ அகலமுள்ள

இரும்புத் தகடுகள் இரண்டு. இத்தகடுகளில் பல ஓட்டைகள். இந்த ஏற்பாடு எதற்காக என்று தெரியவில்லை. ஒரு வேளை, காற்றுப் புகுவதற்காகவோ? அல்லது கைதியின் பேச்சு வெளியிலிருக்கும் வார்டர் காதில் விழுவதற்கான ஏற்பாடோ? இருக்கலாம். எதிரிலேயே உள்ள இரும்புக் கம்பிக் கதவின் முன்னால் ஒரு வார்டர் எப்பொழுதும் நின்று கொண்டிருக்கிறான். கைதி என்ன செய்கிறான், என்ன செய்யவில்லை என்பதை அவனால் சுலபமாகவே பார்க்க முடியும். இருந்தும் இந்த ஏற்பாடு எதற்கு என்று புரியவில்லை.

அறையின் ஓர் ஓரத்தில் தார் பூசின இரண்டு மண் பாண்டங்கள். இந்த ஊர் பாஷையில், 'டோக்ரி'கள். இவைதான் இந்த அறையிலுள்ள 'ஃபர்னிசர்'

சுண்ணாம்பு அடித்த வட்டத்தின் நடுவே இவை வைக்கப்பட்டிருக்கின்றன. இந்தச் சுவருக்கு வெளியே அகலமான பக்கா ராஸ்தா. ஜெயிலின் எல்லா வார்டுகளையும் சுற்றி வருகிறது இந்தச் சாலை. இதன் மற்றொருபுறத்தில் ஜெயில் ஆஸ்பத்திரி. இந்தச் சாலையில் வருவோரும் போவோருந்தான் எத்தனை பேர்கள்! கைதிகள், வார்டர்கள், டாக்டர்கள், கம்பௌண்டர்கள், கண்ட்ராக்டர்கள், மேஸ்திரிகள், ஆபீஸர்கள்—இன்னும் எத்தனையெத்தனையோ மனிதர்கள். பகல் வேளைகளில் ஜன நடமாட்டம் அதிகம், ஒரு சாதாரண நகரத்தின் நெடுஞ்சாலைகளில் உள்ளதுபோல. இந்த மாபெரும் பூர்ணியா ஸெண்ட்ரல் ஜெயில் ஒரு மகாநகரத்தைவிட எந்த விதத்தில் குறைச்சல்? சாதாரண நாட்களில் இதில் சுமார் 2,500 கைதிகள் இருப்பார்கள். இப்பொழுது, அதாவது, 1943 வருஷம் மே மாதத்தில், 4,500 கைதிகள். இதைவிட அதிகக் கைதிகள் இல்லாதிருப்பதுதான் ஆச்சரியம். வெளியில் பட்டினி கிடந்து, வழியில் விழுந்து செத்தாலும் சாவார்கள், நம் ஜனங்கள். ஆனால் ஜெயிலில் அடைபடுவதற்கான செய்கை எதையும் செய்ய மாட்டார்கள். ஒரே ஒரு தடவை 'இங்கிலாப் ஜிந்தாபாத்' என்று கோஷமிட்டாலோ அல்லது ஒரு கடையிலிருந்து ஒரு கைப்பிடி பொரியை எடுத்துக்கொண்டு ஓட முயன்றாலோ ஆறு மாதத்துக்குக் குறையாமல் ஜெயிலில் சோற்றுக் கவலையில்லாமல் இருக்கலாமே! இதைவிட்டு விட்டு வெளியில் செத்து மடிவானேன்?

4,500 மக்கள்! அப்பாடி! 5,000 ஜனத்தொகையிருந்தால் ஒரு ஊர் முனிசிபாலிடியாகி விடுகிறது. ஆகவே இந்த ஜெயிலும் ஒரு டவுன் தான். இந்நகருக்கு 'லோஹநகராத்' ('இரும்பூர்') என்று பெயர் வைத்தாலோ? உச்சரிப்பு கூட லெனின் க்ராட் மாதிரி இருக்கும். இரும்புத் தூண்கள் வழியே ஏதேனும் கேட்கிறதா என்று காதைச் சாய்த்துக் கொண்டு உஷாராக உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். ஓ, மனிதக் குரல்கள் எவ்வளவு இனிமையானவை! ஜெயில்

பாலிடிக்ஸ், ஜெயிலுக்கு வெளியே நடக்கும் பாலிடிக்ஸ் எல்லாவற்றையும் இங்கு உட்கார்ந்தவாறே கேட்டுக் கொள்ள முடியும். சூப்பிரண்ட் துரைக்கும் ஜெயிலர் பாபுவுக்குமிடையே எழுந்த 'கசமுசா'; ஜெயிலர் ஹெட்வார்டரை 'நீங்கள்' என்று மரியாதையாக அழைக்காமல் 'நீ' என்று விளிப்பது; ஜப்பானியர்களின் போர்த் திறனைப்பற்றிய சர்ச்சை; கைதிகள் எண்ணிக்கை அதிகமாகி, இடநெருக்கடி காரணமாக விடுதலையான கைதிகளின் எண்ணிக்கை; பர்மாவிலிருந்து வந்த ஜெயில் அதிகாரிகள் பிஹார் ஜெயில் அதிகாரிகளை மிஞ்ச எத்தனிப்பது—இன்னும் எத்தனையோ விஷயங்கள் காதில் விழுகின்றன. அரசியல் கைதிகள் மீது அன்று நடந்த தடியடிப் பிரயோகத்தில், எத்தனை தடவைகள் ஆஸ்பத்திரிக்கு ஸ்ட்ரெட்சர் வந்து போயிற்று என்று இங்கு உட்கார்ந்தவாறே கணக்கெடுத்துவிட முடியும். சங்கிலிகளின் 'ஜல், ஜல்' ஓசையிலிருந்தே கைதிக்குச் 'சங்கிலிக் கட்டு' (bar fetters) தண்டனை கிடைத்திருக்கிறது என்று அனுமானிக்க முடியும். ஏதோ ஜெயில் அதிகாரியின் ஆணையை மீறியதற்கான தண்டனையாக இருக்கவேண்டும்.

அப்பா! என்ன கொசு! சூரியன் அஸ்தமித்தால் பிடுங்கல்தான். அன்று சூப்பிரண்ட் துரை வந்து கேட்டுவிட்டுப் போனார்; ''ஏதாவது வேண்டுமா?'' என்று. அதாவது முடிந்தால் ஏற்பாடு செய்கிறேன் என்ற அர்த்தத்தில். சிறு வயதிலிருந்தே கேள்விப்பட்டு வந்திருக்கிறேன், தூக்குத் தண்டனைக் கைதிகளை இப்படிக் கேட்பார்கள் என்று. முக்கால் வாசிப் பேர் நல்ல சாப்பாடு வேண்டும் என்று தான் கேட்பார்களாம். புதிய சூப்பிரண்ட் என்னிடமிருந்து இந்த மாதிரி ஒரு வேண்டுகோளைத்தான் எதிர்பார்த்தாரோ? 'கொசுவலையொன்று வேண்டும் என்று கேட்டுப் பார்க்கலாமா' என்ற அற்ப ஆசை. மீதியிருக்கும் சில நாட்களையாவது நிம்மதியாகத் தூங்கிக் கழிக்கலாம் என்ற எண்ணம். ஆனால் நா எழவில்லை. தன்மானத்தை விட்டுக் கொடுக்க மனம் வரவில்லை. ''ரொம்ப நன்றி. சௌக்கியமாகவே இருக்கிறேன். ஒரு தேவையுமில்லை'' என்று பதிலளித்தேன். பிறகு வார்டர் என்னைக் கேட்டான். ''ஏன் நீங்க சாப்பாடு வேணுமென்று கேக்கலே? கொஞ்ச நாளைக்கு முன்னர் ஒரிஸ்ஸா மாகாணத்துக் கர்தா ஜில்லாவைச் சேர்ந்த இரண்டு 'சுதேசி'க் கைதிகள் இந்த ஜெயிலில் தூக்கிலிடப் பட்டனர். அதில் ஒருவர் நீங்க இருக்கும் இந்த ஒண்ணும் நம்பர் செல்லில் தான் இருந்தார். மற்றொருவர் இரண்டாம் நம்பர் செல்லில். ஐந்து வருஷம் முன்னாலே ஒரு வெள்ளைக்காரனைச் சுட்டுக் கொன்று விட்டாங்களாம். தூக்கிலேற வேண்டிய நாளுக்கு முதல் நாள் நிறைய முட்டை பொரிச்சு ஒரு அடி அடிச்சாங்க. பிறகு ரா முழுதும்

'இங்கிலாப் ஜிந்தாபாத்' அது இதுன்னு கத்திக்கிட்டே இருந்தானுங்க. கடைசி நிமிஷம் வரை இதே மாதிரி கூச்சல். அன்னி ராவுலே ஒரு கைதி கூடத் தூங்க முடியல்லே. நீங்ககூட ஏதாவது கேட்டிருக்கலாமே? ஏன் கேட்கல்லே?''

வார்டரின் கதையை நான் நம்பாமல் இல்லை. என்றாலும் அவன் உபதேசம் பிடிக்கவில்லை. இந்த வார்டர்களில் யாரும் படித்தவர் கள் இல்லை. சந்தர்ப்பம் கிடைத்தால் திருடுவார்கள். கைதிகள் மீது தங்கள் அதிகாரத்தைச் செலுத்துவார்கள். அதுவும் கொஞ்சம் நோஞ்சலான கைதிகளாக இருந்துவிட்டால் கேட்கவே வேண்டாம். இரக்கமில்லாமல் நடந்து கொள்ளுவார்கள். ஆனால் 'கௌரவமான' கைதிகளிடம் பல்லைக் காட்டுவார்கள். சுத்த 'நாட்டான்கள்.' கண்ணியமான பேச்சு, நடத்தைகளின் சூட்சுமத்தை உணராதவர்கள். எதைப்பற்றிப் பேசலாம், எதைப்பற்றிப் பேசக்கூடாது என்ற விவேக மற்றவர்கள். சூப்பிரண்ட், மற்றும் இதர அதிகாரிகள், எனக்கு வரவிருக்கும் தூக்குத் தண்டனை போன்ற விஷயங்களைப்பற்றி என் எதிரில் பேச மாட்டார்கள். ஆனால் யாராவது ஒரு வார்டருடன் நான் இரண்டு வார்த்தை பேசினால், உடனே அவன் தூக்குப் போடுவது பற்றிப் பேச ஆரம்பித்துவிடுவான். முதல் சில நாட்களில் இம் மாதிரி யான பேச்சைக் கேட்கும் போதெல்லாம் மார்பு படபடக்கும். உடல் தளரும். மனம் அலை பாயும். தூக்கு மேடையும் அதன் உபகரணங் களும் கண் முன் நிழலாடும். என்னைத் தூக்கிலிடும் உத்தரவு ரத்தாகி விடும் என்று எனக்கு நானே சொல்லிக் கொள்வேன். ஆனால் கொஞ்ச நாட்களில் பழகிவிட்டது. திகில் விட்டுப் போய்விட்டது. இந்த ஸெல்லுக்கு மேற்குப் பக்கத்தில் இருக்கிறது, தூக்கு மேடை. வார்டர்கள் வந்து சொல்லிவிட்டுப் போனார்கள். தூக்கு மரத்துக்குப் புதிதாகக் கருப்புப் பெயிண்ட் அடித்திருக்கிறார்களாம். என் உடல் எடையுள்ள மணல் மூட்டைகள் கொண்டு வந்து, தூக்குக் கயிற்றில் கட்டி அதன் வலுவைச் சோதித்துப் பார்த்தார்களாம். இம் மாதிரி இன்னும் பல செய்திகள்.

என் மனத்தின் போக்குதான் என்ன விநோதம்! கருப்புப் பெயிண்ட் என்று கேட்டவுடன், 'அது ஜப்பானிய கரும்பூச்சா அல்லது சாதா ரணத் தாரா' என்று யோசிக்கத் தொடங்கிவிட்டேன். வார்டரைக் கேட்டேன்: ''கருப்புக் கலர் என்றாயே, அது என்ன தாரா?'' என்று. பிறகு, ''அந்தக் கயிறு—எந்த மாதிரி கயிறு அது? தாம்புக் கயிறு அல்லது—?'' என்னைப் பார்த்து நானே சிரித்துக் கொள்கிறேன். எந்த மாதிரி கயிறு என்று இப்பொழுது தெரிந்து கொள்வது ரொம்ப அவசியந்தானே! எப்போதும் இத்தகைய விசித்திர மனோபாவத்தை

என்னிடம் நானே கவனித்து வந்திருக்கிறேன். உபயோகமான விஷயங்களைவிட உபயோகமற்ற விஷயங்களில்தான் எனக்குப் பிடிப்பு. பரீட்சைக்குமுன் எல்லோரும் குறிப்பான சில கேள்விகளுக்கு விடை தயார் செய்து கொண்டிருப்பார்கள். நான் மட்டும் அப்படிச் செய்யாமல் விஷயத்துக்குச் சம்பந்தப்பட்ட, ஆனால் பரீட்சைக்கு முக்கியமில்லாத, சிறிய ஆராய்ச்சிகளில் ஈடுபட்டிருப்பேன். ஜியாமெட்ரியில் முக்கியமான 'தியரங்களை' விட்டுவிட்டு அவற்றிலிருந்து எழும் 'ரைடர்'களில் அதிக கவனம் செலுத்துவேன். பரீட்சைக்கு முதல் தினம்வரை 'ஃபுட்நோட்', முகவுரை இத்யாதிகளைக் கவனமாகப் படித்துக் கொண்டிருப்பேன். வருஷ ஆரம்பத்தில் எனக்கு நானே சொல்லிக் கொள்வேன், ''முக்கியமான பாகங்களை எப்படியும் படித்தே ஆகவேண்டும். ஆகவே முதலில் முக்கியம் இல்லாதவற்றைப் படித்துவிடலாமே?'' கடைசியில் முக்கியமாகப் படிக்கவேண்டியது படிக்கப்படாமலே நின்றுவிடும்.

காசி வித்யாபீடத்தில் படித்துக் கொண்டிருந்தபோது நிகழ்ந்த ஒரு சம்பவம் ஞாபகத்துக்கு வருகிறது. பாதி ராத்திரி இருக்கும். ஸகலதேவ், நான் இருவரும் கண் விழித்துப் பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருக்கிறோம். ஒரு சிட்டிகை மூக்குப் பொடி உறிஞ்சுவிட்டு, 'ஆஜ்' பத்திரிகையில் வெளி வந்திருந்த தலையங்கத்தை எனக்குப் படித்துக் காண்பித்துக் கொண்டிருந்தான். திடீரென்று போலீஸ்காரர்கள் வந்து என்னைக் கைது செய்தனர். ஏதோ அரசியல் விவகாரத்தில் சம்பந்தப்பட்டு இருப்பேன் என்ற சந்தேகம் அவர்களுக்கு. கடைசியில் தடயங்கள் ஏதுமில்லை என்று என்னை விடுதலை செய்து விட்டார்கள். உண்மையிலேயே நான் அப்படிப்பட்ட விவகாரங்களில் அப்போழுது ஈடுபட்டிருக்கவில்லை. ஆனால் அன்று என்னைக் கைது செய்ய வந்தபோது என் கண்முன் முதலில் தோன்றியது தூக்கு மேடைதான். இப்பொழுது உண்மையிலேயே தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டு விட்டபடியால் பயம் தெளிந்து விட்டது என்று நினைக்கிறேன். எதுவுமே தூரத்தில் இருந்தால் பயங்கரமாகப் படுகிறது. ஜெயிலுக்கே போகாதவர்கள் ஜெயிலைப் பற்றிப் பல விதமாகக் கொடூரக் கற்பனைகள் செய்து கொள்கிறார்கள். ஒருமுறை உள்ளே வந்து போய்விட்டால் பயம் தெளிந்து விடுகிறது.

சீ! இந்தக் கொசுத் தொல்லை சகிக்க முடியவில்லை. நம் காந்தி ஆசிரமத்துக் கொசுக்கள் அளவிலும் சப்தத்திலும் பெரிதாக இருந்தாலும் அவற்றின் கடிப்பில் இவ்வளவு விஷம் இல்லை. நீலு கேலியாகச் சொல்லுவான் : ''காந்தி ஆசிரமத்துக் கொசுக்கள் அல்லவா? அதனால்தான் அஹிம்ஸா வழியில் இரத்தம் உறிஞ்சக் கற்றுக்கொண்டிருக்

கின்றன'' என்று. அம்மா சிரிப்பை அடக்கிக்கொண்டு பொய்க் கோபத்துடன், ''சரி, சரி போதும், இங்கே வா'' என்பாள். அம்மாவின் முகம் தெளிவாகக் கண் முன் வருகிறது. விழியோரங்களில் சிறு சுருக்கங்கள். அவள் நெஞ்சில் எப்பொழுதுமே ஒரு திகில்—அப்பாவைப்பற்றி நீலு ஏதாவது அவமரியாதையாகப் பேசிவிடப் போகிறானே என்று. அப்படி அவன் ஏதாவது உளறினாலும் அது அப்பாவின் காதுகளை எட்டாதவாறு தடுத்துவிடவேண்டும் என்ற கவலை. நீலு எப்பொழுதுமே யதார்த்தவாதி. எதையும் உடைத்துக் கொட்டிவிடும் சுபாவம். இதன் காரணமாக எத்தனை தடவைகள் ரகளைகளில் மாட்டிக்கொண்டிருக்கிறான்! தான் சொல்லுவது பிறருக்குப் பிடிக்காதோ, அவர்களைப் புண்படுத்துமோ, என்றெல்லாம் எப்பொழுதுமே அவன் யோசித்ததில்லை. எதுவுமே அவனைத் தொட்டது கிடையாது. அவன் உணர்ச்சிகளும் நோக்குகளும் ஸ்தூல அடிப்படைகளைச் சார்ந்தவை. பேனாவும் தூரிகையும் அவனுக்கு அந்நியமானவை. அவனுக்குப் புரிவது கடினமான உடலுழைப்புத்தான். சுத்தியலும், கடப்பாறையுந்தான். அவன் கைகளுக்குப் பொருத்தமானது நீட்டிய வாள் அல்லது கோடாலி—பரசுராமனின் கைகளில் உள்ளது போன்று, இரக்கமற்ற தார்மிக ஒளியுடன் துலங்கும் கருவி. நீலு ஒரு தடவை, ''எனக்குக் கவிதைகள் என்றாலே வெறுப்பு'' என்று சொன்னான். ''உனக்குப் பிடிக்கிற மாதிரியான கவிதை எழுதித் தருகிறேன், பார்'' என்று பதில் சொன்னேன். எழுதியும் கொடுத்தேன். முதலாளி—பாட்டாளி, ஏழை—பணக்காரன் மோதிக் கொள்வது போன்ற விஷயத்தைப் பற்றி அடிதடி பாணியில் ஒரு ஸானெட் (Sonnet). நீலுவுக்கு இது மிகவும் பிடித்திருந்தது. இப்பொழுது நினைவுக்கு வரவில்லை ஒரு வரிகூட. ஆனால் நீலு அந்தக் கவிதைக்கு ஃப்ரேம் போட்டு ஆசிரமத்தில் மாட்டி வைத்திருந்தான்—அம்மாவின் அறையில்.

அம்மா முற்றத்தில் உட்கார்ந்திருக்கும் காட்சி கண் முன் வருகிறது. நீலுவைப் பார்த்துக் கொண்டே தலையை ஆட்டிக் கொண்டு, நாக்கினால் பல் அடியைத் தொட்டுக்கொண்டு 'சிக்' என்ற சப்தத்தை எழுப்புகிறாள். பிறகு ஏதோ சுலோகத்திலிருந்து 'செத்தாலும் சுபாவம் மாறாது' என்ற அடியைச் சொல்லுகிறாள். நீலு என்னைப் பார்த்து, ''அண்ணா, மாட்டிக் கொண்டுவிட்டேன்'' என்ற பொருள்பட கண் அடிக்கிறான். நாங்கள் எதிர்பார்த்தது போலவே ஒரு ஸம்ஸ்கிருத சுலோகத்தில் ஒரு வரியை முணுமுணுக்கிறாள். 'அங்கார் சத தௌதேன மலினம்ச ந முஞ்சதே' (கரியை அலம்பிக் கருமையைப் போக்க முடியாது). நாங்கள் இருவரும் அடக்க முடியாமல் சிரித்துவிடுகிறோம். அம்மா, 'மலினம்ச விமுஞ்சதே'

என்று தப்பாகச் சொல்லி அர்த்தத்தை அனர்த்தமாக்கிவிட்டாள். தப்பு நேர்ந்துவிட்டதை உணர்ந்து, ''ஆமாம், எல்லாம் ஞாபகம் இருக்குமாக்கும்'' என்று அலுத்துக்கொள்கிறாள். ''ஞாபகமில்லா விட்டால், அதைச் சொல்லுவானேன்?'' என்று வெடுக்கென்று நீலு கேட்கிறான். அம்மாவின் சிறு பிழைகள் எங்களுக்கு நன்றாகத் தெரிந்தது தான். ஆனால் நீலு சமயம் நேரும்போதெல்லாம் அவற்றைச் சுட்டிக் காட்டாமல் இருக்கமாட்டான். அவன் அங்கே இருந்திருக்காமல் நான் மட்டும் இருந்திருந்தால் இந்தத் தவற்றை நான் கவனித்திருக்கக் கூட மாட்டேன். அம்மா சொல்லுவாள் 'தயா தக்ஷிணைய்தா' என்று. ஒரு தடவை நான் இதைத் திருத்தி, 'தயா தாக்ஷிண்யம்' என்று சொல்ல வேண்டும் என்று சொன்னேன். அப்பொழுது கேட்டுக் கொண்டாலும் பிறகு சமயம் வரும்போது மறந்துவிடுவாள். நானானால் இதை சட்டை செய்யாமல் இருந்துவிடுவேன், அவளை வீணாக வாட்டுவானேன் என்று. நீலுவுக்கு இது புரிவதில்லை. பிறருடைய பலவீனங்கள், அங்க சேஷ்டைகள், நடத்தைக் கோணல்கள் எல்லாம் அவன் கண்களுக்குப் பளிச்சென்று படும். அவற்றைத் தனது கேலிக்கு இரையாக்கிக் கொள்வான். அவனுடைய வார்த்தைகளின் சாட்டையடி பிறரை எப்படி வருத்தும் என்று அவன் நினைத்துப் பார்ப்பதேயில்லை. நாங்கள் எப்பொழுதுமே அப்பாவிடமிருந்து கொஞ்சம் ஒதுங்கியே இருப்போம். தவிர்க்க முடியாவிட்டாலன்றி அவரிடம் அதிகம் பேசுவதில்லை. இதன் காரணமாகவே, அப்பாவும் மற்ற ஆசிரமவாசிகளும் தங்கள் ஆகாரத்தை முடித்துக் கொண்ட பிறகே நீலுவும் நானும் அம்மா வுடன் சாப்பிட உட்காருவோம். சிறிதளவு பால் இல்லாமல் அம்மாவுக்கு முடியாது. இது ஒன்றுதான் அவள் தனக்காகக் காட்டிக் கொள்ளும் சலுகை.

ஆசிரமத்தில் தங்கியிருப்பவர்களின் எண்ணிக்கைக்கு எப்பொழுதும் குறைவில்லை. இதைத் தவிர, சமயா சமயமின்றி வருவதும் போவது மாய் இருக்கும் விருந்தாளிகள் வேறு. ஆகவே, பாலுக்கு எப்போதுமே பற்றாக் குறையிருப்பினும் எனக்கும் நீலுவுக்கும் கொஞ்சம் பால் கொடுக்காமல் இருக்கமாட்டாள். நான் என் பாலிலிருந்து கொஞ்சம் அம்மாவுக்காக ஒரு கிண்ணத்தில் விட்டு வைப்பேன். இதைக் கவனிக்கும் நீலு வெடுக்கென்று, ''அம்மாவுக்கு மட்டும் பால் இல்லா விட்டால் முடியாது'' என்று சொல்லுவான். அம்மாவின் முகம் மாறி விடும்—தான் மூடி மறைத்து வைத்திருந்த ஒரு பலவீனம் வெளிப்பட்டு விட்ட மாதிரி. என்னவெல்லாமோ கண்ணில் படும் நீலுவுக்கு. தன் வார்த்தைகளால் அம்மாவின் முகத்தில் ஏற்படும் மாறுதல் மட்டும் அவன் கண்ணில் படுவதில்லை.

அவளுக்கு உடம்பு சரியில்லாமல் இருக்கும்போது அதைக் கொஞ்சம் மிகைப்படுத்திஞல் அவளுக்கு ஒரு திருப்தி. அதஞலேயே வேணு மென்றே அவள் நெற்றியில் கையை வைத்து, ''ஐயையோ! உடம்பு பற்றி எரிகிறதே!'' என்று சொல்லுவேன். நீலு உடன் இருந்தால் ''ஹா ,ஹா'' என்று வீடு அதிரச் சிரித்துவிட்டுப் போய் விடுவான்.

அன்று சூப்பிரண்டிடம், ''எனக்கு ஒரு தேவையுமில்லே'' என்று சொன்ன பிறகு மிகவும் திருப்தியாக இருந்தது. திருப்தி மட்டுமல்ல, கொஞ்சம் கர்வமாகவும் இருந்தது. துரை தனியாக வருவதில்லேயே! கூடவே ஜெயிலர், டாக்டர், அஸிஸ்டென்ட் ஜெயிலர், ஹெட் வார்டர், பாடிகார்ட்கள் புடை சூழத்தான் அன்று வந்திருந்தார்.

ஓ! சொல்ல மறந்துவிட்டேனே! சீக்கியக் கைதி ஒருவன் துரையின் காக்கி நிற ராஜகுடையைத் தூக்கிக்கொண்டு பின்ஞலேயே ஓடுவானே–அவனும் அன்று இருந்தான். உண்மையிலேயே தம் பரிவாரங்கள் புடை சூழப் பவனிவரும் இந்த சூப்பிரண்ட் ஜெயில் ஸாம்ராஜ்யத்தின் ஏக சக்ராதிபதிதான். அன்று அந்தக் கேள்விக்கு அவ்விதம் பதிலளித்த பின் ஒருவர் முகத்தையும் நான் பார்க்க முடியவில்லே. நினேவுபடுத்திப் பார்க்கும்போது அந்தக் காட்சி மங்கலாக, ஒரு தெளிவுமில்லாமல் மனக் கண் முன் வருகிறது. என் பதில் அவர்களே எப்படிப் பாதித்தது என்பதை அறிந்து கொள்ள மட்டும் ஆவலாக இருக்கிறது. ஏதோ ஒரு நாடகத்தில் நான் ராஜ பார்ட்டில் நடித்த மாதிரி ஒரு பிரமை.

சிறு வயதில் விடுதலே இயக்கத்தின் கதையைச் சந்தோஷ் அண்ணுவின் வாயிலாகக் கேட்கும்போது எவ்வளவு தடவை கண்கள் நிரம்பி வழிந் திருக்கின்றன! அப்போராட்டத்தில் மரித்து அமரர்களான வீரர்கள் என் கண்முன் தோன்றுவார்கள். ''ஏன் இன்னமும் வதைக்கிறீர்கள்? எங்களே அமைதியாக இறக்க விடுங்கள்'' என்று துப்பாக்கிக் குண்டு பட்ட மரணுவஸ்தையிலும் சொன்ன அவர்களுடன் என்னே ஒப்பிட்டுக் கொள்வேன். அப்பொழுதெல்லாம் என் கண்கள் குளமாகிவிடும்.

நான் அன்று சொன்ன வார்த்தைகள் ஒருவர் மனத்தையும் இந்த மாதிரி தொடவில்லேயா? இல்லே என்றே நினேக்கிறேன். தினமும் தான் இத்தகைய கைதிகளேப் பார்த்துக் கொண்டேயிருக்கிருர்கள், இவர்கள். வயதானவர்கள். உலக அநுபவத்தில் அடிபட்டுக் 'காய்ச்சி'ப் போனவர்கள். உணர்ச்சி வசப்படும் இளேஞர்கள் அல்ல. எல்லோரும் என்னேப் புகழவேண்டும், என் கதையைச் சொல்ல வேண்டும்—இதுதான் என் ஆசை. இதுதான் என் பலவீனம். சில சமயங்களில் என்னேப்பற்றி எனக்கே சந்தேகம் எழும். ''நாட்டின் வருங்காலத்தைவிட என் புகழின் வருங்காலத்தைப்பற்றி எனக்குக் கவலே அதிகமோ?'' என்று. உண்மையிலேயே அப்படித்தாஞ?

வாழ்க்கையளிக்கும் ஸ்தூலமான போகங்களில் ஒரு நாளும் நான் என்னை மூழ்கடித்துக் கொண்டதில்லையே. தேசத்துக்கு நல்லது என்று எனக்குப் பட்டதைச் செய்ய சிறிதளவுகூடத் தயங்கியதில்லையே? என் சொந்த சுகத்தையோ அல்லது எதிர்காலத்தையோபற்றிக் கவலைப் பட்டதே இல்லையே? இவற்றுக்கெல்லாம் கைமாருக இத்தேசத்து ஜனங்கள் என்னைப்பற்றி சில வார்த்தைகள் புகழ்ச்சியாகப் பேச வேண்டும் என்ற ஆசை நேர்மையற்றதா?

ஜெயில் டாக்டர் நிச்சயம் என்னைப்பற்றி அவர் வீட்டில் பேசியிருப் பார். அஸிஸ்டண்ட் ஜெயிலர் உடனே மேல் வகுப்பு அரசியல் கைதி கள் இருக்கும் வார்டிற்குப் போய் இதைப்பற்றி அரட்டை அடித்திருப் பான். அப்பாவும் அதே வார்டில்தான் இருக்கிருர். அவர் காதிலும் இந்தச் சம்பவம் விழுந்திருக்கும். எதையும் காட்டிக்கொள்ளாத சுபாவம் அப்பாவுக்கு. அவர் முகத்தைப் பார்த்து அவர் என்ன நினைத்துக் கொண்டிருக்கிருர் என்று சொல்ல முடியாது. தனியாக உட்கார்ந்து கொண்டு சர்க்காவில் நூற்றுக் கொண்டிருப்பார். கண்களில் ஒரிரண்டு சொட்டு நீர் சுரந்திருக்கலாம். இல்லை இல்லை, அப்பாவிடமிருந்து இவ்வளவு அதிகமான உணர்ச்சிப் பெருக்கை நான் எதிர்பார்க்கவில்லை. அதிகமாகப் போனல் ஒரிரண்டு நிமிஷங்கள் பிரமையடைந்திருக்கலாம். சர்க்காவின் ஒட்டம் சிறிதளவு குறைந் திருக்கலாம்—நூலிழை ஒரிரண்டு தடவைகள் அறுபட்டுப் போயிருக்க கூடும்.

என் மனத்தில் திடீரென்று ஒரு சந்தேகம் தோன்றுகிறது. பீதியும் கூட. ஜெயில் சிப்பந்திகளிடையே அன்று என்னைப்பற்றி எந்தவிதமான அபிப்பிராயத்தை நிறுவ முயன்றேனே அந்த அபிப்பிராயம் அவர்கள் மனத்தில் எழும்பவேயில்லையோ என்ற சந்தேகம் என்னை வாட்டுகிறது. அன்று நான் குரலை உயர்த்திப் பேசவில்லை. கண்களைக் கூடத் தாழ்த்திக் கொண்டு பேசினேன். இதிலிருந்து நான் மனேதிடமற்றவன் என்று இவர்கள் முடிவு செய்திருக்கலாம். அன்றைய என் நடத்தை அநாவசியமாகச் சர்க்காரைப் பகைத்துக் கொள்வதாக இவர்களுக்குப் பட்டிருக்குமோ? இவர்கள் இரவு பகலாக, எப்பொழுதும் திருடர்கள், கொள்ளைக்காரர்கள், கொலைகாரர்கள் போன்றேருடன் மாரடித்துக் கொண்டு இருப்பவர்கள். ஆகவே உணர்ச்சிகள் வற்றி, மென்மையான எந்த நோக்கத்துக்கும் இடம் கொடாதவர்கள். அரசியல் கைதிகள், கொலைகாரன், கொள்ளைக்காரன் போன்ற கைதிகளிலிருந்து வேறு பட்டவர்கள் என்ற தெளிவு இல்லாதவர்கள். தப்பித் தவறி மரியாதையாக நடந்து கொண்டார்களானல், ஏதாவது தகராறு நேர்ந்துவிடுமோ என்ற பயம், அல்லது சுயநலம் காரணமாக

இருக்கும். மூன்றும் வகுப்பு அரசியல் கைதி உடல் நலமில்லாமல் படுத்துக்கொண்டால் அவனைக் கண்டபடி திட்டுவார் ஜெயில் டாக்டர். சீதபேதி கண்டு மருந்து கேட்டால், ''என்ன, தயிருக்கு அடி போடுகிறாயா? அதெல்லாம் என்கிட்ட செல்லாது'' என்று எரிந்துவிழுவார். அதே டாக்டர் மேல் வகுப்புக் கைதிகளிடம் எவ்வளவு மென்மையாக நடந்து கொள்கிறார்! இரண்டு ஆண்டுகளுக்கு முன் 'தனி நபர் சந்தியாகிரகம்' நடந்து காங்கிரஸ் தலைவர்கள் ஜெயிலுக்கு வந்த போது, இதே சிப்பந்திகள் அவர்களை வளைய வளைய வந்து காக்காய் பிடித்தவாறு இருந்ததை நானே பார்த்திருக்கிறேன். இதே தலைவர்கள் பிகாரில் மறுபடியும் மந்திரிசபை அமைக்கக் கூடும் என்று அப்போது கணக்கிட்டிருந்தார்கள், இந்தச் சிப்பந்திகள்... இன்றோ?

ஜெயில் சூப்பிரண்டிடம் அன்று நான் நடந்து கொண்ட விதம் இந்தச் சிப்பந்திகளைப் பாதித்திருக்குமா? இதைவிட நாடக பாணியில் குரலை உயர்த்தி, ''பசுவைக் கொன்று செருப்பு தானமா? உங்களிடமிருந்து ஒரு தயவும் நான் எதிர் பார்க்கவில்லை'' என்று கூறியிருந்தால், ஒரு வேளை என்னை அதிகம் மதித்திருப்பார்கள். கொஞ்சம் நாடக மேடை வாடை அடித்திருந்தாலும் காரியம் நடந்திருக்கும். மற்றொரு சம்பவம் நினைவுக்கு வருகிறது. இரண்டாம் நம்பர் வார்டில் அக்டோபர் மாதத்தில் தடியடிப் பிரயோகம் நடந்து, மண்டை பிளவுபட்ட நிலையில் சுகதேவனின் பிரசங்கம். நாடகங்களில் ரணகளத்தில் மரிக்கும் கதாநாயகன் மாதிரி படுத்துக்கொண்டே சிம்மக் குரலில், ''உங்களுக்கு வெட்கம், மானம் எதுவுமில்லையா?'' என்ற வார்த்தைகளுடன் தனது உரையை ஆரம்பித்தான். இன்னும் காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. பள்ளியில் ஒரு தடவை பரிசளிப்பு விழா சமயத்தில் நான் 'மேகநாத வதம்' காவியத்திலிருந்து ஒரு பகுதியை ஒப்பித்தேன்.

அஸிஸ்டெண்ட் ஹெட்மாஸ்டர் காளி பாபு எனக்குச் சொல்லிக் கொடுத்தார்: ''இந்த வரி வரை ஒரு பக்கமாக முழங்கைமீது சாய்ந்தவாறு ஒப்பிக்கவேண்டும். அதற்குப் பிறகு முழுதும் படுத்துக்கொண்டு கண்களைக் கொஞ்சம் கொஞ்சமாக மூடிக் கொண்டு, மெதுவாக இழுத்த மாதிரி 'உங்களுடைய இக் களங்கத்தை உலகிலிருந்து யார் கழுவுவார்?' என்று சொல்லவேண்டும்.'' சுகதேவனின் அன்றைய ஆவேசப் பேச்சு அந்தச் சூழ்நிலைக்குச் சிறிதும் பொருத்தம் இல்லாததாக இருந்தது. ஆனால் அங்கே கூடியிருந்தவர்களில் இதை உணர்ந்தவர்கள் மிகச் சிலரே தான்.

''பாபூ! சாப்பாடு ஆயிடுச்சிங்களா?''

சிந்தனைக் கயிறு அறுபடுகிறது. எதிரில் வார்டர். அவன் குரலில் இரக்கம். வெகு நேரத்துக்கு முன்பே வெளியில் விளக்கு வைத்

திருக்கிறான். இதுவரை நான் கவனிக்கவில்லை. இந்த விளக்கை செல்லுக்குள்ளேயே வைத்துவிட்டால் இவர்களுக்கு என்ன நஷ்டமோ தெரியவில்லை. மண்ணெண்ணெயை மேலே ஊற்றித் தற்கொலை செய்து கொள்வது என்பது அத்தனை எளிதான காரியமல்ல. இருந்தாலும் அவர்களுக்குப் பயம். ஒரு வேளை அவர்கள் எண்ணம் சரி தானோ என்னவோ? அவர்கள் நியமங்கள் எல்லாமே அநுபவத்திலிருந்து எழுந்தவைதானே! பார்க்கப் போனால் இத்தகைய அற்பமான ஜெயில் விதியின் காரணமாகத்தான் சென்ற ஆண்டில் நடக்கவிருந்த ஜெயில் மியூடினி தவிர்க்கப்பட்டது. கேட் வார்டரைக் கொன்று கைதிகள் சாவிக்கொத்தைக் கைப்பற்றினர். அந்தப் பெரிய சாவிக்கொத்தில் இரு நூற்றுக்கும் மேற்பட்ட சாவிகள். இதில் அநேகம் பிரயோஜனமே அற்றவை. ஆனால் ஜெயில் விதிகளின்படி இம்மாதிரி பல சாவிகள் கொத்தில் இருக்கவேண்டும். கலகக்காரர்களுக்குச் சாவிக்கொத்து கிடைத்தும், எந்தச் சாவி எந்தக் கேட்டைத் திறக்கும் என்று தெரியவில்லை. ஒன்றொன்றாய் நுழைத்துப் பார்க்கும் முயற்சியில் ஐந்து நிமிஷங்கள் ஓடிவிட்டன. இடையில் 'அலாரம்'—ஜெயில் பாஷையில் 'பைத்தியக்—கார மணி'—ஒலித்தது. துப்பாக்கி சகிதமாய்ச் சிப்பாய்கள் வந்துவிட்டனர். பிறகு...

வார்டரின் கேள்விக்குப் பதில் அளிக்காமல், ''மணி என்ன?'' என்று கேட்டேன்.

''ட்யூட்டி மாறும் சமயம் வந்துவிட்டது'' என்றான். அதாவது இவன் போன்றவர்களுக்குப் பதில் இரவில் வேலை செய்யும் வார்டர்கள் வரும் நேரமாயிற்று என்று பொருள். ஸெண்ட்ரல் டவரில் கைதிகள் கணக்கெடுப்பு நடக்கிறது: எந்த வார்டில் எத்தனை கைதிகள், இன்றைய புதுக் கைதிகள், 'வரும்படி' எத்தனை, 'செலவு' எத்தனை? கூட்டிக் கழித்துக் கணக்கு சரியாக இருக்கிறதா?

வார்டர் தன் கேள்வியை மறக்கவில்லை. மறுபடியும் ''சாப்பிட்டீங்களா?'' என்று கேட்கிறான்.

இன்று நான் சாப்பிடவில்லை என்பதைக் கவனித்திருக்கிறான். ''இல்லை'' என்று பதில் சொன்னேன்.

''தயிர் இருக்கிறது. கொஞ்சம் சாப்பிட்டுத்தான் பாருங்களேன்.''

வாரத்தில் ஒரு நாள் தான் கீழ் வகுப்புக் கைதிகளுக்குத் தயிர். பிந்தலைத் தட்டில் வெண்ணெய் எடுக்கப்பட்ட, வெடவெடவென்று இருக்கும் தயிர். தீய்ந்து போன வாசனை. காங்கிரஸ் ஆட்சியில் கொண்டு வரப்பட்ட இந்தச் சீர்திருத்தம் மூன்றாம் வகுப்பு அரசியல் கைதிகளிடையே ஒரு நிரந்தரமான கேலிப் பொருளாக இருந்தது. காங்கிரஸ் பெருந்தலைவர்கள் தாம் இந்தக் கேலிக்கு இலக்கு. அரசியல்

கைதிகள் எல்லாரையும் ஒரே வகுப்பில் இவர்கள் ஏன் போடவில்லை? உயர் வகுப்பு, கீழ் வகுப்பு என்று அரசியல் கைதிகளிடையே பாகுபாடு செய்வதன் பொருள் என்ன? உயர் வகுப்புக்குத் தினத் திண்டிப்படி பத்தணு, கீழ்வகுப்பிற்கு மூணரையணு—இதென்ன கணக்கு? கீழ் வகுப்பு அரசியல் கைதிகளுக்குச் சொந்தச் செலவில் சௌகரியங்கள் செய்து கொள்ளும் சலுகை கிடையாது. இதைத் தந்துவிட்டால் என்ன குடி முழுகிப் போய்விடும்? வெளியில் இருந்து அவர்களுக்கு ஏதாவது சாப்பாடோ கீப்பாடோ வந்தால் தலைவர்கள் வீட்டு அரிசி மக்கலாகிவிடுமா என்ன? மாதம் இருமுறை கடிதம் எழுதுவதற்கு இக்கைதிகளுக்கு அனுமதி கொடுத்து விட்டால் மகா பாரதம் அசுத்த மாகிவிடுமோ? சொந்தச் செலவில் இவர்கள் பீடி வாங்கிக் கொண்டால் என்ன விபரீதம் நேர்ந்துவிடும்? இதுமாதிரி இன்னும் எ ந்தனையோ குறைகள் ....

ஸெண்ட்ரல் டவர் மாடியிலிருந்து ஸிம்மக் குரலில் ராகம் போட்டுக் காவல் குரல் எழுகிறது. ''ஒண்ணும் நம்பர்! குரல் கொடு! இரண்டாம் நம்பர்! குரல் கொடு! மூன்றும் நம்பர்! குரல் கொடு! நா—ஆ. லாம் நம்பர்! குரல் கொடு! ஐ—ஐந்தாம் நம்பர்! குரல் கொடு! ஆ-ரா-ஆ-ஆ-ம் நம்பர் குரல் கொடு!'' மறுபடியும் புதிய ரவுண்டு. குரல் கொடு!

எல்லா வார்டர்களுடைய பதில் குரலும் காதில் விழவில்லை. ஒரு வேளை என் ஸெல் வரை அவை எட்டவில்லை போலும். டவரிலிருக்கும் வார்டரும் எல்லா வார்டர்களிடமிருந்தும் பதில் குரலை எதிர்பார்க்க வில்லை என்று நினைக்கிறேன். அவன் தன் கடமையை யந்திரம்போல் கழித்துவிட்டுப் போகிருன். கொஞ்ச நேரத்துக்கு ஒரு தடவை கத்த வேண்டியது, கிராமபோன் ரிகார்ட் மாதிரி. ஒவ்வொரு வார்டி லிருந்தும் எத்தனை கைதிகள் உள்ளனர் என்று பதில் வரவேண்டும் என்று நியமம். ஆனுல் முன்னதாகவே ஜெயில் சிப்பந்திகள் இந்தக் கணக்கை டவரின் கீழ் அறையில் எடுத்து முடித்துவிட்டிருப்பார்கள். ஆகவே இந்தக் கூப்பாடு கடனே என்று செய்யும் ஒரு சடங்கு. எல்லா வார்டர்களுக்கும் இதர சிப்பந்திகளுக்கும் இது தெரிந்த விஷயந்தான். ஆகவே வீணில் பதில் குரல் கொடுத்துத் தொண்டையை வற்ற வைத்துக் கொள்வதில்லை. 'டங் டங்' என்று மணி அடிக்கிறது. கணக்கெடுத்தல் முடிந்துவிட்டது. மணி ஒன்பது. நாளைய கணக்கெடுத்தலை நான் கேட்கவேண்டியிராது. ஸெண்ட்ரல் டவர் மீதிருக்கும் விளக்கு கட்டாயம் 50 கான்டில் பவராக இருக்க வேண்டும். இருட்டடிப்புக் காரணமாக (black out) இதற்கு ஒரு கருப்பு ஷேட் (shade). விளக்குக்கு நேர் கீழே மூங்கிலால் பின்னப்

பட்ட ஒரு பெரிய குடை. காவல் ட்யூடியிலிருக்கும் வார்டரை வெயில் மழையிலிருந்து காப்பாற்றுவதற்காக நிறுவப்பட்டது. இதுவும் இருட்டடிப்பின் காரணமாக கருஞ்சாயமடிக்கப் பெற்றிருக்கிறது. இருந்தும் வெளிச்சம் நேராக இதன் மேல் விழுவதால் நாலா பக்கமும் சிதறிப் போய் விடுகிறது. ஆகவே வெகுநேரம் அதை உற்றுப் பார்க்க முடியாது. இந்தக் குடை இருட்டடிப்பின் நோக்கத்தையே வீணாக்கி விடுகிறது. இந்த டவரையும் அதன் கீழுள்ள குடையையும் பார்க்கும் போதெல்லாம் எனக்குக் காசியில் உள்ள அஹல்யாபாய் காட்தான் நினைவுக்கு வருகிறது. அந்தப் படித்துறையின் உச்சியிலுள்ள மண்டபத்தில் தான் நாங்கள் நாள் தவறாது மாலையில் சந்தித்து அரட்டையடிப்போம். ஒரு நாள் அங்கிருந்து சிங்கேஸ்வர் சுகுல் வெற்றிலைச் சாறைக் கீழே துப்பிவிட்டான். அப்பப்பா! என்ன அமர்க்களம்! சிங்கேஸ்வருக்குத்தான் என்ன துணிச்சல்! சாவுக்கு அஞ்சமாட்டான் அவன். கழுவேறுதல் பற்றி அவன் அலட்சியமாகப் பேசும் போதெல்லாம் எனக்கு ஒருவிதப் பொறாமை கூட ஏற்படுவதுண்டு. நான் அவன் கட்சியில் சேரவேண்டும் என்று அவன் விரும்பினான் என்று எனக்குத் தெரியும். ஆனால் அவன் ஆசையை என்னால் நிறைவேற்ற முடியவில்லை. என் உள்ளத்தை நானே துருவிப் பார்த்துக்கொண்டபோது, 'என்னுடைய கோழைத்தனம் தான் என்னைத் தடுத்ததே தவிர, அவனுடைய வழிமுறைகளின் பாலுள்ள வெறுப்பு அல்ல' என்று படுகிறது. அந்தப் பயம் இன்று எங்கே போயிற்று? வயது அதிகமாக, அதிகமாக ஜனங்களுக்கு மரண பயம் அதிகரிக்கும் என்றுதான் கேள்விப் பட்டிருக்கிறேன். இந்த விதிக்கு நான் ஒரு விலக்கா என்ன? சிங்கேஸ்வரனை இப்பொழுது சந்திக்க நேர்ந்தால் பேசுவதற்கு எத்தனை விஷயங்கள் இருக்கின்றன! வெகு நாட்களுக்குப் பிறகு, ராம்கார் காங்கிரஸில் அவனைச் சந்திக்க நேர்ந்தது. காங்கிரஸ் ஆட்சியில் பரெய்ல் ஜெயிலிலிருந்து விடுவிக்கப் பட்டிருந்தான். மெயிலை நிறுத்திக் கொள்ளையடித்த குற்றத்துக்காக அவன் தண்டிக்கப்பட்டிருந்தான். லக்னோ பக்கத்தில் ஏதோ ஊர், பிபராஹாவோ ஏதோ பெயர்—இப்பொழுது ஞாபகம் வரவில்லை.

புது வார்டர் ட்யூட்டிக்கு வந்துவிட்டான். அவன் வந்ததை நான் கவனிக்கவில்லை. ''பாபு ஒரு பீடி குடிக்கிறீங்களா?'' என்று அவன் கேட்டபோது தான் என் நினைவு எனக்கு வந்தது.

ஏனோ இன்று வார்டர்கள் கூட என்னிடம் அநுதாபம் காட்டுகின்றனர். எந்த வகையிலேனும் எனக்கு உதவவேண்டும், என்னைத் திருப்தி செய்ய வேண்டும் என்ற ஆர்வம். இந்த அநுதாபம் வெறும் பூச்சல்ல. உள்ளார்ந்தது. நான் பீடி வேண்டாம் என்று மறுத்ததில்

அவனுக்குக் கொஞ்சம் ஏமாற்றம், மனவருத்தம் கூட. வழக்கமான தன் பணிகளை விருப்பமில்லாமல் கடனே என்று செய்கிறன். பூட்டைக் 'கடாங்' என்று ஒரு ஆட்டு ஆட்டிவிட்டு இரும்புக் கதவை கட கட வென்று அசைக்கிறன். இது முன்னரே செய்திருக்க வேண்டிய காரியம், முதல் வார்டர் கண் முன்னல். அதாவது கதவு சரியாக மூடித் தாளிடப் பட்டிருக்கிறதா என்பதை உறுதிப்படுத்திக் கொள்வதற்காக. ஒரு வேளை முன்னல் இருந்த வார்டருடன் கதவைத் திறந்து வைத்துவிடும்படி கைதி ஏற்பாடு செய்து விட்டிருந்தால் என்ன ஆவது? அப்படிச் செய்து கைதி தப்பி ஓடிவிட்டால், பொறுப்பு இவன் மேல் அல்லவா விழுந்து விடும்? முதல்வன்தான் 'சார்ஜ்' ஒப்பித்துவிட்டானே? இதற்காகவே தான் இந்த முன் ஜாக்கிரதை எல்லாம். ஆனல் முதலிலிருந்த வார்டர் போய் வெகு நேரமாகிவிட்டது. எட்டுமணி நேர ட்யூட்டிக்குப் பிறகு வீட்டுக்குப் போகும் அவசரம், மாலையில் வீட்டுக்கு விரையும் பசுவைப் போல. யார் அவனைக் குற்றம் சொல்ல முடியும்?

புது வார்டரின் முகம் சுருங்கியதை மனத்தில் கொண்டு அவனிடம் பேச்சுக் கொடுத்தேன். ''கைதிகள் கணக்கெடுக்கும் வேலையெல்லாம் முடிந்துவிட்டதாப்பா?'' என்று கேட்டேன். ''ஆயிடுத்து பாபு! பத்தாம் நம்பர், ஒன்பதாம் நம்பர், ஏழாம் நம்பர், மூணும் நம்பர், ஒண்ணும் நம்பர், இந்த அஞ்சில்தான் கைதிகள் இருக்காங்க. பத்தாம் நம்பர் லேந்துதான் ஆரம்பிச்சேன். அதன் வார்டர் எங்கோ வெளியே உட்கார்ந்துகொண்டு கதை பேசிக்கினு இருந்தான். மூணும் நம்பர் வார்டருக்கும் எனக்குந்தான் இன்னிக்கி கணக்கெடுப்பு ட்யூட்டி.''

'கன்டெம்ட்' ஸெல்களில் ஐந்து கைதிகள். ஜெயில் பாஷையில் தூக்குமேடை ஸெல். கன்டெம்ட் ஸெல் என்று காதில் விழும்போது என்ஜினியரிங் டிபார்ட்மெண்டால் உபயோகத்துக்கு லாயக்கு இல்லாதது என்று தள்ளிவிடப்பட்ட கட்டிடம் என்ற எண்ணந்தான் எழுகிறது. பிறகுதான் இது 'கன்டெம்ட்' கைதிகளுக்கான ஸெல் என்ற எண்ணம் வருகிறது. முதலிலேயே இது மனத்தில் படவில்லையே, ஏன்? பத்து, ஒன்பது இரண்டிலும் வெடிகுண்டு கேஸில் சம்பந்தப் பட்ட 'அண்டர் ட்ரயல்' ஆசாமிகள். அவர்களை ஏன் இந்த ஸெல் களில் வைத்திருக்கிறர்கள் என்று புரியவில்லை. இந்த வார்டில் உள்ள இருபது ஸெல்கள் தவிர இந்த ஜெயிலில் இன்னும் நாற்பது ஐம்பது ஸெல்கள் இருக்கின்றன. இருந்தாலும் இவர்களை ஏனே இந்த ஸெல் களில் வைத்திருக்கிறர்கள்! போலீஸ் உத்தரவோ என்னவோ? ஒரு வேளை இவர்களிடமிருந்து 'ஒப்புதல் வாக்குமூலம்' வாங்கிவிடலாம் என்று எதிர்பார்க்கிறர்கள் போலும். எனவே மற்ற அரசியல் கைதி களுடன் கலந்து பழகாமலிருப்பதற்கு இந்த ஏற்பாடு என்று நினைக்

கிறேன். ஏழாம் நம்பரில் இருப்பவன் ஒரு பைத்தியம். தனக்குத் தானே கூப்பாடு போட்டுக் கொள்வான். வார்டர்களைக் கண்டு விட்டால் காதில் விழக்கூடாத வசைகளையெல்லாம் எறிவான்.

ஒன்பதாவது, பத்தாவது ஸெல்களின் கதவுகள் பகல் முழுதும் திறந் திருக்கும். பிற்பகல் வேளைகளில் என்றைக்காவது என் ஸெல்லின் ஸ்பெஷல் வார்டருக்குப் பீடியோ, சர்க்கரையோ லஞ்சம் கொடுத்துச் சரிக்கட்டிவிட்டு, என்னிடம் இரண்டு வார்த்தைகள் பேசிவிட்டுப் போவார்கள். அவர்களுடைய ஸெல்கள் மாலையில் பூட்டப்படும். பிறகு தங்கள் ஸெலகளிலிருந்து ஏழாம் நம்பர் ஸெல் பைத்தியத்தைச் சீண்டிக் கொண்டேயிருப்பார்கள். அவன் பெயரைச் சொல்லிக் கூப்பிட்ட மாத்திரத்தில் பைத்தியம் திட்ட ஆரம்பித்துவிடுவான். 'அவன் நிஜப் பைத்தியமல்ல, வேஷம் போடுகிறான்' என்பது வார்டர் களின் முடிவான அபிப்பிராயம். ''எத்தனை பேரை இந்த மாதிரி பார்த்திருக்கிறோம்? சர்க்கார் ஒண்ணும் அத்தனை முட்டாள் இல்லை. பைத்திய வேஷம் போட்டு அவன் தப்பிவிடமுடியாது'' என்பார்கள்.

மூன்றாவது ஸெல்லில் இருப்பவன் ஒரு கொலையாளி. தன் சகோதரனையே வெட்டிப் போட்டவன். அது ஒரு பயங்கரமான கதை. அவனது குடும்ப வாழ்க்கையில் நடந்த அசங்கியமான சம்பவங்களை அவன் மனைவியே ஜட்ஜ் முன்னால் சாட்சிக் கூண்டிலிருந்து விவரித்தாள். ஹைக்கோர்ட்டிற்கு அப்பீல் செய்தான். அங்கேயும் தண்டனை ஊர்ஜிதமாகிவிட்டது. பகல் இரவு என்று பார்க்காமல் அவன் ''ஸீதாராம்'' என்று ஜபித்துக்கொண் டிருக்கிறான். பஜனைப் பாட்டுக்கள் பாடுகிறான்.

வார்டர்கள் என்னைக் ''கைதி'' என்று குறிப்பிட்டால் எனக்கு எரிச்சலாக இருக்கிறது. இதைவிட மரியாதையான வார்த்தையை உபயோகிக்கக்கூடாதா என்று தோன்றுகிறது. சிறு வயதில் கற்ற பழக்க வழக்கங்கள், நல்லது, கெட்டது பற்றிய எண்ணங்கள். ஆகியவற்றை எளிதில் துடைத்தழித்துவிட முடிவதில்லை. வார்டர்கள் என்னைக் கைதி என்று குறிப்பிடாமல் என்னவென்று குறிப்பிட முடியும்? அவர்கள் சொல்வது சரிதான். இன்று நான் தான் இந்த ஜெயிலில் எல்லோரையும் விட முக்கியமான கைதி. யார் சீக்கிரம் தூக்கிலிடப் படப் போகிறானோ அவனுக்குத்தான் ஒண்ணும் நம்பர் ஸெல். இந்த ஸெல்லிற்கு அடுத்து ஒரு கதவு. தூக்கிலிடும் வேளை வந்தவுடன் தான் இந்தக் கதவைத் திறந்து கைதியை அழைத்துச் செல்வார்கள். மற்ற நேரங்களில் இந்தக் கதவு மூடியே இருக்கும்.

கடைசி விநாடிக்கு முன்பு அந்தக் கதவை ஒரு தரம் பார்க்கவேண்டும் போலிருக்கிறது. ஒருவேளை அதன் தாழ்ப்பாள் துருப் பிடித்திருக்குமோ?

எனக்கும் மரணத்துக்கும் இடையே இருப்பது இந்த ஒரே கதவுதான். ஆனாலும் ''கைதி'' என்றால் காதில் நாராசமாக விழுகிறது. வெடி குண்டு போட்டவர்களையும் வார்டர்கள் கைதி என்றே கூப்பிடு கிறார்கள். ஆனால் அது கர்ணகடூரமாக இல்லை. எனக்கு 'வெடிகுண்டு கேஸ் கைதி' என்பது கேட்டுப் பழக்கப்பட்டுப் போன பேச்சு. பல தேசபக்தர்களுடைய நாட்டுப்பற்றின் நினைவுகள் இந்தப் பேச்சுடன் பிணைந்துள்ளன. மற்றவர்களுக்கு எப்படியோ தெரியாது. என் சம்பந்தப்பட்டவரை இது உண்மை. ஆனால் 'தூக்குக் கைதி' என்று கேட்கும்போது சாதாரண கொலைகாரன், கொள்ளைக்காரன் ஆகியோர் தாம் நினைவுக்கு வருகின்றனர். இந்த வார்த்தைகளுடன் இந்தச் சித்திரந்தான் இணைந்திருப்பதுபோல் தோன்றுகிறது.

வார்டர்கள் இந்தக் கைதி என்கிற வார்த்தையை உபயோகித்து என்னைத் திருடர், கொள்ளைக்காரர்களில் ஒருவனாக்கி விடுவதுபோல் படுகிறது. அதனால்தான் இந்த வார்த்தைகள் எனக்குப் பிடிக்கவில்லை. கேட்டால் கோபம் வருகிறது. உள்ளூற வேதனை தருகிறது. இந்த வார்டர் கண்ணில்கூட நான் மதிப்பிற்குரிய தேசத் தொண்டனாக இல்லையே! நான் இவர்களிடமிருந்து எதிர்பார்ப்பது புகழ்ச்சி. மெய்யாக இல்லாவிடினும் வேஷத்திற்காகவாவது என் தியாகத்துக்கு இவர்கள் மரியாதை காட்டலாம். இவர்களுக்காக நான் உயிரையே விடத் தயாராக இருக்கிறேனே, இதற்காகக்கூட ஒரு நன்றி உணர்வு காட்டக்கூடாதா? நன்றியில்லாவிட்டாலும் ஓர் இரக்கம்—அதுவும் தியாகிக்குக் காட்டவேண்டிய இரக்கங்கூட அல்ல, ஒரு துரதிருஷ்டக் காரனின்பால் காட்டும் பரிதாபம். பல இன்பங்கள் நிறைந்த உலகத்தை இன்னும் சில மணி நேரங்களே அநுபவிக்கவிருக்கும் ஒரு துர்பாக்கிய சாலிக்குரிய இரக்கம்.

சித்தியின் ஞாபகம் வருகிறது. மேற்கே செல்லும் வண்டியில் அவளை ஏற்றிவிட நைஹாடி ஸ்டேஷனுக்குப் போயிருந்தேன். முண்டனம் செய்யப்பட்ட தலை. காவிக் கலர் புடைவை. கழுத்தில் துளசி மாலை. சொந்தக் குடும்பத்துடன் அவள் விசேஷமான எந்தச் சம்பந்தமும் வைத்துக் கொள்ளவில்லை. மடங்களிலும் ஆசிரமங்களிலும் காலத்தைக் கழித்து வந்தாள். நவத்வீபத்தில் இருந்து பிருந்தாவனத்துக்குப் போய்க் கொண்டிருக்கிறாள். எக்கச்சக்கமான சாமான்கள், படுக்கை, பயறு மூட்டை, இளநீர், ஆடைப் பாலில் செய்த இனிப்புப் பண்டங்கள் நிறைந்த டப்பாக்கள், எள்ளு. தன்னுடன் ஆசிரமத்திலிருக்கும் சிஷ்ய-சிஷ்யை கோடிகளுக்காக, சாமான்களை ஏற்றிவிடத்தான் என்னுடைய வருகை. சித்தி வண்டியில் ஏறிவிட்டாள். கூலியின் தலையிலிருந்து சாமான்கள் எல்லாவற்றையும் ஒன்றன்பின் ஒன்றாக இறக்கி

வண்டியில் ஏற்றினேன். ''எல்லாவற்றையும் ஏற்றிவிட்டாயா?'' என்கிறாள் சித்தி. நான், ஒண்ணு, ரெண்டு என்று கணக்கிட்டு, ''மொத்தம் 22 சாமான்கள்'' என்று சொன்னேன். திடீரென்று சித்தியின் கண்களில் நீர் துளும்பிற்று. தெரியாமல் ஏதோ தப்புச் செய்து விட்டேன் என்று உணர்ந்தேன். கொஞ்சநேரம் கழித்துச் சித்தியே விஷயத்தை விளக்கினாள். பட்டுத் துணியால் சுற்றி மூடியிருந்த, காலம் சென்ற அவளுடைய குருதேவரின் வண்ணப்படத்தை நான் ஒரு 'சாமானாக' எண்ணிவிட்டேன். அப்பொழுது சித்தியின் இந்த மனோ பாவம் எனக்கு விளங்காத புதிராக இருந்தது. இன்று என்னை வார்டர் ''கைதி'' என்று கூப்பிடும்போது என் மனோநிலை எனக்கே ஆச்சரிய மாக இருக்கிறது. தூக்குக் கைதியைக் கைதி என்று கூப்பிடாமல் இருந்தால் தானே ஆச்சரியப்படவேண்டும்?

''தூக்கு மேடை'' என்ற சொல் தியாகிகளின் புனித மணம் நிறைந்த நினைவுகளை எழுப்புகிறது. ஆனால் 'தூக்குமரம்' என்று அதையே மாற்றி அழைத்தால் கண் முன் தோன்றுவது கொலைகாரர் களின் உருவந்தான். இதை விடவும் ஆச்சரியமானது என் கண் முன் நிழலாடும் மற்றொரு சித்திரம். 'ஜிம்னாஷிய'த்தில் இருக்கும் 'ஹாரி ஸாண்டல் பாரி'லிருந்து ஊசலாடும் ஒரு மரித்த தேகம்—அதன் கால்கள் தரையில் பாவாமல், மெதுவாக ஒரே கதியில் வடக்கு, வடகிழக்கு, கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, தெற்கு, தென் கிழக்கு, கிழக்கு, வடகிழக்கு என்று ஆடுகின்றன. ஏதோ இங்கிலீஷ் நாவலில் படித்த காட்சி என்று நினைக்கிறேன்.

இன்று பத்தாம் நம்பர் ஸெல்லிலிருந்து தன் ட்யூட்டி ஆரம்பம் என்று வார்டர் சொன்னான். ஆகவே 11லிருந்து 20 வரை ஸெல்கள் எல்லாம் காலி என்று அர்த்தம். ஜெயில் விதிகளை அவமதித்துக் கட்டுப்பாடுகளை மீற முற்படும் கைதிகளுக்குச் சாதாரணமாகத் தனி அடைப்புத் தண்டனை வழங்குவார்கள். அப்பொழுதெல்லாம் இந்த ஸெல்களில்தான் அவர்களை வைப்பது வழக்கம். சில தினங்கள் தனியாக இருப்பது என்ன பெரிய தண்டனை என்று எனக்குப் புரிய வில்லை. வார்டர்களின் கெடுபிடிகளிலிருந்து விடுபட்டுச் சில நாட்கள் தனிமையில் கழிப்பது அப்படி என்ன சகிக்கமுடியாத ஒரு நிலையா?

சாதாரணமாக இந்த ஸெல்களெல்லாம் முழு உபயோகத்தில் இருக்கும். இன்று ஏன் இப்படிக் காலியாக இருக்கின்றன? ஒருபோதும் இப்படியிருந்ததில்லையே? வேண்டுமென்றே இவர்களை வேறு இடத் திற்கு அனுப்பியிருக்கவேண்டும். தனியடைப்புத் தண்டனைகளைச் சூப்பிரண்ட் ரத்துச் செய்திருக்கவேண்டும். இன்றிரவு எத்தனைக் கெத்தனை குறைவான நபர்களைக் 'கண்டெம்டு' ஸெல்களில்

வைக்கலாமோ அத்தனைக்கத்தனை நல்லது என்று நினைத்திருப்பார். இன்றிரவு அவர்கள் இங்கே தங்கியிருந்தால் அவர்கள் மனம் பாதிக்கப் படலாம். அதற்காகவே இங்கிருந்து அகற்றப்படக்கூடியவர்கள் எல்லோரையும் அகற்றிவிட்டார்கள் என்று நினைக்கிறேன். எஜமானரின் சித்தம், என் பாக்கியம். பதின்மூன்றும் நம்பர் குஷ்ட ரோகக் கைதியைக்கூட ஜெனரல் வார்டிற்கு அனுப்பிவிட்டார்களா என்ன?

ஒவ்வொரு சூப்பிரண்டிற்கும் ஒவ்வொரு விதமான எண்ணம். மேஜர் ஃபில்பாட்ஸைப் பார்த்திருக்கிறேன். பெண்கள் படங்கள் உள்ள புத்தகங்களை ஜெயிலுக்குள் அனுமதிக்கமாட்டார். அவர் மனோவியாதி நிபுணர் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். வெகு காலம் சிறையில் தங்கியிருப்பவர்கள் மனத்தில் பெண் உடலின் சித்திரம் ஆழமான பாதிப்புகளையும் விபரீதமான விளைவுகளையும் ஏற்படுத்தும் என்பது அவர் கொள்கை. இதன் காரணமாக முன்பு ஒரு தடவை ஹஜாரிபாக் ஜெயிலில் இவருக்கும் ராம்கேலான் பாபுவுக்கும் எவ்வளவு தகராறு! பாவம்! அவர் ஆவலுடன் படிக்கும் ராயல் அகாடமியின் அந்த வருஷத்து ஆண்டு மலரிலிருந்து பத்துப் பதினைந்து பக்கங்கள் கிழிக்கப் பட்டுப் பாக்கி புஸ்தகம் மட்டும் அவருக்குக் கிடைத்தது. அந்தப் படங்களுடன் அந்தப் புஸ்தகத்தை அவரிடம் கொடுத்திருந்தால் அவர் மனம் எப்படிச் சிதைந்து போயிருக்கும் என்று எங்களுக்குத் தெரியாது. ஆனால் அப்படங்களை அவர் பார்க்க முடியாததின் விளைவை நாங்கள் எல்லோரும் பார்த்தோம். மேஜர் ஃபில்பாட்ஸ் பார்த்தார். அதன் பயன்? ராம்கேலான் பாபுவுக்குப் பதினைந்து நாட்கள் தனியடைப்பு!

ஒரே உஷ்ணம்! ஸெல்லில் காற்றின் சுவடே இல்லை. வைசாக மாதம் முடிந்துவிட்டது. ஸெல்லுக்கு வெளியிலும் இதே அனல் தான் என்று நினைக்கிறேன். கதவின் மேல், தரையில், கம்பியைப் பிடித்துக் கொண்டு பல விதமாக உட்கார்ந்து பார்க்கிறேன், வெளியில் உள்ள குளிர்ச்சி கொஞ்சம் எனக்குக் கிட்டுமா என்று. ஸெல்லுக்குள்ளே அடைப்பட்ட காற்றில், தலை ஒரேயடியாகக் கனக்கிறது. இந்த மாதிரி சமயங்களில் நான் ஒன்று கவனித்திருக்கிறேன். சில விநாடிகள் இரும்புக் கம்பிகளின் இடுக்கு வழியே மூக்கையும் வாயையும் எவ்வளவு தூரம் வெளியில் நீட்ட முடியுமோ அவ்வளவு தூரம் நீட்டி, திறந்த வெளிக்காற்றைக் கொஞ்சம் சுவாசித்தால் தலை கொஞ்சம் கொஞ்ச மாகத் தெளிவடைந்துவிடும்.

முன்பெல்லாம் தலைவலி அதிகமாக இருந்தது. சில நாட்களாக ஸ்நானம் செய்வதற்கு முன் வார்டர் கொஞ்சம் கடுகெண்ணெய் கொடுக்கிறான். தூக்கிலிடப்படவிருக்கும் கைதிக்கு அளிக்கும் இந்த

அநுதாபத்தை முதலில் மறுத்துவிடுவோமா என்று யோசித்தேன். ஆனால், ஒரு வார்த்தையும் சொல்லாமல் என் கையில் ஊற்றியபோது, தடுக்கவில்லை. என் தலைவலியின் நிலைமையை மனத்தில் கொண்டோ அல்லது வாயே திறக்காமல், என் கையில் அவன் எண்ணெயை ஊற்றியதாலோ என்னவோ, நான் அதை ஏற்றுக் கொண்டேன்.

சாதாரணமாக அளந்து பேசுபவர்கள் அல்ல, இந்த வார்டர்கள். பகலில் எட்டு மணி நேரம் ட்யூட்டி, இரவு இரண்டு மணி. ஒரே மாதிரியான சாரமற்ற வாழ்வு. ட்யூட்டி வேளையில் சில வார்த்தைகள் பேசினால் தான் இந்த ரஸமில்லாத வாழ்க்கையில் ஒரு மாறுதல் ஏற்படுகிறது. இருந்தும் இந்த ஒரு வார்த்தை கூடப் பேசாமல் தன் உபயோகத்துக்காகச் சேகரித்து வைத்திருந்த எண்ணெயில் கொஞ்சம் எனக்குக் கொடுத்திருக்கிறான்! என்ன ஆச்சரியம்!

இந்த வார்டர்களுக்குக் கிடைக்கும் பொருள்கள் எல்லாம் ஜெயிலிலிருந்து திருடப்பட்டவை. துணி துவைக்கும் சோப்பு, அரிசிப் பொரி, வேர்க்கடலை, உருளைக்கிழங்கு, தேங்காய் நார், இரும்பு ஆணி, ஹரிக்கேன் விளக்குத் திரி போன்ற வஸ்துக்கள் இவர்கள் விரல்களுக்கு 'டிமிக்கி' கொடுத்துவிட்டுப் போக முடியாது. உயர் வகுப்பு அரசியல் கைதிகளின் தேநீர்க் கோப்பைகளிலிருந்து மேல்துண்டு வரை, எல்லாம், இரவில்—வார்டர்கள் தவிர ஜெயிலில் உள்ள எல்லா ஜனங்களும் வார்டிற்குள் தள்ளப்பட்டுப் பூட்டப்பட்ட பிறகு—திருட்டுப் போகின்றன. திருடர்கள் அடைபட்டுக் கிடக்கிறார்கள். ஆனால் திருட்டு மட்டும் தொடர்ந்து நடந்து கொண்டேயிருக்கிறது.

இந்த வார்டரின் உதார குணம் என்னை ஸ்தம்பிக்க வைத்துவிட்டது. இதைவிட ஆச்சரியமான சம்பவம், அவன் அன்று அந்தப் பைத்தியக்காரக் கைதியிடம் என் குர்த்தாவையும் நிஜாரையும் கொடுத்துத் தோய்க்கவைத்து வாங்கிக் கொடுத்தது. குளித்துவிட்டுத் துணி மாற்றிக்கொண் டிருந்தேன். அவசர அவசரமாக என்னை செல்லுக்குள் தள்ளிவிட்டான். ஆட்சேபம் தெரிவிப்பதற்குக் கூட அவகாசம் கொடுக்கவில்லை. பிறகு தன் பெல்ட்டைக் கழற்றி நிஜார்ப் பையிலிருந்து ஒரு பீடியை எடுத்துப் பைத்தியத்துக்குக் கொடுத்துத் தன் நெருப்புப் பெட்டியிலிருந்து ஒரு குச்சியை எடுத்துக் கிழித்து அந்தப் பீடியைப் பற்ற வைத்தான். அப்பொழுதுதான் எனக்குப் புரிந்தது, இது என் துணிகளைத் துவைத்ததற்காகப் பைத்தியத்திற்கு அளித்த பரிசு என்று. வாயையே திறக்காமல் செய்யும் உபகாரத்தை மறப்பது கடினம். மற்ற வார்டர்களைப் போலன்றி இந்த வார்டருக்கு என் தியாகம், தேச பக்தியின் அருமை தெரிந்திருக்கின்றன. அன்றிலிருந்தே

மனத்திலிருந்த பளு இலேசாகி வருகிறது. மேலும், சில தினங்களாக இதே வார்டர்தான் ட்யூட்டியில் இருக்கிறான்.

எங்கள் பார்ட்டி மெம்பர்களில் ஒருவரான சந்திரிமா தலையில் எண்ணெயே தடவமாட்டார். எண்ணெய் தேய்த்துக் கொண்டால் தான் மண்டையில் உஷ்ணம் ஏறுகிறது என்பது அவர் கட்சி. கட்டை குட்டையான மனிதர். சரளமான சுபாவம். சலியாத உழைப்பாளி. ஓசை எழுப்பாமல் தம் காரியங்களைச் செய்பவர். மற்றவர் செய்ய வேண்டிய காரியங்களை இவர் தலையில் கட்டிவிட்டால், அவற்றை நன்றியுடன் ஏற்றுக் கொள்வார். இரண்டாம் நம்பர் வார்டில் பகல், இரவு பாராமல் சர்க்கா மாதிரி சுற்றிச் சுற்றி வருவார். அடர்ந்த, அலையலையான பரட்டை மயிர். ஒரு துளி எண்ணெயைக்கூடக் கண்டிருக்காது அதன் ஆயுளில். 1932-ஆம் வருஷம் மிலிக்கஞ்ச் காங்கிரஸ் ஆசிரமத்திலிருந்த போது நடந்த சத்யாக்கிரகச் சமயத்தில் அவர் காதில் சைக்கிள் பம்ப் வைத்துக் காற்றை அடித்து விட்டார்கள். அதிலிருந்து காது கேட்பதில்லை.

நாளைக் காலை என்ன நடக்கும் என்பது கண் முன்னே நிழலாடுகிறது. இரண்டாம் நம்பர் வார்டில் சந்திரிமா இரங்கல் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்து கொண்டிருப்பார். மௌனமான இரங்கற் கூட்டம். ராம்பஜன் பாபுதான் சபாபதி. எல்லோரும் சபாபதியுடன் ஒரு நிமிஷம் மௌனமாக நிற்கின்றனர். பிறகு ஒருவர் பின் ஒருவராகச் சந்தடி செய்யாமல் உட்காருகின்றனர். சந்திரிமா மட்டும் நின்று கொண்டிருக்கிறார். இங்குமங்கும் அலைகிற பரட்டைத் தலைமயிரை இரு கைகளாலும் பிடித்துக் காதுக்குப் பின் தள்ளுகிறார். சிங்கத்தின் பிடரி மயிர் மாதிரி இருக்கிறது, அந்தக் கட்டுக் கடங்காத தலைமயிர். இரு கைகளிலும் விலங்கு பூட்டி இழுத்துக்கொண்டு வந்து நிறுத்தப் பட்ட கைதி நிலையை அபிநயிக்கிறார். பிறகு, ''என் சகோதர அடிமைகளே, இன்று...'' என்று தம் பேச்சைத் தொடங்குகிறார். அதற்குள் நாலாபுறத்திலிருந்தும் முணுமுணுப்பு எழுகிறது. எல்லோரும் சந்திரிமாவை நிறுத்தச் சொல்கிறார்கள். மீட்டிங் சமாசாரம் இதற்குள்ளாகவே அதிகாரிகளுக்கு எட்டிவிட்டிருக்கும். சீக்கிரமே, ''தடியடிப் பிரயோகம்'' ஆரம்பித்துவிடும். ''நம்மவர் களிடையிலேயே எத்தனை ஸி. ஐ. டிகள்?'': ''இரங்கல் கூட்டத்தில் பிரசங்கம் தேவைதானா?'', ''அவன்தான் செவிடனாச்சே, அவன் காதில் ஒன்றும் விழாது.''... இவைபோல இன்னும் எத்தனையோ மதிப்புரைகள். சந்திரிமா இதையெல்லாம் சட்டை செய்யாமல் என்னைப்பற்றிப் பேசிக் கொண்டேயிருக்கிறார். என் தியாகம், தேச பக்தி, என்னுடன் அவருக்குள்ள தனித்தொடர்பு, அப்பர் டிவிஷன் வார்டில் தாற்காலிக

விருந்தினராக இருக்கும் என் தந்தை ''மாஸ்டர் ஸாஹேப்''புக்குத் தமது உள்ளார்ந்த வேதனை கலந்த அநுதாபம்; பெண்கள் வார்டில் தற்சமயமுள்ள ''தேவிஜி'' பீலு பாபுவின் அன்னைக்கு இந்த மாபெரும் கொடுமையைச் சகித்துக் கொள்ளத் தேவையான சக்தியைக் கொடுக்க வேண்டிப் பகவானிடம் பிரார்த்தனை; இந்தத் 'தேசீயக் குடும்பம்' எப்படிப் பாரதம் முழுவதற்கும் வழிகாட்டியாக விளங்குகிறது என்ற மேற்கொள்; நம் பிரசங்கத்தைக் கேட்போரின் கடமைகள்—இன்னும் எத்தனையோ விஷயங்களை ஒன்றுடன் ஒன்று பின்னிக் கொண்டே பேசுகிறார். அவரது பாதி மூடிய கண்களிலிருந்து நீர் சுரந்து வழிகிறது. எல்லோருமாகப் பிடித்துச் சந்திரிமாவை உட்கார வைக்கின்றனர். மரித்த ஆத்மாவிற்காக வணக்கம் செலுத்தும் வகையில் எல்லோரும் ஒரு நாள் உண்ணாவிரதம் இருக்கவேண்டும் என்று தீர்மானம் செய்யப்படுகிறது. 'சந்திரிமா எப்பொழுதுமே உபவாசங்களை எதிர்த்து வந்திருப்பவர். அவரது கட்சியினர் அரசியலில் உண்ணாவிரதத்திற்கு எந்தவிதமான இடமும் இருப்பதாக ஒப்புக் கொண்டதில்லை. சந்திரிமா ஓரிரு சந்தேகப் பேர்வழிகளுக்குச் சமாதானம் கூறுகிறார். ''இது பாபத்துக்குப் பிராயச்சித்தமாகச் செய்யப்படும் உபவாசம் அல்ல. எதிரிகளின் மனசை மாற்றுவதற்காகச் செய்யப்படும் உபவாசமும் அல்ல. பீலு பாபுவிடம் நமக்குள்ள அன்பையும் பக்தியையும் தெரிவிப்பதற்காகத் தேசபக்தர்கள் என்ற முறையில் நாம் எல்லாரும் செய்யும் மரியாதை.''

இதற்குப் பிறகு இரண்டாம் நம்பர் வார்ட் அசோக மரத்தடியில் காங்கிரஸ் சோஷலிஸ்ட் பார்ட்டி மெம்பர்களின் கூட்டம். கோரேஸிங் பிரசங்கம் செய்கிறான் : ''எல்லாவற்றையும் 'ஒதுங்கியிருந்து' பார்க்கவேண்டும். ஒவ்வொரு மார்க்ஸிஸ்டினுடைய முதல் கடமையிது.'' இதே ரீதியில் இன்னும் எத்தனையோ. தேசீயப் போராட்டத்தில் தங்கள் பார்ட்டியின் பங்கு குறித்து இவர்களுக்கு மிக கர்வம். ஆனால் தங்கள் காம்ரேட்களில் ஒருவனின் மரணத்திற்காக அவர்கள் சோகத்தில் மூழ்கிப் விடப் போவதில்லை ஒரு தனி நம்பரின் மரணத்தினால் பார்ட்டிக்கு ஈடு செய்யமுடியாத நஷ்டம் ஏற்பட்டுவிட்டதுபோல அவர்கள் பாவித்துக் கொள்ளமாட்டார்கள். எத்தனையோ பேர் வருகின்றனர். எத்தனையோ பேர் போகின்றனர். எத்தனையோ விதமான சமூக பந்தங்களை அறுத்தெறிந்துவிட்டு, அரசியல் களத்தில் இறங்கியுள்ளவர்கள் இவர்கள். எல்லோருமே, இல்லாவிடினும் அநேகம் பேர் இத்தகையவர். தம் இலட்சியத்துக்காக உயிரை இழக்க இவர்களில் யாரும் அஞ்சுபவர்கள் அல்ல. தம் உயிரைத் துச்சமென்று மதிப்பவர்களானதால் மற்றவர்களின் உயிருக்கு மிகையான

மதிப்புக் கொடுப்பதில்லை. காம்ரேட் போலா பின்னால் உட்கார்ந்து சிரித்துக் கொண்டிருக்கிறான். அரசியல் கைதிகளிடம் ஒரு விநோத மான குணத்தைக் கவனித்திருக்கிறேன். நாட்டுக்காகத் தம் சொத்துச் சுதந்திரங்கள், எதிர்காலம் எல்லாவற்றிற்கும் எள்ளும் தண்ணீரும் விட்டுவிட்டு வந்தவர்கள் இவர்கள். எந்த வேளையிலும் சிரித்த முகத்துடன் மரணத்தை ஏற்கத் தயாராக உள்ளவர்கள். ஆனால் ஜெயிலில் வந்தவுடன் துச்சமான தன்னலத்திற்காக மிகவும் கீழ்த்தர மாகச் சில சமயங்களில் நடந்து கொள்ளத் தயங்குவதில்லை.

காம்ரேட் போலா மயிரிழையில் தூக்குத் தண்டனையிலிருந்து தப்பி யவன். ஆனால் ஒரிரண்டு கேஸ்களைச் சேர்த்து ஜோடித்து முப்பத்து மூன்று வருஷம் திட்டி விட்டார்கள். அமானுஷ்ய மன நிறைவு பெற்ற பிரகிருதி. எப்பொழுதும் சிரித்த முகம். தூக்குத் தண்டனை கிடைத் திருந்தாலும் மேடையில் அவன் முகத்திலிருந்து சிரிப்பை அழித்திருக்க முடியாது. எத்தனைக்கெத்தனை ஒரு காரியம் அபாயகரமானதோ அத்தனைக்கத்தனை அவனுக்கு ஆனந்தம். எதையும் சிந்தித்துச் செய் பவன் என்று சொல்லமுடியாது. ஆனால் இந்தக் குழந்தையுள்ளம் படைத்த தேசபக்தன் எந்த விதமான உத்தரவையும் நிறைவேற்றத் தயங்கமாட்டான். ஆனால் இதே காமரேட்கூட நான் இரண்டாம் நம்பர் வார்டிலிருந்தபோது, தன் பருப்பில் மிளகாய் காரணமாகக் காலேச்வர் பிரஸாதுடன் சண்டை போட்டுக்கொண்டு மண்டை யுடைத்துக் கொண்டதை என் கண்ணாலேயே பார்த்திருக்கிறேன்!

அரசியல் கைதிகளின் இந்தப் பலவீனங்களையெல்லாம் ஜெயில் சிப்பந்திகள் தினமும் பார்த்துக்கொண்டுதான் இருக்கிறார்கள். ஆகவே வெளியே உள்ள பொது மக்களிடமிருந்து எங்களுக்குக் கிடைக்கும் மதிப்பும் மரியாதையும் இவர்களிடமிருந்து எப்படிக் கிட்டும்? இதனால் தானோ என்னவோ தேச மக்களின் புகழ்ச்சியைவிட, இந்த ஜெயில் சிப்பந்திகளின் புகழ்ச்சிக்காக நான் ஏங்குகிறேன். ஜெயிலர் ஒரு நாள் சூப்பிரண்டிடம் சொல்லுகிறான்: ''ஒன்பது, பத்து நம்பர் வார்ட்களில் இருக்கும் கைதிகள் மிகவும் நல்லவர்கள். ஒரு போதும் முணுமுணுப்பதோ குறை சொல்வதோ இல்லை''. சூப்பிரண்ட் அன்று என்னை என் தேவைகளைப் பற்றிக் கேட்டபோது ஜெயிலர் ஒரு பாக்கெட் நோட்புக்கை உடனே திறந்துகொண்டு பேனாவை எடுத்துக்கொண்டு இந்தத் தேவைகளைக் குறித்துக்கொள்ள தயாராக இருந்தான். பாவம்! அவனுக்கு அதிக ஏமாற்றம் அளித்துவிட்டேன் போலும். ஸெல்லுக்கு வெளியில் கூஜா வைத்திருக்கும் இடத்தில்தான் இன்று ஜெயிலர் நின்று கொண்டிருந்தான்.

அறைக்கு வெளியில் கதவுக்கு எதிராக ஒரு கூஜாவில் தண்ணீர். இதை வெளியே வைத்திருப்பதன் காரணம் நான் தற்கொலை செய்து கொள்வதைத் தடுப்பதற்காக அல்ல. மற்ற செல்களில் உள்ள கைதிகளுக்கும் இதிலிருந்தே குடிநீர் கொடுப்பதற்காக —9, 10 நம்பர் செல்கள் தவிர. தாகமெடுப்பவர்கள் வார்டரைக் கூப்பிடுவார்கள் அல்லது செல்லில் இருக்கும் மணியை அடிப்பார்கள். வார்டர், அவனுக்கு இஷ்டம் வரும்போது, அவகாசம் கிடைக்கும்போது வந்து தண்ணீர் கொடுப்பான். கேட்டவுடன் தண்ணீர் கிடைப்பது அபூர்வம். பலருடைய கூக்குரல்கள் ஒருமித்து எழும்போது எழுந்து வந்து கூஜாவிலிருந்து கொஞ்சம் நீர் எடுத்துக் கொடுப்பான். ஒன்றும் நம்பருக்குத் தனிச் சலுகை. ஆகவே என் செல்லிற்கு முன்னால் கூஜா வைக்கப்பட்டிருக்கிறது. கூஜாவின் குழாயைக் கதவுக் கம்பிகளுக்கு இடையே நுழைத்துச் சாய்த்து ஒரு டம்ளரில் தண்ணீர் நிரப்பிக் கொள்கிறேன். கண்களிலும் நெற்றியிலும் தண்ணீரைத் தெளித்துக் கொள்கிறேன். அப்படிச் செய்யும்போது தண்ணீர் எவ்வளவு தூரம் கம்பிக்கு வெளியில் விழ முடியுமோ அவ்வளவு தூரம் அது போகும்படி செய்ய முயல்கிறேன். நெற்றி, கண்கள் எல்லாம் நெருப்பாய் எரிகின்றன.

செல்லிலிருந்து தண்ணீர் வெளியே போவதற்கு ஓட்டையில்லை. இந்தக் கதவிற்குக் கீழேயிருந்து தண்ணீர் வெளியே போவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது என்று பெயர். ஆனால் நடப்பதென்ன? இப்பொழுது கண், முகம் இரண்டும் அலம்பிக் கொண்டபோது, முக்கால்வாசித் தண்ணீர் உள்ளே வந்துவிட்டது. கொஞ்சம் ஜலத்தை வாயில் விட்டுக் கொப்பளித்து வெளியே துப்புகிறேன், சுவரும் தரையும் சேருமிடத்தில் உள்ள ஒரு சிறு செடியின் மேல் தண்ணீர் விழும்படி. தினமும் இப்படிக் கொப்பளித்து, தண்ணீர் தெளித்து இந்தச் செடியை வளர்க்க முயன்று வருகிறேன். ஒவ்வொரு தடவை வாயை அலம்பும்போதும் எவ்வளவு அதிக தூரம் தண்ணீரைத் துப்ப முடியும் என்று பரிசோதனை செய்கிறேன். இப்பொழுதெல்லாம் ஒரு மாதிரி ''குத்து மதிப்பாய்'' அநுமானம் ஏற்பட்டுவிட்டது. நின்று கொண்டு, உட்கார்ந்தபடியே, வாயின் கோணங்களை மாற்றிக் கொண்டு, எவ்வளவு தூரம் தண்ணீரைத் துப்ப முடியும் என்று பல வகைகளில் எனக்கு நானே போட்டி வைத்துக் கொண்டிருக்கிறேன்.

என்னுடைய முந்திய 'ரிகார்ட்களை'த் தகர்ப்பதற்கு முயற்சிகள் செய்திருக்கிறேன். பிற்பகலில், வெளியில் ஸிமெண்ட் தரையின் மீது வெயில் கொளுத்தும்போது, கொப்பளித்து அதன் மேல் துப்புவேன். பிறகு ஒன்று, இரண்டு என்று எண்ணத் தொடங்குவேன், ஜலம்

இருந்த இடம் தெரியாமல் வற்றிவிட எவ்வளவு நேரமாகிறது என்று கண்டுபிடிக்க. இது என்ன செடியென்று தெரியவில்லை. இலைகள் புகையிலையின் நிறமாக இருக்கின்றன. வேப்பிலை மாதிரி வடிவம். விளக்குப் பக்கத்தில் இருப்பதால் கண்ணுக்குப் பளிச்சென்று தென்படு கிறது. சிறிய, படரும் செடி. சுவரைக் கெட்டியாகப் பற்றிக் கொண் டிருக்கிறது. அதன் சின்னஞ்சிறு மஞ்சள் பூக்கள் இந்த விளக்கின் மங்கலான ஒளியில் சரியாகத் தெரியவில்லை. பிழைத்துக் கொள்ள வேண்டும் என்று இந்தச் சிறிய செடிக்குத்தான் எவ்வளவு துடிப்பு! சிமெண்டிற்கும் செங்கலுக்குமிடையே ஒரு சிறிய வெடிப்பு. அந்த இடுக்கிலிருந்து தான் ஜீவிப்பதற்குத் தேவையான சக்தியை இழுத்துக் கொண்டு வருகிறது. நான் போன பின்னரும் அது இருக்கும். நான் கொப்பளித்துத் துப்பும் நீரை நம்பி அது வாழவில்லை. இதன் தண்டை உடைத்தால் கெட்டியாய், வெள்ளையாய், பால் போல் சாறு வரும் போல் தோன்றுகிறது.

க்ஷேத்திரபடா—நாங்கள் எல்லாம் க்ஷீருயி என்போம்—என்ற செடியிலிருந்து வரும் சாறுகூட இப்படித்தான் இருக்கும். பெரியம்மா ஒரு தடவை இந்தச் சாற்றை என் கழுத்தெலும்புக்குக் கீழேயிருந்த கட்டியின் மேல் தடவினுள், கட்டி உடைவதற்காக. அதற்குப் பிறகு நானும் நீலுவும் பல நாட்கள் வரை துர்க்காவின் விளையாட்டறைக்காக இந்தப் பாலை ஒரு சிறிய அகல் விளக்கில் சேகரித்துக் கொண்டிருந் தோம். துர்க்காவின் தங்கை டெபி. எப்பொழுதும் பாதி அழுக்கான ஒரு ஃப்ராக், இரட்டைப் பின்னல். ஒரு தடவை நானும் நீலுவும் அவளை ஆசிரமத்துக்குப் பக்கத்தில் கங்கா டார்ஜிலிங் ரோட் பக்கத்தில் இருந்த ஒரு ரப்பர் மரத்துக்கு அழைத்துச் சென்றோம். எப்படி ரப்பர்ப் பால் சேகரித்து ரப்பர் தயாரிக்கிறுர்கள் என்பதைக் காட்டுவதாகச் சொல்லி, அவளை மரத்துக்குக் கீழே நிற்கவைத்தோம். நான் மரத்தின் மேலேறி ஒரு கிளையின் மேல் பட்டையைக் கத்தியால் சீவினேன். 'டப், டப்' என்று ரப்பர் பால் கீழே விழுந்தது. நீலு டெபியைப் பிடித்து நிறுத்தி, ''ஜாக்கிரதை! மேலே பார்க்காதே. உன் தலை மேலேயே அழிக்கிற ரப்பர் தயாராக்குகிறேன்'' என்றுன். பாவம்! டெபி எப்படி அழுதாள்! ரப்பர்ப் பால் அவள் மயிரில் பிசுக்காக ஒட்டிக் கொண்டுவிட்டது. அன்று அம்மாவிடம் நல்ல அடி எங்கள் இருவருக்கும். நல்ல வேளையாக அப்பா ஊரிலில்லை. ஒரு மாதத்துக்குள் டெபி இறந்துபோய்விட்டாள். எனக்கும் நீலுவிற்கும் என்ன வேதனை? குற்ற உணர்வினுல் நாங்கள் ஒடுங்கிப் போய்விட்டோம்.

ஆசிரமத்துக் கருங்காலி மரத்தினடியில் உட்கார்ந்து கொண்டு எங்களுக்குள்ளேயே ஒரு தீர்மானத்துக்கு வந்தோம்—அன்று அவள்

தலையில் சொட்ட விட்ட பால் தான் அவளுடைய டிஃப்தீரியா காய்ச்சலுக்குக் காரணம் என்று. இதற்கு முன்னாலேயே நீலு செய்தி கொண்டு வந்திருந்தான், டாக்டர் கார்த்திக் டெபியின் தொண்டையைத் திறந்து அதிலிருந்து ரப்பர் பாலை வெளியில் எடுத்தார் என்று!

துர்க்கா வீட்டுக் குழந்தைகளையெல்லாம் அன்று அம்மா ஆசிரமத்துக்கு அழைத்து வந்திருந்தாள். டெபியின் தம்பி போந்தா, இந்த வருஷம் வக்கீலாகிவிட்டான். அப்பொழுது எவ்வளவு சின்னப் பையன்! அம்மா பக்கத்தில் படுத்துக் கொண்டிருந்தான். பாதி ராத்திரியில் வீட்டுக்குத் திரும்பிப் போக வேண்டும் என்று எவ்வளவு அழுது அடம் பிடித்தான்!

கதவின் பக்கத்தில் உட்கார வழியில்லை. ஒரே ஈரம். நீலக்கோடு போட்ட நிஜாரினால் அந்த இடத்தைத் துடைக்கிறேன். நிஜார் அழுக்காகிவிட்டால் பரவாயில்லை. நாளைக்குத்தான் அதைப் போட்டுக் கொள்ளப் போவதில்லையே! ஒன்பது வருஷங்களுக்கு முன்பு நிகழ்ந்த பூகம்பத்தில் இங்கே தரையில் பள்ளம் விழுந்துவிட்டது. இன்னும் அப்படியே இருக்கிறது, பி.டபிள்யூ.டியின் செயலுக்குச் சாட்சியாக!

ஒண்ணாம் நம்பர் ஸெல்லில் இருக்கும் ஆசாமிக்கு என்னவெல்லாம் சிந்தனைகள்! மற்ற அறைகளைவிடத் தூக்கு மேடைக்கு அருகில் இருப்பது இந்த அறை. எந்த ஆசாமிக்குத் தூக்கிலிடும் நேரம் நெருங்கிவிட்டதோ அந்த ஆசாமி தங்கியிருக்கும் அறை இது. ஆகவே இந்த ஜெயிலிலுள்ள 4500 கைதிகளில் எனக்குத்தான் இந்த அறையின் மீது பாத்தியதை அதிகம். பி.டபிள்யு. டீகாரர்கள் சரியாகத்தான் யோசித்து வைத்திருக்கிறார்கள். கீல்வாதம் வருவதற்கு எத்தனை நாள் ஈரத்தரையில் உட்கார்ந்திருக்கவேண்டுமோ அத்தனை நாள்வரை இந்த அறையில் தங்கும் ஆசாமி உயிருடன் இருக்கப்போவதில்லை. அப்படி ஒருவேளை 'பூனை அதிருஷ்டமாக' இவனது ''மெர்ஸி பெட்டிஷன்'' ஏற்றுக்கொள்ளப்பட்டு அவன் பிழைத்துவிட்டாலோ இந்த வியாதி அப்படியொன்றும் பெரிதுபடுத்த லாயக்கானதே அல்ல. ஆனால் எனக்கென்னவோ ஈரத்தரையில் உட்கார்ந்தால் உடம்புக்காகாது என்ற பயம். எப்பொழுதோ படித்தது ஞாபகம் வருகிறது. ஒருவன் தற்கொலை செய்து கொள்வதற்காக விஷப் புட்டியை வாயருகில் கொண்டு போகிறான். திடீரென்று அவன் நண்பன் அவனைப் பார்த்து விட்டுத் துப்பாக்கியை அவனை நோக்கிக் குறி வைத்து, ''கீழே போடு புட்டியை. இல்லாவிட்டால் உன்னைச் சுட்டுக் கொன்றுவிடுவேன்'' என்கிறான். பாட்டில் கையிலிருந்து நழுவி விழுந்து உடைகிறது. யாருக்குப் புரிகிறது மனத்தின் போக்கு!

ஒருவேளை பூகம்பத்துக்குப் பிறகு செப்பனிடும் பணிகள் நடந்த போது இந்தக் கதவருகிலிருந்த தரையிறக்கத்தை ஒருவரும் கவனிக்க

வில்லை போலும். இன்ஜினியர் மீது குற்றம் சொல்வதற்கில்லை. சட்டென்று கண்ணில் படுகிறதில்லை இந்த இறக்கம். பக்கத்தில் தண்ணீர் விழுந்து இங்கே சேர்ந்து தேங்கினால்தான் கண்ணில் படும். அந்தப் பூகம்பத்தின்போது தான் என்ன அமர்க்களம்! 1934-ஆம் வருஷத்துப் பூகம்பத்தைப்பற்றிச் சொல்லுகிறேன்.

பாட்னா காம்ப் ஜெயிலிலிருந்த, வடக்குப் பீஹாரைச் சேர்ந்த எல்லா அரசியல் கைதிகளையும் சர்க்கார் விடுதலை செய்துவிட்டனர், பூகம்பத்தில் அவதியுற்ற மக்களுக்குத் தொண்டு செய்வதற்காக. நீலு 1932-ஆம் வருடக் கடைசியிலேயே வெளி வந்துவிட்டான். அப்பா, அம்மா இருவரும் ஜெயிலில். நீலு பெரியம்மா வீட்டிலிருந்துகொண்டு படித்துக் கொண்டிருந்தான். நாங்கள் பி. என். டபிள்யு. ரயில் மூலம் வந்து கொண்டிருந்தோம். ஒவ்வொரு ஸ்டேஷனிலும் பூகம்பத்தின் துவம்ஸ விளையாட்டின் சின்னங்கள் தென்பட்டன. பத்தாராவோ என்னவோ பெயருடைய ஒரு ஸ்டேஷனில் ஒரு நாள் தங்க நேரிட்டது. பாலம் உடைந்து கிடந்தது. படகில் அக்கரை செல்வதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. சர்க்காரிடமிருந்து ஒவ்வொருவருக்கும் சாப்பாட்டுக்கு என்று மூன்றணா கிடைத்தது. அந்த நதியின் அக்கரையில் தயிர்க்காரன் ஒருவனுடன் ஒரு அணாவுக்கு எவ்வளவு தயிர் வேண்டுமானாலும் சாப்பிடலாம் என்று பேரம் பேசிக்கொண்டோம். நாகீந்தர் சிங் கிட்டத்தட்ட நாலைந்து சேர் தயிர் குடித்திருப்பான்! நித்திப்புச் சேர்க்காத, செக்கச் செவேலென்று 'மஹவா' செய்த தயிர். கையில் வேறு காசில்லை. காராகோலா ரோட் ஸ்டேஷனிலிருந்து பூர்ணியா வரை கால் நடையாகத் தான் போகவேண்டும். காங்கஸ்-டார்ஜிலிங் ரோடில்தான் எத்தனை பெரிய பெரிய பள்ளங்கள்! ஹர்தாவின் பாலம் உடைந்து கிடந்தது. ஹர்தா பஜார் அடைந்தவுடன் கால் எழ மறுத்துவிட்டது.

தூபேஜீ காங்கிரஸ் தொண்டர். அவர் கடைக்கு முன் போய் நின்ற போது, அங்கிருந்த அவர் மனைவி திடீரென்று உள்ளே போய்விட்டாள். சிறிது நேரம் கழித்துப் ''பிராணும்'' (வணக்கம்) என்று சொல்லிக் கொண்டு வெளியே வந்தாள். மில் புடைவையை மாற்றிக்கொண்டு பச்சை நிறக் கதர் புடைவையுடன் வந்திருப்பதைக் கவனித்தேன். நல்ல சிவந்த மேனி. இந்த வயதிலும் அழகாயிருந்தாள். நிமிர்ந்த நடை, கிளி மூக்குப்போல் உயர்ந்த, கூர்மையான மூக்கு. எல்லாவற்றையும்விட அவள் கண்களிலும் நெற்றியிலும் தன்னம்பிக்கையின் ஒளி வீசிற்று. அதன் காரணமாக வயதானவளாக இருந்தாலும் அழகு நிறைந்தவளாகக் காணப்பட்டாள். தூபேஜீயும் அவர் மனைவியும் எங்களுக்கு ராஜோபசாரம் செய்தனர். பாலில் ஊற வைத்த அவலைத் தயிருடன்

கலந்து கொடுத்தாள். நாங்கள் சிரிப்பும் கொம்மாளமுமாக, வயிறு நிறையச் சாப்பிட்டோம். எங்கள் கொம்மாளத்துக்கு முக்கிய இலக்கு தூபேஜி. நாங்கள் எல்லோரும் அவரது ''போஜ்பூரி'' கலந்த ஹிந்தியை அவர் மாதிரியே பேசி நையாண்டி செய்தோம். ''பௌஞ்ச் சாயிலாம்'' என்ற வார்த்தையை அவர் ''பௌ (ஞ்)சல்'' என்று உச்சரித்தபோதுதான் என்ன சிரிப்பு! இந்தச் சிரிப்பில் அந்தக் கிழவரும் கிழவியும் கலந்து கொண்டனர். கணயடுப்பைச் சுற்றி உட்கார்ந்து கொண்டு, வெகுநேரம் வரை தூபேஜியின் மனைவியுடன் பேசிக் கொண்டிருந்தோம்—அம்மாவைப்பற்றி, இந்தத் தடவை நான் கல்யாணம் செய்து கொள்ளவேண்டியதன் அவசியம்பற்றி—இன்னும் ஏதேதோ, இப்பொழுது ஞாபகம் இல்லை.

உப்புச் சத்தியாக்கிரம் நடந்தபோது தூபேஜியின் மனைவி, உப்பு காய்ச்சி ஜெயிலுக்குப் போயிருக்கிறாள். ஏதோ காரணத்தினால்—ஒரு வேளை அவர் வயதானவர் என்ற காரணமாகயிருக்கலாம்—போலீஸார் அந்தச் சமயத்தில் தூபேஜியைக் கைது செய்யவில்லை. அப்பொழுதி லிருந்து, தான் தூபேஜியைவிட உயர்ந்தவள் என்ற எண்ணம் அவளுக்கு. நிஜமோ இல்லையோ, தூபேஜி அப்படித்தான் நினைக்கிறார். இந்தக் குறையை என்னிடம் சொல்லிக்கொண்டார். கணவன், மனைவி இருவருமே மிகவும் இளகிய மனத்தினர். தங்களுக்கு இருந்த சிறிதளவு நீலம் நீச்சுக்களைக் காங்கிரஸுக்குத் தானம் செய்துவிட்டனர்.

இரவு படுத்திருந்தோம். நாங்கள் தூங்கிப் போய்விட்டோம் என்ற நினைப்பில், சந்தடி செய்யாமல் மேலும் ஒரு கம்பளியால் எங்களைப் போர்த்திவிட்டுப் போனார்கள். மறுநாள் இங்கிருந்து கிளம்பும் முன்னர் அந்த ஊர் ஆரம்பப் பள்ளியின் பக்கம் என்னைத் தனியாக அழைத்துச் சென்று என்னிடம் இருவரும் சொன்னார்கள்: ''பீலு பாபு, நீ ஓர் உபகாரம் செய்யவேண்டும். எங்களுக்கோ குழந்தை குட்டிகள் இல்லை. உன்னை ரொம்ப நாளாக—நீ இவ்வளவூண்டு இருந்த நாட்களிலிருந்து— எங்களுக்குத் தெரியும். 'மாஸ்டர் சாஹேப்பின்' குழந்தை எங்கள் குழந்தை. நாங்கள் ஏழைகள். நீங்கள் எல்லாரும் பங்காளிகள். ஆனால் எங்களுடைய ஒரு காரியத்தின் பொறுப்பை நீ ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். எங்களுக்கு ஏதோ இரண்டு மூன்று பீகா நிலம் இருக்கிறது. அதிலிருந்து வரும் பணத்தைக் காங்கிரஸுக்கே செலவழித்து வருகிறோம். இந்த நிலங்களை முறையாக உன் பேரில் சாஸனம் செய்து கொடுத்துவிடத் தீர்மானித்துவிட்டோம். நாங்கள் போய்விட்ட பிறகு இவற்றை மகாத்மாஜியின் பணிகளுக்காகப் பயன்படுத்திக்கொள். நாங்களுந்தான் இன்னும் எத்தனை நாட்களுக்கு உயிருடன் இருக்கப் போகிறோம்?'' என்ற அவர்கள் வேண்டுகோளிற்கு இணங்கி, அப்படிச்

செய்வதாக வாக்குக் கொடுத்துவிட்டு வந்தேன். இந்தச் சமயத்திலும் அவள் நிச்சயம் விழித்துக் கொண்டிருப்பாள். வர்ணக் காகிதத்தில் வரையப்பட்ட ரதத்தின் நடுவில் வைக்கப்பட்டிருக்கும் ராமர் படத்துக்கு முன் உட்கார்ந்துகொண்டு பிரார்த்தனை செய்து கொண்டிருப்பாள். அல்லது ஒரு சிறிய அகல் விளக்கின் ஒளியில் தக்ளியில் பட்டு நூல் நூற்றுக் கொண்டிருப்பாள்.

ஹர்தா பஜாரிலிருந்து கிளம்பி மறுநாள் பிற்பகல் பூர்ணியா போய்ச் சேர்ந்தோம். காந்தி ஆசிரமத்தைச் சர்க்கார் ''ஜப்தி'' செய்துவிட்டிருந்தனர். இருந்தாலும் அங்கே தான் முதலில் போனோம். தூரத்திலிருந்தே தெரிகிறது, மாவட்டக் காங்கிரஸ் ஆபீஸ் அறைக்குப் பக்கத்தில் வளர்ந்திருக்கும் கருங்காலி மரத்தைச் சுற்றிக் குங்குமப்பூ வர்ண பேகோனியா மலர்கள் படர்ந்திருக்கின்றன. நான் தான் இந்தக் கொடியை நட்டு இந்த மரத்தின்மேல் படர விட்டிருந்தேன்.

கொடிக் கம்பத்தில் தேசீயக் கொடி சாதாரணமாக வெகு தூரத்திலிருந்தே தெரியும். இப்பொழுது அது பறக்கவில்லை. ஆனாலும் மரத்தின் பசுமையும், பேகோனியா மலர்களின் சிகப்பு மஞ்சளும், ஆகாசத்தில் ஊர்ந்து கொண்டிருக்கும் வெண் மேகங்களும் சேர்ந்து தேசீயக் கொடி போலவே தோற்றம் தருகின்றன. ஆசிரமத்துக் கட்டிடங்களின் கூரைகள் கீற்றுலானவை. எங்கள் வீட்டு வேலி உடைந்து கிடந்தது. ட்யூப்வெல்லின் மேல் பாகம் காணவில்லை. எஸ்.டி.ஒ. ஸீல் வைத்த பூட்டிய கதவில், பூட்டின் சின்னமே தென்படவில்லை. உட்காரும் மனை, பெரிய அலமாரி தவிர வேறு ஒரு சாமானும் அறையில் இல்லை. சின்னது, பெரிது, எதெல்லாம் நகர்த்த முடியுமோ அதெல்லாம் போய்விட்டன. சமையலறையின் இரு கதவுகளையும் பிடுங்கி எடுத்துக்கொண்டு போய்விட்டனர். மகாத்மாஜியின் படமும் மறைந்துவிட்டது. நாதீ*, பஞ்சினால் செய்து சட்டம் போட்டு மாட்டியிருந்த ஆந்தைப் படத்தையும் காணோம். ஜமக்காளம் ஒன்று இருக்கும்—அதில் சின்ன வயதில் சகதேவன் தங்கை ஸரஸ்வதி 'தீண்டாமை பாவம்' (Untouchability is sin) என்று எம்பிராயிடரி செய்திருந்தாள். (அதில் N என்ற கடைசி எழுத்து, Z மாதிரியிருக்கும்!) அந்த ஜமக்காளமும் நைந்துவிட்டிருந்தது. நான் எழுதியிருந்த ஒரு கவிதை—நீலு ஒரு அட்டையில் ஒட்டி வைத்திருந்தது, அது மட்டும் சுவரில் தொங்கிக்கொண் டிருந்தது. எழுத்துக்கள் தாம் தெளிவாக இல்லை. நான் வரைந்த ரவி பாபுவின் படம் அட்டையில் ஒட்டியிருந்தது. அதையும் யாரும் திருடத் தக்க சாமானாக மதிக்கவில்லை! ஒரு வேளை

* நாதீ — நாலாவது அக்கா.

இவற்றுக்கு ஃபிரேம் போடவில்லை என்பதனால் இருக்கும்! பூச்செடிகள் எல்லாம் திருட்டுப் போய்விட்டன. சிகப்பும் வெளுப்புமாகப் பூக்கும் பின்காச் செடிகள் மட்டும் காடாக வளர்ந்திருந்தன. ஆடு மாடுகள் இந்தச் செடிகளைத் தின்பதில்லை போலும்! நடுநடுவே சில ஆமணக்குச் செடிகள் தலையை உயர்த்தி, கீழ்க் குடியைச் சேர்ந்த பின்காவின் பால் அலட்சியம் புலப்பட நிமிர்ந்து நின்றன. பட்டுப் புழுக்களின் ஷெட் ஒரேயடியாக இடிந்து விழுந்து கிடந்தது. மாட்டு வண்டியின் இரு சக்கரங்களை யாரோ தட்டிக்கொண்டு போய்விட்டனர். எண்ணெயாட்டும் செக்கு மட்டும் அப்படியே கிடந்தது. ஆனால் அதைச் சுற்றிலும் துவரை மாதிரி ஏதோ காட்டுச் செடி மட்டும் அப்படியே அடர்த்தியாக முளைத்திருந்தது. உள்ளே போக வழியில்லை. ஆசிரமத்து லைப்ரரியில் ஒரு புத்தகங்கூட இல்லை. உழவுச் சாமான்கள் வைக்கும் அறையில் குப்பை குவிந்து கிடந்தது. ஆடு மாடுகளைக் கட்டி வைத்திருந்தற்கான அறிகுறிகள் தென்படுகின்றன. அக்கம் பக்கத்தினர், காங்கிரஸின் இந்தத் துர்த் தசையிலும், அதன் கட்டிடங்களை மறக்கவில்லை என்பது கண்கூடாகத் தெரிந்தது!

மனம் தளர்ச்சியடைகிறது. ஆசிரமத்திலிருந்து கிளம்பிப் பெரியம்மா வீட்டுக் கேட்டுக்குள் நுழைந்தேன். அப்பாவுடன் நெருங்கிய உறவு கொண்டவர்களின் வீடு இது. வீட்டுக்கு முன்னால் ஒரு ஷெட். ஷெட்டின் கதவுக்கு முன்னால் ஒரு வெள்ளாடு தலையை மேலே தூக்கிக் கொண்டு இலை, கொடிகள், எம்பிராய்டரி செய்த டேபிள் கிளாத் எல்லாவற்றையும் சுவாரஸ்யமாக மென்றது. நோனி அக்காவின் பெண் பூடியாவும் அவளது விளையாட்டுத் தோழிகளும், தரையில் படுத்துக்கொண்டு பூகம்பத்தின் விளைவாக ஏற்பட்டிருந்த பெரிய பிளவு ஒன்றை உன்னிப்பாகப் பார்த்துக் கொண்டிருந்தனர். என்னைப் பார்த்ததும் எல்லோரும் ஓடி வந்தார்கள். ''அங்கு என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?'' என்று கேட்டேன். ''அந்தப் பிளவு வழியாக கீழே பார்த்தால், அமெரிக்கா தெரியும் என்று சின்ன மாமா சொன்னார்'' என்று பதில் அளித்தாள்.

''பாட்டி, பாட்டி, யார் வந்திருக்கா பார்'' என்று கூச்சல் போட்டுக் கொண்டே வீட்டுக்குள் ஓடினாள். பெரியம்மாவும் இன்னோர் அக்காவும் சாப்பிட உட்கார்ந்திருந்தார்கள். ''நாதீ எங்கே?'' என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தபோது இவ்விருவரும் சாப்பாட்டை அப்படியே விட்டுவிட்டு வெளியே வந்தனர். பெரியம்மாவின் வலது கை ''எச்சில்''. இடது கையால் என்னை அருகில் இழுத்துக் கொண்டாள். நீலுவும் அதே அறையில்தான் நின்று கொண்டிருந்தான். கண்ணைத் துடைத்துக்கொண்டே, ''சரி, பெரியம்மாவின் சாப்பாட்டிலே

இன்ன ரிக்கு மண்ணுதான். இலையிலிருப்பதை நீ சாப்பிட்டு முடி'' என்று சொல்லி இடியிடி என்று சிரித்தான். நடு அக்கா உடனே பொய்க் கோபத்துடன் அவனைக் கடிந்து கொள்கிறாள். ''இதோ பார், குறும்பு பண்ணாதே. நாங்கள் சாப்பிட்டு முடிச்சாச்சு.'' பெரியம்மா அவனைக் கோபித்துக் கொள்கிறாள். ''மறுபடியும் அந்த இடிந்துபோன அறையில் தூங்கியிருக்காய் நீ. வீடு முழுவதும் இடிந்து உன் தலையில் விழுந்து சாகணும்னு எண்ணமா? உன்னோடு மாரடிக்க இனிமேல் என்னால் முடியாது. இனிமேல் உன்னை என் கூட வெச்சுக்க முடியாது. உங்க மாமா வீட்டுக்கு அனுப்பிவிடப் போகிறேன். நீ ஒரு திருடன், நேற்று ராத்திரியும் இந்த இடிஞ்சு சரிஞ்சு போன ரூமில் தூங்கியிருக்கிறான், இந்தக் 'கொள்ளைக்காரன்.'' பிறகு எத்தனை பேச்சுக்கள்! எத்தனை அரட்டை! நீலு சொன்னதுதான் கடைசியில் நடந்தது. அந்த இலையிலேயே உட்கார்ந்து சாப்பிட்டு முடித்தேன். பெரியம்மா வீடு எங்களுக்கு எப்போதுமே அந்நிய வீடாக இருந்ததில்லை. எங்களுக்கு எப்போதுமே அது ''அந்த வீடாக'' இருந்திருக்கிறது.

பெரியம்மாவின் ஞாபகம் வருகிறது. இரண்டு பெரிய பற்கள் முன் தள்ளி வெளியே நீட்டிக்கொண்டிருக்கும். நெற்றியில் இரு புருவங்களுக்குமிடையே நீல நிறத்தில் ''பச்சை'' குத்தியிருக்கும். தலை நிறையப் பழுத்த நரைமயிர். சிறிய முகம். அதில் ஒரு நிரந்தரப் புன்னகை. வாய்விட்டுச் சிரித்தால் கீழ் வரிசைப் பற்கள் இரண்டு விழுந்து போயிருப்பது தெரியும். எப்போதும் உடுத்துவது கரையில்லாத நார்மடிப் பட்டு. அவள் கண்களில், முகத்தில், பேச்சில், அசாதாரண தாய்ப் பாசம். ராஃபல் வார்த்த 'மடோனா' சற்றுக் காம்பீர்யம் தூக்கி நிற்கும். உணர்ச்சிகளை அடக்கி வைத்துள்ள பாவம் மேலோங்கியிருக்கும். சற்றே விரைப்பாகவும் செயற்கையாகவும், உள்ளார்ந்த, இயல்பாக மலருகின்ற பாசங்கள் அற்று இருக்கும். ஆஸ்பத்திரியில் நர்ஸ் மேட்ரன்களிடம் காணப்படும் ஒரு செயற்கையான கம்பீரம் இந்தச் சிலைகளில் காணப்படுகிறது. ஆனால் பெரியம்மா கிராமீய 'பட்வா', ஓவியர்கள் வரையும் யசோதா மாதிரி. கலை நோக்கில் சற்று மெருகற்றிருக்கலாம். ஆனால் உள்ளத்தை நெகிழ்விக்கும் தன்மை கொண்டவள். அம்மா நீலுவிடமும் என்னிடமும் காட்டும் பரிவைப் பெரியம்மா, பேட்டையிலுள்ள எல்லாக் குழந்தைகளிடமும் காட்டுவாள். இந்த வீட்டின் கதவு எல்லோருக்கும் எப்பொழுதும் திறந்திருக்கும். ஆனால் எனது தனிக் கர்வம் என்னவென்றால் மற்றவர்கள் எல்லோரையும்விட எனக்குத்தான் அவள் மனத்தில் முதல் இடம். 'அவள் பாரபட்சமாக நடந்து கொள்கிறாள்' என்று குற்றம் சாட்டி நீலு அவளை அடிக்கடி சீண்டிவிடுவான். மற்றவர்களுக்குக்

கொடுக்காமல் ஒளித்துவைத்து எனக்கு மாத்திரம் திண்பண்டங்கள் கொடுப்பாள். ஒரு தடவை நான் ஜெயிலில் இருந்தபோது பெரியம்மா வுக்கு உடம்பு மோசமாகிவிட்டது. அப்பொழுது தன் சொத்து முழுவதையும் எனக்கு எழுதி வைத்துவிட வேண்டும் என்று துடியாக இருந்தாளாம். அப்பொழுது தான் தெரிந்தது அவளது ஆஸ்தியின் பெறுமானம். ஒரு பழைய தலையணை உறையில் போட்டுவைத்திருந்த 24 ரூபாய், ஒரு சட்டியில் கொஞ்சம் நெய்—கொஞ்சம் கொஞ்சமாகச் சேர்த்துவைத்திருந்தது—இவ்வளவுதான்! இந்தக் கதையையெல்லாம் மெருகு ஏற்றி, சமயாசமயம் இல்லாமல் சொல்லிப் பெரியம்மாவைச் சீண்டுவதில் நீலுவுக்கு ஒரு தனித் திருப்தி.

ஒரு தடவை பெரியம்மாவின் தம்பியின் பேத்தி கல்யாணத்துக் காக அவளுடைய சொந்த ஊருக்கு அழைத்து கொண்டு போயிருந் தேன். பாட்னா ஜில்லாவில் சின்னக் கிராமம். யமுனை நதிக் கரையில் அவளுடன் அந்தக் கிராமத்தைச் சுற்றிப் பார்க்கச் சென்றிருந்தேன்.

அவர்களுக்கு வைத்தியம் செய்யும் கவிராஜின் வீடு; ஜமீன்தார் கட்டின—இப்பொழுது இடிந்து கிடந்த—கோவில். பைரவ பூயியா என்ற தேவதை. அதன் பெயரைச் சொன்னாலே பட்டுப் போன மரமும் பூக்கத் தொடங்கும். புலியும் பசுவும் ஒரு துறையில் நீர் குடிக்கும். இன்னும் எத்தனையோ இடங்களைக் காட்டினான். இளமையிலிருந்து இந்த ஊர்க்கதைகளை அவளிடமிருந்து நான் கேட்டிருந்தபடியால் இதெல்லாம் எனக்குப் புதிதாக இல்லை. பிறகு 'மாப்பிள்ளை' ஏரிக்கரை மேல் போய்க்கொண்டு இருக்கையில் பெரியம்மா ஓர் இடத்தைக் காட்டி, ''இங்கேதான் நவத்வீபத்து டாக்டர் சைக்கிளிலிருந்து விழுந்தார்?'' என்றாள். ''அப்போதெல்லாம் இந்த ஜில்லாவில் அது ஒன்றுதான் சைக்கிள். சைக்கிள் விடுவதைப் பார்ப்பதற்காகப் பேட்டை யிலுள்ள எல்லோரும் இங்கே வந்து நின்று கொண்டிருந்தோம். பாவம் மனுஷன்! கிடுமுடு கிடுமுடு என்று உருண்டு சைக்கிளுடன் ஏரியிலேயே விழுந்துவிட்டார்.''

நான் மறித்து, ''பெரியம்மா, அது நடந்தது பெரிமெண்ட் ரஸ்தா (உண்மையில் terry fund) என்று அல்லவா சொல்லியிருக்கிறாய்?'' என்றேன். ''அதாண்டா, இந்தக் கரையின் மேல்பக்கந்தான் பெரிமெண்ட் ராஸ்தா'' என்று என்னை அடக்கிவிட்டாள். பிறகு ''இங்கு வா, இப்படி உட்கார், உன்னிடம் ஒண்ணு சொல்லணும்'' என்று ஆரம்பித்தாள். ''நீ ஏன் என்னைப் பெரியம்மா, பெரியம்மா என்று கூப்பிட்டுக் கொண்டேயிருக்கிறாய்? கொஞ்சங்கூட எனக்கு அது பிடிக்கவே இல்லை. அம்மான்னு கூப்பிட்டால் என்னவாம்?'' என்றாள்.

திடீரென்று எழுந்த இந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாமல் அசந்துவிட்டேன். அவள் பக்கம் திரும்பிப் பார்த்தால் அவள் கண்

களில் ஆர்வத்துடன் கூடிய கேள்விக்குறி தென்பட்டது. அவள் முகம் கனிந்த தாய்மையுடன் கலங்கியது. எதிர்பாராமல் எழுந்த இந்தக் கேள்விக்குப் பதில் உருவாகச் சில விநாடிகளாயிற்று. யோசித்து, தயக்கத்துடன், ''பெரியம்மா என்றால் என்ன, அம்மா என்றால் என்ன? இரண்டும் ஒன்று தானே?'' என்றேன். என்னுடைய பதில் அவளை மிகவும் சங்கடப்படுத்திவிட்டதென்று உணர்ந்தேன். ஏதோ குற்றம் செய்தவளைப் போல், ''உனக்கு அம்மா இருக்கிறாள். உன்னை இது மாதிரி கேட்டது நியாயம் இல்லைதான்'' என்றாள். அவள் பார்வை ஏரியின் மறுகரையின் மீது படித்திருந்தது. ஆனால் குறிப்பாக எந்த ஒரு பொருளின் மீதும் அல்ல.

அன்றிலிருந்து யாரும் இல்லாத சமயங்களில் அவளை 'அம்மா' என்று கூப்பிட ஆரம்பித்தேன். எல்லாருக்கும் இது விஷயம் தெரியும் என்றாலும் சிறு வயதிலிருந்து 'பெரியம்மா!' என்று கூப்பிட்டு வந்தவளை 'அம்மா' என்று எல்லார் முன்பும் கூப்பிடுவதற்குச் சங்கோசமாக இருந்தது. நவத்வீபத்து டாக்டர் ஏரியில் விழுந்த இடத்தைக் காட்டிக் கொண்டிருக்கும்போது திடீரென்று எனது தாயாராக வேண்டும் என்ற ஆசை பெரியம்மாவுக்கு ஏன் வந்தது என்று இன்று கூடப் புரியவில்லை எனக்கு.

இது நடந்த சில தினங்களுக்குள்ளாகவே நடந்த சம்பவம். நான் பயந்தது நடந்துவிட்டது. நான் பெரியம்மாவை அம்மாவென்று கூப்பிடுவது அம்மாவுக்குப் பிடிக்கவில்லை. நான், நீலு இருவரும் சமையலறையை அடுத்த வராந்தாவில் சாப்பிட உட்கார்ந்து கொண்டிருக்கிறோம். அம்மா சாதம் போட்டுக்கொண் டிருக்கிறாள். எங்கள் தட்டில் சாதம் போட்ட பிறகு தானும் சாப்பிட உட்காருவாள். நான் திடீரென்று உளறிக் கொட்டினேன், ''அம்மா, பெரியம்மா எள்ளுப் பொடி போட்டு ஜிங்காக்கரி எவ்வளவு அழகாக பண்ணுகிறாள், தெரியுமா?'' என்று. ''அப்போ அவர் வீட்டிலேயே சாப்பிடுகிறது தானே? இங்கே வருவானேன்?'' என்ன கேள்வி! என்ன பதில்! அம்மா சாதாரணமாக மிகவும் இனிமையாகப் பேசுபவள். எதிர்பாராத இந்தக் கடும் சொற்கள் என்னை அதிர்ச்சியுறச் செய்தன.

நீலு திடீரென்று குறுக்கிட்டான். ''இன்று அம்மாவிடம் நீ பெரியம் மாவை அம்மா என்று கூப்பிடுவதை நான் சொன்னேன். அதுதான் அம்மாவுக்கு இத்தனை கோபம்.'' நிஜமாக அம்மாவுக்கு ரொம்பக் கோபந்தான். அதனால்தான் 'துயி'* என்று கூப்பிடாமல் 'துமி'*

---

* குறிப்பு : இந்தியில் மாதிரி, வங்காளியிலும் நீ என்ற சொல்லுக்கு இரண்டு சொற்கள் உள்ளன. துமி (இந்தியில் தும்) என்பது சாதாரணமாக உபயோகிக்கும் வார்த்தை. துயி (இந்தியில் தூ) அன்புச் சலுகையுடன் (சிறுவர்களை, நண்பர்களை) அல்லது அதிகாரச் சலுகையுடன் (வேலைக்காரர்களை, கீழ் ஜாதியினரை) அழைக்கும் சொல். ஆப்னி (இந்தியில் ஆப்) என்பது மரியாதையாக 'நீங்கள்' என்று அழைத்தல்,

என்று கூப்பிடுகிறாள். இந்த நீலுதான் எவ்வளவு பெரிய முட்டாள்! அம்மாவின் முன்னால் சொல்லாமல் என்னிடம் இதைத் தனியாகச் சொல்லியிருக்கக் கூடாதா? அம்மாவின் கண்களில் நீர் துளும்புகிறது. அதை மறைப்பதற்காகச் சமையலறைக்குள் சென்றுவிட்டாள். ஏதோ மகத்தான அபராதம் செய்துவிட்டவன் போல நான் உணருகிறேன்.

அம்மா தங்கியிருக்கும் வார்டின் பெயர் ஔரத் கிதா (பெண்கள் சிறை). இன்று இரவு அவளுக்குத் தூக்கம் வராது. கொசுவலையை ஒதுக்கிவிட்டு ஜபம் செய்வதற்கு உட்கார்ந்து கொண்டிருப்பாள் என்று நினைக்கிறேன். மனத்தில் கிலேசம் ஏற்படும் போதெல்லாம் அம்மா ஜெபத்தில் உட்காருவதை நான் கவனித்திருக்கிறேன்.

நீலு தேவுலி ஜெயிலில் போன வருஷத்தில் வியாதியாய்ப் படுத்துக் கொண்டபோது நடந்த சம்பவம். திடீரென்று தகவல் வந்தது—நீலு, அப்பண்டிஸைடிஸ் ஆபரேஷன் ஆகி அஜ்மேர் ஆஸ்பத்தியில் இருக்கிறான் என்று. அன்று இரவு முழுவதையும் அம்மா பூஜையறையில் கழித்தாள். பதினொரு மணி சுமாருக்கு என் அறைக்குள் வந்து, சுவரில் நிலைக் கண்ணாடிக்குப் பக்கத்தில் இருந்த ஷெல்பில் புட்டி களிடையே எதையோ தேடிக் கொண்டிருந்தாள். நீலுவின் உடல் நிலையைப்பற்றி என்னிடம் பேச ஆவல் இருந்தாலும் தைரியம் வரவில்லை. நான் ஒன்று கிடக்க ஒன்றாக இந்த வியாதி அபாயம், உயிருக்கு ஹானி என்று எதாவது சொல்லி விடுவேனோ என்ற பயம்.

ஜபம் அவளுக்குப் பூர்ண நம்பிக்கையைக் கொடுக்கவில்லை போலும். அம்மா நினைத்துக் கொண்டிருந்தாள், நான் புஸ்தகத்தின் மேல் கண்ணாயிருக்கிறேனென்று. கனிந்த பக்தியுடன் சுவரில் மாட்டியிருந்த காந்திஜியின் படத்தை நமஸ்கரித்தாள். பிறகு ஏற்கெனவே நன்றாக அடுக்கி வைத்திருந்த துணிமணிகளை எடுத்து மறுபடியும் அடுக்க ஆரம்பித்தாள். அப்பொழுதுதான் நான் அவளிடம் சொன்னேன்: ''அப்பண்டிஸைடிஸ் ஆபரேஷன் ரொம்பச் சாதாரண விஷயம். எல்லோரும் சீக்கிரம் சொஸ்தமாயிடுவா. இந்த நாளிலே சீமைலே உடம்பு ஒண்ணுமில்லாதவாளே இந்த ஆபரேஷன் செய்து கொள் கிறார்கள்.'' நான் சொன்னதில் அதிக சிரத்தையில்லாதவள் மாதிரி, ''தேவுலியிலிருந்து அஜ்மேர் எவ்வளவு தூரம்டா?'' என்று கேட்டாள். ஆனால் திரும்பவும் பூஜை அறைக்குள் சென்று இரவு முழுவதும் ஜபம்.

ஸெண்ட்ரல் டவரிலிருந்து வார்டர் உரக்க கத்துகிறான். ''பதில் குரல் கொடு! தனி வார்ட்! பதில் குரல் கொடு, ஜுவைனல் வார்ட்!''

அஸ்தமித்து ரொம்ப நேரமாகவில்லை. முக்கால்வாசி வார்டர்கள் கடனே என்று பதில் குரல் கொடுக்கிறார்கள். மறுபடியும் டவர் வார்டர், ''குரல் கொடுடா'' என்று ராகம் பாடுவதுபோல் இழுத்துக்

கூவுகிருன். ''குரல் கொடுடா, ஐந்தாம் நம்பர்'' என்று கூவினபோது, பதில் குரல் வருவதற்கு வெகு நேரமாயிற்று. நான் பதினுறு எண்ணின பிறகு தான் பதில் வந்தது. ஒரு வார்டர் ஒரு நாள் எனக்கு விளக்கினுன். ''பதில் குரல் கொடுப்பதை ஒரே மாதிரி கத்தாமல் பாட்டு மாதிரி இழுத்துச் சொன்னுல், சிரமமும் கம்மி, தொண்டையும் வற்றிப் போகாது.''

ஒவ்வொரு வார்டிலும் நாலு பெரிய ஹால்கள்—இரண்டு மேலே, இரண்டு கீழே. ஜெயில் பாஷையில், கொட்டில்கள். ஐந்தாம் நம்பர் வார்டின் குரல் முதல் ஹாலிலிருந்து வந்தது. உடைந்த கரகர என்ற தொண்டையில், ''ஐந்தாம் நம்பர், முதல் கொட்டில், நூற்று ஐம்பத்து ஏழு பேர். ஆசாமி, பூட்டு, விளக்கு எல்லாம் சரி.'' வார்டர் குரலிலிருந்தே அவனது உருவத்தை வரைய முடிகிறது என்னுல். சாம்பல் நிற முரட்டுத்தாடி, மீசை. காரியத்தில் கண்ணுனவன். நீல நிறக் குல்லா அவன் ட்யூட்டியில் இருப்பதை அறிவிக்கிறது. மாதம் நாலணு அவன் சம்பளத்திலிருந்து கழித்துச் சர்க்கார் அவனுக்காகச் சேமித்து வைக்கின்றனர். இதற்குக் கைமாருக அவன் இரவு இரண்டு மணி 'பாரா' கொடுக்கிருன். சர்க்கார் உப்பைத் தின்று விட்டு வேலையிலே ஏமாத்தலாமா? ஐந்தாம் நம்பரின் மற்ற மூன்று கொட்டில்களிலிருந்தும் பதில் குரல்கள் வந்தன. ஆனுல் அவை அவ்வளவு தெளிவாக இல்லை. வெறும் 'ஹோ...ஹோ' என்றிருந்தது.

கிராமங்களின் வெட்டியான் இரவில் கொடுக்கும் குரல்போல் ராகம் போட்டு வார்த்தைகளைச் சரியாக உச்சரிக்காமல் ஏதோ கடனே என்று செய்த பணி. இப்படிப் பதில் குரல் கொடுத்தவர்கள், கட்டாயம் வெள்ளைத் தொப்பி அணிந்த 'மேட்'களாக இருப்பார்கள். மேட்கள் சாதாரண வார்டர்களைவிட அதிக காலம் ஜெயிலில் இருந்தவர்கள். மாதம் எட்டணு சம்பளந்தான். இருந்தாலும் ஜெயிலில் எத்தனையோ பார்த்திருப்பவர்கள், கேட்டிருப்பவர்கள். அவர்களுக்குத் தெரியும், 'பாரா'ட்யூடி சரிவரச் செய்ததால் அவர்களுக்கு ரெமிஷன் (தண்டனையில் குறைவு) கிடைக்கப் போவதில்லை. ஹெட் வார்டரைச் சரிக்கட்டிக் கொள்வதுதான் முக்கியம். அதை எப்படிச் செய்வது என்று அவர்களுக்குத் தெரியும். மேட் ஏதோ சாதாரண ஆசாமி அல்ல. அவன் கீழ் எத்தனை கைதிகள்! தங்கள் அதிகாரத்தைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டுமென்றுல், ஜெயிலில் உள்ள மற்றச் சிப்பந்திகள், ஜெயில் விதிகள் ஆகியவற்றைத் துச்சமாக மதிப்பதாகக் காட்டிக் கொள்வது அவசியம்.

''பதில் குரல் கொடுடா, தனி வார்ட்''. இதற்குப் பதில் ஆரும் நம்பர் வார்டிலிருந்து வருமா, அல்லது தனி வார்டிலிருந்து வருமா என்று

உன்னிப்பாகக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். அதிலிருந்து புரிந்துவிடும் டவர் வார்டர் புதிய ஆளா, அல்லது பழையவனு என்று. ஆரும் நம்பர் வார்டிற்கு மற்றெரு பெயர் 'தாம்லி' (lifers) சிறை. ஆயுள் தண்டனை பெற்றவர்கள் தான் இந்த வார்டில் இருப்பார்கள். இதிலிருக்கும் கைதிகள் மற்ற வார்டர்களையும் கைதிகளையும் 'பூசணி'த் திருடர்கள் என்று கேலி செய்பவர்கள். இவர்கள் சுரைக்காயைத் திருடி விட்டு ஜெயிலுக்கு வந்தவர்கள் போலும்! இந்தத் 'தாம்லி' களிடம் வார்டர்களும் மற்றக் கைதிகளும் கொஞ்சம் உஷாராகவே நடந்து கொள்வார்கள். மேலும் பழைய வார்டர்களுடன் இவர்களுக்கு விசேஷ ஒப்பந்தம் உண்டு. அவர்கள் டவர் ட்யூடியில் இருந்தால், இவர்கள் நிம்மதியாக இரவு முழுதும் தூங்குவார்கள். 'மேட்-பாரா'வில் கத்துவதிலிருந்தும் கணக்கெடுப்பதிலிருந்தும் இவர்களுக்கு விடுதலை.

பாவம்! நாள் முழுதும் ஜெயில் ஃபாக்டரியில் வேலை செய்கிறூர்கள். கொஞ்சமாவது தொந்தரவற்ற தூக்கம் கிட்டாவிடில் ஆயுள் முழுவதும் எப்படி முதுகெலும்பு முறிய வைக்கிற வேலை செய்ய முடியும்? புது வார்டராக இருந்தால் கட்டாயம், "ஆரும் நம்பர் பதில் குரல் கொடு" என்று கூவியிருப்பான். இரண்டாம் நம்பர் வார்டிலிருந்து ஆரும் நம்பர் வார்டை நோக்கிஞல் ஏதோ ஒரு பெரிய ரெயில்வே ஜங்ஷனின் பிளாட்பாரம் மாதிரி தோன்றுகிறது. இந்த வார்ட் யாரோ ஒரு ராஜா பகதூரின் உபயம்.

உலகத்தில் தானத்துக்குகந்த பல பாத்திரங்கள் இருக்கையில் ஒரு ஜெயில் வார்ட் கட்டிக்கொடுக்கும் நற்பணியைத் தேர்ந்தெடுத்த ராஜாபகதூரின் தனித்தன்மை குறிப்பிடத்தக்கதுதான்! இப்படிச் செய்ததில் ராஜா பகதூர் ஏதோ ஒரு ரகசிய ஆசையைப் பூர்த்தி செய்து கொண்டாரோ என்னவோ எனக்குத் தெரியாது. ஆனுல் அவர் புண்ணியத்தில் இந்தக் கைதிகளுக்குத் தங்கள் கடுங்காவலை ஓரளவு சிரமமல்லாமல் கழிப்பதற்கு வசதி கிடைத்துள்ளது. இதற்காக அவர்கள் அவரிடம் நன்றியுள்ளவராகத்தான் இருப்பார்கள். ஆயுள் தண்டனை பெற்றவர்கள் சாதாரணமாக நல்ல மனிதர்கள். பக்காத் திருடர்களிடமுள்ள சிறுமைத்தனமும் அயோக்கியத்தனமும் இவர்களிடம் கிடையா. ஜெயிலையே தங்கள் வீடாக்கிக் கொண்டுள்ளார்கள். ஒரு 'லைஃபர்' ஜெயில் அங்கணத்தில் ஒரு துளசிச் செடியை நட்டுத் தண்ணீர் விட்டுக் காப்பாற்றி வருகிறுன். மற்றும் சிலர் தங்களுக்கென ஓர் இடத்தைச் சுத்தம் செய்து தங்கள் பிரத்தியோக உபயோகத்திற்கு என்று வைத்துக் கொண்டுள்ளார்கள். மற்றும் சிலர் தங்களுக்கே சொந்தமான மிளகாய் செடிகளை வளர்க்கின்றனர். இச்செடிகளிடம் இவர்களுக்கு எவ்வளவு ஆசை அனுதாபம்!

பெற்றோர்கள் தங்கள் குழந்தைகள் மேல் பொழியும் வாத்ஸல்யம், ஆசை, கனிவு, எல்லாவற்றையும் இந்தச் செடிகளின் மேல் இவர்கள் கொட்டுகின்றனர்.

ஹஸாரிபாக் ஜெயிலில் அந்த ஆங்கிலோ-இந்தியன் வில்லியம்ஸ், அவனை விடுதலை செய்த தினத்தில் எப்படி அழுதான்? பதினாலு வருஷம் அந்த ஜெயிலில் கழித்திருந்தான். அவன் நட்டிருந்த கொய்யாச் செடி எவ்வளவு பெரிதாகிவிட்டது! அவன் நட்ட குலாப் ஜாமுன் மரமும் பௌடர் பஃப் மாதிரி மிருதுவான மலர்களைப் பொழிந்து கொண்டு நின்றது. அசோக மரத்தடியில் இருந்த உட்காரும் மேடை அவன் எழுப்பியதுதான். அதன் காரணமாகவே ஜெயில் சூப்பிரண்டிற்கும் பி.டபிள்யு.டி இன்ஜினியருக்குமிடையே எவ்வளவு மனக் கசப்பு! வில்லியம்ஸ் தனது மேடை, மரங்கள் எல்லாவற்றையும் கடைசி முறையாகப் பார்த்துவிட்டு விம்மி விம்மி அழ ஆரம்பித்து விட்டான். இந்த மாதிரி வயதான ஒருவர் மனமுடைந்து அழுவதை நான் அதிகம் பார்த்தவன் அல்ல. வீடு திரும்பித் தனது உற்றார் உறவினரைப் பார்க்கப் போவதில் உள்ள ஆனந்தத்தைவிட அந்தச் செடிகள், ஜெயிலில் உள்ள சிநேகிதர்கள், ஆகியோரை விட்டுச் செல்வதில் உள்ள துக்கம் அவனுக்கு அதிகமாயிருந்தது.

ஆடாமல், அசையாமல் ஒரே மாதிரி உட்கார்ந்திருந்ததில் கால் மரத்து விட்டது. அறைக்குள்ளேயே குறுக்கும் நெடுக்குமாகச் சில தடவைகள் நடந்தேன், 'தூங்கிப் போய்விட்ட' கால்களில் ரத்த ஓட்டத்தைத் துரிதப்படுத்துவதற்காக. கம்பிகளைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தபோது என் நினைவு இல்லாமலேயே வலப் பக்கத்தில் அதிகக் கனம் கொடுத்து உட்கார்ந்துவிட்டிருக்கிறேன். எப்போதுமே நான் வலது ஆள் தான். கம்பிகளைப் பிடித்துக் கொள்கிறேன். மரத்துப் போய்க்கூட இடக் கையால் கம்பிகளைப் பிடிப்பதில்லை, இடப் பக்கம் பாரம் கொடுத்து உட்காருவதில்லை.

அது நடந்தபோது தான் நான் எவ்வளவு சிறியவன்! பள்ளிக்கூடம் போக ஆரம்பிக்கவில்லை. ஹாஸ்டலுக்குப் பக்கத்தில் ஹெட்மாஸ்டரின் குவார்ட்டர். அப்பா பள்ளிக்கூடம் போய்விட்டார். அம்மா உட்கார்ந்து கொண்டு பாக்கு வெட்டிக் கொண்டிருக்கிறாள். நீலுவுக்கும் எனக்கும் தர்க்கம், சண்டை. நீலு, அம்மாவின் வலது துடை தன்னுடையது என்கிறான். ''வேண்டுமென்றால் நீ இடது துடையை எடுத்துக் கொள்.''

எனக்கு இடது துடையை எடுத்துக் கொள்வது மரியாதைக் குறைவாகப் பட்டது. எங்கள் இரண்டு பேர்களுக்குமிடையே போட்டி, அம்மாவின் வலது துடையில் தன் கையை வைத்துத் தனது உரிமையை

ஸ்தாபித்துக் கொள்வதற்கு. இந்தக் குழப்பத்தில் நீலுவின் கால்பட்டு வெட்டின பாக்கு வைத்திருந்த பிரம்புக் கூடை கவிழ்ந்துவிட்டது. அம்மா 'சீ சீ' என்று சொல்லிக்கொண்டு என் முதுகில் இரண்டு அறை வைத்துவிட்டு, ''பெரிய பையன் நீ, வெட்கமா இல்லே? வயது ஆக ஆகப் புத்தியும் கோணலாயிண்டிருக்கு.''

''நானு பாக்கை உடைத்துக் கொட்டினேன்?'' என்றேன்.

''மறுபடியும் பேசறயா? தம்பி கேட்டா விட்டுக் கொடுக்கக்கூடாது? நீலுவுக்குத்தான் வலது பக்கம்.'' தப்பித்தேன். இன்னும் கொஞ்சம் பேசிருந்தாப் பாக்குவெட்டியில் என் கையே வெட்டுப்பட்டுப் போயிருக்கும்.

கோபம், வெட்கம், அவமானம் எல்லாம் கண்களில் நீராக வழிந்தன. சற்றுத் தொலைவில் போய்ப் பேசாமல் உட்கார்ந்துவிட்டேன். நீலு கொஞ்சநேரம் கழித்து எழுந்து போய்விட்டான். போட்டிக்கு ஆள் இல்லை என்று ஆன பிறகு அவனுக்குச் சண்டையிலிருந்த ஆர்வம் குறைந்துவிட்டது. வெகுநேரம் கழித்துத்தான் அம்மா என்னை அரைக் கண்ணால் கவனித்துக் கொண்டிருக்கிறாள் என்பது எனக்குத் தெரிந்தது. பாக்குகளை எல்லாம் வெட்டி, கூடையைச் செஸ்ட் ஆஃப் டிராயரின் மேல் வைத்துவிட்டு என்னிடம் வந்தாள். ''நீ ஒரே மண்டுவா இருக்கியே! இடது தொடைதான் நல்லது. நீ கவனித்த தில்லையா? பாப்பாவுக்குப் பால் கொடுக்கும்போது வலக் கையில் தானே கிண்டி இருக்கு. அப்போ பாப்பா இடது மடியிலே தானே படுத்துண்டிருக்கும்? நீ தான் வலது பக்கத்திலேயும் படுத்திருந்து பார்த்திருக்கிறயே? இனிமேல் உனக்கு மட்டுந்தான் இடப்பக்கம். எழுந்திரு. போய் அந்தத் திருட்டுப் பயல் எங்கே போய்த் தொலைஞ் சுட்டான், பார்த்துண்டு வா.'' அம்மாவின் வாதம் அந்தச் சமயம் மறுக்க முடியாததாகப் பட்டது எனக்கு.

வலக் காலில் இருந்த மரத்த உணர்ச்சி போய்விட்டது. ஸெல்லிற்குள் குறுக்கும் நெடுக்குமாக நடப்பதைக் கவனித்த வார்டர் கதவருகில் வருகிறான். ஏன் இப்படிப் பாதி ராத்திரியில் இருட்டறையில் நடந்து கொண்டேயிருக்கிறேன்? என் மனத்தில் என்ன இருக்கிறது என்று அவனுக்குத் தெரிந்து கொள்ள ஆவல். 'பாபுவின் மனம் இன்று சரியாக இல்லை' என்று அவன் நினைத்திருப்பான். இன்றிரவு மனசு எப்படிச் சரியாக இருக்கும்? கம்பிகளின் வழியாக என்னைப் பார்த்துக் கொண்டேயிருக்கிறான், மிருகக்காட்சி சாலையில் கூண்டுக்குள் இருக்கும் மிருகங்களை வேடிக்கை பார்க்கிற கும்பல் போல.

மிருகக்காட்சி சாலை என்றவுடன் ஞாபகம் வருகிறது. என் நண்பன் நீரேஷின் சின்னப் பாட்டி காசிக்குத் தீர்த்த யாத்திரை போக வந்திருந்

தாள். சின்னப் பாட்டி என்று பெயரே ஒழிய ஏதோ தூரத்து உறவு. மிகவும் வயதான ஒரு ஜமீன்தாருக்கு இரண்டாம் தாரமாக வாழ்க்கைப்பட்டுக் கல்யாணமான சில நாட்களிலேயே விதவையாகி விட்டாள். காசிக்குக் கூட அப்பாவையும் அம்மாவையும் அழைத்து வந்திருந்தாள். சின்னப் பாட்டி என்ற பெயரே ஒழிய, வயதில் அவள் மிகவும் சிறியவளாக இருந்ததைக் கண்டு அசந்துபோய்விட்டேன்.

அவளை அழைத்துக் கொண்டு நானும் நீரேஷும் காசியில் எல்லா இடங்களையும் சுற்றினோம். ராஜாவின் மிருகக்காட்சி சாலைக்குப் போயிருந்தோம். புலிக்கூண்டிற்கு முன்னால் நின்று கொண்டிருந்தோம். இரண்டு கால்களை முன்னால் வைத்துக்கொண்டு புலி திடீரென்று கர்ஜித்தது. அதன் முகத்தைப் பார்த்தால் ஏதோ கொட்டாவி விடுவது போல் இருந்தது. ஆனால் நீரேஷின் சின்னப் பாட்டி பயந்து போய், "ஐயோ, அம்மா" என்று கத்திக்கொண்டு என்னை இறுகக் கட்டிக்கொண்டுவிட்டாள். சில விநாடிகளே நீடித்த சம்பவம்; நீரேஷோ, அவள் பெற்றோர்களோ அதைக் கவனித்திருக்கக்கூட மாட்டார்கள், அப்படிப் பார்த்திருந்தாலும் தப்பாக எடுத்துக் கொண்டிருக்க மாட்டார்கள். ஆனால் இந்த அற்ப கணத்தைச் சுற்றி எத்தனை கனவு வலைகளைப் புனைந்திருப்பேன்! நீரேஷ் சொல்லிக் கொடுத்தபடி சின்னப் பாட்டியின் அம்மாவைச் சித்தி என்று கூப்பிட ஆரம்பித்தேன்.

காசியில் அவர்கள் வீட்டுக்கு நீரேஷுடன் போயிருந்தேன். நேரே சமையலறைக்கே போய்விட்டேன். சித்தி ரொம்ப நல்ல மாதிரி. ஆனால் நன்கு பேச, பழகத் தெரியாதவள். படித்த பட்டணத்துப் பசங்களுடன் பேசும்போது ஒன்று கிடக்க ஒன்று சொல்லிவிட்டு மாட்டிக் கொள்வோமோ என்ற பயம். நான் சமையலறைக்குள் நுழைந்ததுமே, "எங்கள் இடிந்த குடிசையில் இன்று சந்திரோதயம்" என்று வரவேற்றாள். என்ன நினைத்துக்கொண்டு இப்படிச் சொன்னாள் என்று எனக்குப் புரியவில்லை. பிறகு கையில் கரண்டியுடன் ஸ்தம்பித்து நின்றுகொண் டிருந்தாள். முகத்தில் மட்டும் ஓர் அர்த்தமற்ற புன்சிரிப்பு. இதற்குப் பிறகு சில தினங்களுக்கு அவர்களுடனேயே சுற்றிக்கொண் டிருந்தேன். சின்னப் பாட்டியின் அப்பாவுக்காக நாலு தினுசான டார்ச் லைட், பத்துக் கடை ஏறி இறங்கி வாங்கினோம்.

போகிற இடமெல்லாம் இந்தமாதிரி ஏதாவது சாமான் ஒன்று வாங்கியாக வேண்டும் அவருக்கு. அவர் பேச்சு வார்த்தை எல்லாம் கொஞ்சம் நாட்டான் மாதிரி இருக்கும், மெருகு இல்லாமல். மாப்பிள்ளை போனதிலிருந்து அவரது சொத்து விவகாரங்களை இவரே பார்த்துக் கொண்டிருக்கிறார். ஒரே பெண்ணின் வைதவ்யத்தினால் மிகவும் மனமுடைந்தவராகத் தென்படவில்லை. பார்க்கப் போனால் கூடப்பிறந்த வறுமை

யிலிருந்து விடுதலை பெற்று, முன்பு ஒடுக்கி வைத்திருந்த ஆசைகளை இப்பொழுது பூர்த்தி செய்து கொள்ளும் வாய்ப்பு கிடைத்ததில் அவர் தலை கொஞ்சம் கனத்துவிட்டது என்று கூடச் சொல்லலாம். ஆனால் பெண்ணிடம் மட்டும் பயம்.

காசியில் சின்னப் பாட்டியின் அம்மாவுக்கு உடம்புக்கு வந்துவிட்டது. அப்பொழுது அவளுக்கு ஓர் அசட்டுப் பிடிவாதம். என் கையால் தான் மருந்து சாப்பிடவேண்டும் என்று ஒவ்வொரு நாளும் அவளுக்காக விசுவநாதர் கோவில் அர்ச்சகர் ஒருவர் வீட்டிலிருந்து ஓர் இளநீர் வாங்கி வருவேன். வீட்டுக்குள் நுழையும்போதே சின்னப் பாட்டி, ''இதோ வந்துவிட்டாரே பால சந்நியாசி! இனி அம்மாவுக்குக் கவலை யில்லை'' என்பாள்.

நான் என்னைக் கடும் தபஸ்வியாக்கிக் கொள்ள முயன்று கொண் டிருந்த நாட்கள் அவை. சாமியார் மாதிரி நீளமாகத் தலை மயிர் வளர்த்திருந்தேன். முகத்தில் இளம் மீசை, தாடி, க்ஷவரம் செய்யப் படாமலேயே இருந்தன. அதனால் தான் இந்தச் சந்நியாசிப் பட்டம். அவளைப்பற்றி நினைவு வரும்போதெல்லாம் என் கண் முன் வருவது நீலப் புடைவையணிந்த உருவம். கையில் பம்பாய் வளையல்கள், கழுத்தில் ஒரு கனமான தங்க செயின். விதவைக்குறித்தான அலங் கோலங்களை தன் ஒரே பெண்ணின் மேல் புகுத்துவதற்குப் பிடிவாத மாக மறுத்துவிட்டாள் சின்னப் பாட்டியின் தாயார். கறுப்பு நிறம். இந்நிறத்துக்கு ஒவ்வாத நீலப் புடைவை (கரையில் கிளாவர் டிஸைன் போட்டது) உடுத்திருந்தாள் சின்னப் பாட்டி. மிகவும் சாதாரணமான கிராமத்துப் பெண். குறிப்பிட்டுச் சொல்லும்படியான அழகோ குண விசேஷங்களோ உடையவள் அல்ல. இருந்தாலும் அவள் என்னை வசீகரித்தாள். சரளமாகப் பேசுகிற சுபாவம், மற்றவர்களை முழுதும் தன்னதாக்கிக்கொள்ளும் வெகுளித்தனம், நடத்தை. பேச்சுகளில் பசப்பு, பகட்டு ஏதும் இல்லை.

அவர்கள் ஊருக்குத் திரும்பிப் போன தினம் நானும் நீரேஷும் அவர்களை ரயில் ஏற்றிவிட ஸ்டேஷனுக்குப் போயிருந்தோம். சின்னப் பாட்டியின் அப்பா கடைசி நேர வியாபாரமாக வெற்றிலைபாக்குக் கடையில் காசி மஞ்சள் வாங்குவதற்காக நீரேஷுடன் போய் விட்டார். நான் பிளாட்பாரத்தில் கைகளை ஜன்னல் கம்பிகளுக்கு இடையில் வைத்துக்கொண்டு நிற்கிறேன். சின்னப் பாட்டி தன் கையை என் கைமேல் வைக்கிறாள். அவள் கண்களில் நீர் ததும்பி நின்றது. என்னால் அவள் பக்கமே பார்க்க முடியவில்லை. தழுதழுத்த குரலில், ''சந்நியாசியாரே, எங்க ஊருக்கு ஒரு தடவை வாயேன்'' என்றாள்.

வருவதாக வாக்களித்தேன். வெகுநாட்கள் வரை அந்த வாக்கை நிறைவேற்றவேண்டுமென்ற ஆசையும் இருந்தது. அவள் போன பிறகு சில தினங்களுக்கு என் வாழ்க்கையில் ஒருவித வெறுமை. ஒன்றிலும் மனம் செல்லவில்லை. அவளுடைய முகம் என் கண் முன் அடிக்கடி வந்து கொண்டிருந்தது. கடிதம் எதிர்பார்த்துச் சில தடவை போஸ்டாபீஸுக்குக் கூடப் போய்விட்டு வந்தேன்.

நாட்கள் செல்லச் செல்ல அந்த நீலப் புடைவையும், பம்பாய் வளைகள் அணிந்த அந்தக் கைகளும் என் நினைவிலிருந்து மறையத் தொடங்கின. நாலைந்து வருஷங்களுக்கு முன் பழைய காகிதங்களைக் கிளறிக் கொண்டிருந்தபோது ஒரு நீலக் காகிதத்தில் அவள் எழுதியிருந்த கடிதத்தில் இரண்டு வரிகளைப் படித்தபோது அவளது மெருகற்ற வெகுளித்தனம் மீண்டும் என் கண்முன் வந்தது. ''சந்நியாசி பாபா! கல்யாணச் சாப்பாடு போடாமல் ஏமாற்றிவிடாதே, அந்த சாப்பாட்டிற்காக நான் வயிற்றைத் துடைத்து வைத்திருக்கிறேன்.''

வயிற்றைத் துடைத்து வைத்துக் கொண்டிருப்பதாகச் சொல்வது எனக்கு மிகவும் அநாகரிகமாகப் பட்டது. இதை ஒரு கடிதத்தில் யாரேனும் எழுதக் கூடும் என்று நான் நினைத்துக்கூடப் பார்த்ததில்லை. படிப்பதற்கு மிகவும் அருவருப்பாக இருந்தது.

கட் கட் கட் என்ற சப்தம். சிமெண்ட் போட்ட தாழ்வாரத்தின்மீது கனமான மிலிட்டரி பூட்ஸ்கள் எழுப்பும் ஓசை. மூன்று புதிய சிப்பாய்கள் வந்திருக்கிறார்கள். முதலிலிருந்த வார்டரிடமிருந்து 'சார்ஜ்' வாங்கிக்கொண்டு தாழ்ப்பாளிலுள்ள பூட்டு சரியாக இருக்கிறதா என்று பார்க்கிறார்கள். எந்த ஸெல் எதிரிலும் நின்று சோதனை செய்து அமர்க்களம் செய்யவில்லை. ஒரு கைதிகூட இவ்வளவு நேரமாகியும் தூங்கவில்லை என்று தெரிகிறது. தூங்கியிருந்தால் வார்டர் கூப்பிட்டு எழுப்பியிருப்பான். சார்ஜ் மாறும்போது இந்த மாதிரி கூப்பிட்டு எழுப்பியாகவேண்டும். யாராவது கைதி செத்து வைத்திருந்தால் என்ன செய்வது?

ஸெல்லின் கதவருகில் உட்கார்ந்திருந்தாலோ அல்லது இருமியோ, தும்மியோ தான் உயிருடன் இருப்பதைத் தெரிவித்துவிட்டால் கூப்பாடு இருக்காது. ஆனால் தூங்கிப் போய்விட்டால் தப்பமுடியாது. ஸெல்லில் இருக்கும் கைதிதானே! இரண்டு மணிக்குமேல் தூக்கம் எதற்கு? ஏன் இப்படி எழுப்பி வதைக்கிறீர்கள் என்று கேட்டால், ''அது சட்டம் பாபு, யாராவது மூர்ச்சையடைந்திருந்தாலோ அல்லது ஏதாவது வியாதி வந்து பேச்சுமூச்சு நின்று போயிருந்தாலோ எங்களுக்கு எப்படித் தெரியும்? டாக்டர் ஐயாவுக்கு எப்படிச் சொல்லி யனுப்ப முடியும்?'' உண்மையைச் சொல்லப் போனால் ஸெல் கைதி களுக்கு இதனால் அதிக அசௌகரியம் என்று சொல்ல முடியாது.

கொசு, மூட்டைப்பூச்சி, எறும்பு, நாள் முழுதும் ஒன்றுமே செய்யாமல் உட்கார்ந்திருத்தல், கவலை என்று இருக்கும்போது, 'கலைக்கும்படியாக'த் தூக்கம் எங்கே இருக்கப் போகிறது? பத்தாம் நம்பர் வார்டிலிருந்து பாட்டு கேட்கிறது. 'தியாகிகளின் படை புறப்பட்டுவிட்டது...'

படை என்றவுடன் பாட்னு காம்ப் ஜெயிலில் 1932-ஆம் வருஷம் நடந்த சேவா தளப் பயிற்சி வகுப்பு ஞாபகம் வருகிறது. நானும் நீலுவும் அதில் சேருவதாக முடிவு செய்தோம். முதல் நாள், ட்ரில் முடிந்தவுடன் நீலு, ''டோலி என்றால் என்ன அண்ணா?'' என்று என்னைக் கேட்டான். அவனுக்கு நான் விளக்கினேன். ஒரு சில சிப்பாய்கள் சேர்ந்து ஒரு 'டோலி' (Squad) ஆகிறது. அதற்கு ஒரு என். சி.ஓ. தலைவனாக இருப்பான் என்று சொன்னேன். ''இதெல்லாம் எனக்குத் தெரியும்'' என்று பொறுமையிழந்து சொல்லிவிட்டு, ''அதான் டெண்டுல்கர் விவரமாக விளக்கினானே? நான் கேட்பது அதல்ல. இந்த 'டோலி' என்ற வார்த்தையை ஏன் பொறுக்கியிருக்கிறார்கள்? இவர்களுக்கு வேறு வார்த்தை கிடைக்கவில்லையா?'' என்று சொல்லிவிட்டு ஒரேயடியாகச் சிரிக்க ஆரம்பித்துவிட்டான்.

அன்று பிற்பகல் டெண்டுல்கர் 'சுதம் கோல் (Stand at ease), ஸாவதான்' (Attention) என்ற வார்த்தைகளுக்குப் பொருள் விளக்கினபோது, நீலு ஒரேயடியாக எல்லோர் முன்னிலையிலும் சிரிக்க ஆரம்பித்துவிட்டான். டெண்டுல்கர் நெருப்பாய் மாறிவிட்டான். அவன் ஹுப்ளியில் ஹர்தீர்கரின் காம்பில் பயிற்சி பெற்றவன். பம்பாயில் காம்ப்கள் நடத்தியிருக்கிறான். பிரதேச காங்கிரஸ் கமிட்டியின் தலைவரின் விசேஷ வேண்டுகோளின் பேரில் மஹாராஷ்டிரத்தை விட்டுவிட்டுப் பீஹாரில் காம்ப் நடத்த வந்திருக்கிறான். சேவா தள பயிற்சி அளிப்பதில் மிகவும் அநுபவசாலி. ஆனால் இங்கு ட்ரில் நடக்கும் போது நிகழும் கட்டுப்பாடின்மையை அவன் வேறு எங்கும் கண்டதில்லை. இந்தி சரியாகப் பேச வராது அவனுக்கு. கோபத்தில் அவன் கண், முகமெல்லாம் சிவந்துவிட்டன. ''உனக்கு ஒரு லாட்டி (தடி) தேவை போலிருக்கு'' என்று கையிலிருந்த தடியினால் நீலுவின் விலாவில் இடித்தான். நீலு அவன் கையிலிருந்து தடியைப் பிடுங்கிக் கொண்டு இரைந்து கத்த ஆரம்பித்துவிட்டான். ''தடியடியா? அதெல்லாம் உங்கள் மஹாராஷ்டிரத்தில் வைத்துக்கொள். இங்கு நடக்காது. ராஷ்டிர பாஷை பேசத் தெரியவில்லை. புனா நகரைப் பூனே என்று உச்சரிக்கிறான். இதில் இந்தி பேச வந்துவிட்டான்.''

நீலு டெண்டுல்கரின் கையைப் பிடிக்கப் போய்விட்டான். நாலுபக்கத்திலிருந்தும் மற்றவர்கள் குறுக்கிட்டு அவனை விடுவிக்க வேண்டியதாயிற்று. சமாசாரம் உடனேயே ஜெயில் முழுதும் பரவிவிட்டது.

காம்ப் ஜெயிலில் அப்பொழுது 4500 அரசியல் கைதிகள் இருந்தனர். எந்த வார்டிற்குப் போனாலும் சிறுசிறு கூட்டமாக எல்லாரும் இதைப் பற்றியே பேசிக்கொண்டிருந்தார்கள். ஜெயிலில் ஒவ்வொரு மூலையிலும், ஏன் வானிலும் காற்றிலும், இதே ரீங்காரத் தொனிதான்!

ஜெயிலின் நடுவில் உள்ள மைதானத்தில் நாங்கள் சௌக் என்று பெயர் வைத்திருந்த இடத்தில் ஒரே கூட்டம். வார்டர்களும் கைதிகளும் ஒன்றிக் கலந்து விட்டனர். ஜெயில் 'பாலிடிக்ஸில்' கைதிகளைவிட வார்டர்களுக்கு உற்சாகம் குறைவு என்று சொல்லவே முடியாது. கூட்டத்தில் இரண்டு கட்சிகள் உருவாயின. ஒருவன் நடந்த விஷயத்தை விளக்க ஒரு பிரசங்கமே செய்கிறான். பீஹாரின் நற்பெயருக்கே களங்கம் ஏற்படும் வகையில் இந்தச் சம்பவம் அமைந்து விட்டது. வெளியூரிலிருந்து வந்திருப்பவர் டெண்டுல்கர். அவருக்கு இப்படியா அதிதி—சத்காரம் செய்வது? போதாததற்கு அவருடைய இந்தியைப் பற்றிக் கேலி வேறு! பிறகு குரலைக் கொஞ்சம் தாழ்த்தி, தங்களைச் சார்ந்தவர்களிடம் ரகசியமாகச் சொல்லும் முறையில், ''என்ன இருந்தாலும் வங்காளிதானே?'' என்கிறான்.

அர்த்த புஷ்டியான ஒரு சிரிப்பு. 'உங்களுக்குத்தான் எல்லாம் தெரியுமே, இன்னும் உடைத்துச் சொல்ல வேண்டுமா?' என்கிற பாவத்தில் இருந்தது அந்தச் சிரிப்பு. அவமானத்தால் என் மண்டையே பிளந்துவிட்டது போல இருந்தது எனக்கு. இவர்களுக்கு நீலுவின் குணம் தெரியாது, புரியாது. நடந்ததைத் தங்கள் மனம் போகும் போக்கில் அர்த்தம் செய்து கொள்கிறார்கள்.

மாலைச் சாப்பாட்டின்போது நீலுவை வார்டில் பார்த்தேன். சாப்பாடு சூரியாஸ்தமனத்திற்கு முன்பே முடிந்துவிடும். அந்தச் சமயத்தில் பசிப்பதில்லை என்ற காரணத்தினால் ரொட்டியை வாங்கிக் கொண்டு வார்டிற்கு வந்துவிடுவோம். பிறகு இருட்டின பிறகு சாப்பிடுவோம். நான் பிற்பகல் சம்பவத்தைப் பற்றிப் பேசத் தயங்கிக் கொண்டிருந்தேன். நீலுவே அந்தப் பேச்சை எடுத்து என் சங்கோசத்தை நீக்கிவிட்டான். நடந்தது பற்றி அவனுக்குத் துளிக்கூட முகவாட்டமோ, நாணமோ இல்லை. திருப்பித் திருப்பி, ''இந்த ட்ரில், ஆர்டர் எல்லாம் இங்கிலீஷில் இருந்துவிட்டால் என்ன குடி முழுகிப் போய்விடும்? Quick March, Stand at ease என்று சொன்னால் பாரதத்திற்குக் கிடைக்கவிருக்கும் சுதந்தரம் கை நழுவி போய்விடுமா?'' என்று கேட்டுக் கொண்டே இருந்தான்.

''இந்தியோ பேசத் தெரியவில்லை. பிறகு இந்தியில் பேசுவானேன்? மேனர்ஸ் இல்லாத மனிதன்! சின்னப் புத்தியுள்ள ஆள்! இவனுக்கு எதற்கு மரியாதை கொடுக்கவேண்டும்?'' என்று பொரிந்து தள்ளினான்.

ஒரு நாளும் அவன் கேட்டாலன்றி நான் நீலுவுக்கு உபதேசம் செய்வதில்லை. இப்போதும், அவன் வார்த்தைகளை உதிர்த்திருக்காவிட்டால் வாயைத் திறந்திருக்கமாட்டேன். மற்ற அரசியல் கைதிகள் அவன் நடத்தையை எப்படியெல்லாம் திரித்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதைச் சுருக்கமாக எடுத்துச் சொன்னேன். நீலுவுக்கு ஒரே எரிச்சல். ''இவங்களா சுதந்தரம் வாங்கித் தரப் போகிறார்கள்?'' என்று துச்சமாகத் தூக்கியெறிந்துவிட்டான். இதற்குப் பிறகு கவனித்ததில் அவன் கோபம் எல்லாம் ஒரு சக கைதிமேல் திரும்பி விட்டிருந்தது. இந்த அநாமதேயச் சகபாடி அவன் கஷ்டப்பட்டுச் சேர்த்து வைத்திருந்த வெல்லத்தை திருடிவிட்டான்! ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் 'விரதம்' இருக்கும் கைதிகளுக்கு அரிசிச் சோறுக்குப் பதிலாக ரொட்டி வெல்லமும், அல்லது 6 பைசாவுக்குப் பழங்களும் கொடுப்பார்கள். நீலு எப்பொழுதும் வெல்லம் எடுத்துக் கொள்வான்.

ஞாயிற்றுக்கிழமை எனக்குக் கிடைக்கும் சாதத்தை அவனுடன் பகிர்ந்து கொள்வேன். இந்தச் சிறிய அசௌகரியத்தைப் பொருட்படுத்தாமல் இருப்பதன்மூலம் வாரம் முழுவதும் கொஞ்சம் கொஞ்சம் வெல்லம் சாப்பிட இயலும். இந்த வெல்லம் இப்பொழுது திருட்டுப் போய்விட்டது. நீலு எரிச்சலடைந்ததில் ஓர் ஆச்சரியமும் இல்லை. ஆனால் நீலு இரைந்து எல்லார் காதுகளிலும் விழும்படியாக அரசியல் கைதிகளைப் பற்றிக் கேவலமாகப் பேசி விமர்சித்தது, அதுவும் சூழ்நிலை குழப்பமாகவும் எங்கள் இருவருக்கும் விரோதமாக இருக்கும் போது, எனக்குப் பிடிக்கவில்லை. உலகம் முழுவதும் அவனுக்கு எதிராக நின்றாலும் நீலு ஒரு நாளும் தான் வகுத்துக் கொண்ட வழியிலிருந்து விலகமாட்டான். எந்த விஷயத்தைப் பற்றியும் மனத்தை உறுதிப்படுத்துக் கொண்டுவிட்டானேயானால், அதை யாராலும் மாற்றமுடியாது. எனக்கு எப்போதுமே பயம், நீலு ஏதாவது அமர்க்களம் பண்ணி விடுவானோ என்று. ஜெயிலில் அடைபட்டுக் கிடக்கும் அரசியல் கைதிகளுக்குப் பொழுதைக் கழிக்க ஏதாவது ஒன்று வேண்டாமா? வெளியில் இருக்கும்போது பல்வேறு காரியங்களில் சலியாது ஈடுபட்டு இருப்பவர்களுக்கு ஜெயிலுக்குள் வந்தவுடன் உழைப்புப் பசிக்கு ஏதாவது தீனி போடவேண்டாமா? அதுதான் காரணம் ஜெயிலிற்குள் இத்தனை விதமான கட்சிகள், எதிர்க்கட்சிகள் அரசியல் போட்டிகள், பூசல்கள் இருப்பதற்கு. ஆனால் ஒரே விஷயத்தை வைத்துக்கொண்டு எத்தனை ஓட்ட முடியும்? தினமும் ஒரு புதுப் பிரச்னை எழுந்தால்தான், சுவாரசியம். இதனால்தான் நீலு ஆரம்பித்த அமர்க்களம் நீடிக்கவில்லை. மறுநாள் காலையிலேயே புதிய விவகாரம் கிடைத்தது.

யாரோ ஒருவர் தினமும் காலை ஆகாரத்துக்கு ஊறவைத்த கொத்துக் கடலை கொடுக்கப்படுவதைப் பற்றி அங்கலாய்த்துக் கொண்டார். 'இதைவிட அவல் கொடுத்தாலும் பரவாயில்லை' என்பது அவர் அபிப்பிராயம். அவ்வளவுதான். உடனே ஒரே குரலில் கோஷம் எழும்பிற்று : ''கடலைக்குப் பதில் அவல் வேணும்.''

ஜெயிலிலுள்ள எல்லாக் கைதிகளும் உடனே இப்புதிய கோஷத்தைச் சேர்ந்தாற்போல இரைந்து கத்த ஆரம்பித்துவிட்டனர். தட்டுகளையும் டம்ளர்களையும் தட்டித் தாளம் போட்டனர். கோஷம் வலுத்தது. எங்கிருந்தோ ஒரு விஸில். சில பேர்கள் கையிலுள்ள தட்டுகளைக் கதவிலிருக்கும் இரும்புக் கம்பிகளில் தடதடவென்று தட்டிக் கொண்டே ஓடினார்கள். ஒரே சத்தம். பல பேர்கள் ஜன்னல்களில் ஏறிக் கொண்டனர். இவர்களில் இருவர் ஜன்னலுக்கு மேலேயுள்ள தகரக் கூரைமேல் ஏறிக் கொண்டனர். திடீரென்று ஏதோ மந்திரக் கோலின் மாயத்தில் கட்டுண்டவர்கள் போல் எல்லாரும் ஒரே சமயத்தில் பைத்தியம் பிடித்தவர்கள் போலானார்கள். சாதாரணமாக மிகவும் அடக்கமாகவும் படபடப்பற்றவர்களாகவும் இருப்பவர்கள் கூட இந்தப் பொங்கியெழுந்த எதிர்ப்பு வெறியினால் தீண்டப்பட்டனர்.

சில பேர் பைத்தியம் பிடித்தவர்கள் போல் ''கம்பளி, கம்பளி'' என்று கத்திக் கொண்டே வார்டுக்கு வார்ட் ஓடிக் கொண்டிருக்கின்றனர். இந்த வார்த்தைகளில் ஒரு புது ப்ரோக்ராம் கிடைத்து விட்டது. மூட்டைகளாகக் கம்பளிகள் வந்து குவிந்தன. இந்தக் கம்பளிகளைப் பிய்த்துப் பிய்த்து எறிந்தனர். யாரோ ஒருவர் ஜெயில் சமையலறையிலிருந்து எரிகிற தணலைக் கொண்டுவந்து கம்பிளிகள் மேல் எறிந்தார். கம்பளிகளில் சில நெருப்புப் பிடித்துப் புகைய ஆரம்பித்தன. ஒரே நாற்றம். இரண்டு பேர், ஒரு பெரிய இரும்புப் பாத்திரம் நிறைய இருந்த ஊறின கொத்துக் கடலையைக் கவிழ்த்துக் கொட்டி விட்டனர்.

பக்கத்தில் இருந்த வார்டர் 'அலாரம்' மணியை விடாது அடிக்கத் தொடங்கினான். கூடவே விஸிலையும் ஊதிக் கொண்டிருந்தான். இதைக் கேட்ட ஜெயிலில் உள்ள எல்லா வார்டர்களும் விஸில் ஊத ஆரம்பித்து விட்டனர். ஃபுட்பால் ரெஃபரிகளுக்கும் இன்ஜின் டிரைவர்களுக்குமிடையே விஸிலடிக்கும் ஏதோ போட்டி நடப்பது போல் இருந்தது. எண்ணற்ற விஸில்களின் ஒருமித்த ஓலம் ஜெயிலின் சூழ்நிலைக்கு ஒரு புதிய உருவமே கொடுத்தது. ஸென்ட்ரல் டவரில் உள்ள கண்டாமணி அடிக்கத் தொடங்கியது.

'டங் — டங்...' ஜெயில் கேட்டருகில் இருக்கும் மணியும் கூடவே ஒலிக்கத் தொடங்கியது. புத்தகத்தில் படித்திருந்த கப்பல் மூழ்கும்

காட்சி நினைவுக்கு வருகிறது. இங்கே, பக்கத்தில் ஒரே கோலாகல ஆரவாரம். ''கம்பளிகள் எரிந்து கொண்டே இருக்கட்டும்'', ''தட்டுகள் முழங்கட்டும்'', ''அடிமைக் கூலிகளின் அட்டகாசம் ஒழியட்டும்.'' இப்படி இன்னும் எத்தனையோ கோஷங்கள்! சரியாகக் காதில் விழவில்லை. ஜெயில் சிப்பந்திகள் ஆங்காங்கே செய்து கொண்டிருந்த வேலைகளை அப்படியே விட்டுவிட்டு வந்து கொண்டிருக்கின்றனர். டவரில் போர்டு மாட்டியாகி விட்டது.

''வார்ட் நம்பர் 17-18-19''. தடியும் கையுமாகக் கேட்டிலிருந்து டவருக்கு வந்து கொண்டிருக்கிறார்கள். இவர்களில் பலர் யூனிபார்மில் இல்லை. திறந்த மேனி கால்களில் பூட்ஸ் கூட இல்லை. ஜெயில் டாக்டர், ஹரேன் பாபு ஒரு பனியனுடன் வருகிறார். டவரிலிருந்து ஒரு வார்டர், ''பதினேழு, பதினெட்டு, பத்தொன்பது'' என்று உரக்கக் கத்திக்கொண்டே இருக்கிறான். எல்லோரும் இந்த வார்ட்கள் பக்கமாக ஓடி வருகிறார்கள். திடீரென்று கூட்டத்தில் ஒரு கிசுகிசுப்பு: ''மிலிட்டரி வருகிறது.'' கையில் துப்பாக்கிகளுடன் ஒரு ராணுவ அணி ஜெயில் கேட்டிற்குள் நுழைகிறது. அவர்கள் நடையில் பரபரப்பு இல்லை. 'க்விக் மார்ச்' செய்து கொண்டு, டவருக்குப் பக்கத்தில் வந்து நின்றார்கள். பிறகு இந்த மூன்று வார்டுகளுக்கும் பொதுவான கேட்டை வந்தடைந்தார்கள். வார்டின் ஒரு மூலையில் வில்வ மரக் கட்டைகள் குவியலாகக் கிடந்தன. முந்தின தினந்தான் வார்டிலிருந்த வில்வமரம் வெட்டிச் சாய்க்கப்பட்டிருந்தது.

கைதிகள் இந்த மரத்தில் ஏறி, ''காந்திஜிக்கு ஜே'' என்று கத்திக் கொண்டு காங்கிரஸ் கொடியை மரத்தில் கட்டி விடுவதுண்டு. ஜெயிலுக்கு வெளியில் வெகு தூரத்திலிருந்தே இந்தக் கொடி கண்ணில் படும். இதன் காரணமாகவே மரத்தை வெட்டித் தள்ளுமாறு உத்தர விடப்பட்டது. முதலில் நான்கு வார்டர்கள் வந்து இந்த மரக் கட்டைகளைச் சூழ்ந்து கொண்டனர், தடியடிப் பிரயோகத்தின்போது கைதிகள் இந்தக் கட்டைகளை வார்டர்களுக்கு எதிராக உபயோகப் படுத்தாமல் இருப்பதற்காக. மிலிட்டரி ஆட்கள் வார்ட்களைச் சூழ்ந்து கொண்டனர்.

பிறகு சில வார்டர்கள், சில 'மேட்'கள் மற்றும் சில ஜெயில் சிப்பந்திகளுடன் வார்டிற்குள் நுழைந்தனர். பிறகு, ஆரம்பித்தது தடியடிப் பிரயோகம். சர்க்கார் பாஷையில், "mild lathi charge". இதில் அபராதி, நிரபராதி என்று ஒருவிதமான வித்தியாசமும் இல்லை. பார்க்கப் போனால் ஒன்றிலும் பட்டுக் கொள்ளாதவர்களுக்கும், சாந்தியை விரும்புவர்களுக்குந்தான் அதிக அடிகள் கிடைக்கும். அடிக்கும்போது வாயை ஒரு மாதிரியாக வைத்துக்கொண்டு கத்து

வார்டர்கள். ''அங்கே போ'', ''ஓடறுன் பார் அங்கே ஒரு பயல்''; ''இந்த பத்மாஷ் மேலே இரண்டு போடு.''-வார்டர்கள் ஒரேயடியாகக் கூச்சல் போடுகிருர்கள். 'மேட்'களின் உற்சாகத்துக்கு எல்லேயே இல்லே. ஆபீஸர்கள் நின்று கொண்டிருக்கும் இடத்தில் மாட்டிக்கொண்ட கைதிகள் பாடு அதோகதிதான்.

காரணம் மேலதிகாரிகள் முன்ஞல் தங்கள் திறமையையும் தொழில் ஊக்கத்தையும் காட்டுவதில் வார்டர்கள் புலிகள்! அநேகம் பேர்கள் விழுந்து கிடக்கின்றனர். மற்றும் சிலர் மண்டையில் அடிபட்டவுடன் கீழே உட்கார்ந்து விட்டார்கள். தர்பங்காவைச் சேர்ந்த ஓர் அப்பாவி மூலேயில் ஜெபம் செய்து கொண்டிருக்கிருன். அவனுக்கும் இரண்டு கிடைத்தது. நாங்கள் இருக்கும் பக்கம் வருகிருர்கள். மிகவும் 'நெர்வஸ்'ஸாக இருக்கிறது எனக்கு. அடி 'திங்கப்' போவது நிச்சயம். எதிர்க்க முடியாது. அதுவும் தெரியும்.

எப்படிப்பட்ட அடியாக இருக்கும் என்று கற்பனே செய்ய முயலு கிறேன். மண்டையில் ஒன்று விழுகிறது. என்னேயுமறியாமல் அதை மறிக்க என் கைகள் மேலே எழும்புகின்றன. கையில் அடிபட்ட பிறகு தான் தெரிகிறது, கையைத் தூக்கியிருக்கிறேன் என்பது. தடியின் நுனியில் ஒரு சிறிய இரும்பு வளேயம் இருக்கும். அது கையில் பட்டு வெட்டுக் காயம் ஏற்பட்டிருக்கிறது. மேலும் ஓரிரண்டு தடிகள் என் பக்கம் நெருங்கி வருகின்றன. நான் கீழே விழுகிறேன். நீலு என்னேத் தாங்கிப் பிடித்துக் கொண்டிருக்கிருன். நீலுவின்மேல் பல அடிகள் விழுகின்றன. எனக்கும் மற்றுமோர் அடி. நீலுவின் தலேயிலிருந்து ரத்தம் வருகிறது. வார்டர்கள் வேறெரு திசைக்குச் செல்கின்றனர்.

ஒரே இடத்தில் அதிக நேரத்தை வீணுக்குவதில்லே அவர்கள். வார்ட் பூராவும் ஒருவித இறுக்கமான சூழ்நிலே. சிலர் கீழே விழுந்து கிடக் கின்றனர். அதிகம் அடி வாங்காத பாக்கியசாலிகள் விழுந்து கிடப்பவர்களுக்குத் தண்ணீர் கொண்டுவந்து கொடுக்கிருர்கள். பிரக்ஞை இல்லாத தோழர்கள் முகத்தில் தண்ணீர் தெளிக்கிருர்கள். மற்றும் சிலர் டவல் அல்லது தினசரிப் பத்திரிகைகளிஞல் அசைவற்றுக் கிடக்கும் சகாக்களுக்கு விசிறிக் கொண்டிருக்கின்றனர். அதிகம் அடிபடாதவர்கள் தங்களுக்குத் தாங்களே முதல் சிகிச்சை செய்து கொள்கின்றனர். ஜெயில் ஆஸ்பத்திரியை நம்பிக் கொண்டிருந்தால் இன்று எழுந்திருக்க முடியாது. அடியே படாதவர்கள் மெதுவாக வெளியே வந்து சேதத்தை, 'ஜெனரல் இன்ஸ்பெக்ஷன்' செய் கிருர்கள், பெரிய புயலுக்குப் பிறகு கிராமத்துக்கு நேர்ந்த நஷ்டத்தைக் கணிக்க முற்படும் கிராமவாசிகளேப் போல. கொஞ்ச நேரத்துக்குப் பிறகு ஜெயில் டாக்டரும் கம்பவுண்டரும் ஏதோ

கொஞ்சம் மருந்துகளை எடுத்துக் கொண்டு வந்தனர். கூடவே சில கைதிகள் ஒரிரண்டு ஸ்டெரச்சர்களைக் கொண்டு வந்தார்கள், அதிக அடிபட்டவர்களை ஆஸ்பத்திரிக்கு எடுத்துப் போவதற்காக.

''ஆஸ்பத்திரி, பதில் குரல் கொடு.'' ஆஸ்பத்திரி பாராக்காரனின் பதில் குரல் கேட்கிறது. வார்த்தையில் தெளிவில்லாமல் பதிலுக்குக் கத்தியிருக்கிறுன். ஒருவேளை தூங்கிக் கொண்டிருந்தவன், திடீரென விழித்துக் கொண்டு தன் கடமையை உணர்ந்திருக்கவேண்டும்.

இந்த மாதிரி பாராக்காரன் அடிக்கடி குரல் கொடுத்துக் கொண்டிருப்பதால், ஆஸ்பத்திரியில் உள்ள வியாதியஸ்தர்களுக்குச் சரியான தூக்கம் கிடைப்பதில்லை. சாதாரணமாகவே, சிரத்தையுடன் கவனித்துக் கொள்வதற்கு யாருமில்லை. அதற்குமேல் இது மாதிரி பகல், இரவு என்றில்லாமல் பாராக்காரர்களின் கூச்சலிஞல் தூக்கமில்லாமல் கஷ்டப்பட வேண்டிய தலைவிதி. இதற்கு முன்பிருந்த சூப்பிரண்ட், இரவில் டவரிலிருந்து வரும் கூப்பாட்டிற்குப் பதில் குரல் கொடுக்க வேண்டியதில்லை என்று விதித்திருந்தார். 'மெடிகல் க்ரவுண்ட்ஸில்' ஒரு சூப்பிரண்ட் கைதிகளுக்கு அநேக விதமான சௌகரியங்களைச் செய்து கொடுக்க முடியும். ஒரு பெரிய கொடுமை நிறைந்த சக்கரவ்யூகத்திற்குள் இந்த 'மெடிகல் க்ரவுண்ட்ஸ்' தான் ஏதோ சிறிது காற்று வெளிச்சத்தை உள்ளே விடும் துவாரம். கருணையுள்ளம் படைத்த சிப்பந்திகள் இதன் மூலந்தான் கைதிகளுக்கு ஏதோ சில சௌகரியங்களைச் செய்து கொடுக்கிறுர்கள்.

புதிய சூப்பிரண்ட், பாராக்காரர்கள் குரல் கொடுக்க வேண்டும் என்ற விதியை மறுபடியும் அமலாக்கி விட்டார். பரிவுக்காகவும் பணிவிடைக்காவும் ஏங்கும் இந்த வியாதிக்காரக் கைதிகள் தங்கள் மனைவி, மக்களைப் பற்றி எப்படியெல்லாம் நினைத்து உருகுகிறுர்களோ? வியாதி வந்தால்தான் வீட்டின் நினைவு அதிகமாக வருகிறது. ஜெயிலுக்கு வெளியில் இருக்கும்போது இரண்டு வேளைச் சாப்பாடு கிடைக்காதிருந்திருக்கலாம். ஜெயிலுக்குள் மற்றது எப்படியிருந்தாலும் இரண்டு வேளை இரண்டு பிடிச் சோறு கட்டாயம் கிடைக்கும். அதைப் பற்றிக் கவலையே படத் தேவையில்லை.

ஆனுல் இதனுல் என்ன பிரயோஜனம்? வியாதி வந்துவிட்டால் ஒரேயடியாக ஓய்ந்து போய்விடுகிறுர்கள். இந்த நோய்வாய்ப்பட்ட கைதிகள் தங்கள் ஆயிரம் கவலைகளோடு இன்று என்னைப் பற்றி ஒரு தடவையாவது நினைத்துக் கொண்டிருந்திருப்பார்களா? கருணையுடன் இல்லாவிட்டாலும் கலவரத்துடனுவது என்னுடைய தூக்குத் தண்டனையைப் பற்றிக் கட்டாயம் நினைவு கூர்வார்கள் என்று நினைக்கிறேன். நான் என்று இல்லாவிட்டாலும் பரிசயமில்லாத ஒரு

மனிதன், இந்த ஒன்றும் நம்பர் ஸெல்லில் இருப்பவன், தூக்கிலிடப்பட இருக்கிறான் என்ற எண்ணம் கட்டாயம் இருக்கும் என்று நினைக்கிறேன்.

ஆஸ்பத்திரி இரண்டாவது மாடியில் திறந்த வராந்தாவில் க்ஷய நோயாளிகள் இருப்பார்கள். அங்கிருந்து தூக்குமேடை நன்றாகத் தெரியும். இன்று தூக்குமேடையைச் சுற்றி நான்கு பக்கமும் நல்ல வெளிச்சம் போட்டிருக்கிறார்கள். சுற்றிலும் காவல்காரர்கள் பாராக் கொடுத்துக் கொண்டிருக்கின்றனர். யாருக்குத் தெரியும்? யாராவது லஞ்சம் கொடுத்து வார்டர்கள் மூலம் தூக்கு யந்திரத்தை நாளைய பணிக்கு உபயோகமற்றதாகச் செய்துவிட்டால்?

க்ஷய நோயாளிகள் தீபாவளித் திருவிழாவைப் பார்த்துக் கொண்டே இருக்கிறார்களோ என்னவோ? அதன் பயனாக அவர்கள் பிராணனும் வற்றிப் போய் விடுகிறதோ என்னவோ? உயிருடன் இருப்பதற்குப் பேராவல் இருப்பினும், அணு அணுவாக மரித்துக் கொண்டிருக் கின்றனர். இருந்தாலும் தூக்கிலிடப்படவிருக்கும் கைதியைவிடத் தங்களை அதிர்ஷ்டசாலிகளாக நினைத்துக் கொண்டிருக்கின்றனர்.

அவர்களின் நீண்ட பெருமூச்சுடனும், யாசிக்காது அளிக்கப்பட்ட பரிவுடனும் நான் என் பயணத்தைத் தொடங்கப் போகிறேன். தூக்கு மேடையில் என் மரணம் ஜெயிலிலாவது தாற்காலிகப் பரபரப்பையும் சோகத்தையும் உண்டாக்கும். ஆனால் இவர்களின் சாவு ஒருவருக்கும் தெரியாது. நெருங்கிய உறவினர்களுக்கு ஒரு 'சர்விஸ்' போஸ்ட் கார்டு போகலாம். ஆஸ்பத்திரிச் சாவு ரிஜிஸ்டரில் ஓர் எண்ணிக்கை அதிகமாகும். இவர்கள் மரிக்கும் இரவில் நைட் ட்யூட்டியிலிருக்கும் ஜெயில் டாக்டர் ஒருவேளை போர்வையின் கீழிருந்து வெளியே வரக்கூட மாட்டார். ஆஸ்பத்திரி வார்டர் டவர் வார்டருக்குப் பதில் குரல் கூவி, கைதிகள் எண்ணிக்கை கொடுக்கும்போது திடீரென்று ஓர் எண்ணிக்கையைக் குறைத்துக் கத்துவான். நடுநிசியின் நிசப்தத்தைத் தனது கரகரத்த குரலால் உடைத்து, 'ஒரு கைதிக்கு ஒரேயடியாக விடுதலை' என்று சொல்லிச் சிரிப்பான்.

ரெயிலின் விஸில் சப்தம் கேட்கிறது. எப்பொழுது பன்னிரண்டு அடித்தது? ரெயில் மறுபடியும் கிளம்புகிறது. ஸ்டேஷன் வெகு தூரம் இருந்தாலும் பிளாட்பாரம் சத்தம் இங்கே கேட்கிறது. பிரயாணிகள், ''ஏய் கூலி! இங்கே, இந்தப் பக்கம்... ஏய் கூலி'' என்று கத்திக் கொண்டிருக்கிறார்கள். இது ரௌதாரா ஸ்டேஷன். அதன் ஸ்டேஷன் மாஸ்டரின், ''மணியடி! மணியடி!'' என்ற சத்தமும் கேட்கிறது. ஸிக்னலர் மணி அடிக்கிறான்.

ரெயில் வண்டியின் இந்த விஸில்தான் வேலி போட்ட ஜெயில் உலகத்தையும் அதற்கப்பாற்பட்ட பரந்த, கிளர்ச்சி நிறைந்த உலகத்தையும்

பிணைக்கும் மணிக்கயிறு. இந்த விஸிலில் எழுப்பும் நிராசை, ஏக்கம், மனக் கொந்தளிப்பு, வைஷ்ணவக் கவிகளின் வேணுகானத்தின் கற்பனைக்கும் அப்பாற்பட்டது. 'செவியுட் புகுந்து என் நெஞ்சைப் பிளந்ததடி' என்ற வரி, நான் சம்பந்தப்பட்டவரை, இன்றைக்குப் பிறகு ஏதோ சந்தம் சேர்ந்த சப்த ஜாலம் அல்ல. என் இதயத் தந்திகளை இவ்விதம் உலுக்கும் பாயத்தாகங்களை அனுப்பும் சக்தி எங்கே மறைந்திருக்கிறது? ஜூட் மில்களின் விடியற்காலை விஸில். அந்த மில் தொழிலாளிகளின் குவார்டர்ஸ்களில் ஒரு வித தாற்காலிகப் பரபரப்பை உண்டாக்குகிறது என்பது உண்மை தான்.

ஆனால் ரெயிலின் வேணுகானம் ஒவ்வொரு தடவையும் கைதியின் நெஞ்சத் துடிப்பின் வேகத்தை அதிகப்படுத்துகிறது. அவனது உள்ளத்தின் ஆழத்தில் புதைந்து கிடந்த எத்தனை இனிய நினைவுகளை எழுப்புகின்றது! எத்தனை உருவமற்ற ஆசைகளுக்கும் கனவுகளுக்கும் உயிர் கொடுக்கின்றது! ஓடும் ரெயிலின் சப்தம் கேட்கிறது. தூரத்தில், வெகு தூரத்தில் போய்விட்டது. இருட்டில் தண்டவாளத்தின் இரு பக்கங்களிலும் ஒன்றும் தெரியவில்லை. ஆனால் அகண்ட எல்லையின்மையை மாத்திரம் உணர முடிகிறது — ஒருவிதமான சுவர்களும் இல்லை.

பி.என்.டபிள்யூ.ஆர் என்ற எழுத்துகளை மாற்றி ஓ.டி.ஆர். என்ற எழுத்துக்கள் ரெயில் வண்டிகளில் எழுதப்பட்டிருக்கவேண்டும். பி.என்.டபிள்யூ. (பெங்கால் அண்ட் நார்த் வெஸ்டேன் ரெயில்வே) என்ற பெயர் ஒரு நாள் மாறக்கூடும் என்று நினைத்தாலே என்னவோ மாதிரி இருக்கிறது. உலகத்தில் எப்பொழுதும் மாறுதல்கள் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன என்றாலும், சில விஷயங்கள் அசையாமல் மாறாமல் இருக்கும் என்று நம்மையுமறியாமல் நினைத்துக் கொண்டிருக்கிறோம். வேறுவிதமாகக் கற்பனை செய்யக்கூட முடிவதில்லை. மீசையும் தாடியுமில்லாமல் அப்பாவின் முகத்தை என்னால் கற்பனை கூடச் செய்ய முடியாது. நினைத்தாலே சிரிப்பு வருகிறது.

ரெயிலின் சப்தம் மட்டும் அல்ல. வெளியுலகின் எந்த ஒலியும், ஜெயில் க்வார்டர்ஸில் இருக்கும் நாயின் குரைப்புகூட ஜெயிலில் உள்ளவர்களுக்கு இனிமையாக இருக்கும். அன்று ஜெயிலுக்கு வெளியேயிருக்கும் சாலையில் ஒரு சிறுவர்கள் கூட்டம், "ஹிப், ஹிப், ஹுர்ரே" என்று கத்திக்கொண்டு போயிற்று ஏதோ மாட்ச் விளையாடிவிட்டுத் திரும்பிக் கொண்டிருக்கவேண்டும். எத்தனை பழைய நினைவுகளுடன் இந்தக் கோஷம் பிணைந்திருக்கிறது! சிறுவர், சிறுமியர்களைப் பார்த்து எத்தனை நாட்களாகிவிட்டன? அரை நிஜார் அணிந்து கொண்டு [illegible] சிறுவர்களின் காட்[illegible]

பீங்கான் கப்—ஸாஸரைக் கையில் வைத்துக் கொண்டு, தொண்டை கிழிய, ''ஹிப் ஹிப், ஹுர்ரே'' என்று கத்திய காட்சி கண்முன் வருகிறது. வெயில், உழைப்பு, கூச்சல் போடும் சிரமம் எல்லாம் சேர்ந்து நீலுவின் முகத்தை ஒரே சிவப்பாக்கிவிட்டிருந்தன.

பகல் மூன்று மணிக்கும் இரவு 11½ மணிக்கும் ரெயில் வண்டியின் விஸில் சத்தம் கேட்கும். காலை ஐந்து மணிக்கும் மாலை ஆறரை மணிக்கும் ஸ்டீமரின் விசில் கேட்கும். இவையே என்னுடைய கடிகாரம். ஸெல்லின் முன்னால் விழும் நிழலைவிட நம்பிக்கையான கடிகாரம். இந்தியிலே, என் கற்பனையின் தோழன். நடுநடுவே ஏரோப்ளேனின் சப்தம். இரவில் இரண்டு மணிக்கு இவை ஒன்றாகப் பறந்து போகும். அஸ்ஸாம் ஃப்ரண்டுக்குத் தபால் எடுத்துச் செல்கின்றன என்று நினைக்கிறேன். ஆனால் இந்தச் சப்தம் மனத்தில் எவ்வித மான நினைவு அலைகளையும் எழுப்புவதில்லை. அதிகமாகப் போனால், ஒரு விநாடி நேரம் குறுகுறுப்பை எழுப்பும். தினமும் எங்கேதான் போகின்றன? இரவில் எப்படி வழியைக் கண்டுபிடிக்கின்றன? காம்பஸ், மாப், ரெயில்வே தண்டவாளம், கங்கா இவ்வளவுதான்.

பகலில் பல ஏரோப்ளேன்கள் சேர்ந்து செல்லும் போதெல்லாம் 9, 10 நம்பர் ஸெல்களில் இருக்கும் வெடிகுண்டு கேஸ் கைதிகள் உரக்க 1, 2, 3, 4 என்று எனக்குக் கேட்கும்படியாக எண்ணுவார்கள். ஆனால் ஏரோப்ளேன்கள் என் மனத்தில் ஒருவித உணர்ச்சியையும் எழுப்புவதில்லை. எனக்குப் பரிசயமான உலகத்தில் இவற்றுக்கு எவ்வித இடமும் இல்லை. ஏனென்றால் மண்ணுடன் இவற்றுக்கு எவ்வித உறவுமில்லை. இதனால் தானோ என்னவோ, சிறையில் நான் பார்க்கும் காகங்கள், குருவிகள், புறாக்கள், மைனாக்கள் போன்ற பட்சிக் கூட்டங்கள் என் கண்களில் படுகின்றனவே தவிர மனத்தை ஈர்ப்பதில்லை. ஒரே மாதிரியான வாழ்க்கையில் ஓரளவு மாறுதலை உண்டாக்கலாம், அவ்வளவுதான். விரகத்தால் வாடும் யக்ஷனின் மேகதூதமும் ராதை விடும் ஹம்ஸ தூதமும் கவியின் வெறும் கற்பனைகள். சாதாரண மக்களின் அன்றாட அநுபவத்தின் சாயை அவற்றில் இல்லை.

வார்டர், உட்கார்ந்தபடியே தூங்கி விழுகிறான். எனக்கு மிகவும் பரிசயமான பூனை மெதுவாக என் பக்கம் வருகிறது. திடீரெனத் திடுக்கிட்டு நிற்கிறது. ஒரு வேளை, நான் கதவுக்கு அருகில் உட்கார்ந்திருப்பதைக் கண்டு உள்ளே வருவதற்குப் பயப்படுகிறது போலும். ஒவ்வோர் இரவும் என் தட்டை நக்குவதற்காக வரும். வாரத்தில் ஒரு நாள் தயிர் கிடைக்கும். மற்றத் தினங்களில் எதை நக்குகிறதோ? ஜெயிலில் வளர்ந்ததால் சைவ உணவு சாப்பிடும் வழக்கமாகிவிட்டது.

ஆசிரமத்தில் சகதேவனின் நாய் ஒன்று உண்டு. அதுகூடச் சைவ உணவையே விரும்பும். இப்பொழுது அந்த நாய்க்குட்டி எங்கிருக்கிறதோ? சகதேவனுடைய அண்ணன் அதை ஒருவேளை தன் வீட்டுக்குத் திருப்பி எடுத்துச் சென்று விட்டானோ என்னவோ?

விளக்கின் ஒளியில் பூனையின் நிறம் நன்றாகத் தெரிகிறது. புலியைப் போல் மஞ்சள், கருப்பு, சாம்பல் கோடுகள். பார்ப்பதற்கு மிகவும் அழகான பூனை. அன்று ஜெயிலர் துரை கேலி செய்தார்: ''என்ன, பூனையுடன் பெரிய சிநேகம் பண்ணிக்கொண்டு விட்டாய் போலிருக்கு. என்ன பெயர் வைத்திருக்கிறாய்?'' நான் பதில் சொன்னேன்: ''சும்மா இப்படி வருகிறது.'' ''அப்படியானால் இதற்கு டோஜோ என்று பெயர் வைக்கலாமே'' என்றார். சொல்லிவிட்டுத் தம் ஹாஸ்யத்தைத் தாமே ரசித்துக்கொண்டு, ''ஹோ, ஹோ'' என்று சிரித்துக் கொண்டார். ஜெயிலரின் பற்கள் முத்துப் போல் வெண்மை; டூத் பேஸ்ட் விளம்பரங்களில் காணும் பற்களைப் போல.

நான் எழுந்து ஒரு பக்கமாக நின்றேன், பூனைக்கு வழி விடுவதற்காக. ஒரு தடவை 'மியாவ்' என்று கத்தியது. இன்னும் என் மேல் நம்பிக்கை வரவில்லை போலும். சாப்பிடும் தட்டிலிருந்து ஒரு துண்டு பரங்கிக்காய் கறி எடுத்து வந்தேன். பூனைகளுக்குப் பரங்கிக்காய் பிடிக்காதா என்ன? ஒரு துண்டைப் பூனையின் பக்கம் விட்டெறிந்தேன். பூனை 'மியாவ்' என்று சத்தமிட்டுக்கொண்டு ஓடிவிட்டது. அந்தத் துண்டு கதவின் கம்பிகளில் பட்டு ஒட்டிக்கொண்டு விட்டது. கதவுக்கு வெளியில் போகவில்லை.

நானும் நீலுவும் ஆசிரமத்தில் அம்மாவின் அறையில் உட்கார்ந்து கொண்டு கமலா ஆரஞ்சு சாப்பிட்டுக் கொண்டிருக்கிறோம். இரண்டு பேருக்குமிடையே போட்டி, யார் ஆரஞ்சுத் தோலியை ஜன்னல் கம்பிகளில் படாமல் வெளியில் எறிகிறார்கள் என்று. இதில் ஆச்சரியம் என்னவென்றால் முக்கால்வாசித் தடவைகளில் கம்பிகளில்தான் பட்டன. இத்தனைக்கும், கம்பிகள் அவ்வளவு நெருக்கமாக இல்லை. இருந்தும், தோலிகள் கம்பிகளில்தான் பட்டன.

திரும்பத் திரும்ப ஏன் நீலுவின் நினைவு வருகிறது? நான் ஏதோ ஒன்றை மறக்கப் பார்க்கிறேனே, அதனாலா? சில நாட்களாக எனக்கு நானே வேண்டுமென்று திரும்பத் திரும்ப எதைச் சொல்லிக் கொண்டிருக்கிறேனோ அதை என் உள்மனம் ஒப்புக்கொள்ள மறுக்கிறது. உண்மையில் எனக்கு எதிராகச் சாட்சி சொன்னதால் நீலு தன் கடமையைத்தான் செய்தான் என்பது எனக்குத் தெரியும். தன்மான முடைய, உண்மை நெறியைக் கடைப்பிடிக்கும் அரசியல் தொண்டனுக்கு வேறு எவ்விதமான வழியும் இல்லை. இது வறட்டு வாதம்.

வற்றி, உலர்ந்துபோன இதயம் இந்த வாதத்தை ஒத்துக்கொள்ளலாம். ஒருவேளை கோர்ட்டில் செல்லுபடியாகலாம். புத்தகத்தில் படித்தால் நியாயமாகக் கூடத் தோன்றலாம். ஆனால், வேறு எந்த இடத்திலும் இதற்கு இடமில்லை. இல்லாவிட்டால் நீலுவின் நினைவு சுற்றிச் சுற்றித் திரும்ப வருவானேன்? தான் சார்ந்த கட்சியிடம் அசையா விசுவாசத்தைக் காட்டுவதற்காக தனது உடன் பிறந்த அண்ணனையே தூக்கிற்கு அனுப்பும் தன்மை அவனது இதயத்தின் ஆரோக்கியத்தைக் காட்டுகிறதா அல்லது பிணியுற்ற மனத்தைக் காட்டுகிறதா? என்னால், என்னுள் இருக்கும் உண்மையான என்னால், நீலுவின் இந்த நடத்தையை ஒப்புக்கொள்ள முடியவில்லை. அதனால்தான் பழைய நினைவுகள் என்ற தேனைத் தடவி, தகிக்கின்ற மன வேதனையைச் சமனப் படுத்திக்கொள்கிறேன் போலும்.

இந்தத் தடவை இடப் பக்கம் சாய்ந்துகொண்டு, இடக் கையால் கம்பியைப் பிடித்துக் கொண்டு மறுபடியும் கதவருகில் வந்து உட்காருகிறேன். வலப் பக்கம் சாய்ந்து, வலக் கையால் கம்பியைப் பிடித்துக் கொண்டு இருப்பது இயற்கையாகவும் சௌகரியமாகவும் மனத்துக்குப் படுகிறது. தரையில் பள்ளமாயிருக்கிற இடத்தில் உட்கார்ந்து கொள்கிறேன். ஒரு யானைப்பாகனுக்குப் பின்னால் உட்காருவது போல் இருக்கிறது. என்ன விநோதமான கற்பனைகள் எழுகின்றன! ஆனால் நினைத்துப் பார்த்தால், இதில் என்ன அதிசயம்?

ஒரு தடவை அந்தப் பணக்காரன் தன்பட் ஜாதவ்வின் சொந்த ஊரான கர்கோல்லா என்னும் கிராமத்திற்குப் போயிருந்தேன். போலீஸ் ஹேஷ்யப்படி, அவன் கீழே ஒரு கொள்ளைக் கூட்டமே வேலை செய்து கொண்டிருந்தது. ஆகவே அவன் மீது (bad livelihood) கேஸ் போடுவதற்காக ஆயத்தம் செய்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது காங்கிரஸ் மந்திரி சபை ஆட்சி புரிந்து கொண்டிருந்தது. எங்கள் எல்லாரையும் தன் கிராமத்திற்கு ஒரு மீட்டிங் போடுவதற்காக அழைத்துப் போயிருந்தான். தனக்குக் காங்கிரஸ்காரர்களிடம் மிகுந்த செல்வாக்கு இருப்பதாகக் காட்டி, போலீஸ்காரர்களைப் பயமுறுத்துவது அவனது உண்மையான உத்தேசம். மிகவும் படாடோபத்துடன் கூட்டம் நடந்தது. பிறகு சாப்பிட்டு முடித்தவுடன், ''வாருங்கள். வேட்டைக்கு ஏற்பாடு செய்திருக்கிறேன்'' என்றான்.

யானை முதுகில் உட்கார்ந்துகொண்டு, முள் மரங்களும், தழைவான கிளைகள் கொண்ட செடிகளும் செறிந்த சிறு காட்டுக்குள் சென்றோம். நான் பாகனுக்குப் பின்னால் உட்கார்ந்து கொண்டேன். கிழட்டு யானை. அதன் கழுத்துக்குப் பின்னிருந்த குழி மிகவும் பெரிது. அந்தக்

குழியில் மிகச் சௌகரியமாகப் பத்மாஸனம் போட்டு உட்கார்ந்தேன். கொஞ்ச நேரத்திற்குப் பிறகு, அடர்த்தியான காட்டுப் பிரதேசம் ஆரம்பமாயிற்று. சற்று நேரங்கழித்து என் முன்னால் பிரம்மாண்டமான ஆலமரம். திடீரென்று யானைக்கு ஒரு கிளையைச் சாப்பிட வேண்டும் என்று தோன்றிற்று. தன் துதிக்கையைச் சுழற்றி ஒரு சிறிய கிளையை உடைக்க முயன்றது. ஒரு நிமிஷம் வரை என்ன நடக்கிறது என்று எனக்குப் பிடிபடவில்லை. ஏதோ ஓர் ஆலையில் என்னைப் போட்டுவிட்டுச் சின்னபின்னமாக்க முயற்சி நடக்கிறாற் போலிருந்தது. யானை தன் தலையை உயர்த்தியபோது, நான் உட்கார்ந்து கொண்டிருந்த குழிவு குறுகி, என் உடம்பை அமுக்கிச் சிறியதாக்குவதுபோல் தோன்றியது. நான் வலி தாங்காமல் இரைந்து சத்தம் போட்டேன். பாகனுக்கு விஷயம் புரிந்து யானையின் தும்பிக்கையைக் கீழே இறக்கிவிட்டான். நானும் கீழே இறங்கிவிட்டேன். என் இரண்டு கால்களும் மரத்துப் போய்விட்டன.

என் ஸெல்லின் வார்டர் சுவரில் சாய்ந்தபடியே தூங்கிக் கொண்டிருக்கிறான். தலைப்பாகையைக் கழற்றிப் பக்கத்தில் வைத்துக் கொண்டிருக்கிறான். மூன்றாம் நம்பர் ஸெல்லின் வார்டரும் தூங்கிக் கொண்டிருக்கிறான் போலும். வெளியில், இந்த முழு வார்டுக்குமான வார்டர் நடக்கும் சப்தம் கேட்கிறது. எல்லா ஸெல்களிலும் அமைதி நிலவுகிறது. எல்லாரும் தூங்கிவிட்டனர் போலும். அந்த இரண்டு பைத்தியங்களும் கூட இன்று தூங்கிப்போய்விட்டனரா என்ன? வெடிகுண்டு கேஸ் கைதிகள் ஒரு வேளை விளக்கு ஏற்றி வைத்துக்கொண்டு படித்துக் கொண்டிருக்கிறார்களோ என்னவோ? சுவர்க்கோழியின் ஒலி கேட்கிறது. ஆனால் ஆசிரமத்துச் சுவர்க்கோழியின் ஒலியின் உற்வேகம் இந்தச் சுவர்க்கோழியின் கூவலில் இல்லை. சிறு வயதில், குளிர் கால இரவில் தூக்கம் கலையும்போது, சுவர்க்கோழியின் ஒலி என் மனத்தைக் கிளர்ந்தெழச் செய்யும். ஜெயில் உலகத்தை இந்தச் சுவர்க் கோழிகளால் எழுப்ப முடிவதில்லை. நீலு சொல்வான், ''இந்தச் சத்தம் ஒரு புது மாதிரி எறும்பின் சத்தம்'' என்று. அவனுடன் யார் சர்ச்சை செய்வது?

சுவர்க்கோழியின் ரீங்காரம் ஏனோ இந்த ஜெயிலின் சூழ்நிலையுடன் ஒத்துப் போகவில்லை. ரொட்டீன் கணக்கெடுப்பு, விலங்குகள், சட்டங்கள்! இவற்றுக்கிடையே இவை மூட்டும் ஒலிகளுக்கு ஏது இடம்? இருந்தாலும், சுவரையும் கம்பிகளையும் எழுப்பி எல்லாவற்றையும் தடுக்க முடியுமா என்ன?

சட் பட் என்று சப்தம் செய்துகொண்டு புது வார்டர்கள் வருகிறார்கள். மணி ஒன்று என்று அர்த்தம். நிச்சயம் மூன்று ஆட்கள் இருப்பார்கள். ஒருவன் என் ஸெல்லுக்கு, மற்றொருவன் மூன்றாம்

நம்பர் ஸெல்லுக்கு, மூன்றுமவன் வார்டுக்குப் பொதுவாக. ஒருவன் என் ஸெல்லுக்கு முன்னுல் இருக்கும் தாழ்வாரத்துக்குள் நுழைகிருன். தூங்கிக் கொண்டிருக்கும் வார்டரின் தலைப்பாகையை மெதுவாக வெளியில் எடுத்து வைத்துவிட்டு, திரும்பி வந்து உரக்க, ''ஏ ஹைதர் என்ன; இன்னிக்குப் பூரா, இங்கேயே தூங்கப் போறயா, என்ன?'' என்று கேட்கிருன். ஹைதர் அடித்துப் புடைத்துக்கொண்டு எழுந்திருக்கிருன், ஒரு வேளை ஜெயிலர் துரையே வந்துவிட்டாரோ என்ற பயத்தில். நல்ல வேளை! துரை இல்லை. யார், கிஷன்சந்தா? புது ட்யூடி ஆரம்பித்து விட்டதா? ''என்ன அண்ணே, கேலி பண்ணரே? தலைப்பாகை எங்கே வெச்சிருக்கே? சொல்லண்ணே.'' புதிய வார்டர் சொல்கிருன் : 'போச்சுடா! எனக்கு என்ன தெரியும்? நான் இப்போது தானே வரேன்.'' முதலில் ஹைதர் நம்பவில்லை. பிறகு பயத்தில் அவன் முகம் வெளிறுகிறது. இந்த வேலைக்கு அவன் புதிது. வேலைக்கு நுழைந்ததுமே கேள்விப்பட்டிருக்கிருன்.

ஜெயிலர் துரை ரவுண்டில் வரும்பொழுது யாராவது வார்டர் தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தால், அப்பொழுது ஒன்றும் சொல்லமாட்டார். அவனது தலைப்பாகையை மட்டும் எடுத்துக் கொண்டு போய்விடுவார்; பிறகு அபராதம் போடுவார் என்று. போன வாரந்தான் ஹர்கிஷனுக்கு இந்த மாதிரி நேர்ந்து போச்சு. பிறகு துணிக் கிடங்கு இன்சார்ஜ் கைதி பிரிஜ் விலாஸுக்கு லஞ்சம் ஒண்ணரை ரூபாய் கொடுத்து ஒரு தலைப்பாகை சம்பாதித்துக் கொள்ள வேண்டியதாயிற்று. பரேடின் போது இவன் தலையில் தலைப்பாகை இருப்பதைப் பார்த்துவிட்டு, ஜெயிலர் துரை, ''இந்தத் தலைப்பாகை எங்கிருந்து கிடைத்தது உனக்கு?'' என்று கேட்டார். முதலில் ஹர்கிஷன் ஒரேயடியாகப் பொய் சொல்லிவிட்டான். பிறகு ஜெயிலர் அவனை மிரட்டவே, உண்மையை ஒப்புக்கொண்டான். கடைசியில் குழியில் தான் விழுந்தது மட்டுமல்லாமல் பிரிஜ் விலாஸையும் கூட இழுத்துக்கொண்டு விழுந்தான். கிஷன் சந்த் இந்தக் கதையைச் சொல்லி முடித்து ஹைதரைப் பார்த்து அர்த்தபுஷ்டியுடன் கண்ணடித்தான்.

ஹைதருக்கு உடனே நன்ருகப் புரிந்துவிட்டது. தலைப்பாகையைத் திரும்பப் பெற அவனை, 'குஷாமத்' செய்யவேண்டும். வீடு திரும்பும் மற்ற இரண்டு வார்டர்களும் என் ஸெல்லின் எதிரே வருகிருர்கள். ஹைதரின் தலைப்பாகை திரும்பி வந்துவிட்டது. நாளை ஹைதருக்கு அப்பர் டிவிஷன் வார்டில் ட்யூட்டி. அங்கிருந்து ஒரு டம்ளர் பால் அவன் கிஷன்சந்துக்குக் கொண்டுவந்து கொடுக்கவேண்டும். சிரித்துக் கொண்டே எல்லாரும் வெளியே போகின்றனர். இந்த வார்டர்

களின் நெட்டி வாங்கும் வேலை நிறைந்த வாழ்க்கையிலும் ஒரு சுகம் இருக்கிறது. தவருமல் கிடைக்கும் சம்பளம், மனைவி, மக்கள், குடும்பம்.

டூர் முடிந்து திரும்பி வருகிறேன். சரஸ்வதி கதவருகில் சிரித்த முகத்துடன் நிற்கிருள். நெற்றிக்கு மேல், வகிட்டின் இடையே குங்குமம். கையில் சங்கு வளையல்கள். வெட்கம் கலந்த குரலில் சொல்கிருள்: ''உட்கார், கொஞ்சம். வேர்வை உலரும் நேரத்துக்குள் டீ தயார் செய்துகொண்டு வருகிறேன்.'' நான் பதில் சொல்லவில்லை. சிரித்துக் கொண்டே அவள் பின்னுல் சென்று சமையலறையில் ஒரு சின்ன ஸ்டூலில் உட்காருகிறேன். ஈர விறகை ஊதிப் பற்ற வைக்கும் முயற்சியில் வியர்த்து மயிர் கலைந்த முகம்.

இருந்திருக்கக் கூடும்; ஆனுல் என்னுடைய வாழ்வோ ஒரு கடூரமான லட்சியத்திஞல் உருவாக்கப்பட்டது. வேறு ஆசைகளுக்கு அதில் இடமில்லை. திரும்பத் திரும்ப எப்போதுமே எல்லாருமே சொல்வது: ''பிலுவைப் போல ஒரு பிள்ளையைப் பார்ப்பது அரிது.'' இந்தப் புகழ்ச்சிக்கான தகுதியைச் சேகரித்துக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வம், தன்னலமின்மை, ஆசைகளின் அடக்கம் என்ற பாதையிலிருந்து வழுவாமல் என்னைத் தடுத்து நிறுத்திவிட்டது. பொங்கி எழும் எத்தனை ஆசைகளைச் சாட்டையடி கொடுத்து அடக்கியிருக்கிறேன்! இதற்குப் பிறகும் மன எழுச்சிகளைப் பதனம் செய்து ஸ்திதப்ரக்ஞ்ஞுகி விட்டேன் என்று சொல்லிக் கொள்ள முடியாது. அப்படி இருந்தால் இந்தச் சந்தேகம் இப்பொழுது வருவானேன்? எத்தனையோ போகங்களை நுகர வேண்டுமென்ற பசி ஏனோ என் மனத்தில் எழுந்தெழுந்து மரித்த வண்ணம் இருக்கிறது. வாழ்க்கையில் ஒன்றையுமே சாதிக்க முடியவில்லை, என்ஞல். நான் வரலாற்றில் பெயரை விட்டுச் செல்லவில்லை. எனக்குக் கிட்டியதெல்லாம் ஃபுட்பால் மாட்ச்சுக்கு டிக்கெட்டுக்காக நிற்கும் 'பாம்பு' க்யூ போலிருக்கும் முடிவற்ற தேச பக்த தியாகிகளின் வரிசையில் ஓர் இடத்தைப் பெறும் சௌபாக்கியம்.

பக்கத்து வீட்டுக்காரர்கள் கூட என் கதையை ஒரு வாரத்தில் மறந்து விடுவார்கள். இப்பொழுது கூட அவர்களுக்கு ஞாபகம் இருப்பது சந்தேகம். அப்படியென்ருல் இத்தனை நாட்கள் என்ன செய்து கொண்டிருந்தேன்? நான் ஒரு மஹா புருஷன் அல்ல. இரத்தம், தசைகளால் ஆன சாதாரண மனிதன். மனிதனிடம் உள்ள எல்லாக் குறைகளும் பலவீனங்களும் நிறைந்தவன். கீட்ஸ் 25 வருஷங்கள் வாழ்ந்தான். ஷெல்லி 30 வருஷம். பிட் 23ஆம் வயதில் இங்கிலாந்தின் பிரதம மந்திரியாஞன். நானே 33ஆம் வயதில், நாய், பூனை மாதிரி மரிக்கப் போகிறேன். யாரும் என்னைப் பற்றிக்

கேள்விப்படப் போவதில்லை. தெரிந்து கொள்ளப் போவதில்லை. யாரும் இரண்டு சொட்டு சூடான கண்ணீர் விடப் போவதில்லை. நான் செய்ய முயன்ற சிறு பிரயத்தனங்கள் எல்லாம் வீணாகவே போய் விட்டன. பயனற்றுப் போன இந்த முயற்சிக்கு யார் என்ன விலை கொடுப்பார்கள்? கவிகள் வேண்டுமானால் பாடலாம்; உலகில் ஒன்றுமே வீண் போவதில்லை, பாலைவனத்தில் பாய்ந்து மாயும் நதி கூட ஏதோ ஒரு முக்கியமான பணியைச் செய்கிறது என்று. இதெல்லாம் அர்த்த மற்ற கூற்றுகள், உலக அநுபவமற்ற ரொமான்டிக்குகளின் உணர்ச்சி விலாஸம்.

இல்லை. ஒரேயடியாக அர்த்தமற்றவை என்று சொல்வதற்கில்லை. என் வாழ்க்கைக்கு ஒரு மதிப்பும் இல்லாதிருக்கலாம். வேறு இரண்டு மூன்று வாழ்க்கைகளுக்கும் மதிப்பில்லாமல் இருக்கலாம். ஆனால் நான் கண்டவை? ஜன சக்தியின் இயற்கை உருவம். அந்தச் சக்தி, பல யுகங்களாகச் சேகரிக்கப்பட்டுப் பாறைபோன்று தரை மட்டத்தின் கீழே தூங்கிக் கொண்டிருந்தது. அது மட்டும் விழித்து உணர்வு பெற்றால் என்ன செய்ய முடியும் என்பதை மக்களுக்குக் காட்டியது ஒரு சாதாரணச் செயல் அல்ல. அரசியல் ஊழியர்களின் வாழ்வு மிகவும் க்ஷீணமானது, மிகவும் அபாயகரமானது. 'சிம்மாசனம் அல்லது தூக்குமேடை'. தூக்குக் கயிற்றின் மேல் நம்பிக்கை வை, ஒரு வேளை மக்களின் மரியாதை என்ற ராஜமகுடம் உனக்குக் கிட்டக்கூடும். முடிவேயில்லாத, கிலேசம் நிறைந்த வாழ்க்கை. தினந்தோறும் அணு அணுவாக வாழ்க்கையின் சக்தி, உற்சாகம் எல்லாம் கரைந்து போவதைப் பார்ப்பாய். உன் மனத்தில் எழும் திருப்தியைத் தவிர வேறு எதையும் எதிர்பார்த்தால் ஏமாந்து போவாய். பணக்காரர் களின் ஏசலும் ஏளனமும் உன் வாழ்க்கையைச் சகிக்க முடியாதவையாக ஆக்கிவிடக்கூடும். ஒரு அடி முன்னே எடுத்து வைத்தால் எத்தனை ஆயிரம் பேர்களின் சுய நலத்துக்கு இடைஞ்சல் ஏற்படுகிறது! இவர்கள் ஒவ்வொருவரும் உன் சத்துருவாகி விடுவார்கள். ஒருவரின் மதிப்பைப் பெற்றால், பத்துப் பேர்களின் பரிகாசத்திற்கும் ஏச்சுக்கும் பாத்திரமாவாய்.

இந்த வாழ்க்கையிலிருந்து ஜெயிலுக்கு வருவதே ஒரு பெரிய நிம்மதி. மரண தண்டனை கூட ஒரு பெரிய வரப்பிரஸாதம். எத்தனை பேர் மடிகிறார்கள்—சண்டையில், ஒரு அபராதமும் செய்யாமல். ஏன் என்று கேட்டால் அவர்களுக்கே தெரியாது. எத்தனை பேர் பசியால், பிணியால், வைத்திய வசதியில்லாமல் மரிக்கிறார்கள்! அவர்களுடைய குற்றம்? மனிதனாகப் பிறந்ததுதான். எந்தப் பிறப்பின்பால் அவர் களுக்கு எந்த விதமான பொறுப்பும் இல்லையோ, அப் பிறப்புக்காகச்

செலுத்தும் அபராதம். சாலையில் வண்டி ஏறிச் சாவது போல், வயலில் பாம்பு கடித்துச் சாவது போல், அரசியல் களத்தில் தூக்குத் தண்டனை ஓர் எதிர்பாராத விபத்து. இதற்கும் மேலாக ஒன்றுமில்லை. தன் கட்சிக்கு வெளியில் உள்ளவர்களோடு எல்லாம் போராட வேண்டும். எத்தனை பிற்போக்குச் சக்திகளுடன் போராட்டம்! இதற்காகவாவது எல்லா அரசியல் ஊழியர்களும் தயாராக இருக்கிறார்கள் என்று சொல்லலாம். ஆனால் தன்னுள்ளேயே நடக்கும் போராட்டம்? வெளிப் போராட்டங்களைவிட இது பயங்கரமானது. கட்சிக்கும் கட்சிக்கும் போராட்டம். ஜாதிக்கும் ஜாதிக்கும் போராட்டம். பிரதேசத்துக்கும் பிரதேசத்துக்கும் போராட்டம்—வாழ்க்கை சகிக்க முடியாததாகி விடுகிறது. ஆனால் இவையெல்லாம் அரசியல் விளையாட்டின் நியமங்கள். கொடூரமான இரக்கமற்ற விதிகள். பலவீனத்திற்கு இங்கு இடமேயில்லை. எல்லோரும் முன்னால் போய்க் கொண்டிருக்கிறார்கள். பின் தங்கியவர்கள் மரிப்பார்கள். அவர்களைத் திரும்பிப் பார்ப்பதற்கு அவசியமில்லை.

''பாபு, கொசு ரொம்பக் கடிக்கிறதா?'' வார்டர் விசாரிக்கிறான்.

''ஆம். ஏன் கேட்கிறாய்?''

''உடம்பில் கொஞ்சம் மண்ணெண்ணெய் பூசிப் பார்த்தால் என்ன? கடுகெண்ணெய் இப்பொழுது கிடைக்காது. இல்லேன்னா, கொஞ்சம் முயற்சி பண்ணிப் பார்த்திருப்பேன்.''

''சரி, கொஞ்சம் கொடு.''

மனத்துக்குள் நினைத்துக் கொள்கிறேன் — கடுகெண்ணெய் கிடைக்காததே நல்லதென்று. முன்பு ஒரு தரம் கடுகெண்ணெயைத் தடவிக் கொண்டு தூங்கினேன். கண் விழித்துப் பார்த்தபோது உடம்பெல்லாம் ஒரே எறும்பு! சிறிய சிவப்பெறும்புகளுக்குக் கடுகெண்ணெய் என்றால் மிகவும் விருப்பம் போலும்! வார்டர் விளக்கின் எண்ணெயில் ஒரு காகிதத் துண்டை நனைத்து என் கையில் கொஞ்சம் தெளிக்கிறான். நான் அதை உடம்பில் தடவிக் கொள்கிறேன். எவ்வளவு குளிர்ச்சியாயிருக்கிறது, 'ஓடிகோலோன்' போல்! டிக்பாயில் கொசுவே இருக்காதோ?

பாட்னா காம்ப் ஜெயிலில் மேஜர் கோமேஸ் மண்ணெண்ணெயில் ஒரு எமல்ஷன் தயார் பண்ணியிருந்தார். அந்தப் பெரிய ஜெயிலில் ஒரு கொசு கூடக் கிடையாது. கோமேஸ் ஒரு மாதிரி மனிதர். கொஞ்சம் பைத்தியம். ஆனால் காரியத்தில் கெட்டிக்காரர். கறுப்பான உயரமான ஆகிருதி. ''நான் ஓர் இந்தியன்' என்று சொல்லிக் கொள்ளுவார். ஒரு நாள் கயாவிலிருந்து வந்த அரசியல் கைதியிடம்

சொல்கிறார் : 'யே ஜவான், நீ ஒரு ஸாலா.* நான் ஒரு ஸாலா. நான் எல்லா ஸாலாக்களிடமும் மன்னிப்புக் கேட்கிறேன்.'' கோமேஸ் எல்லாரையும் ''யே ஜவான்'' என்று கூப்பிடுவார்.

''ஹேறங்கியோ, ஜவானே? ஹேறங்கியோ'' -- கவையா கிராமத்து நூற்றுக்கும் மேற்பட்ட மக்கள் பெரிய பெரிய மரங்களை உருட்டிக் கொண்டு வந்து ஒரு மலையாகக் குவித்து வைத்திருந்தனர். சிரிப்பும் கொம்பாளமுமாக 'தாம்தாஹா பூர்ணியா' ரோடில் ஒரு 'பாரிக்கேட்' தயார் செய்தார்கள். அடக்கமுடியாத உற்சாகம் அசாத்தியமான காரியத்தைச் சாத்தியமாக்கியது. ஆயுளில் வாய்விட்டு ஆசை தீரச் சிரிப்பதற்கு அவகாசமில்லாத இந்த ஏழைக் குடியான மக்களுக்குத் திடீரென்று என்ன நேர்ந்துவிட்டது? ஒவ்வொருவருக்கும் சொல்லு வதற்கென்று ஏதோ ஒன்று இருந்தது. சென்ற தினங்களில் அவர்கள் எல்லோரும் பல கதைகளைச் சேகரித்துக் கொண்டிருந்தனர். கேட்பவர்கள் தாம் இல்லை. பீர்காவில் துப்பாக்கிப் பிரயோகம் நடந்தது. 47 பேர் இறந்து போயினர். காயம் பட்டவர்களுக்குக் கணக்கே இல்லை.

போலீஸ் இன்ஸ்பெக்டருக்கு அவன் மனைவி சொல்லிவிட்டாள், ''வேலையை ராஜீநாமாச் செய்யாவிட்டால் சமைத்துப்போடப் போவ தில்லை'' என்று. கிராமத்துப் பஞ்சாயத்து நாவிதன் ஹரகுவிற்கு அபராதம் போட்டுவிட்டார்கள், நாயிப்† பாபுவுக்கு க்ஷவரம் செய்த தற்காக. எல்லார் முன்னிலையிலும் ஹரகு தன் தவற்றை ஒப்புக் கொண்டான். ''நாயிப் காந்திக்குல்லா போட்டிருப்பதைப் பார்த்து விட்டுக் காந்தி கட்சி என்று நினைத்துக் கொண்டுவிட்டேன். இந்தத் தப்பிற்காக என்ன தண்டனை வேண்டுமானாலும் கொடுங்கள். ஆனால் கைவிரலை மாத்திரம் வெட்டி விடாதீர்கள்'' என்று கெஞ்சினான். ஒரு ப்ளாட்டூன் இரவு பூராவும் கோஸி நதியின் நடுவில் ஒரு ஸ்டீமரில் கழித்தார்கள், ராத்திரி வேளையில் கரையில் தங்குவதற்குப் பயந்து கொண்டு. இன்னும் எத்தனையோ கதைகள்!

பாதையில் ஒன்றின்மேல் ஒன்றாய் அடுக்கிய கட்டைகள் உயர்ந்து கொண்டே போகின்றன. அதைத் தாண்டி மிலிட்டரி லாரி போக முடியாது. திடீரென்று இவர்களுக்கு ஞாபகம் வருகிறது. ரஹுவா கிராமத்தில் நெடுஞ்சாலையை அடுத்துப் பெரிய பெரிய ஆலமரங்கள் உண்டு. ''சலோ சலோ, (புறப்படு, புறப்படு'') என்ற கோஷம். கோடாலி, மண்வெட்டி, அரிவாள், எது கையில் அகப்பட்டதோ

*ஸாலா — இந்தியில் சலுகையுடன் உபயோகிக்கப்படும் வசைச் சொல். மச்சான் என்பது அதன் அசல் பொருள்.

†நாயிப் — ஜமீன்தாரின் காரியஸ்தன்.

அதை எடுத்துக் கொண்டு எல்லாரும் புறப்பட்டார்கள். 'க்விக் மார்ச்' இல்லை—நல்ல ஓட்டம்! மிகவும் களைத்திருந்தாலும் வேலையை நிறுத்துவது என்ற பேச்சே இல்லை.

ஹரேச்வர் கையில் ஒரு சிறிய காங்கிரஸ் கொடி. அவன் சில மாதங்களுக்கு முன்புதான் காங்கிரஸ் ஸேவா தளப் பயிற்சி முடித்துக்கொண்டு வந்திருக்கிறான். ஜில்லா காங்கிரஸ் கமிட்டி கிராமப் பாதுகாப்புக்காக ஒரு பயிற்சி முகாம் ஏற்பாடு செய்திருந்தது. அதிலிருந்துதான் இவன் பயிற்சி பெற்றிருந்தான். இப்பொழுதெல்லாம் இவனுக்குத் தான் கிராமத்தில் எத்தனை மரியாதை! தன் புதிய ஜூஜுட்ஸூ பிடிப்புகள். சிலம்பம் சுற்றுவதில் அவனது லாகவம், சைக்கிள் விடுவதில் அவன் சாமர்த்தியம் இவற்றையெல்லாம் கிராம மக்களுக்குப் பெருமையுடன் காட்டிக் கொண்டிருந்தான். அவன் தான் பாட்டை ஆரம்பிப்பான், ''இளைஞர்களே, பீடு நடை போடுங்கள்'' என்று. கீழ் மூச்சு மேல் மூச்சு வாங்க, சிறுவர், கிழவர் எல்லாரும் இதைப் பாட முயற்சி செய்வார்கள்.

ராஹூயாவை அடைந்தபோது அந்தக் கிராமத்து மக்களும் சேர்ந்து கொண்டார்கள். 'ராஹூயாப் படலம்' முடிந்தது. மறுபடியும் ''சலோ, சலோ'' என்ற கோஷம், க்ருத்யனந்த நகர் ரெயில்வே ஸ்டேஷனை நோக்கி.

நெடுஞ்சாலைகளை மறித்துப் போடுவது இப்பொழுதெல்லாம் முன்பு போல் வெறியூட்டுவதில்லை. போலீஸ் ஸ்டேஷன்களை எரித்தவர்களுக்கு இதெல்லாம் சப்பென்றிருந்தது. கபேயா கிராமத்து மக்களும் ரஹூயா கிராமத்து மக்களும் ஒன்று கூடிப் பேய் பிடித்தவர்கள் போலவும் குடிபோதை மிகுந்தவர் போலவும் ஆகிவிட்டனர். என்னைச் சைக்கிளிலிருந்து இறங்கவிடவில்லை. எல்லாரும் கூடி என்னை அதன் மேலே உட்கார வைத்து இழுத்துச் சென்றனர். இவ்வளவு மக்கள் மத்தியில் சைக்கிளில் உட்கார்ந்து கொண்டு போகமுடியுமா, என்ன? ஆனால் யார், எவர் பேச்சைக் கேட்கிறார்கள்? ''காந்திக்கு ஜே'', ''முன்னால் ஒரே சேறு'', ''பரவாயில்லையடா''. ''பாரத மாதாவுக்கு ஜே''. ''சேற்றிலேயே சைக்கிளைத் தள்ளிக்கொண்டு போயிடுவோம்''. ''பம்பாயிலிருந்து வந்த சூடான சமாசாரம்'' ராஹூயாவைச் சேர்ந்த ஒரு மாணவன் தன் பையிலிருந்து ஒரு லிதோகிராப் செய்த காகிதத்தை எடுத்து, அதிலிருந்து எதையோ ஒப்பிப்பது போல் படிக்கிறான். அந்தக் காகிதத்தின் தலைப்பில் பெரிய பெரிய எழுத்துக்களில் ''தேசத்தின் அறை கூவல்'' என்று எழுதியிருக்கிறது. ''ஜின்னா ஸாஹேப் கைது செய்யப்பட்டார்'', ''விஜயலக்ஷ்மி பண்டிட் மேல் குண்டு'', ''மாங்கீர் ஜில்லா சுதந்தர நாடாகிவிட்டது.'' இன்னும்

எத்தனையோ மெய் சிலிர்க்க வைக்கும் சம்பவங்கள்! எது நடக்கக் கூடியது, எது நடக்க முடியாதது என்று பாகுபாடு செய்யும் திறமை அவர்களுக்கு இல்லை. எப்படியிருக்க முடியும்?

சென்ற சில தினங்களில் எத்தனை அசாத்தியமான விஷயங்கள் சாத்தியமாகிவிட்டதை அவர்கள் பார்த்திருக்கிறார்கள். எதையும் பொய் என்று நினைப்பதற்கு அவர்களால் முடியவில்லை. கலெக்டர் ஆபீஸைக் கைப்பற்றிய பிறகு யார் தலைவராக இருக்கவேண்டும் என்பதைப் பற்றி இவர்களிடம் இப்போதே காரசாரமான விவாதம்.

கபேயாவைச் சேர்ந்த ஹரேச்வரா? அல்லது ராஹுயாவைச் சேர்ந்த திலக்தாரி ஸிங்கா? ஹரேச்வர் ஸேவா தளப் பயிற்சி பெற்றிருந்தால் என்ன? இன்னும் மீசை கூட முளைக்கவில்லை. கபேயா கிராமத்து மக்கள் அவனை இன்னும் 'பொடிப்பயல்' என்று கூப்பிடுகிறார்கள். திலக்தாரியோவெனில் 32-லிருந்து எங்கள் கூட இருந்திருக்கிறான். அதாவது '1932'இல் ஜெயிலுக்குப் போய்விட்டு வந்திருக்கிறான். நான்தான் இந்தத் தகராறைத் தீர்த்து வைக்க வேண்டும்.

ராஹுயா கிராமத்துக்குப் பக்கத்து ரஸ்தாவில் ஒரு கிழவி நின்று கொண்டிருக்கிறாள். அவளைச் சுற்றி அரைநிர்வாணமான சிறுவர், சிறுமியர். இவள் தான் பாதர் பாஹர் கமியாவின் தாயார் என்று சொன்னார்கள். சக்கிலிய ஜாதியைச் சேர்ந்தவள். கிராமத்துக்குள் இவர்கள் வசிப்பதைக் கிராமக் கட்டுப்பாடு அனுமதிப்பதில்லை. அதனால் தான் அவர்களுக்குப் பாஹர்கமியா, அதாவது வெளியில் வசிப்பவர்கள் என்ற பெயர். ஒரு சிறுவன் கையில் சாமந்திப் பூ மாலை. பாதரின் தாயார் மற்றும் சிறுவர், சிறுமிகள் எல்லாரும் சேர்ந்தாற்போல 'ப்ரணம்' (வணக்கம்) என்கின்றனர். இது யாரோ சொல்லிக் கொடுத்து, ஒப்பிக்கப்படும் பாடம் என்று தெரிகிறது. கிழவி கொஞ்சம் கூச்சத்துடன் சொல்லுகிறாள்; ''உங்களுக்காக ஒன்றும் செய்ய முடியவில்லை. எப்படி முடியும்? உங்கள் தயவில் தோண்டப்பட்ட கிணறு இருப்பதனால் ஏதோ கொஞ்சம் கஷ்டமில்லாமல் காலம் தள்ளுகிறோம். இரண்டு வருஷமா அதில் மணல் சேர்ந்து தூர்த்துப் போய்க்கொண்டு இருக்கிறது.''

கிழவிக்குப் பேசிக்கொண்டே இருப்பதில் ஆசை அதிகம் என்று படுகிறது. திடீரென்று ஞாபகம் வருகிறது. பூகம்ப நிவாரணத்தின் போது தோண்டப்பட்ட கிணறு. காங்கிரஸ் தொண்டன் விரிஞ்சி, மக்சூதன் சிங்கிடமிருந்து ஐந்து ரூபாய் லஞ்சம் வாங்கி, அவனுடைய நிலத்தில் இந்தக் கிணற்றை வெட்டுவதற்கு ஏற்பாடு செய்துவிட்டான். இன்ஸ்பெக்ஷனுக்காக நான் வந்தபோது இதை நிறுத்தி, பாதர்

பாஹர்கமியா வீட்டுக்குப் பக்கத்தில்—தாம்தா—பூர்ணியா சாலைக்குப் பக்கத்தில் கிணற்றைத் தோண்டும்படி ஏற்பாடு செய்துவிட்டுப் போனேன்.

''ஒரு டம்ளர் ஜலம் கொடு, கிழவி. ஜில்லுனு இருக்கவேண்டும்'' என்றேன். கிணற்று ஜலம் எப்படி இருக்கிறது, பார்க்கலாம் என்ற எண்ணத்துடன்.

எதிர்பாராத இந்த வேண்டுகோள் அந்தக் கிழவியைக் கலவரப் படுத்தி விட்டது. அவளால் இருந்த இடத்தை விட்டு நகரக் கூட முடியவில்லை. அவள் முகத்தில் மரியாதையைவிடப் பயந்தான் அதிக மாகத் தெரிந்தது. கூட்டத்திலிருந்த தன் கிராமத்து மக்கள் பக்கம் திரும்பிக் கேள்வி கேட்கும் பாவனையுடன் அவர்கள் முகங்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள். 'வாத்தியார் ஐயாவின் பிள்ளை எங்கள் கிணற்றுத் தண்ணீரைக் குடிப்பாரா?' என்ற பாவனை அவள் முகத்தில் படிந்திருந்தது. கிராமத்தில் இருக்கும் ஒருவரும் குடிப்பதில்லையே! நிஜமாகவா? இந்தத் தண்ணீரை அவர் குடிப்பாரா? ஆகாசமே வெடித்து அவளைச் சுற்றி விழுவது போல் இருந்தது. திலக்தாரி ஸிங் அவளை ஆசுவாசப்படுத்தி, ''நன்றாகத் தேய்த்து அலம்பி ஒரு டம்ளர் ஜலம் கொண்டு வா. பீலு பாபுதான் சொல்லிவிட்டாரே'' என்று சொல்கிறான். டம்ளரில் ஜலம் வந்தது. புடைவைத் தலைப்பினால் தன் முகத்தை முக்கால்வாசி மூடிக்கொண்டு வந்த பாதரின் மனைவி கூடவே சாப்பிட ஒரு துண்டு வெல்லமும் கொடுத்தாள். வெகு காலம் பானை யிலேயே வைக்கப்பட்டிருந்த நாட்பட்ட வெல்லம்.

அங்கே கூடியிருந்த சிறுவர் சிறுமியருக்கு அதைப் பல சிறு துண்டு களாக்கிக் கொடுத்தேன். அச்சத்தாலும் வெட்கத்தாலும் முதலில் வேண்டாம் என்று குழந்தைகள் மறுத்தன. கட்டாயப்படுத்திச் சாப்பிட வைத்தேன். நானும் கொஞ்சம் சாப்பிட்டு ஜலத்தையும் குடித்தேன். பாதரின் தாயார் என்னைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள், நான் சாப்பிடும்போது. கையில் ஒரு விசிறியுடன் அம்மா உட்கார்ந்து கொண்டு என்னைப் பார்த்துக்கொண்டிருப்பாளே, அதே மாதிரி. எனக்கு உணவளிக்கும்போது எல்லாருடைய கண் களிலும் இதே பாவம் ஏற்படுகிறது. அம்மா, பெரியம்மா, நாதீ சரஸ்வதி, சகதேவனின் அம்மா, தூபேஜியின் மனைவி இவர்கள் யாரா யிருந்தாலும் சரி, இதே மாதிரிதான் தோற்றமளிக்கிறார்கள்.

திடீரென்று கிளம்பியது ஒரு குரல்: ''மகாத்மா காந்திக்கு ஜே''. ஹரேச்வர் சொல்கிறான், ''கிழவி, எனக்கும் குடிக்கக் கொஞ்சம் தண்ணீர் கொடு'' என்று. ஒரு வாளி நிறைய ஜலம் வருகிறது. எல்லோரும் போட்டி போட்டுக்கொண்டு இந்த ஹரிஜனக் கிணற்றுத் தண்ணீரைக் குடிக்கிறார்கள். இந்த அநாசாரமான காரியத்தைத்

தங்கள் கிராமத்தின் கண் முன்னுலேயே தங்கள் சமூகத்தின் கண் முன்னுலேயே செய்யும் சாகசம் இன்று இவர்களுக்கு எங்கிருந்து வந்தது?

எல்லோர் முகங்களிலும் தாங்கள் ஏதோ பெரிய வீரச்செயல் புரிந்து விட்டதுபோன்ற மிதப்பு தென்பட்டது. ''மகாத்மா காந்திக்கு ஜே'', ''மகாத்மா காந்திக்கு ஜே'' என்ற கோஷம். தான் எவ்வளவு உன்னதமான கொள்கைகள் உடையவன் என்று எனக்குக் காண்பிக்க வேண்டும் என்ற ஆர்வம் ஒவ்வொருவர் முகத்திலும் தெளிவாகத் தெரிந்தது. எவ்வளவு நேரந்தான் இங்கேயே நின்றுகொண் டிருக்க முடியும்? ''வீர இளைஞர்களே. கிளம்புங்கள்''. அந்தக் கிழவியின் கண் ஓரங்களில் பொங்கி வழியும் நன்றியுணர்வு பனித்து நின்றது. கிராமவாசிகளின் பெருந்தகைக்கு அவன் அளித்த பரிசு இது தான். அவள் வணங்கும் தேவதையை விட மஹாத்மாஜி தான் விழிப்புற்ற தெய்வம். அப்படித்தான் அவள் நினைத்திருக்க வேண்டும். பூகம்பத்துக்குப் பிறகு ஒரு நாள் இந்த ரஸ்தாவின் வழியாகத்தான் காந்திஜி ஒரு காரில் தாம்தஹாவுக்குப் போனுர். இந்தக் காரில் பல பேர் களிடையே இருந்த காந்திஜியை அவள் அடையாளங் கூடக் கண்டு கொண்டிருக்க முடியாது. மாஸ்டர் ஸாஹேப் (வாத்தியார் ஐயா) மட்டுந்தான் அவளுக்கு அடையாளம் தெரிந்திருக்கும். ''மஹாத்மாஜியின் உடலிலிருந்து ஜோதி கிளம்புகிறது பார்'' என்று அவள் பிள்ளை பாதர் சொன்னுன். அவன் காட்டிய பக்கத்தைப் பார்த்துக் கைதூக்கிக் கும்பிட்டாள்.

மறுபடியும் கூட்டம் நகர்கிறது. 'முன்னேறுவோம், திரும்பிப் பார்த்துக்கொண் டிருப்பானேன்?' என்ற எண்ணம். எத்தனை பாதரின் தாயார்கள், எத்தனை இடங்களில் இவ்விதமாகக் கும்பிடுகிருர்கள்! எவ்வளவு வேலைகள், எவ்வளவு பொறுப்புகள் காத்திருக்கின்றன! இங்கேயே நின்றுகொண்டு, இவர்களையெல்லாம் எவ்வளவு நேரம் பார்த்துக் கொண்டிருக்க முடியும்?

''பீலு பாபுவுக்கு ஜே!'' என்ற கோஷம். யாரோ ஒருவன் சொல்கிருன்; ''பம்பாயிலிருந்து ஒரு சந்தேசம் வந்திருக்கிறது'' என்று. என்ன சந்தேசம் என்று மற்றவர்கள் கேட்கிருர்கள். ''இங்குலாப் ஜிந்தா பாத்'' (புரட்சி ஓங்குக) என்று எல்லாரும் சேர்ந்து ஒரே குரலில் சொல்கிருர்கள். கபையா கிராமத்துப் ப்ரைமரி பள்ளிக்கூடத்து வாத்தியார் ஜயகோஷம் செய்துகொண்டே நாட்டியமாடுகிருர், பஜனைக் கோஷ்டிகளில் சில சமயங்களில் நாட்டியமாடுவதுபோல. அவர் குரல் கம்மிப் போயிருந்தது. அதன் காரணமாக, ஆஸ்துமா வியாதிக்காரன் குரல் மாதிரி இருந்தது அவரது ஜயகோஷம். ஆனுல்

அவருடைய உற்சாகத்துக்கு எல்லையே இல்லை. தன் மாணவர்கள் முன் தனது 'ஸ்தானத்தை'க் காப்பாற்றிக்கொள்ள வேண்டும் என்ற கவலையும் இல்லை.

கிருத்யானந்த நகரிலிருந்து குதிரைமேல் வந்த ஒருவன் என்னை அணுகினன். குதிரையின் மேலிருந்து கீழேயிறங்கி எனக்கு வணக்கம் தெரிவிக்கிறன். "உங்கள் தம்பி கிருத்யானந்த நகரத்துக்கு ஹர்சந்த் மார்வாடியின் கிடங்கிற்கு வந்திருக்கிறார், மண்ணெண்ணெய் விலை விசாரிக்க" என்று சொல்கிறன். இதற்கு மேல் என்னிடம் ஒன்றும் சொல்லவில்லையென்றலும் மற்றவர்களிடம் ஏதோ கிசுகிசுக்கிறன். அவன் சொல்வதைக் கூட்டம் உரக்கச் சொல்ல விரும்பவில்லை போலும்.

எனக்கு விஷயம் புரிகிறது. நீலு, பிரின்ஸ் ப்ரைஸ் கண்ட்ரோல் கமிட்டியின் காரியதரிசி என்ற முறையில் கெரோஸின், மற்றும் பல பண்டங்களின் கையிருப்புகளைச் சோதனை செய்வதற்காக வந்திருக்க வேண்டும். வந்த இடத்தில் மக்கள் ரெயில்வே தண்டவாளங்களை உடைத்தெறிந்திருப்பதையும், நெடுஞ்சாலைகளை மடக்கிப் போட்டிருப்பதையும், தந்திக் கம்பிகளை வெட்டித் தள்ளியிருப்பதையும் பார்த்து விட்டுக் கண்டனம் தெரிவித்திருக்க வேண்டும். ஜனப் பிரவாகம் முன்னேறிச் செல்கிறது. அதன் நடையில் ஒரு மிடுக்கு இருக்கிறது—நமது முன்னோடிகள், ஆதி மனிதர்கள், இரைதேடச் செல்வது போல். உளைச்சல் நிறைந்த இதயத்துடனும், ஊக்குவிக்கும் லட்சியம் எதுவுமில்லாமலும் இந்தக் கூட்டம் செல்லவில்லை. ஒரு புது உலகத்தை நோக்கிச் செல்லும் உற்சாகத்துடன் பீடு நடை போட்டுச் செல்கின்றனர்

இந்தக் கபையா கிராமத்து வாத்தியாரை (Homo Sapiens) எனப் படும் மனித வர்க்கத்தின் சராசரிப் பிரதிநிதி என வர்ணிப்பது குறையுரை ஆகும். அவரது உற்சாகத்தை ஏதோ biological necessity (இனத் தேவை) என்று சொன்னல், அதுவும் அவரைப்பற்றிய முழு விளக்கமாகாது.

ரெயில் தண்டவாளம். தூரத்தில் கிருத்யானந்த நகர் தெரிகிறது. அரைமணி நேரத்தில் சுமார் கால் மைல் நீளமுள்ள தண்டவாளம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது. தண்டவாளங்களையும் மர ஸ்லீப்பர்களையும் பிடுங்கித் தோள்களில் எடுத்துச் சென்று பக்கத்தி லிருந்த நதியிலும் சோளக் கொல்லைகளிலும் தூக்கி எறிந்து விட்டனர். கிருத்யானந்த நகரிலிருந்து வயதான இரண்டு பெரியவர்கள் வந்திருந் தனர். இந்தப் பயங்கரக் காரியத்தைச் செய்ய கூடாது என்று கேட்டுக் கொண்டனர். கூட்டம் அவர்களைக் சே[illegible] செய்து அனுப்பி விட்டது. ஒருவன் பக்கத்திலிருந்த சோ[illegible] [illegible]ல் வளையல்கள்

தயார் செய்தான். மற்றொருவன் ஓடிப் போய் அந்த இரண்டு கிழவர்களையும் பிடித்து இழுத்துவந்தான். வளையல்களை அவர்கள் கைகளில் மாட்டி விட்டு, ''வளையல்கள் போட்டாச்சு. சமையலறைக்குள் போய் உட்கார்ந்து கொள்ளுங்கள்'' என்று பரிகசிக்கிறான். மற்றும் ஒருவன் கத்துகிறான் :

''ஆஹா, என்ன மென்மையான கரங்கள்!'' மற்றும் ஒருவன் ''இதோ, இன்னும் இரண்டு ஜோடி வளையல்கள். உங்கள் நீலு பாபுவுக்கு அணிவித்து விடுங்கள்'' என்று கேலி செய்கிறான். ''அவரிடம் சொல்லுங்கள், கலெக்டர் ஐயா பணத்தை வாங்கிக்கொண்டு இங்கு ஒய்யார நடை போட வரவேண்டாமென்று. கவேயா, ரஹாயா மக்களுக்கு ஓர் ஒற்றனை எப்படி நடத்தணும்னு தெரியும். ஒரு வேளை மறந்து போயிருந்தால் அந்த இண்டிகோ துரை வில்ஸனுக்கு என்ன ஆயிற்று என்பதை ஞாபகப்படுத்துங்கள்.'' மக்களின் கூச்சம், அடக்கம் எல்லாம் நொறுங்கிப் போய்விட்டன. என் முன்னிலையிலேயே நீலுவைப்பற்றிக் கேவலமாகப் பேசுவதற்கு அவர்கள் தயங்கவில்லை.

அந்த மர ரெயில்வே பிரிட்ஜ் எரிந்து கொண்டிருக்கிறது. எப்படி, இவ்வளவு சீக்கிரம் இத்தனை கனமான கட்டைகள் நெருப்புப் பிடித்துக் கொண்டுவிட்டன! என் கண்ணாலேயே பார்த்திருக்கிறேன், நெருப்புப் பற்ற வைப்பதற்குள் அம்மா படும் பாட்டை. அதோ, அந்தச் சிகப்புப் பனியன் அணிந்து கொண்டிருக்கும் பையன் ரஹாயாக் கிராமத்துப் பையன்.

அந்தப் பாதிரி, துரை மாதிரி நடித்துக் காட்டி வேடிக்கை செய்து கொண்டிருக்கிறான். நேற்று அந்தப் பாதிரியின் வீட்டைக் 'கெரோவ்' செய்திருந்தார்கள். பாதிரி எந்தக் குரலில், 'காந்திஜிக்கு ஜே' என்று சத்தம் போட்டார் என்பதை இவன் நடித்துக் காட்டியதைக் கேட்டு எல்லோருமே சிரிக்கிறார்கள். திடீரென்று ரெயில் வரும் சத்தம். நிஜமாகவே அதோ என்ஜின் தூரத்தில் தெரிகிறதே! இதோ வந்து விட்டது! பட்டாளம் நிரம்பிய வண்டி. கூடவே ரெயில்வே இன்ஜினியர். ''ஓடு ஓடு! எந்தப் பக்கம் ஓடமுடியுமோ அந்தப் பக்கம் ஓடு! சாக்கடையோ குட்டையோ வயலோ, எதுவோ யோசனை பண்ணாதே, ஓடு, ஓடு.'' நொடியில் கூட்டம் மறைந்து விட்டது. டாமிகளின் (tommies) துப்பாக்கியின் 'கட் கட்' சத்தம் காதில் விழுகிறது. கிருத்யானந்த நகர் பக்கத்தில் இருந்த சோளக்கொல்லையில் நான் ஒளிந்து கொள்கிறேன். வேண்டுமென்றே கிருத்யானந்த நகருக்குள் போகவில்லை.

அந்தக் கிராமவாசிகள் என் பக்கம் இல்லாதபோது எதற்காக அங்கே [illegible] கைகளை [illegible] அவசரமாகத் தண்டவாளத்துக்கிடையே

போட்டுவிட்டு வந்துவிட்டேன். இந்தச் சோளத்தின் கொத்து, பாதிரியின் தாடி மாதிரியே இருக்கிறது. சோளம் நன்றாக முற்றி இருக்கிறது. சோளக்கொல்லையின் ஈர வயல் மண்ணின் இனிமையான வாசனை. துப்பாக்கி மருந்தின் வாசனை இது வரை வரவில்லை.

பிறகு வழக்கு விசாரணையின் போது சர்க்கார் தரப்பு வக்கீல் இந்தச் சோளக்கொல்லையைப்பற்றி வேடிக்கையாக ஒரு வார்த்தை சொன்னார். இதைப் பார்த்த டாமிகள், ''இது இந்தியச் சோளம் அல்ல. நாஜி சோளம்'' என்றார்களாம். ஜட்ஜ் துரை கூட இதைக் கேட்டவுடன் தம் வழக்கமான காம்பீர்யத்தை மறந்து, சற்றே சிரித்தார். கோர்ட் சிரஸ்ததார் கூடச் சிரித்தார். என் வக்கீல் ஹரேன் பாபுவினால் கூட இந்தத் துணுக்கைக் கேட்டுச் சிரிக்காமல் இருக்கமுடியவில்லை. சிலி, பெரு போன்ற நாடுகளில் சூரிய பகவானுக்கான கோவில்களில் செயற்கையான சோளக்கொத்துக்களை வைத்திருப்பார்களாம். இவைகள் வெள்ளியாலும், மணிகள் தங்கத்தாலும் செய்ததாக இருக்குமாம்.

கண் இமைகள் கனமாக அழுந்துகின்றன. தூக்கம் வருகிறது. கொஞ்சம் கை கால்களை நீட்டிக் கொள்கிறேன். அப்பா! கை கால்கள் எல்லாம் ஒரே வலி, ஆடாமல் அசையாமல் உட்கார்ந்து கொண்டிருந்த காரணத்தினால். கொட்டாவி வருகிறது. இன்று கூடத் தூக்கம் வருமா என்ன? எத்தனை பேர்களைப்பற்றி எத்தனை விதமான கதைகள் கேள்விப்பட்டிருக்கிறேன்! தூக்கிலிடப்படும் தினத்துக்கு முதல் நாள் அவர்கள் மயிர் நரைத்துவிடுமாம். எனது மயிரும் நரைத்துவிட்டதா, என்ன? ஒரு கண்ணாடி இருந்திருந்தால் பார்த்திருக்கலாம். காம்ரேட் சரைபல்லிக்குத் தூக்கிலிடுவதற்கு முன்பு பைத்தியம் பிடித்து விட்டது. எனக்கோவென்றால் தூக்கம் வருகிறது. என்ன ஆச்சரியம்!

என்னிடம் நிறையப் பணம் இருந்தால் இன்று ஓர் உயில் எழுதியிருப்பேன். அனேகக் கோடி ரூபாய்கள். அதை வைத்துக்கொண்டு மார்க்ஸீயவாதப் பிரசாரம் செய்யலாம். ரஷ்யாவில் இருப்பது போல் பாரதத்தில் ஒவ்வொரு கிராமத்திலும் இளைஞர்கள் குழுக்கள் நிறுவலாம். ஆனால் பணம் எங்கிருந்து வரும்? டிக்கெட் வாங்காமலே லாட்டரி பணம் வந்தால், எவ்வளவு சௌகரியமாக இருக்கும்! அது தான் பணம் பெறுவதற்கு ஒரே வழி. இன்று இந்த அரசாங்கம் எங்கள் கையில் மட்டுமிருந்தால், பத்து வருஷங்களில் என்ன சாதிக்க முடியும் என்பதைக் காட்டியிருக்கலாம். காங்கிரஸ்காரர்கள் ஜெயிலிலிருந்து வெளியே வந்த பிறகு கட்டாயம் என் பெயரில் ஏதாவது ஒரு ஸ்தாபனம் நிறுவுவார்கள். 'பீலு பாபு ராஸ்தா', 'பீலு பாபு ஆசிரமம்' ஊஹூம். எனது சரியான பெயரைத்தான் இடுவார்கள். 'பூர்ண ஆச்ரமம்.' ஆனால் இந்த 'பூர்ண' தான் என் சரியான பெயர்

என்று எத்தனை பேருக்குத் தெரியும்? எல்லாருக்கும் என்னைப் பீலு பாபு என்ற பெயரில்தான் பரிசயம். இதற்குப் பின் மேலும் என்ன வெல்லாமோ நிகழலாம். 'பூர்ணியா'வின் பெயர் 'பூர்ணு' நகர மாக மாற்றப்படலாம், ஸ்டாலின்கிராட் மாதிரி கார்க்கி சிட்டி மாதிரி. பஜாரில் பால் முகுந்த ஸாவுர்தர் மசாலா விற்கும் நாற்சந்தியில் சலவைக் கல்லாலான என் சிலை, சொற்பொழிவாற்றும் நிலையில் நிறுவப்படும். ஒவ்வொரு வருஷமும், இதே தினத்தில், திரள் திரளாக மக்கள் இந்தச் சிலையின் அடியில் கூடி என் நினைவுக்கு அஞ்சலி செலுத்துவார்கள்.

மூடிய கண்களிடையே பச்சை வண்ணமான ஓர் ஒளிப்பிழம்பைப் பார்க்கிறேன், மயில் தோகையினிடையே உள்ள கண்களைப் போல. ஆனால் அசைந்தும் ஆடிக்கொண்டும் இருக்கும் சுடரொளி. இவ்வொளி கொஞ்சம் கொஞ்சமாகச் சிவப்பாகிக் கொண்டிருக்கிறது. முதலில் மஞ்சள், பிறகு பச்சை, பச்சை கலந்த நீலம், நீலம், கருப்பு, கருப்பு மறைந்து விட்டதா என்ன? ஒரே இருள்!

பெரியம்மா தன் சமையலறைக்குப் பக்கத்தில் உள்ள வராந்தாவில் மாம்பழம் நறுக்குவதற்காக ஒரு கத்தியுடன் வந்து உட்காருகிறாள். ஒரு கூடை நிறைய குலாப்காஸ் மாம்பழங்கள். எதிரில் ஓர் அடுக்கு. மாம்பழத்தைச் சிறு துண்டுகளாக வெட்டி அடுக்கில் உள்ள ஜலத்தில் போட்டுக்கொண் டிருக்கிறாள். நானும் சரஸ்வதியும் அவள் எதிரில் இரண்டு சிறிய ஸ்டூல்களில் உட்கார்ந்து கொண்டிருக்கிறோம். ''ஒரே தட்டில் வைக்கிறேன். நீங்கள் இரண்டு பேருமாகச் சாப்பிடுங்கள்'' என்கிறாள் பெரியம்மா. தட்டில் மாம்பழத் துண்டுகளைப் போடுகிறாள்.

சரஸ்வதி பெரியம்மாவிடம் சொல்கிறாள்: ''துண்டு போட்டது இவருக்கு ருசிக்குமா என்ன? முழு மாம்பழத்தையும் கொடுங்கள்.''

''ஐயோடி! இதற்குள்ளேயே இவ்வளவு கரிசனமா?'' என்று பெரியம்மா சரஸ்வதியைப் பரிகாசம் செய்தாள். பிறகு என் கையில் ஒரு முழு மாம்பழத்தை வைத்தாள். தங்கம் போன்ற மஞ்சள் நிறம். முனைக்குப் பக்கத்தில் ஒரு சிவப்புப் புள்ளி. விளிம்பில் சிறிய ஓட்டை செய்து மெதுவாக உறிஞ்சிச் சாப்பிட்டேன். அம்மா படுக்கை யறை வராந்தாவில் இருந்தாள். குளியலறைக்குப் போக விரும்பியவள் போக முடியவில்லை. வழியில் ஒரு பெரிய நாகப்பாம்பு, கன்னங்கறேல் என்று பளபளக்கும் உடம்பு. படமெடுத்து அசையாமல் நிற்கின்றது. அம்மா உரக்கக் கத்துகிறாள்: ''நீலு, சீக்கிரமாக இதை அடி. இப்பொழுதே அடித்துக் கொல்லு'' என்று கத்துகிறாள். அப்பா, ''ஊஹூம்! அதைக் கொல்லாதே. கையைத் தட்டு. தானாகப் போய் விடும்'' என்கிறார். நீலுவா அப்பாவின் பேச்சைக் கேட்பான்? ஒரு

பெரிய தடியை எடுத்துக்கொண்டு வருகிறான். பாம்பை அடித்துக் கொல்ல. பாம்பு ஓடிப் போய் விடுகிறது. இருட்டில் கிணற்றுக்குள் போய் ஒளிந்து கொள்கிறது. கண்ணில் படவில்லை. கிணற்றில் இருந்த வாளியில் கயிறுபோல் கிடக்கிறது. கோபத்தால் நான் தடியால் அந்த வாளியை அடிக்கிறான். 'டங்'கென்று சப்தம் கேட்கிறது.

என்ன சப்தம் இது? ஓ, பூட்ஸ் சப்தம். தலைக்குப் பக்கத்தில் கேட்கிறது. என் அரைத் தூக்கம் கலைகிறது. ஒரு வேளை என்னை அழைத்துக் கொண்டு போக வந்திருக்கிறார்களோ? கதவைத் திறந்துகொண்டு உள்ளே வருவார்கள் என்று நினைக்கிறேன். உடலெல்லாம் வியர்க்க, சப்த நாடிகளும் ஒடுங்கி, அசையாமல் நிற்கிறேன்.

ஊஹூம். கதவு திறக்கவில்லை. புதிய வார்டர் வந்திருக்கிறான் போலும். நிம்மதியில் மூச்சு திரும்புகிறது. ஆமாம். புதிய வார்டர் தான். எத்தனை நேரம் தூங்கியிருப்பேன்? விடிந்துவிட்டதா என்ன? இந்த வார்டர் காலை வார்டரோ? பட்சிகளின் சப்தங்கள் கூடக் கேட்கவில்லையே? வார்டரை வேண்டுமானால், மணி என்ன என்று கேட்கலாமா? அவசியமில்லை. சமயம் வரும்போது தானாகவே தெரிகிறது. அவனைக் கேட்டால் எனது பலவீனத்தை அவன் தெரிந்து கொள்வான். ஒரு சாதாரண வார்டர் முன்னால் கடைசிச் சில மணி நேரங்களில் என்னைச் சிறுமைப்படுத்திக்கொள்ள மனம் வரவில்லை. அந்தப் பைத்தியக்காரன்தான் காலை வந்தவுடன் சத்தம் போட ஆரம்பித்து விடுவானே. ஆகவே, விடிவதற்கு இன்னும் நேரமிருக்கிறது. இந்த உலகத்துடன் இன்னும் இரண்டு மணி நேரச் சம்பந்தம். வெளியில் இருந்தபோது வாய்ப்புகள் இருந்தும் வாழ்க்கை இன்பங்களை நான் நுகரவில்லை. இந்த நீண்ட முப்பத்திரண்டு வருடங்களை எப்படிக் கழித்தேன் என்றுகூடச் சரியாக ஞாபகமில்லை. பயனற்ற வாழ்க்கையின் அடித்தளங்களில் அநேக நினைவுகள் சிதைந்து, கரைந்து எலும்புகள் போல் சிதறிக் கிடக்கின்றன.

என்னைத் தவிர மற்ற எவருக்கும் இவற்றைப் பற்றித் தெரியாது. வாழ்ந்து கொண்டே இருப்பதற்கு ஆசையாய் இருக்கிறது. பாக்கி இருக்கும் இரண்டு மணி நேரத்தை இன்பக்கனவு நிறைந்த வாழ்க்கையாக மாற்றி அதில் திளைக்கவேண்டும். உலகத்தில் உள்ள அவ்வளவு ஆனந்தத்தையும் பிழிந்தெடுத்துவிட வேண்டும் என்று தோன்றுகிறது. நுகரவேண்டிய போகங்களையெல்லாம் நுகரவேண்டும் என்ற வேட்கை எழுகிறது. இந்தக் கடைசி நிமிஷத்தில் எனது தூக்குத் தண்டனை ரத்தாகி விட்டால்? ஏன் நடக்கக்கூடாது? எத்தனை பேர்களுக்கு இந்த மாதிரி நேர்ந்திருக்கிறது? சிரச்சேதம் செய்பவன் தனது வாளை உயர்த்துகிறான். ஒரு வீரன் தொலைவிலிருந்து குதிரைமேல் காற்று

வேகத்தில் விரைந்து வருகிறான். ''துரோகி! வெட்டாதே, வெட்டாதே!'' என்று கத்துகிறான். எத்தனை கதைகள் படித்திருக்கிறேன், பிதியாஸும் டாமனும்!

**1934**-ஆம் வருஷத்திய பூகம்பம் போல் ஒன்று இப்பொழுது நிகழ்ந்து, ஜெயிலின் சுவர்கள் இடிந்து விழுந்தாலும் நான் பிழைப்பதென்பது நடவாத காரியம். என் கழுத்தில் கயிற்றை மாட்ட வேண்டியவன் திடீரென்று நோயுற்றால்? அதனால் என்ன? மற்றும் ஒருவனைக் கொண்டு வருவதற்கு அதிக நேரம் பிடிக்காது. ஹைகோர்ட்டிலிருந்து, ப்ரொவின்ஷியல் அட்வைசரிடமிருந்து என் தூக்குத் தண்டனையை ரத்து செய்து கடிதம் வந்திருந்தும் துரதிர்ஷ்டவசமாக அது திறக்கப்படாமல் இருந்தால்? இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. இதே மாதிரி தான் சில வருஷங்களுக்கு முன் பஞ்சாபில் நடந்திருக்கிறதே! துரையின் பாக்கெட்டிலேயே கடிதம் பிரிக்காமலே கிடந்தது. ஆசாமி தூக்கி லிடப்பட்ட பிறகு தான் ஞாபகம் வந்தது துரைக்கு.

*சீசீ!* வாழவேண்டும் என்ற ஆசை என்னை எங்கேயெல்லாம் இழுத்துச் செல்கின்றது! கண்ணில் படாத ஒரு சக்தியின் எதிர்க்க முடியாத ஒரு போக்கை நான் ஒரு நாளும் நம்பியது கிடையாது. நிஜமாகவே இது மரண பயந்தானோ? கட்டாயம் பயந்தான். சிறிது நேரத்திற்கு முன்பு வார்டரின் கால் சப்தம் கேட்டு மனத்தில் எழுந்த உணர்ச்சி, பயம் இல்லாவிட்டால் வேறு என்ன? அதிகக் கவலை ஒரு நிராசையை உண்டுபண்ணுகிறது. இந்த நிராசை தான் என் மனத்தை அரித்துக் கொண்டிருக்கிறது.

நல்ல தடியான முறுக்கின கயிறு. சின்ன வயதில் இந்தக் கயிற்றைக் 'காத்தாடிக் கயிறு' என்று சொல்வோம். அதில் ஒரு சுருக்கு இருக்கும். இந்தச் சுருக்கின் முடிச்சில் ஒரு பித்தளைப் பூண் (Knob). இந்தக் கயிறு பூராவும் நன்றாகக் கிரீஸ் தடவி வழவழவென்று இருக்கும். கீழே இருளடைந்த குழி—ஏதோ ஒரு கிணறு மாதிரி. எவ்வளவு ஆழம் இருக்கும்? அதிக ஆழமில்லை என்று தோன்றுகிறது. காலடியில் உள்ள கட்டை இழுக்கப்பட்டவுடன் உடல் முழுவதும் தொங்கிக் கொண்டு ஆடவேண்டும். கால் இரண்டும் தரையைத் தொடக்கூடாது. இதற்குத் தான் குழி தேவைப்படுகிறது. ஆகவே குழி மிகவும் ஆழம் இல்லாமல்தான் இருக்கும். ரொம்பவும் தோண்டினால், ஜலம் வந்து விடும். ஆகவே 4 அல்லது 5 முழம் ஆழம் இருக்கலாம்.

ஆனால் குழி எவ்வளவுக்கெவ்வளவு ஆழமாக இருக்கிறதோ, கயிறு எவ்வளவுக் கெவ்வளவு நீளமாக இருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு உடல் கீழே விழுவதற்கான வெட்டியிழுப்பு பலமாக இருக்க வேண்டும். இந்த வெட்டியிழுப்புதான் முக்கியமான விஷயம். அப்படி இல்லா

விடில் கழுத்து எலும்பு எப்படி உடையும்? தூக்கு என்றால் மூச்சடைக் கப்பட்டுச் சாவதல்ல. அப்படியிருந்தால் கழுத்தை நெறித்து விட்டு எறிந்துவிடலாமே! இவ்வளவு யந்திரங்கள், விரிவான சடங்குகள் இவற்றிற்கெல்லாம் என்ன அவசியம்? குறைந்த நேரத்தில் அதிகச் சிரமம் இல்லாமல் மரண தண்டனையை நிறைவேற்றுவதற்காகத் தான் தூக்குமேடை படைக்கப்பட்டுள்ளது. பித்தளைப் பூணால் பின் கழுத்து எலும்பில் ஓங்கி ஒரு அடி—டக் என்று எலும்பு உடையும் சப்தம்—பிறகு?

பிறகு ஒரே சாந்தி! ஊஹூம்! ஒரேயடியாக எப்படிச் சாந்தியாக இருக்க முடியும்? மனிதனின் பிழைத்திருக்கவேண்டும் என்ற வேட்கை என்னவாவது? உயிரற்ற, நைந்த, கயிறுபோல் ஆடும் அந்த உடல், இந்த வேட்கையின் உந்துதல்களுக்கு உட்படாமல் போய்விடுமா என்ன? உயிர் வேட்கை இல்லையெனினும் reflex action ஆவது இருக்க வேண்டுமே! பலி ஆடுகளைப் பார்த்திருக்கிறேன். தலை வெட்டப் பட்டுக் கீழே விழுந்த பிறகும் துடித்துக் கொண்டிருக்கும். தூக்கிலிடப் பட்ட ஆசாமியின் உடல் சூன்யத்தில் ஆடுகிறது. இருட்டில் இங்கும் அங்குமாக ஆடுகிறது. பிறகு சுருக்கு விடுவிக்கப் படுகிறது. இறந்த தேகத்தின் பாதங்கள் மெதுவாகத் தரையைத் தொடுகின்றன. டாக்டர் கால்களின் ரத்த நாளத்தை வெட்டிவிடுவாரா என்ன? 'தூக்கில் இடப்பட்டவன் பிழைத்தெழுந்து விட்டால் என்ன செய்வது?' என்ற பயத்தில் முன் ஜாக்கிரதையாக இவ்வாறு செய்கின் றனர் என்று கேள்விப் பட்டிருக்கிறேன். இதெல்லாம் வெறும் புரட்டு! டாக்டர்களுக்கு இத்தகைய பணிகளே கிடையாது. இவர்கள், சர்க்கார் விதிப்படி வருகிறார்கள். ''ஆமாம், இவன் நிஜமாகவே செத்து விட்டான்'' என்று சொல்ல வேண்டியதுதான் அவர்களின் கடமை.

'உயிர் போகும்வரை தூக்கிலிடப்படவேண்டும்' என்பது சட்டத்தின் வாசகம் அல்லவா? அதற்காகத்தான் இந்த ஏற்பாடு. இதற்குப் பிறகு ஒருவன் மேடைக்குக் கீழிருக்கும் குழியிலுள்ள படிகள் வழியாக இறங்கிப் போவான். இந்தக் குழியும் படிகளும் மொகலாய காலத்திய டில்லி பாதுஷாவின் குளியல் தொட்டிகள் மாதிரி. ஆனால் அவற்றை விடச் சிறிதாக இருக்கும். இவன் ஒரு முக்கியமான மனிதன். எவ்வளவு பேர்கள் இந்தச் சிரமமில்லாத காரியத்தைச் செய்துவிட்டு ஐந்து ரூபாயும் தம் தண்டனைக் காலத்தில் கொஞ்சம் தள்ளுபடியும் பெற்றிருக்கிறார்கள். Piece rate work—இறந்த உடலை—இல்லை, பிணத்தை மேலே கொணர்ந்து கீழே போடுகிறான்! எத்தனை அருவருப் பூட்டும் முகம்! கண்களிரண்டும் பிதுங்கி வெளியில் வந்துவிட்டன. ஒரு சம்பளியை அதன் மேல் போட்டு மூடுகிறார்கள். காலடியில் உள்ள

மரக்கதவு இழுக்கப்படும். ஒரு கணத்தில் எப்படி உயிர் துடித்துப் போயிருக்கும்! சுர்ரென்ற தாங்க முடியாத வேதனை. கண்களில் ஜலம் வருகிறது. சீசீ! எத்தனை நேரத்துக்கு இந்த வேதனை? இந்த வேதனையை உணர்வதற்குத் தேவையான சக்திகூட உடம்பில் ஒரு வேளை இருக்குமோ, என்னவோ? ஒரு வேளை இந்த ஒரு கணத்தில் மனத்தில் எழும் பல எண்ணங்களிடையே இந்த வேதனை எழுவதற்கு அவகாசம் இருக்குமோ இருக்காதோ? இரணகளத்தில் படுகாய முற்றோர் தம் கடமைகளை யந்திரங்களைப் போல் தம் நினைவின்றிச் செய்கின்றனர்.

அவர்களுக்குத் தங்கள் வேதனையைப்பற்றி யோசிப்பதற்கு அவகாசம் இருக்கிறதா என்ன? அப்படித் தாங்க முடியாத வலியாக இருந்தால் தான் என்ன? உயிர் பிழைக்கப் போவதில்லை என்று ஆன பிறகு ஒரு கண நேர வேதனையைப்பற்றி ஏன் கவலைப்படவேண்டும்? இறப்பதற்கு ஒரு விநாடி முன்னால் ஒருவரின் வாழ்க்கை முழுவதும் சினிமாக் காட்சி மாதிரி கண் முன் ஓடும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். இதை என்னால் நம்ப முடியவில்லை. மரண தண்டனை இல்லாத தேசத்தில் எனக்குத் தண்டனை விதிக்கப்பட்டிருந்தால்? ஆயுள் தண்டனையைச் சிறைக்குள் அநுபவிக்கும் என்னிடமிருந்து பல வண்ணங்கள் நிறைந்த இத்தரணியின் எழில் பறிக்கப்பட்டிருக்கும். ஆனால் ஜெயிலுக்குள் தான் ஒரு சிறு உலகம் இருக்கிறதே? ஜெயிலுக்குள்ளேயும், குளிர், வெப்பம், மாரி என்ற பல காலங்களையும் நுகர முடியும். வானம், காற்று, சந்திரன், சூரியன், நட்சத்திரங்கள் இவை யாவும் தங்கள் அழகை ஒளித்து வைத்துக் கொள்வதில்லையே?

கால *பைசாகியின் உத்வேகம். முதல் மழையின்பின் எழும் ஈர மண்ணின் வாடை. நிசப்தமான நடு நிசியில் லயம் தவறாமல், மழை எழுப்பும் 'ரிம்ஜிம்' 'ரிம்ஜிம்'மின் போதை. எத்தனையோ நினைவுகள் நிரம்பிய சரத் காலத்திய தங்கத் தகடு போன்ற வெயில். இவற்றை மதில்கள் தடுத்து மறைத்து விடுவதில்லை. இவற்றையெல்லாம் விட, மனிதர்களின் முகங்களையும் பார்க்க முடியுமே—திருடர்கள், கொள்ளைக் காரர்கள் என்றாலும், அவர்களும் மனிதர்கள் தாமே! ஒரு கயிற்றின் நுனியில் தொங்குவதைவிட இவர்களிடையே உயிருடன் இருப்பது நல்லதல்லவா?

அமெரிக்காவில் மின்சார நாற்காலியில் உட்கார்ந்தால் ஒரு விநாடியில் எல்லாம் முடிந்து விடுமாம். கொஞ்சங்கூட வலியின் துடிப்பு இருக்காதாம். ஆனால் மரிப்பதற்கு முன் எழும் வேதனை மட்டும் இங்குள்ளது போலத்தான் அங்கும். அவர்கள் உபயோகிக்கும் உயிர் மாய்க்கும்

---

*கால பைசாகி—கோடை முடியும் தறுவாயில் வரப்போகும் பருவ மழைக்குச் சூசகமான பேய்க் காற்று.

யந்திரங்கள் இங்குள்ளதை விடக் கொஞ்சம் நாசூக்கானவை, அவ்வளவுதான். ஆனால் வேறு தேசங்களில் உள்ள துப்பாக்கியால் சுட்டுக் கொல்வது, வாளால் தலையைச் சீவுவது, கில்லட்டினால் தலையை வெட்டுவது போன்ற முறைகளை விட நமது தேசத்து ஏற்பாடு மேன்மையானது. கத்தியால் தலையை வெட்டுவது என்பதை நினைக்கும்போதே என் உடல் நடுங்குகிறது. அது சரி, மரண தண்டனை அளிக்கப்பட்டவனுக்கு மார்ஃபியா இன்ஞ்செக்ஷனோ, க்ளோரோஃபாமோ கொடுத்து அவனைத் தூக்கிலிட்டால் சர்க்காருக்கு என்ன நஷ்டம்? அந்த அபாக்கியசாலிக்கு உடல் துடிப்பு, மனோவேதனை இரண்டிலிருந்தும் விடுதலை கிடைக்குமே? சமூகத்திலிருந்து இந்த மனிதனை நீக்கி எறிந்து விட வேண்டும் என்பதுதான் நோக்கம் என்றால், அவனை மூர்ச்சையடையச் செய்துவிட்டுத் தூக்கிலிடுவதுதான் நல்லது. ஆனால் இதெல்லாவற்றையும் விடச் சிலாக்கியமானது பொட்டாஷியம் ஸயனைட்...நொடியில் எல்லாம் முடிந்துவிடும்.

நீலு காலேஜ் லெபாரடரியிலிருந்து கொஞ்சம் கொண்டு வந்திருந்தான். அதைப்பற்றி எத்தனை விதமான ஆலோசனைகள், எவ்வளவு கற்பனைகள், கிறுக்கு எண்ணங்கள்! ஒரு சிறிய ரப்பர் காப்ஸ்யூலில் இதை நிரப்பி வாயில் வைத்துக்கொள்ள வேண்டும். அதுதான் சரி. கைது செய்யப்பட்டாலும் பயம் இல்லை. அவசியப்படும்போது பல்லால் கடித்து அதை விழுங்கிவிடலாம். இதைச் சோதனையளவு செய்த அந்தத் தினத்தில் முழுதாகவும் செய்திருந்தால் இன்றைய மனவேதனையை எல்லாம் தவிர்த்திருக்கக்கூடும். ஆனால் அன்றைய தினம் இந்த மாதிரி ஒரு நாள் வரும், அப்பொழுது இது தேவைப்படும் என்று நினைக்கக்கூட இல்லை. அது கையில் இருந்திருந்தால் சற்று முன்னால் பூட்ஸ் சப்தம் கேட்டபோது அந்தக் காப்ஸ்யூலைக் கடித்திருப்பேன். கதவைத் திறந்தவுடன் அவர்கள் அசந்து போயிருப்பார்கள். தூக்கிலிடுபவன் ஏமாற்றம் அடைந்திருப்பான். சூப்பிரண்ட் துரை, ''இது என்ன, மற்றும் ஒரு தலைவலி!'' என்று தன் விதியை நொந்து கொள்வார். இப்போது, ஆயிரம் விதமான டிபார்ட்மெண்டல் விசாரணைகளில் மாட்டிக்கொள்ள வேண்டும். எல்லாரும் பயத்தில் இவனுக்கு மாரடைத்து விட்டதாக நினைத்துக்கொள்வார்கள். ஊஹூம், கட்டாயம் போஸ்ட்மார்ட்டம் இருக்கும். அப்போது பொட்டாஷியம் ஸயனைட் பற்றித் தெரிந்துபோகும்.

ஆனால் பொட்டாஷியம் ஸயனைட் சாப்பிடுவதும் அவ்வளவு சுலபமானதல்ல. அந்தச் சமயம் என்னால் முடியவில்லையே? முன்பு, டிஸ்பெப்ஸியா வயிற்று வலியால் அவதிப்பட்டுக் கொண்டிருந்த நாட்களில் பிற்பகலில் ஃபுட்பால் மாட்ச் பார்க்கப் போவேன்.

அப்போது ஒரு நாள் ஜிதேன் அண்ணுவைப் பார்த்தேன். அவன் அந்த சப்டிவிஷன் ஆபீசரைப் பார்த்து, ''கம் அப், இஸ்மாயில்'' என்று அலட்சியமாகக் கூப்பிட்டான். அவர்கள் இருவரும் தங்கள் காரில் நின்றுகொண்டு விளையாட்டைப் பார்த்துக் கொண்டிருந்தனர். தோள் மேல் கை போட்டுக்கொண்டு நின்று கொண்டிருந்தனர். திடீரென்று என் மனத்தில் ஒரு பெரிய ஏக்கம் எழுந்தது. எனது பலவீனம், எனது சிறுமை, எனது மந்த புத்தி இவையெல்லாம் என் மனத்தில் உழன்று என்னை வறுக்க ஆரம்பித்தன. நான் ஏன் ஜிதேன் மாதிரி பிரகாசிக்க வில்லை? ஜிதேன் மேல் எனக்குப் பொறுமை இல்லை. அப்படி ஒரு துரை யுடன் நட்புறவு கொள்ளவேண்டும் என்று துடிப்பும் இல்லை. இருந் தாலும் ஏனோ என் மனத்தில் மாபெரும் சோகம் எழுந்தது. சில விநாடி களுக்குள் வாழ்க்கையில் ஒரு வெறுப்பு எழுந்தது. வாழ்ந்து என்ன பயன்? இந்தச் சிறுமையைத் தாங்கிக்கொண்டு வாழ்வதைவிட உயிர் துறப்பதே மேல் என்ற எண்ணம் எழுந்தது. சரி, இன்று இரவே பொட்டாஷியம் ஸயனைடைச் சாப்பிட்டு விடுவோம். இவ்வாறு எண்ணிக்கொண்டு ஜில்லா காங்கிரஸ் ஆபீஸ் கடிகாரம் பல மணிகளை அடிக்கும் வரை விழித்துக்கொண்டே இருந்தேன்.

கடைசி நிமிஷத்தில், ''சரி, இன்று வேண்டாம். திடீரென்று ஏற்பட்ட அற்ப ஆசையான லேடீஸ் ஆஃப்டர்நூன் பிஸ்கட்டைத் தின்கிற ஆவலைத் தீர்த்துக் கொண்டுவிட்டு, நாளை செய்து கொள்ள லாம்'' என்று தீர்மானித்து விட்டேன். மறுநாள் என் மனம் மாறி விட்டது. இதை நினைத்து எவ்வளவோ தடவை சிரித்துக் கொண்டிருக் கிறேன். ஆனால் இன்று மட்டும் ஸயனைட் இருந்தால் கட்டாயம் சாப்பிட்டிருந்திருப்பேன். இது நானாக வலுவில் செய்துகொள்ளும் தற்கொலையல்லவே? ஏதோ தவிர்க்க முடியாத விபத்தில் இருந்து என்னைத் தப்புவித்துக் கொள்ளும் உபாயம் இந்த ஸயனைட். அன்று அந்த ஸயனைட் புட்டியை எலுமிச்சம்பழ மரத்தடியில் புதைத்து வைத்தேன். என்னமோ தோன்றிற்று. அந்தப் புட்டியை ஒரு பாதாங் கொட்டை நிறத்து ஸாக்ஸில் சுற்றி மரத்தடியில் புதைத்து வைத்தேன். இப்பொழுதும் அங்கேதான் இருக்கும் என்று நினைக்கிறேன்.

அந்த எலுமிச்சம்பழ மரத்தின் கீழ் கிளைகள் பதியன் போடப் பட்டிருக்கும். ஜில்லா காங்கிரஸ் ஊழியர்கள் ஆசிரமத்துக்கு வரும் போதெல்லாம் ஒரு சில பதியன்களை எடுத்துச் செல்வார்கள். நீலு வுக்குத் தினந்தோறும் சாப்பிடும்போது ஓர் எலுமிச்சம் பழம் அவசியம். பருப்பில் ஓரிரண்டு சொட்டு எலுமிச்சம்பழச் சாறு விட்டுக் கொள்ளாவிட்டால் அவனுக்குச் சாப்பிட்ட மாதிரி இருக்காது.

ஆசிரமத்தில் மீன் சமைப்பதில்லை. அதன் காரணமாகவே பெரிய மீன் வாங்கும் தினங்களில் எல்லாம் பெரியம்மா வீட்டிலிருந்து எங்களுக்கு அழைப்பு வரும். அங்கே சாப்பிடப் போகும்போது கூடவே வீட்டிலிருந்து ஓர் எலுமிச்சம்பழத்தை நீலு எடுத்துக்கொண்டு போவான். ஒரு வேளை பெரியம்மா வீட்டில் எலுமிச்சம் பழம் இல்லாவிட்டால்? அந்த வீட்டில் குழந்தைகளுக்கு முதற்கொண்டு இந்த விஷயம் தெரியும். அவர்களில் சிலர் நீலு மாமாவின் பையைத் தேடுவார்கள். மற்றும் சிலர் ஓடிப் போய்ப் பெரியம்மாவிடம், நீலு மாமா பாக்கெட்டில் எலுமிச்சம்பழம் வைத்திருக்கிறார் என்று சொல்லுவார்கள். பெரியம்மா சமையலறையிலிருந்து வெளியே வந்து நிற்பாள்.

''என்னடா, மீன் தின்னிகளா! வந்திங்களா?'' என்று சத்தம் போட்டுக் கேலி செய்வாள். பல நாட்களுக்கு முன்னால் நடந்த சம்பவம். பெரியம்மா வீட்டு வராந்தாவில் வரிசையாகச் சிறிய ஸ்டூல்கள், ஒவ்வொரு ஸ்டூல் முன்னாலும் ஒரு தட்டு நிறையச் சாதம். நான், நீலு, ஜிதேன் அண்ணா, காண்டா எல்லாரும் சாப்பிடுவதற்காகக் காத்துக் கொண்டிருக்கிறோம். ''வாங்கடா மீன் திண்ணிகளா'' என்று பெரியம்மா கூப்பிடுகிறாள். நீலு விழுந்தடித்துக் கொண்டு முதல் ஸ்டூலைப் பிடிக்க ஓடுகிறான். ஸ்டூல் தடுக்கிவிட, தட்டிலிருந்த சாதம் சிதறி விழுகிறது. ஒரே கலவரம். அன்று முதல் நீலுவுக்கு, ''மீன் தின்னி'' என்ற தனிப் பட்டம். முதலில் கேலியாக ஆரம்பித்த இந்தப் பட்டம் பிறகு சரியாகவே அமைந்து விட்டது. பிறகு பெரியம்மாவுக்கு நீலுவைப் பார்த்து, ''ஏய்! பாப்பாரப் பிள்ளை, பாக்கெட்டில் எலுமிச்சம்பழம் கொண்டு வந்திருக்கிறாயா? என்னிடம் கொடு, வெட்டித் தருகிறேன்'' என்று சொல்லுவது வழக்கமாகி விட்டது.

நீலு, அதே நீலு, அரை நிஜார் அணிந்துகொண்டு நடமாடும் காப்டன். நீலு, 'மீன் தின்னி' நீலு, அண்ணாவின் மீது அபார அன்பு வைத்திருக்கும் நீலு, அந்த நீலுவா எனக்கு இதைச் செய்தது! அவனிடமிருந்து ஒரு நாளும் நான் இதை எதிர்பார்த்ததில்லை. இவ்வளவு கேவலமான மாறுதலா அவனிடம்? சீ சீ! என் மனம் எங்கே போகிறது? காலில் ஒரு படுகாயம். தொட்டால் வலிக்கும் என்ற பயத்தால் தொடுவதில்லை. தெருவில், குளத்துப் படிகளில், சந்தைகளில் மூடி மறைத்து வைத்திருக்கும் ரணம், வீட்டுக்குள் வந்தவுடன் ஒரு மேஜையில் இடிபட்டுத் துடிதுடிப்பது போல இருக்கிறது இப்போதைய என் நிலைமை. இந்த ரணத்தை ஆழமான மறதி என்ற அஞ்சனத்தையோ, தர்க்கம் என்ற களிம்பையோ தடவி மூடி மறைக்க முடியாது. என்னாலேயே நீலுவைப் புரிந்துகொள்ள முடியவில்லை என்றால் மற்றவர்கள் எவ்விதம் புரிந்து கொள்வார்கள்? அந்த

நாட்களில் ஓநாய்கள் கிராமங்களை உபத்திரவிக்கும்போது, ஒன்றைப் பிடித்துக் கிராமத்து முச்சந்தில் தூக்கிலிட்டு வைத்திருப்பது வழக்கம். தங்களுக்கு நேர்ந்த நஷ்டத்துக்காக அவர்கள் வாங்கிக்கொள்ளும் பழி இது.

ஆனால் நான் இந்த நிகழ்ச்சிகளை எல்லாம் நீலுவின் நோக்கிலிருந்து பார்க்கவேண்டும். அன்று என்னைப் பார்க்க வந்தபோது இந்தக் கம்பளியின் மேல் தான் உட்கார்ந்திருந்தான். என்னை நேராகப் பார்க்க முடியவில்லை அவனால். அவன் முகத்தில் தப்புச் செய்தவனின் சங்கோஜ பாவம் தெரிந்தது. ஏன் இப்படி? எங்கேயோ ஒரு தவறு நேர்ந்து விட்டது. இல்லாவிட்டால் அவனது இந்த அதைரியம், வெட்கம், எல்லாவற்றிற்கும் என்ன காரணம் இருக்கக் கூடும்? தனது குற்ற உணர்வா? அல்லது என்னிடம் அனுதாபமா?

நீலுவுக்கு என்னிடம் ஏதோ சொல்லவேண்டும் என்ற ஆவல் இருந்தது என்று நினைக்கிறேன். என்ன சொல்ல விரும்பினான் என்பதும் எனக்குத் தெரியும். ஆனால் விஷயத்தைப் பற்றிப் பேசுவதற்கான அவகாசத்தை நான் அவனுக்குக் கொடுக்கவில்லை. கொடுத்திருந்தால் எனது தன்னடக்கம் உடைந்து போயிருக்கும். நீலு பார்க்க வந்தது தன்னுடைய அண்ணனை. அரசியலில் தனது விரோதிக் கட்சியின் தலைவரான பீலு பாபுவை அல்ல. எவ்வளவு அதிர்ஷ்டம், அன்று என் மனத்தில் அடித்த புயல் அவன் முன்னால் வெளிவரவில்லை! எனக்குச் சாதாரணமாகவே சுலபமாகக் கண்ணீர் வந்துவிடும். மனத்துக்குள் ஒரே பயம், இன்றும் அப்படி நேர்ந்து விடுமோ என்று. அதிர்ஷ்டவசமாக அந்த இண்டர்வியூ ஒருவித விபத்தும் இல்லாமல் முடிந்துவிட்டது. அவன் போவதற்குள் நான் ஒடிந்து போகவில்லை. அவனைப் பொறுத்த வரை அவனது உணர்ச்சிகள் பொங்கி வழிந்தோடி வரும் அபாயம் தென்பட்டது. பிரியும் முன் தன் இரு கைகளையும் எனது கைகளில் ஒரு விநாடி அழுத்திவிட்டு விடை பெற்றுக் கொண்டான். சில்லிட்டு நடுங்கிய அவ்விரு கைகளின் ஞாபகம் இப்பொழுதும் இருக்கிறது. ''அம்மாவைப் பார்த்துவிட்டுப் போ'' என்று சொன்னேன். பார்த்தானோ, இல்லையோ? யாருக்குத் தெரியும்? அம்மாவைப் பற்றித்தான் எனக்குக் கவலை. இருந்தாலும் அவளுக்கு ஒரு பையன் பாக்கி இருக்கிறான். கண்களை மூடிக்கொண்டு அம்மாவின் முகத்தை மனத்துக்கு முன் கொண்டு வர முயலுகிறேன்.

அம்மா சாதத்துடன் *ஜல்பாயி சட்னி சாப்பிட்டுக்கொண்டு இருந்தாள். அவள் முன் தலைமயிரிடை ஒரு சில நரை கோடுகள் இழைந்து

* ஜல்பாயி—ஆலிவ் போன்று ஒரு புளிப்புப் பழம்.

கொண்டிருந்தன. கருப்பு மயிர்தான் அதிகம். வகிடு ஆரம்பத்தில் சிந்தூர்; வகிட்டை அகலமாக்கி விட்டிருந்தாள். வகிட்டின் பின்னால் அவள் உடுத்தும் கதர்ப் புடைவையின் சிவப்புக் கரை. கழுத்து, காதுகள் இரண்டும் மூளி. பாதி மூடிய கண்களின் ஓரங்களில் பல ரேகைகள். ஒன்று ஆழமானது. மற்றவை மயிரிழை போல் மெல்லியவை. மூக்கின் கீழே இரண்டு சுருக்கங்கள், உதட்டோரம் வரை செல்கின்றன. அவள் மிகவும் சிவப்பானபடியால் இவ்விரு சுருக்கங்களும் ஆழமாகத் தெரிகின்றன. உதடுகளைக் குவித்துக்கொண்டு, சட்டினியை ருசிக்கிறாள். அவள் கழுத்து லேசாக அசைகிறது. நாக்கை மேலண்ணத்தில் தொட்டுச் சப்புக்கொட்டுகிறாள். அவள் உதடுகள் விரிந்திருக்கும்போது கீழ் வரிசைப் பற்களில் ஒன்று இல்லை என்று தெரிகிறது. அவளுடைய நாக்கு நுனி அந்த இடுக்கில் தெரிகிறது. ''எழுந்திருங்கோ, எழுந்திருங்கோ'' என்று எங்கள் இருவரையும் விரட்டுகிறாள். ஆனால் நாங்கள் உட்கார்ந்து கொண்டே இருக்கிறோம்.

பெரியம்மாவுக்கும் சில கீழ் வரிசைப் பற்கள் இல்லை. எப்படி இருக்கும்? இருபத்துநான்கு மணி நேரமும், வாயில் இந்தப் பற்களுக்குப் பின்னால் ஒரு புகையிலைத் துண்டை (கொஞ்சம் சுண்ணாம்புக் கலவையுடன்) அடக்கி வைத்துக் கொண்டிருக்கிறாள். எல்லாரும் வெற்றிலையுடன் புகையிலை போட்டுக்கொள்வார்கள். புகையிலையை மாத்திரம் பெரியம்மாவைப் போல் போட்டுக் கொள்பவர்களை நான் பார்த்ததில்லை. பெரியம்மா இப்பொழுது என்ன பண்ணிக்கொண்டிருப்பாள்? இன்றிரவு அவளுக்குத் தூக்கம் வருமா? குளிரோ, கோடையோ அவளுக்குக் காலை மூன்று மணிக்கே விழிப்பேற்பட்டுவிடும். படுக்கையில் உட்கார்ந்து ஜப மாலையை உருட்ட ஆரம்பித்து விடுவாள். தூக்கம் கலைந்து எழுந்தவுடனேயே விளக்கின் திரியைப் பெரிதாக்கி ஜன்னல் ஓரத்தில் வைத்து விடுவாள். விளக்கு வெளிச்சம் சுவரில் மாட்டி இருக்கும் ராதாகிருஷ்ணப் படத்தின் மேல் விழும். பிறகு மூக்குக் கண்ணாடியை அணிந்து கொண்டு, கண்களை இந்தப் படத்தின் மேல் நிறுத்தி, ஆடாமல் அசையாமல் உட்கார்ந்து கொண்டிருப்பாள். அது தான் அவள் குரு அவளுக்குக் கொடுத்த ஆணை. உருண்டை முகம்.

அம்மா சொல்வாள், 'தகர டப்பி மாதிரி' என்று. முகத்தில் சில இடங்களில் அம்மை வடு. நெற்றியின் நடுவே நீல நிறத்தில் ஒரு 'பச்சை' குத்தின பொட்டு. கழுத்தில் துளசி மாலை. ஜபத்தின் நடு நடுவே ஜன்னல் வழியாகப் புகையிலை எச்சிலைத் துப்பிவிட்டு வருவாள். அதே சமயத்தில் ஆகாசத்தையும் பார்த்துவிட்டு விடிய இன்னும் எவ்வளவு நேரமிருக்கிறது என்று அனுமானிக்கப் பார்ப்பாள். கிணற்றுக்குள் வாளி விழும் சப்தம் கேட்கும். பக்கத்து வீட்டு

மளிகைக் கடைக்காரன் ராம்தேவ் ஸா விடிவதற்குச் சற்று முன்னரே குளிப்பதற்காகக் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்துக் கொண்டிருக்கிறன். அவன் தான் பெரியம்மாவின் கடிகாரம்.

''பேலி! ஓ பேலி! நீ எழுந்திருக்கப் போவதில்லையா?''

அடித்துப் புரண்டு கொண்டு நாதீ எழுந்து உட்காருவாள். சிறு வயதில் காலையில் நீலுவை எழுப்புவது ஒரு பெரிய பிரம்மப்பிரயத்தனம். ''அண்ணு, விளையாடாதே. பொல்லாதவனுக இருப்பேன். சொல்லிவிட்டேன்'' என்று சீறுவான். திரும்பிப் படுத்துக் கொள்வான். மறுபடியும் அவனை உலுக்கும் பொழுது, ''மறுபடியுமா? வேண்டாம்'' என்பான். மறுபடியும் எழுப்பும்போது, ''ஆரம்பித்து விட்டாயா?'' என்பான். மறுபடியும் அசைக்கும் போது, ''இன்னுமா விடமாட்டேன் என்கிருய்?'' என்பான். அவன் குரலில் உஷ்ணம் அதிகமாகி இருக்கும். முணுமுணுத்துக் கொண்டே ஒரு மாதிரியாக எழுந்து உட்காருவான். அம்மா, ''விடிந்தவுடனேயே ஆரம்பிச்சாச்சா, பாம்பாட்டி மந்திரங்கள்?'' என்று கடிந்து கொள்வாள். நீலுவின் முகத்தை என் கண்முன் கொண்டுவரப் பார்க்கிறேன். முடியவில்லை. எப்பொழுதெல்லாமோ நான் நினைக்காமலேயே நீலுவின் முகம் என் மனத்திரையில் வரும். ஆனல் இன்று பல முயற்சிகள் செய்தும் வரவழைக்க முடியவில்லை. வாழ்நாளின் கடைசி விநாடிகளில் அவன் முகத்தை நினைவு செய்து கொள்ளும் திருப்திக்காக நான் செய்யும் முயற்சிகள் தோல்வியடைகின்றன. ஏன் இப்படி? நீலுவின் முகத்தைக் கற்பனை செய்யப் பார்க்கிறேன். ஆனல் மனக்கண் முன் வருவது கானேரி மஹ்றதோவின் முகம். மொட்டைத் தலை. சப்பை மூக்கு, புல் டாக் மாதிரி. ஒரு மேல் காதில் சிறு தங்க வளையம்.

உடம்பு நடுங்குகிறது. திடீரென்று குளிர் அதிகமாகத் தெரிகிறது. காலைக் காற்று குளிரை அதிகமாக்குகிறது. இந்த இரண்டு மணி நேரத்தில் மட்டுந்தான் ஸெல் கொஞ்சம் குளிர்ந்திருக்கும். அந்தப் பைத்தியக்காரன் கூச்சல் போட ஆரம்பித்து விட்டான். மூன்ரும் நம்பர் ஆள் பஜனை செய்கிருன். எப்போது ஆரம்பித்தான் என்று நான் கவனிக்கவில்லை.

ஆல மரத்தில் சில காகங்கள், 'கா கா' என்று ஓலமிட்டுக் கரைந்து நிச்சப்தமாகிவிட்டன. ''இன்னும் விடியவில்லை. நேரத்தைக் கணிப்பதில் தவறு நேர்ந்துவிட்டது. சீக்கிரமாகவே கரைந்துவிட்டோம்'' என்ற உணர்வு ஏற்பட்டு விட்டது போலும். எனக்கு எஞ்சியுள்ள நேரம் தான் எவ்வளவு குறைவு! இதில் ஒவ்வொரு விநாடியும் எவ்வளவு விலை உயர்ந்தது! சினிமாவாக இருந்தால் ஒரு hour glass ஐ காட்டியிருப்பார்கள். அதன் மேல் பாகத்தில் உள்ள மணல் கிட்டத்தட்ட

கீழ்பாகத்தில் விழுந்து போயிருக்கும். ஒன்றன் பின் ஒன்றாக எஞ்சியிருக்கும் மணலும் விடாமல், 'டிப் டிப்' என்று கீழே விழுந்து கொண்டிருக்கும். ஒரு விநாடி கூட ஓய்விருக்காது. அல்லது ஓர் அகல் விளக்கைக் காட்டுவார்கள். அதில் இருக்கும் எண்ணெய் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து வருவதைக் காட்டுவார்கள். அல்லது கடிகாரத்தின் முட்கள் விடாமல் நகர்ந்து கொண்டிருப்பதைக் காட்டுவார்கள். எனது கடிகாரமும் அதன் நியமப்படியே நகர்ந்து கொண்டிருக்கிறது. குளிர்ந்த காற்று, பைத்தியத்தின் ஓலம், மூன்றும் நம்பரின் பஜனை, கடைசியாக, வானம் கொஞ்சம் கொஞ்சமாக வெளிறிப் போவது, காலை நட்சத்திரம். இவற்றிற்கெல்லாம் மேலான கடுமையான உண்மை — என் வார்டரின் உருவம்; செல்லுக்கு வெளியில் இருக்கும் தொட்டியின் விளிம்பில் உட்கார்ந்து கொண்டு தூங்கி வழிந்து கொண்டிருக்கிறான்.

பீலு இன்னும் உயிருடன் இருக்கிறான். இன்னும் சில விநாடிகளுக்குப் பிறகு இருக்கமாட்டான். இரத்த மாமிசம் நிறைந்த சுக துக்கங்களை அநுபவிக்கும் பீலு என்று ஒன்றும் இருக்காது. சர்க்காரின் புள்ளி விவரங்களில் ஒரு எண்ணிக்கையாக மாறிவிடுவேன். அளவற்ற எண்ணிக்கையில் ஒன்று கூடுதலாகவோ குறைவாகவோ இருந்தால் யார் கவனிக்கப் போகிறார்கள்? விஞ்ஞானிகள் Parallax or instrumental error—அதாவது நோக்கின் அசைவுகளிலிருந்தோ அளக்கும் யந்திரங்களிலிருந்தோ எழும் பிழை என்று சொல்லுவார்கள் — இந்தப் பிழைகளுக்காகத் தங்கள் கணிப்புகளில் ஒரு சதவீதம் விட்டுவைப்பார்கள். வியாபாரத்தில் 'தட்டுக் கெட்டு விட்டுப் போனது' என்று ஒன்று உண்டு. ஒரு வேளை நான் இதற்குள் அடங்கிவிடுவேனோ என்னவோ?

பாரத சர்க்கார் கணக்கு எடுக்கும்போது நான் 1109-ஆம் நம்பர் கைதி பூர்ணியா ஜெயிலில் தூக்குதண்டனை பெற்றவன். இம்மாதிரி தூக்கிலிடப்பட்டவர்களின் சதவீதத்தை ஒரு தசாம்ச அளவில் உயர்த்தியிருப்பேன். சர்க்கார் ரிப்போர்ட்டில் ஒரு துளி மைச்செலவு. இதுதான் என் வாழ்க்கையின் விலை. நம் நாட்டின் வரலாற்றுக்குப் பீலு பாபுவின் அன்பளிப்பு.

மாட்டு வண்டியின் சக்கரம் சுழலும்போது எழும் ஒலி மாதிரி ஏதோ காதில் விழுகிறது. வார்டர் கதவைத் திறக்கும் சப்தமாக இருக்கலாம். அப்படியானால்...... அது தான். எது நினைத்தேனோ அதுவேதான். முன்னால் உள்ள சிமெண்ட் தாழ்வாரத்தில் பல பூட்ஸ்கள் ஒரே சமயத்தில் நடக்கும் சப்தம். எத்தனை பேர்கள் வந்திருக்கின்றனர்? பட்டாளத்து ஜவான்கள் சேர்ந்து மார்ச் செய்யும் போது எழும் அதிர்ச்சியிலிருந்து ஒரு பாலமே உடைந்து விழக்கூடும்

என்று கேள்விப்பட்டிருக்கிறேன். இங்கே எழும் அரவம் நிஜமாகவே உரக்க இருக்கிறது. இந்தக் காலோசையுடன் கூடவே எனது இதயமும் 'டப் டப்' என்று அடித்துக் கொள்கிறது. இந்த இதயத் துடிப்பை என்னால் தெளிவாகவே கேட்க முடிகிறது.

நவமி தினத்து இரவில் முரசு அடிக்கும் ராஸ் மோஹன் கூட இத்தகைய ஆரவாரம் எழுப்பியிருக்க முடியாது. என் உடல் முழுவதும் நடுங்குகிறது. மூச்சு வாங்குகிறது. கண்கள் முன்னால் ஏதோ திரை போடப்பட்டிருக்கிறது. தலையில் சூன்யமாகவும் ஜில்லென்றும் இருக்கிறது.

ஒரு தடவை என் வலக் கை விரல்கள் சைக்கிள் ஸ்போக்ஸினிடையே மாட்டிக்கொண்டு வெட்டுப்பட்டுவிட்டது. இரத்தம் நிற்கவேயில்லை. அந்தச் சமயம் ரத்தத்தைப் பார்த்தபோது எனக்கு இப்படித்தான் நெஞ்சம் அடித்துக்கொண்டது. மண்டையிலும் மூக்கின் கீழேயும் வேர்வைத் துளிகள். திடீரென்று எழுந்திருந்து நிற்கவேண்டும் என்ற எண்ணம் எழுகிறது. ஏன் என்று தெரியவில்லை. கம்பிகளைப் பிடித்துக் கொண்டு நிற்க முயலுகிறேன். கை கால்களெல்லாம் ஒரேயடியாக நடுங்குகின்றன. நிற்கவே முடியவில்லை. பாரிச வாயு வந்தவன் மாதிரி கால்கள் இழுத்துக் கொள்கின்றன. முன்பு டைபாய்ட் ஜுரம் வந்து குணமானவுடன் கட்டிலிலிருந்து இறங்கி நிற்க முயன்றபோது இதே மாதிரிதான் இருந்தது.

வார்டர் எழுந்து நின்று தன் தலைப்பாகையைச் சரி செய்து கொள்கிறான். பைத்தியம் கத்திக் கொண்டிருக்கிறது. மூன்றும் நம்பர் பஜனை ஓயவில்லை. பூட்ஸ் சப்தம் கிட்டே நெருங்கிக் கொண்டே இருக்கிறது. கிட்ட, இன்னும் கிட்ட. கீழ் வயிறு ஏனோ காலியாக இருப்பது போன்ற உணர்வு. வயிற்றின் நடுவில் பனிக்கட்டி வைத்திருப்பது போன்ற ஒரு பிரமை. ஒரு சமயம் கார்னிவலில் சக்கர ராட்டினத்தில் கீழே இறங்கும்போது அடி வயிற்றில் இதே மாதிரியான உணர்ச்சி ஏற்பட்டது. நாக்கு உலர்ந்து ரம்பம் (file) மாதிரி கரகர வென்று இருந்தது. தொண்டையை அறுப்பதுபோன்ற உணர்வு ஏற்பட்டது. ''ஸரஸ்வதி! அம்மா! பெரியம்மா! நீலு! நீலு, நீ என்ன செய்துவிட்டாய்! ஒரு horizantal barஇல் எனது மரித்த உடல் ஊஞ்சல் ஆடுகிறது. கால்கள் இரண்டும் சூன்யத்தில் ஆடுகின்றன. வடக்கே, வடகிழக்கே, கிழக்கே, தென்கிழக்கே, தெற்கே...

என்ன ஆச்சு? பூட்ஸ் சப்தம் என் பக்கம் வரவில்லையே, ஏன்? என் வார்டரும் ஸெல் தாழ்வாரத்தை நோக்கிக் கண்களைத் திருப்பிக் கொண்டிருக்கிறான். திடீரென்று மூன்றும் நம்பரின் பஜனை ஓய்ந்து விட்டது. மனக்கவலை என் காதை அடைத்துவிட்டதா என்ன? இல்லை. யாரோ ஏதோ சொல்ல முயலுவது போல ஒரு முனகல் என் காதில்

விழுகிறது. மிகவும் தீனமான, சகிக்க முடியாத வேதனை நிறைந்த குரல், யாருடையதாக இருக்கக்கூடும்?

யார்? ஏன்?

கடைசியாக! கடைசியாக, எண்ண முடியாத பூட்ஸ்களின் சப்தம் மாத்திரமல்ல. கௌரிசிருங்கத்தின் சிகரம் நொறுங்கி விழுகின்றது. காலபைசாகி உக்கிரதாண்டவம் ஆடுகிறுள். இதையடுத்து வேதனை நிறைந்த, ''ஜாக்கிரதை'' என்ற அலறல். என் கால்களின் கீழேயுள்ள தரை பிளந்து, கீழே, கீழே, அதல பாதாள இருளினிடையே சென்று மறைகிறது.

''முன்ஞலே விளக்கைக் காட்டு.'' அநேக குரூபமான பிரேதங்களின் நிழல்கள் கொஞ்சம் கொஞ்சமாகச் சிறிதாகிக்கொண்டு கடைசியில் விளக்கின் ஒளியில் மறைகின்றன. விளக்குகள் இந்தப் பக்கம் முன் னேறி வந்து கொண்டிருக்கின்றன. ஆயிரம் கிரகங்கள், உபகிரகங்கள் வழி பிழன்று என்னை நோக்கி வெகு வேகமாக விழுந்து கொண்டிருக் கின்றன. என் தோலின் ஒவ்வொரு மயிர்க்கண்களும் என் ஒவ்வொரு நரம்பின் நுனிகளும், வரவிருக்கும் பேய்க்காற்றின் பயங்கரத்தைத் திகிலுடன் எதிர்நோக்கி நிற்கின்றன. என் உள் நின்று எழும் இந்தப் புயல் என் விழிகளையே வெளியே தள்ளி விடும் போல் இருக்கிறது. இந்தக் கொந்தளிப்பை எதிர்த்து நிற்கும் திறன் இனி எனக்கு இல்லை.

இரு கைகளாலும் இரும்புக் கம்பிகளைப் பிடித்துக்கொள்கிறேன்.

# மேல் வகுப்பு வார்ட்

''நாட்டின் வானத்தில் திகழும் திருவிளக்கே, தாயின் மணிக்கொடியே! உன்னை நான் வணங்குகிறேன்.''

மாலைப் பிரார்த்தனை முடிந்துவிட்டது. வார்டர் ஏதோ முணு முணுத்துக் கொண்டே கதவை மூடிக்கொண்டு போகிறான். அவன் சொல்வதைக் கேட்டுக் கொண்டு தடியுடன் பக்கத்தில் நிற்கிறான், மற்றொரு வார்டர்.

''ஒரு பாபு இங்கே, மற்றொரு பாபு அங்கே. ஒருத்தரை உள்ளே தள்ளினால் இன்னொருத்தர் வெளியிலே. ஒருத்தர் கக்கூஸிலே, இன்னொருத்தர் பூசையிலே. ஒருவர் சொல்கிறார்: 'ஒரு நிமிஷம் அப்பா!' இன்னொருத்தர் (சீட்டாட்டத்தில் உட்கார்ந்திருப்பவர்) 'இந்தக் கை முடியட்டுமப்பா' என்கிறார். பூதன் பாவுனின் வாக்கிங் எப்பொழுது முடியுமோ? கதவு மூடுவதற்கு எம்மா நேரமாக் காத்துக் கிடக்கிறேன்? ஒருத்தரும் உள்ளே நுழையறதாய் இல்லை. ஜீரணிப்பதற்கு இவ்வளவு நடக்கவேண்டும் என்றால் கொஞ்சம் கொறைச்சுத் தின்றால் என்ன? வீட்டில் என்ன தின்றுவானுகளோ என்னவோ, இங்கே அப்பர் டிவிஷன் கிடைத்துவிட்டதென்று, காற்று தண்ணீருக்குக் கூட இடமில்லாம உள்ளே போட்டு அடைக்கணுமா என்ன?''

மேஹர் சந்த்ஜிக்கு, 'நாட்டின் வானத்தில்' மெட்டு தெரியும். நாங்களும் அவருடன் குரலைச் சேர்த்துக் கொள்ளுவோம். இந்தப் பாட்டின் பெயர், 'பிரார்த்தனை'. பிரார்த்தனை தொடங்குமுன் விளக்குகளின் திரியை இறக்கி விடுவோம். பிரதி தினமும் அவருக்கு ஒரு வரி மறந்துவிடும். அச்சமயம் திரியைத் தூக்கிவிட்டுப் பாக்கெட்டிலிருந்து, 'ஆசிரம பஜனாவளி' என்ற புத்தகத்தை எடுப்பார். இவ்வளவு நாட்களாகப் பாடுகிறார். நிறைய அவகாசம் இருக்கிறது.

ஆனாலும் இந்த ஒரு வரி அவருக்குப் பாடமாகவில்லை. மற்றவர்களுக்கு மனப்பாடமாகி விட்டது. ஆனாலும் வேடிக்கை பார்க்க எல்லாருக்கும் விருப்பம். மேஹர் சந்த்ஜி இதைப் புரிந்து கொள்ளவில்லை—அந்த வரி வந்தவுடன் அவர் கை தானாக விளக்கை நாடும்போது, ஒரு மறை வான சிரிப்பு அறையில் நிலவுகிறது என்று. ஒரு நாள் நான் அவருக்கு அந்த அடியை எடுத்துக் கொடுத்தேன். அது அவருக்குப் பிடிக்கவில்லை. அதற்குப் பிறகு நான் ஒன்றும் சொல்வதில்லை.

இந்தப் பிரார்த்தனை ஏற்பாடு நன்றாக அமைந்துவிட்டது. லாக்-அப் கூடவே பஜனையும் முடிகிறது. முதலில் கதவு மூடிய பிறகு பிரார்த்தனை நடந்து கொண்டு இருந்தது. ஆனால் சோஷலிஸ்ட் பார்ட்டியில் அநேகருக்கு இது பிடிக்கவில்லை. அக்கட்சியைச் சேர்ந்த பைரல் தேவும் சிவபூஜனும் ஒரு நாள் பிரார்த்தனையின்போது மாற்றி மாற்றி அபஸ்வரமாக வேறொரு பாட்டைப் பாடிக் கொண்டிருந்தனர். எங்கள் பாட்டின் மேல் இவ்வளவு வெறுப்பு அவர்களுக்கு என்று இதற்கு முன்பு நான் உணரவில்லை.

அன்றிலிருந்து லாக்-அப்பிற்கு முன்னரே பிரார்த்தனை முடிந்துவிடும் என்று அறிவித்துவிட்டேன். மேஹர் சந்த், சதாசிவ் இருவருமே இதை ஒப்புக்கொள்ளத் தயாராக இல்லை நாம் ஏன் பணிந்து போக வேண்டும்? இரவு பன்னிரண்டு மணி வரை அவர்கள் பீடி குடித்துக் கொண்டு நம்மீது புகையை ஊதிக்கொண்டே, லக்ஷ்மி காந்தின் மார்க்ஸ் வகுப்பு லெக்சர் என்று சொல்லிக் கொண்டு நம்மையும் தூங்கவிடாமல் கொட்டம் அடிக்கிறார்களே, நாம் ஏதாவது சொன்னோமா?

''நீங்கள் மாஸ்டர் ஸாஹேப் (வாத்தியார் ஐயா). இதை மட்டும் எங்களிடம் கேட்காதீர்கள். அவர்களை நாங்கள் சரிபண்ணிக் கொள்கிறோம்'' என்றனர். எவ்வளவுவோ சொல்லிப் பார்த்தேன். ''அவர்களுக்கு அசௌகரியமானதை நாம் ஏன் செய்யவேண்டும்? அவர்கள் இஷ்டப்படி விட்டுவிட்டால் என்ன தவறு? நம் கடமையை நாம் அலட்சியப்படுத்தலாகாது. அவர்களோ அறியாப் பையன்கள். உங்கள் ஆதரிசமோ மஹாத்மா வகுத்த வழி. எவ்வளவு உயர்ந்த லக்ஷியம் அது? அதைக் கை விடலாமா?'' வெகு நேரம் எடுத்துச் சொன்னபிறகு அரைமன சுடன் சம்மதித்தனர். அன்றிலிருந்து கதவு மூடுவதற்கு முன்பே மாலைப் பிரார்த்தனையை முடித்துவிடுவோம். அவர்கள் சிறுவர்கள். ஸ்கூல், காலேஜ் மாணவர்கள். அன்றொரு நாள் வாலிபால் விளை யாடும்போது காம்ரேட் மாதோராம், காம்ரேட் முரளி மிச்ராவின் மார்பில் மேல் உட்கார்ந்து கொண்டு அவன் கழுத்தை நெரித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தேன். சாப்பாட்டு விஷயமாக மெஸ் மானேஜருடன் இவர்கள் சண்டை போடுவதைப் பார்த்து இருக்

கிறேன். இன்று இவனுடன் சண்டை, பேசுவதில்லை. நாளை அவனுடன் சண்டை, பேசுவதில்லை என்று அவர்கள் போக்கு. இத் தகைய சிறு பிள்ளைகளின் குணங்களையும் குறைகளையுமா போயும் போயும் நாம் எடை போட்டுக் கொண்டிருப்பது? ஆயுளில் முக்கால் பாகம் கழிந்துவிட்டது. மீதமிருப்பது கால் பாகம். இப்பொழுது கூட நம் மனசை ஒருமைப்படுத்த முடியவில்லையே நம்மால்! சின்னப் பசங்கள், இவர்களின் தவறுகள் நம்மீது ஒட்டிக் கொண்டுவிடும் என்ற பயமிருந்தால் நாம் இந்த வழியில் வந்திருக்கவே கூடாது. பீலுவும் தான் இந்தக் கட்சியில் ஒரு மெம்பர். அக்கட்சியைச் சேர்ந்த ஒவ்வொரு பையனும் எனக்குப் பீலு மாதிரிதான்.

இன்றிரவு மட்டும் பீலுவுடன் இருக்க முடிந்திருந்தால், ஊஹூம். அப்படி இல்லாமலிருப்பதும் நல்லது. சேர்ந்திருந்தால் இருவர் மனமும் உடைந்திருக்கும். இருந்தாலும் கடைசி வரை பேசிக்கொண்டாவது இருந்திருக்கலாம். ஒரு வேளை பேசுவதற்கு எனக்கு ஒன்றுமே இல்லாதிருந்தால்? முக்கியமாக இருந்தாலொழியப் பசங்கள் இருவருமே என்னிடம் எப்பொழுதுமே பேசுவதில்லையே? என் எதிரில் வருவதற்கே பீலுவுக்குச் சங்கோஜம். எப்போதுமே தன்னைச் சுருக்கிக் கொள்கிற சுபாவம் அவனுக்கு. 'சூட்டிக்கையான' பையன் என்று அவனை ஒரு நாளும் சொல்ல முடியாது; சங்கோஜி. ஆனால் ஒரு விதத்தில் இதற்கு நான் தானே காரணம்! எப்படி வளர்த்தேனே அப்படி வளர்ந்திருக் கிறார்கள். ஆனால் வளர்த்த முறை காரணமென்றால் நீலுவின் சுபாவம் ஏன் இப்படியில்லை? இங்கிலிஷ் காலேஜில் படிக்க வைக்காததில் பீலுவுக்கு ஒரு தாழ்வு மனப்பான்மையோ என்னவோ? நீலு காலேஜ் போயிருக்கிறான். அதனால் அவன் மனத்தில் அந்த நோக்கு இல்லை.

பசங்களுடைய வெளி விவகாரங்களைப் பற்றி எனக்குத் தெரியாது. ஆனால் என்னுடன் அவர்கள் பழகும் முறைகளுக்கு, நான்தான் பொறுப் பாளி. ஒரு நாளும் அவர்களுடன் மனம் விட்டுப் பழகியதில்லை. தோளில் கையைப் போட்டுக்கொண்டு பேசியதில்லை. பசங்களிடம் சிநேக பாவம் காட்டினால் கண்டிப்பு மறைந்துபோகும் என்று எண்ணம். அளவாய்ப் பேசிப் பழகினால், பயம் இருக்கும், மரியாதை இருக்கும், அடங்கி நடப்பார்கள். சிறிது இடம் கொடுத்தால் தலைமேல் ஏறி உட்கார்ந்து விடுவார்கள் என்று நினைத்திருந்தேன். இந்த விஷயத்தில் மாத்திரம் என்றுமே நான் யாருடைய கருத்தையும் ஒப்புக் கொண்ட தில்லை. ஸ்கூல் மாஸ்டராகவே இருந்து விட்டேன். அதன் விளைவாகவோ என்னவோ, எல்லா விஷயங்களையும் வாத்தியார் — மாணவன் என்ற முறையிலேயே நோக்கும் பழக்கம் வந்துவிட்டது. இதன் காரணமாக அரசியல் விஷயங்களில் பெரியவர்களைக் குருவாகவும், சிறியவர்களை

மாணுக்கர்களாகவும் பார்க்கிறேன். ஒரு நாளும் 'காம்ரேட்' ஆக வில்லை. ஜிதேன் சிறு வயதில் இருபத்துநாலு மணி நேரமும் அண்ணு வுடன்தான் இருப்பான். 'கழுக் முழுக்'கென்று இருக்கும் இச் சிறுவன் கையில் ஒரு பெரிய தடியை எடுத்துக்கொண்டு தன் தந்தை முன் நடப்பான். கடை, கண்ணி, கோவில் குளம் எல்லா இடங்களுக்கும் கூடவே போவான். மாலை நேரங்களில் நாங்கள் எல்லோரும் அவன் தந்தையுடன் அரட்டையடித்துக் கொண்டிருக்கும்போது அவனும் கலந்து கொள்வான். என்னுடன் பேசுவான். பிறர் குழந்தைகளிடம் பரிவு காட்டி அவர்களுக்காகச் சாக்லேட், மிட்டாய் வாங்கிப் போகும் நான் என் குழந்தைகளிடம் அசட்டையாக இருப்பது பீலுவின் அம்மா வுக்குக்கூட ஏதோ வக்கரிப்பாகப் பட்டது.

சாதாரணமாக அதிகம் பேச மாட்டாள். ஆனல் அவளே ஒரு நாள் வாயைத் திறந்து கொட்டி விட்டாள்: ''சொந்தக் குழந்தைகளையும் கொஞ்சம் திரும்பிப் பார்த்தால் என்ன?'' சிரித்து மழுப்பிவிட்டேன். ஆனல் அன்றிலிருந்தாவது குழந்தைகளுடன் கொஞ்சம் ஒட்டுதல் ஏற்படுத்திக் கொண்டிருந்தால் இன்று இந்த நிலை வந்திருக்காது. பயம், ஒதுங்கிப் போகும் சுபாவம் இவற்றுக்குப் பதிலாகச் சிநேகமும், அன்பும் இருந்திருக்கும். என்றுமே நீலு பீலுவுக்கு அம்மாவிடந்தான் பற்றுதல். சேர்ந்து உட்கார்ந்து சாப்பிடுவது, மனசில் உள்ளதைப் பகிர்ந்து கொள்வது — எல்லாம் இப்பொழுதும் சிறு வயதில் போலவே...பசங்களைப் பற்றி நினைத்தால் முதலில் கண்முன் வருவது நீலுதான். பிறகு தான் பீலு. பீலுதான் வயதில் மூத்தவன் என்றிருந் தாலும் நீலு ஞாபகந்தான் முதலில் வருகிறது. 'கார்த்திகேயன், கணேஷ்' என்றல் கேட்பதற்குச் சரியாகப் படுகிறது. எல்லாக் காரிய ஆரம்பத்துக்கும் முன் கணேசன் நாமம். ஆனல் முதலில் கணேஷ் என்றும் பிறகு கார்த்திகேயன் என்றும் சொல்லிப் பார்த்தால் ஒரே மூச்சில் சொல்ல முடிவதில்லை.

சதாசிவ் கொசுவலையை விரிக்க வந்துவிட்டான். நான் ஜபம் செய்ய உட்காரப் போகிறேன் என்று நினைத்திருப்பான். கொசுத் தொல்லை இவ்வளவு இருக்கும்போது வலைக்கு வெளியில் உட்கார்ந்து தியானம் செய்ய முடியுமா என்ன? இரவில் தூங்கும்போது கொசுவலை உபயோ கிப்பதில்லை. இந்த நிலையில் எவ்வளவு முடியுமோ அவ்வளவு தூங்கு கிறேன்.

கொசுக்கடியைப் பொறுத்துக் கொள்ளும் உடலுரம் கூட இல்லா விட்டால் நாம் பெரிய காரியங்களை எப்படிச் சாதிக்கப் போகிறோம்? சதாசிவுக்குச் சைகை காட்டிக் கொசுவலையைக் கீழே விடுவதை நிறுத்தி விட்டேன். பீலுவுக்குக் கொசுவலை இல்லாதது எவ்வளவு அசௌ

கரியம்! இன்று திங்கட்கிழமை, மௌன விரத நாள். மகாத்மாஜி ஆத்ம சக்திக்காகச் செய்கிறார். அவர் நல்லதென நினைத்துச் செய்வதை நாமும் செய்ய முடியாதா?

முன்பெல்லாம் திங்கட்கிழமைகளில் மாலைகளில் பிரார்த்தனைக்குப் பிறகு உபவாசத்தை முடிப்பேன். சாப்பாட்டுக்குப் பிறகு மௌன விரதமும் முடிவடையும். இதை மனசில் கொண்டுதான் சதாசிவம் என் தியானத்துக்கு ஏற்பாடு செய்திருக்கிறான். மிகவும் நல்ல பையன். சதாசிவ் சத்தியமாகவே சதாசிவன் தான். சில வருஷத்துக்கு முன்பு, 'துணியில் தன்னிறைவு' என்ற பிரக்ஞையில் கையொப்பமிட்ட நாளிலிருந்து பிரதி தினமும் ஆயிரம் கஜம் நூலாவது நூற்கிறான்.

மேல் வகுப்பு வார்டு விசாலமான ஹால். இதில் முப்பத்துநாலு கைதிகள் இருக்கின்றனர். பத்தொன்பது பேர் ஸெக்யூரிட்டி கைதிகள், பதினைந்து பேர் அரசியல் கைதிகள். இவர்களில் சிலர் தண்டனை விதிக்கப்பட்டவர்கள். மற்றவர்கள் மேலே வழக்குகள் நடந்து கொண்டிருக்கின்றன. வார்டு நடுவில் கதவுக்கு அருகில் என் இடம். அறையின் நடுவில் போவோர் வருவோருக்காக வழி. இரு பக்கத்திலும் சுவரை ஒட்டிக் கட்டில்கள். ஒவ்வொரு கட்டிலின் மேலும் ஒரு கொசுவலை, பக்கத்தில் ஒரு மேசை நாற்காலி, புத்தகங்கள் வைக்கும் ஷெல்ஃப். முக்கால்வாசிக் கட்டில்களுக்குப் பக்கத்தில் தரையில் ஒரு கம்பளி விரிப்பு, மேசைகள் மேல் ஒரே மாதிரியான மேசை விரிப்பு. அதன் மேல் கண்ணாடி, சீப்பு, இத்தியாதி. இரும்புக் கம்பிகள், பூட்டுச் சாவி, வார்டர்களின் முகங்கள் கண்ணில் படாவிட்டால் இதைச் சிறைச்சாலையாகவே எண்ண முடியாது. ஏதோ காலேஜ் மாணவர்கள் ஹாஸ்டல் மாதிரி தோன்றும்.

சென்ற ஆகஸ்டு மாதத்தில் ஹரிஹர்ஜியும் அவன் தந்தை குடுகுடுக் கிழவனும் அண்டர்ட்ரயல் கைதிகளாக இங்கே கொண்டு வரப் பட்டார்கள். ஹரிஹர்ஜியின் தந்தை இது ஏதோ தர்ம சத்திரம் என்று நினைத்துக்கொண்டு விட்டார். ஜெயில் என்பது வேறெங்கோ இருப்பதாகவும், போலீசார் இங்கிருந்து பிறகு தான் அங்கு அழைத்துச் செல்வார்கள் என்றும் எண்ணிக் கொண்டிருந்தார். கிழவர் ஒரு தரம், ''எப்போ ஜெயிலுக்கு அழைத்துச் செல்வார்கள்?'' என்று கேட்டே விட்டார். இதற்குப் பிறகு சில தினங்களுக்குள்ளேயே இவரை விடுதலை செய்துவிட்டனர்.

1921-22-இல் நான் வந்திருந்த ஜெயிலுக்கும் இப்போதைய ஜெயிலுக்கும் ஆகாசத்துக்கும் பாதாளத்துக்கும் உள்ள வித்தியாசம். அப்போது நான் இருந்த சாதாரணக் கைதிகளின் வகுப்பில் எல்லாக் கைதிகளும் வேலை செய்தாக வேண்டும். 'சர்க்காருக்கு ஸலாம் போட

வேண்டும்' என்ற விதியின் காரணமாக எவ்வளவு அமர்க்களம்! எங்கே போனாலும் 'மேட்'டின் கா, கா என்ற குரல் காதில் விழும். ''இரட்டை வரிசையில் போ.'' கக்கூஸிற்குப் போனாலும் இந்த இரட்டை வரிசை தான். எல்லார் கையிலும் ஒரே மாதிரியான இரும்புக் குவளை. சாப்பாடு கீப்பாடு எல்லாவற்றுக்கும் இந்தக் குவளையைத்தான் உபயோகித்துக் கொள்ள வேண்டும். எடுத்ததெற்கெல்லாம் சங்கிலிப் பிணைப்பு, கைவிலங்கு, சாக்குத்துணி உடுப்பு (sack cloth) போன்ற தண்டனைகள். இவற்றையெல்லாம் இன்றைய நிலையுடன் ஒப்பிட முடியுமா? ஜெயிலில் நடந்து திரிதல், சாப்பாடு, தங்குதல் ஆகிய பலவற்றில் வசதிகள் அதிகரித்திருப்பதன் பின்னல் எத்தனை வீரர்களின் ஆச்சரியமூட்டும் தியாகங்கள் பொதிந்து கிடக்கின்றன! இந்த அதிகாரிகளின் மனப்போக்குத்தான் என்ன விசித்திரம்! எனக்கு உயர் வகுப்பு, என் மனைவிக்கு உயர்வகுப்பு; ஆனால் என் மகன் பீலுவுக்கு மூன்றும் வகுப்பு.

சர்க்காவை வைத்துக்கொண்டு உட்கார்ந்தால் என்ன? மனத்தின் சஞ்சலத்தைச் சமாதானப்படுத்துவதற்கு இதுவே சிறந்த சாதனம். ஒரே மன நிலையுடன் சில கணங்கள் சர்க்காவைச் சுற்றினால், நரம்பின் துடிப்பு கொஞ்சம் கொஞ்சமாகத் தணிந்துவிடுகிறது. டாக்டர்கள் சிரிக்கலாம். சோஷலிஸ்டுகள் நம்பாமல் இருக்கலாம். ஆனால் நான் அநுபவத்திலிருந்து சொல்கிறேன். சர்க்காவைத் திறந்து வைத்துக்கொண்டு உட்கார்ந்தேன். சதாசிவ் ஏதோ சொல்வதற்காக நின்று கொண்டிருக்கிறான். என்னவென்று கண்ணால் கேட்டேன். அவன் தயக்கத்துடன், ''நாங்கள் சில பேர், உங்களுடன் 'நூற்பு யக்ஞம்' செய்ய விரும்புகிறோம். உங்களுக்கு இதனால் ஒரு தொந்தரவும் இருக்காதே?'' என்றான். தலையை அசைத்து அனுமதி கொடுத்தேன். இன்றையப் பசங்கள் இவ்வளவு 'ஃபார்மல்' ஆக இருக்கிறார்களே! விசித்திரமாய் இருக்கிறது. ஒன்றாய் உட்கார்ந்து ராட்டை சுழற்றுவதில்தான் எத்தனை இன்பம்! உங்கள் மனசும் இப்படியே என்றால் நல்லதாயிற்று. என் அனுமதிக்கு என்ன தேவை? இது தானே நான் விரும்புவது! உங்களைப் பற்றித்தான் எனக்குக் கவலை. இந்தச் சோஷலிஸ்டுகள் எல்லாரும் தங்கள் கட்சியில் உங்களைச் சேர்த்துக் கொள்வதற்காக அந்தப் பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறார்கள். உங்கள் மீது நம்பிக்கை எப்படி உண்டாகும்?

அன்றொரு நாள் மாலையில் நடக்கும் பிரார்த்தனை மாதிரி காலையில் வைத்துக் கொண்டால் என்னவென்ற பேச்சு வந்தபொழுது எவ்வளவு அசிங்கமாய்ப் போய்விட்டது! மேஹர் சந்த் முதற்கொண்டு என் எதிரில் கேலி செய்யத் தொடங்கினர். ''பத்தரை படியில் இரண்டு

வேளை பிரார்த்தனை எப்படி முடியும்? படியை ஒண்ணேகால் ரூபாய் ஆக்கினால் இரண்டு வேளை பிரார்த்தனை செய்யத் தயார். விலைவாசி அதிகமானதால் விரைவிலேயே படியைப் பத்தணாவிலிருந்து பன்னிரண்டணாவாக உயர்த்தப் போகிறார்கள் என்று கேள்விப்பட்டேன். இப்படி நடந்தால் ஒரு வாரத்தில் ஒரு தடவை காலைப் பிரார்த்தனைக்கு ஒத்துக் கொள்ளக்கூடும்'' என்று சொல்லி, ஹி, ஹி என்று சிரித்தார். பிரார்த்தனை வேண்டாமென்றால் வேண்டாம். இப்படி அதைக் கேலிக் கூத்தாக்க வேண்டுமா? நீங்கள் எல்லாரும் காந்தியின் சிஷ்யர்கள். சத்யாக்கிரகிகள். நாஸ்திகர்கள் அல்லவே? இம்மாதிரி எல்லா விஷயங்களிலும் கேலியாகப் பேசினால் சோஷலிஸ்டுகள் தங்கள் மனத்தில் தோன்றியபடி பேசுவதைக் குற்றம் சொல்வானேன்?

சதாசிவ், மேஹர்சந்த் இருவரும் வரிசையாக ஜமக்காளங்களை விரிக்கின்றனர். என்னுடைய இடம் வார்டின் நடுமத்தியில். அறையில் நுழைந்து இடதுபக்கம் திரும்பினால் மகாத்மாஜியின் பக்தர்களின் கூட்டம். அதாவது காங்கிரஸின் பெரும்பான்மையினர். இவர்களைத் தவிர அந்தப் பக்கத்தில் இருப்பது ஒரு கம்யூனிஸ்டு, ஒரு கிஸான் சபா அங்கத்தினன். இந்த இருவரையும் அரசாங்கம் ஏன் கைது செய்து வைத்திருக்கிறது என்பது அவர்களுக்கே தெரியாது. இவர்கள் நிகழ்ந்து கொண்டிருக்கும் யுத்தத்தில் மனப்பூர்வமாகச் சர்க்காருடன் ஒத்துழைக்க விரும்புகின்றனர். வலப் பக்கத்தில் சோஷலிஸ்டுகளும் ஃபார்வர்டு பிளாக்காரர்களும் இருக்கின்றனர். நடுவில் நான், ''பஃபர்.'' ஜெயிலதிகாரிகள் வேண்டுமென்றே இத்தகைய ஏற்பாட்டைச் செய்யவில்லை. அவரவர் சௌகரியப்படி மாற்றி மாற்றிக் கடைசியில் இவ்விதமாய் அமைந்தது. வார்டுக்குள் நுழைவதற்கான கதவை அடுத்து எனது ஸீட். கதவுக்கு முன்னால் பெரிய வெற்றிடம். இது நுழையும் வழிக்கு நேராக இருக்கிறது. எதிரில் அதற்கு மேல் புறாக்கள் வசிக்கின்றன. அதனால்தான் அங்கே கட்டில்கள் போடுவதில்லை.

இந்த இடத்தில்தான் எல்லாரும் ஜமக்காளத்தை விரித்துச் சர்க்காக்களைக் கொண்டு வந்து உட்காருகின்றனர். ராமச்சந்திர், கிஷன்தேவ், ஹரிஹர், ராம்தேனி, சதாசிவ், ராம்சரன், பூஷன் பிரஸாத், ராம்லோசன், மேஹர் சந்த். ராம்தேனியைத் தவிர மற்றவர்கள் 'எரவாடா' சர்க்காவை உபயோகிக்கின்றனர். ராம்தேனி ஜெயிலுக்கு வந்த பிறகுதான் சர்க்காவில் நூற்கக் கற்றுக் கொண்டிருக்கிறான், தண்டனையில் 'ரெமிஷன்' (தள்ளுபடி) பெறுவதற்காக. போலீஸ் ஸ்டேஷனைத் தாக்கியது, கிராம நில தஸ்தாவேஜிகள் ஆபீஸைக் கொளுத்தியது ஆகிய இரண்டு குற்றங்களுக்காகப் பாவம்,

அவனைப் பன்னிரண்டு வருஷங்கள் தீட்டிவிட்டார்கள்! ஜெயிலில் நூல் நூற்கும் வேலை கொடுத்திருக்கிறார்கள்.

அதன் காரணமாகத்தான் அவன் முன்னால் பெரிய 'பீஹார் சர்க்கா' இரண்டு பேர் இடத்தை அடைத்துக் கொண்டிருக்கிறது. முதலில் ராம்தேனி தான், ''ஜெயிலில் வேலை செய்வதற்குத் தயார், வேலை கொடுங்கள்'' என்று சூப்பிரண்டைக் கேட்டுக் கொண்டபோது மற்ற அரசியல் கைதிகள் அவனை, 'பகிஷ்காரம்' செய்ய வேண்டும் என்று ஆரம்பித்தார்கள். அரசியல் கைதி வேலை செய்வதாவது என்பது அவர்கள் ஆட்சேபம். ஆனால் சில தினங்களுக்குப் பிறகு அவனுடன் மற்றவர்கள் பேச்சு வார்த்தைகள் ஆரம்பித்ததைக் கவனித்தேன். சர்க்காக்களைக் கொண்டு வந்து எல்லாரும் உட்கார்ந்த உடனேயே, வலப் பக்கத்திலிருந்து யாரோ ஒருவன் சர்க்காவின் சுழல் சத்தத்தைப் போலவே வாயால் ஒலி எழுப்பி நையாண்டி செய்கிறான். இரண்டு மூன்று பேர்கள் சிரிக்கிறார்கள். வேறு யார்? சுக்லாவாகத்தான் இருக்கும். சுக்லால் இல்லை. காம்ரேட் சுக்லால்: சே, இது நினைவே இருப்பதில்லை. நல்ல 'மிமிக்' இந்தப் பயல்.

இரண்டு கெரோசின் விளக்குகளின் ஒளியில் இவ்வளவு பேர் நூற்க முடியுமா என்ன? ஆனால் இதற்கு மேல் வெளிச்சத்துக்கு எங்கே போவது? யுத்தத்தின் காரணமாகக் கெரோசின் ரேஷன் குறைக்கப்பட்டு விட்டது. தலா ஒரு அவுன்ஸ் எண்ணெய் ரேஷன் என்று நினைக்கிறேன். இதனால்தான் இரண்டு மூன்று பேர்கள் சேர்ந்து ஒரு விளக்கை உபயோகிக்கிறோம். வார்டிற்கு வெளியே ஓர் எலெக்டிரிக் விளக்கு எரிகிறது. வார்டுக்கு உள்ளேயும் சில பல்புகளுக்கு ஏற்பாடு செய்து விட்டால் என்ன குடிமுழுகிப் போய்விடும்? சர்க்காரின் மனசே எனக்குப் புரிவதில்லை.

எலக்ட்ரிக் லைட் வசதி ஏற்படுத்திக் கொடுத்தால் கைதிகள் தற்கொலை செய்து கொள்ளும் வாய்ப்புகள் அதிகமாகிவிடும் என்ற பயமாம் இவர்களுக்கு! எல்லோரும் தற்கொலை செய்து கொள்வதற்காகத் துடித்துக் கொண்டிருக்கிற மாதிரி! இதன் காரணமாகவே ஜெயிலில் உள்ள எல்லாப் பழைய கிணறுகளும் கெட்டியான மரப்பலகைகளால் மூடப்பட்டுள்ளன. எத்தனையோ கைதிகள் எவ்வளவு தடவைகளோ இந்தக் கிணறுகளில் குதித்து உயிரைவிடப் பார்த்திருக்கின்றனர்.

சில நாட்களுக்கு முன்னால் ஒரு சிலர் (வயிற்றுப்போக்கு) உபாதையால் பீடிக்கப்பட்ட போது, நான் டாக்டரிடம் சொன்னேன், ஒரு பாட்டில் எலக்டராலிடிக் குளோரின் கொடுத்தால் இந்த வார்டில் நாங்கள் அனைவரும் அதைக் குடிநீரில் கலந்து விதிப்படி உபயோகிக்கிறோம்

என்று. நானே கவனித்துச் செய்கிறேன் என்றேன். உடனே டாக்டர் என்னைப் பார்த்துக் கை கூப்பி, ''மன்னிக்கணும் பெரியவரே! இந்த மாதிரி வேண்டுகோளை என் கிட்டே கொண்டு வராதீர்கள். பென்ஷன் வாங்க இன்னும் மூன்று வருஷம் தான் இருக்கிறது. முன்னரே இரு முறை டிபார்ட்மெண்டில் என்மேல் நடவடிக்கை எடுத்துவிட்டார்கள். ஒரு தடவை யாரோ ஒருத்தன் உடம்புக்குத் தடவும் தைலத்தைக் குடித்து விட்டான். இன்னொருவர் பினாயிலைக் குடித்துவிட்டார். என்னிடம் 'எக்ஸ்பிளனேஷன்' கேட்டுவிட்டார்கள், இவ்வளவு ஃபினாயில் கைதிக்கு எங்கிருந்து கிடைத்தது என்று? இந்த டிபார்ட்மெண்டில் தர்மம், நியாயம்னு ஏதாவது இருக்கா, என்ன?''

பல சர்க்காக்களின் நானாவிதமான சப்தம் ஒரே சமயத்தில் சேர்ந் தாற்போலக் கேட்பது மிகவும் சந்தோஷமாக இருக்கிறது. வெகு உயரத்தில், ஏரோப்ளேன் பறந்து செல்வது போன்ற சப்தம். பொன் மயமான பாரதத்தை நோக்கிச் செல்லும் பாதையில் நான் தனித்து நிற்கவில்லை. இவர்கள் ஏதோ இத்தனை கஜம் நூல் நூற்கிறார்கள் என்று இல்லை. சர்க்காவில் பிராணனையே பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள்.

ராமராஜ்யத்தை மீண்டும் நிறுவும் அஸ்திரம் இது தான். ராம ராஜ்யம் அன்பு ராஜ்யம். மறுமலர்ச்சி கொணரும் ராஜ்யம். மக்கள் ஹிம்சையையும் துவேஷத்தையும் மறந்து விடுவார்கள். உழைப்பால் உயர்ந்து, சுகமாய் உண்டு களித்திருப்பார்கள். ஒரு வருக்கும் ஒரு குறையும் இருக்காது. ஒவ்வொரு கொட்டிலிலும் பசு, ஒவ்வொரு குதிரிலும் தானியம். எவ்வளவுக்கெவ்வளவு அதிக கஜம் நூற்கிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு லட்சியத்தின் அருகில் செல்வோம். ஒவ்வொருவரும் மற்றவருக்கு உதவி புரிவர். தனவான் தன் நிலத்தை ஏழைக்களிப்பான், கிராமங்கள் தங்கள் தேவைகளுக்கு வெளி உதவியை நாட வேண்டாம். ஏழைகளைச் சுரண்டும் வழிகளெல்லாம் அடைக்கப் பட்டு விடும். மற்றவர்கள் கையை எதிர்பார்த்தால்தானே சுரண்ட லுக்கு வாய்ப்புக் கிடைக்கும்? சேர்ந்து 'நூற்கும் யக்ஞம்' செய்யும் போதுதான் என்னைப் போலவே பலரும் நினைக்கின்றனர் என்று தெரி கிறது. கூட்டம் கூட்டமாய் அரசியல் தொண்டர்கள் எங்கள் வழி யினின்றும் நீங்கிச் செல்கின்றனர். புரிந்ததோ, புரியவில்லையோ? உடன்பாடு உண்டோ, இல்லையோ? சோஷலிஸ்டு ஆவதுதான் புது 'ஃபேஷனாகிவிட்டது' நீலு, பீலுவைத்தான் எடுத்துக் கொள்ளு வோமே!

1930-லிருந்து 1932 வரை எத்தனை ராட்டைகள் சுற்றியிருப்பார்கள்! எத்தனை விதமான சர்ச்சைகள்! அப்போது அவர்கள் வளர்ந்து வந்த சூழ்நிலையை நினைவு கூர்ந்தால் அவர்கள் தங்களுடைய உயரிய ஆதர்

சங்களை ஒரு நாள் விட்டுவிடுவார்கள் என்று என்றால் ஒருக்காலும் எதிர்பார்த்து இருக்க முடியாது. என்னுடைய இவ்வழியில் இன்னமும் எஞ்சி நிற்கும் சிலரும் பிரிந்து சென்றுவிட்டால், ''என் வழி சரிதானா?'' என்று எனக்கே சந்தேகம் வந்துவிடக்கூடும்.

சொந்த நாட்டின் வேதம், புராணம், முனிரிஷி, இதிகாசம் எல்லாம் போய்விட்டன. எல்லோர் கண்ணும் ரஷ்யாவின் மேல். ஏண்டா, ரஷ்யா என்ன உன் சொந்த நாட்டைவிட உயர்வா? அயல் நாட்டுச் சரித்திரத்தை நாங்களும் படித்திருக்கிறோம். மாஜினி, கரிபால்டி, வாஷிங்டன், கோஷூத் ஆகியோரின் அமரக்கதைகள் எங்களையும் மயிர் கூச்செறிய வைத்திருக்கின்றன. அவர்களுடைய கீர்த்தி, நாங்கள் மாணவர்களாக இருந்த காலத்தில் எங்களை உற்சாகமூட்டியிருக்கிறது. ஆனால் அதற்காக நாங்கள் வீர சிவாஜியின் கதையை மறக்கவில்லை. விவேகானந்தரின் மொழிகளை விடுத்து மார்க்ஸின் தப்புகளில் மாட்டிக் கொள்ளவில்லை. மகாத்மாவை விட ஸ்டாலினை உயர்ந்தவர் என்று சொன்னால் ஒத்துக்கொள்ள முடியாது. அயல் நாட்டாரின் எழுத்தைப் படிக்க வேண்டாமென்று சொல்லவில்லை. நன்றாய்ப் படியுங்கள். நாங்களும் தான் பென்தம், ஸ்பென்சர், மில் ஆகியவர்களைப் படித்தோம். ஆனால் அதற்காக நம் சொந்த சரித்திரத்தை ஒரேயடியாய் மறந்து விட்டோமா என்ன?

பீலு முதலில் காங்கிரஸ் சோஷலிஸ்டு பார்ட்டியில் சேர்ந்தபோதே அவனுக்கு இதையெல்லாம் நான் விளக்கியிருந்தால், இப்படி நேர்ந்திராது. நீலுவைக் கட்டுப்படுத்தி இருந்தால், அவனும் கையை விட்டுப் போயிருக்க மாட்டான். காதை இழுத்தால் தலையும் கூடவே வருகிறது. அண்ணன் எது செய்தாலும் நல்லதோ, கெட்டதோ, புரிந்ததோ, புரியவில்லையோ, அதையெல்லாவற்றையும் அப்படியே காப்பி அடிப்பான் நீலு. ஆனால் பலவந்தப்படுத்தி யாரையும், எந்தக் கொள்கையையும் ஒப்புக்கொள்ளச் செய்ய முடியுமா என்ன? அதுவும் புத்திசாலிகளை. பீலு வயது வந்த பிள்ளை. கட்டாயப்படுத்தி அவனை அடக்க முடியுமா என்ன? முடியுமென்றாலும் எதற்காக? அவன் கொள்கை என் கொள்கையுடன் ஒத்துப்போகவில்லை என்பதற்காகவா? அவன் தனித்துவத்திற்கு நான் இவ்வளவு கூட மரியாதை கொடுக்காவிட்டால் நான் பின்பற்றுகிற வழியின் பொறுமையும் மதபேதத்தை மதிக்கும் தன்மையும் என்னவாவது? அவர்கள் ஒன்றும் அறியாப் பிள்ளைகள் அல்ல. நான் புரியவைக்க முற்படுவதைத் தாங்களாகவே சிந்தித்துப் பார்க்க மாட்டார்களா என்ன? அவர்கள் என் கொள்கையோடிசைந்த அரசியல் சூழ்நிலையுள்ள ஆசிரமத்தில்தானே வளர்ந்திருக்கிறார்கள்? இந்தக் கொள்கையின் சூட்சுமமான பேதா பேதங்களை

அறிந்தவர்கள். இவற்றைப்பற்றி எத்தனை சர்ச்சைகள்! எத்தனை முறைகள், எத்தனை இடங்களில் கேட்டிருக்கிறார்கள்! பீலு மூன்று மாதம் சாபர்மதி ஆசிரமத்திலேயே இருந்திருக்கிறான். மகாத்மாவின் பாதங்களைத் தொட்டு வணங்கும் வாய்ப்பு பீலு, நீலு இருவருக்கும் கிடைத்திருக்கிறது. பூர்ணியா ஆசிரமத்தில் மகாத்மாஜியுடன் கூடப் போட்டோவும் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். சில நாட்களுக்கேயானாலும், மகாத்மாவுடன் பழகிய இவர்கள் மேல் அவருடைய சாயல் கொஞ்சமாவது பட்டிருக்கவேண்டும். அப்படிப் பட்டிருக்காவிட்டால் அதற்கு பிறகு அவர்களை நான் மாற்ற முயல்வது அதிகப்பிரசங்கித்தனமாகும்.

நான் கவர்மென்ட் ஸ்கூல் ஹெட்மாஸ்டர் வேலையை விட்டுவிட்டு அரசியல் தளத்திற்கு வந்தபொழுது யாருடைய பேச்சையாவது கேட்டேனா? உலகம் முழுவதும் என்னைத் தடுத்தது. டி. பி. ஐ. என் ராஜீநாமாக் கடிதத்தை மறைத்து வைத்துக்கொண்டு புத்திமதி சொல்ல என்னைக் கூப்பிட்டனுப்பினார்கள். பாட்னாவில் அவருடைய வீட்டில் அந்த ஆங்கிலேயரைப் பார்க்கப் போயிருந்தேன். துரையின் பியூன் வரைக்கும் என் ராஜீநாமா விஷயம் தெரிந்து போயிருந்தது. முன்பெல்லாம் துரையைப் பார்ப்பதற்குக் கார்டு கொடுத்தனுப்பு முன் பியூனுக்கு இனாம் கினாம் கொடுத்துத் திருப்தி செய்ய வேண்டியிருக்கும். எவ்வளவு அலட்சியமாய் இருப்பான்! இப்பொழுது கை கூப்பி, காலைத் தொட்டு வணங்குகிறான். ''மாஸ்டர் ஸாகேப்! காங்கிரஸில் சேர்ந்துட்டீங்க என்று காதில் விழுகிறதே!'' என்கிறான். என்னிடம் அவனுக்குள்ள மரியாதை, எனக்காக ஏதாவது செய்வதற்கான வாய்ப்புக் கிடைத்ததில் அவனுக்கு ஏற்பட்ட சந்தோஷம், நன்றி இவையெல்லாம் அவன் முகத்தில் காண முடிந்தன.

''எனக்கும் சுதேசி பார்ட்டியில் சேர்ந்து உங்களுக்குச் சேவை செய்யவேண்டும் என்றுதான் ஆசை. பையன் வருகிற வருஷத்தில் மிடில் ஸ்கூல் பரீட்சை எழுதிவிடுகிறான். அதன் பிறகு, துரைகிட்டே சொல்லி அவனுக்கு ஒரு வேலைக்கு ஏற்பாடு செய்து விட்டேனானால், நானும் காங்கிரஸ்லே சேர்ந்துடுவேன்'' என்றான். டி. பி. ஐ. க்கு என் மேல் நல்ல மதிப்பு. பி. டி. படித்தபோது அவர்தாம் எங்கள் காலேஜ் பிரின்ஸிபாலாக இருந்தார். கைலாகு கொடுத்து உட்கார வைத்தார். குரு, சிஷ்ய பாவத்திலேயே பேச்சுவார்த்தை நடந்தது. மேல் அதிகாரியும் ஊழியனும் பேசும் தோரணை இல்லை. நான் கிளம்பும் சமயத்திலும் அவர், ''ஸன்யால், தவறு செய்கிறாய். இன்னுமொரு முறை யோசனை செய்'' என்றார். ''இவ்வளவு நாள் தான் தவறு செய்து வந்தேன். இனிமேல் இல்லை'' என்று பதில்

சொல்லிவிட்டு வந்தேன். எங்கள் பேட்டையிலே வசிக்கும் மித்திர் என்ற பெரியவர் காளி கோயிலின் பின்புறத்துச் செங்கல் சூளைக்கு என்னை அழைத்துப் போய் மிக்க வேதனையுடன் எனக்கு உபதேசித்தார். ''ஏன் இந்த ரகளையில் எல்லாம் மாட்டிக்கொள்கிறாய்? கல்யாணம் செய்து கொண்டிருக்கிறாய்; மனைவி, குழந்தைகள் வேறே இருக்கு. ஒரேயடியாய் முன்னே பின்னே பார்க்காமல் இப்படிக் குதிப்பது நல்லதா? பாரதம் முழுவதற்கும் சுதந்தரம் கிடைத்தால் பூர்ணியாவுக்கும் கிடைத்துவிட்டுப் போகிறது. இந்தச் சிறு இடம் விட்டுப் போய் விடாது'' என்றெல்லாம் எடுத்துரைத்தார்.

எவ்வளவு பேர் எவ்வளவு விதத்தில் தங்கள் கருத்துக்களைத் தெரிவித்தார்கள்! யாருடைய பேச்சையாவது நான் காது கொடுத்துக் கேட்டேனா? இந்த வழியில் வருவதற்கு முன் யாருடனாவது விவாதித்தேனா? ஒரே ஒரு நபரைத்தான் கேட்டேன்: பீலுவின் அம்மாவை. அதுவும் கேள்வி என்று சொல்வதற்கில்லை. என் சங்கல்பத்தை உறுதி செய்து கொண்டபின், வெளிப்படுத்திய அறிவிப்பு. அவள் என்ன நினைத்தாளோ தெரியாது. அவள் சொன்னது: ''உங்களுக்கு எது நல்லது என்று தோன்றுகிறதோ, செய்யுங்கள். பொம்மனாட்டிகளுக்கு என்ன தெரியும்?'' நான் யாருடைய அபிப்பிராயத்தையும் கேட்டு நடக்கவில்லை. எனக்குச் சரியென்று பட்டதைச் செய்து வந்து கொண்டிருக்கிறேன். இப்படியிருக்கும்போது பீலு போன்றவர்கள் ஏன் என் அபிப்பிராயத்தைக் கேட்டு நடக்க வேண்டும்?

ஏதோ ஒரு சர்க்காவிலிருந்து மாட்டு வண்டி சக்கரத்திலிருந்து எழும் சப்தம் போல், 'கிரிச், கிரீச்' என்ற சப்தம் கேட்கிறது. திரும்பத் திரும்ப முடிவில்லாமல் எழும் இந்த ஒலி காதைத் துளைக்கிறது. சிமெண்டுத் தரைமீது இரும்புப் பாத்திரத்தை இழுப்பது போல் கர்ண கடூரமாக இருக்கிறது. மிருதுவான சதையில் உப்புக் காகிதத்தைத் தேய்ப்பது போல் இருக்கிறது. ஜெயிலுக்கு வருவதற்கு முன் என்னிடம் இந்த நரம்புத் தளர்ச்சியை நான் உணர்ந்ததில்லை. என் நரம்புக் கோளங்கள் எதையும் தாங்கும் என்று கர்வப்பட்டுக் கொண்டிருந்தேன்.

இந்தத் தடவை ஜெயிலுக்கு வந்த பிறகு என்ன ஆகிவிட்டது எனக்கு? நிச்சயமாய் ராம்தேனியின் சர்க்காவிலிருந்துதான் இந்தச் சப்தம். கையிலிருந்த நூலிலிருந்து, என் கண் ராம்தேனின் சர்க்காவின் பக்கம் செல்லுகிறது. ராம்தேனின் கண்களுடன் சந்திக்கின்றன. ராம்தேன் சர்க்காவை விட்டு எழுந்து தன் கட்டிலிருக்கும் இடத்துக்கு ஓடுகிறான். எல்லோரும் அவனையே பார்க்கின்றனர். இதென்ன மரியாதைக் குறைவு என்று எண்ணுவது தோன்றுகிறது. சமூக நூல் நூற்பின் நடுவில் இப்படியா திடுதிப்பென்று எழுந்து செல்வது?

ராம்தேனின் திரும்பி வருகிருன், கையில் ஒரு பாட்டில் எண்ணெயுடன், சர்க்காவில் சொட்டுச் சொட்டாய் எண்ணெய் விடுகிருன். பிறகு நூற்கத் தொடங்குகிருன். நூற்பதின் நடுநடுவே எல்லாரும் என்னைத் திரும்பித் திரும்பிப் பார்க்கின்றனர் என்பதை உணருகிறேன். என் முகத்தில் ஏதாவது மாறுதல் தெரிகிறதா என்ன? சில நாட்களாக என் மனத்தில் நடந்து கொண்டிருக்கும் போராட்டம், சந்தேகம், என் முகத்தில், கண்களில் அவர்களுக்குப் புலப்படுகிறதா என்ன? ஒரு வேளை கோடைக் காலத்தில் உபவாசம் இருப்பதனுல் வறண்டு உலர்ந்து காணப்படுகிறேனே என்னவோ? ஊஹூம், உபவாசந்தான் வெகு நாட்களாய், பிரதி திங்கள் கிழமையும் அனுசரித்து வருகிறேனே? உபவாசத்தினுல் ஒன்றும் இல்லை. இவர்களுடைய அனுதாபத்திற்கு நான் என்ன கைம்மாறு செய்ய முடியும்? சில விநாடிகளாவது என் மனக் கலக்கத்தை நான் மறக்க வேண்டும் என்பதற்காக என் கூடவே நூற்கிருர்கள். எல்லாருமாய்ச் சேர்ந்து என் கவலையில் பங்கு கொண்டு என் மனத்தை இலேசாக்கப் பார்க்கின்றனர்.

தலை நிறையச் சுருள் மயிர். நல்ல சிவப்பு, பெண்களது போன்ற நீண்ட முகம். குறுகிய மோவாய், கனத்த சிந்தனைகள் நிரம்பிய ஆழ்ந்த திருஷ்டியுள்ள கரிய கண்கள். நான் பார்க்கும்போதெல்லாம் பீலு தன் கண்களைத் தாழ்த்திக் கொள்வான். ஆனுல் அதே கண்களில் வஜ்ராயுதத்தின் தீக் கொழுந்தையும் கண்டிருக்கிறேன்.

நான் வேலையை விடுவதற்குப் பல நாட்களுக்கு முன் நடந்த சம்பவம். ஹைஸ்கூலின் அருகில், 'பிளாண்டர்ஸ் கிளப்.' இரண்டு காம்பவுண்டுகளுக்குமிடையே கம்பி வேலி. கிளப்பில், ஏதோ நன்கொடை வசூலுக்காக ஒரு சந்தை நடந்து கொண்டிருந்தது. ஐரோப்பியப் பெண்மணிகள் ஒப்பனைச் சாதனங்கள் விற்கும் கடைகளைத் திறந்திருந்தனர். நீலுவும் பீலுவும் வேலியின்மீது உட்கார்ந்து கொண்டு துரைகளின் விழாவைப் பார்த்துக் கொண்டிருந்தனர். நீலு அப்பொழுது மிகவும் சிறியவன். பீலு, நீலுவை நடுக்கம்பியில் நிற்கவைத்துப் பிடித்துக் கொண்டிருந்தான். 'காஜா குடீ'யில் வசிக்கும் பெரின் துரை திடீரென எங்கள் வீட்டுக்குள் நுழைந்தார். அவர் கையில் ஒரு தடி, கடூரப் பார்வை. என்னிடம் சொன்னுர்:

''லேடீஸ் ஸ்டால் திறந்திருக்கிருர்கள். இருபத்துநாலு மணி நேரமும் வேலியின் மேல் உட்கார்ந்து கொண்டு வாயைப் பிளந்து கொண்டு இந்தப் பசங்களுக்கு அங்கேயே என்ன பார்வை? இதோ பாரும் ஹெட்மாஸ்டர், உம்மால் இந்த அசிங்கத்தை நிறுத்த முடியாவிட்டால் நான் பார்த்துக் கொள்கிறேன்.'' வேலிக் கம்பியின் மேல் உட்கார்ந்திருக்கும் நீலுவின் பக்கம் தடியைக் காட்டிவிட்டு எந்த

விதமான அநாகரிக, அட்டகாச தோரணையில் வந்தாரோ அதே தோரணையில் திரும்பிச் சென்றார். நான் பீலுவைக் கூப்பிட்டுச் சொன்னேன் : ''ஜாக்கிரதை! அந்தப் பக்கம் போகாதே.'' என்னைச் சாதாரணமாக நிமிர்ந்து பார்க்காத பீலுவின் கண்களில் அன்று பௌருஷத்தைக் கண்டேன். கண்களில் தீப்பொறி பறந்தது. ''ஏன், அங்கே சென்றால் என்ன?'' என்று என்னைக் கேட்கிறான். என் பேச்சுக்கு எதிர்ப் பேச்சு! காதைப் பிடித்திழுத்துக் கொண்டு உள்ளே போனேன். அவன் அம்மா அப்பொழுது சமையலறையில் இருந்தாள். ''நீயே பார், உன் சமர்த்துப் பிள்ளை பண்ணும் அக்கிரமத்தை! துரையைப் பகைத்துக் கொண்டால் வேலையில் இருக்க முடியுமா?''

பிற்பாடு என் அறையின் வெளி வராந்தாவில் நிற்கும் என் காதில் பீலு அவன் அம்மாவுடன் தர்க்கம் செய்வது காதில் விழுகிறது. ''ஏன், நம்ம வீட்டு நிலத்தில் இருந்து கொண்டுதானே அவர்களை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தோம்? அதனால் என்ன ஆகிவிட்டது, இப்போ?'' இரவு பீலு சாப்பிடவில்லை. கோபத்தினாலா, அல்லது ரோஷத்தினாலா என்று எனக்குத் தெரியாது. பாதி இராத்திரியில் பீலுவின் அம்மா என்னை எழுப்பினாள். பீலு, படுக்கையில் இல்லை. பீலு எங்கே போய்விட்டான்? ''எங்கே, தேடுங்கள், எல்லாரும் தேடுங்கள்.'' வேலையாள், தர்வான், நான் எல்லாரும் தடியும், லாந்தரும் கையுமாய் வெளியில் புறப்பட்டோம். பீலுவின் அம்மா அழத் தொடங்கி விட்டாள். என்னையும் குற்றம் சொல்லத் தொடங்கி விட்டாள்.

''ஏதோ அறியாக் குழந்தை இவர்களுடைய கேளிக்கைகளை பார்த்து விட்டதினால் இந்தத் துரைசானிகளுக்கு என்ன மான நஷ்டம் வந்து விட்டதாம்?'' எங்கே தேடியும் பீலு கிடைக்கவில்லை. கடைசியில் போர்ட்டிங்கில் இருந்த பையன் ஒருவன் பீலுவைத் தேடிப் பிடித்தான். காலையில் துரைசானிகளின் விழாவை உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருந்த இடத்திலேயே வேலிக் கம்பியின் மேல் உட்கார்ந்திருக்கிறான். விழாவின் விளக்குகள் எப்பொழுதோ அணைந்துவிட்டன. பீலு என்னுடைய கண்டிப்பின் அநியாயத்தை நிரூபிக்க, அவன் வாதத்தின் அசைக்க முடியாத நியாயத்தை எடுத்துக் காட்ட, இந்த இருட்டான குளிர்ந்த இரவில், ஒண்டியாக வந்து உட்கார்ந்திருக்கிறான். கை காலெல்லாம் ஐஸ் போலச் சில்லென்று இருந்தது.

பலவந்தப்படுத்திப் பீலுவை ஒன்றும் செய்ய வைக்க முடியாது. அவனை ஏமாற்றியோ, குஷிப் படுத்தியோ எந்த வேலையையும் யாரும் வாங்கிக்கொள்ள முடியும். ஆனால் அதிகாரம் செய்தால் விறைத்துக்

கொண்டு விடுவான். நிமிஷத்துக்குள் அவனது மென்மையான குணம் எங்கோ மறைந்துவிடும். சுமார் இருபது வருஷங்களுக்கு முன்னுல் இருக்கும். பீலுவின் அம்மாவின் கூச்சலைக் கேட்டு, ஜில்லா காங்கிரஸ் ஆபீஸ் ரூமிலிருந்து வீட்டுக்குக் கிளம்பினேன்.

பீலுவின் அம்மா கத்திக் கொண்டிருக்கிருள் : ''சொல்லு, சீக்கிரம். நீ கட்டாயம் அந்த முஸல்மானின் எச்சிலைச் சாப்பிட்டாய், இல்லையா? ஊம், சொல்ல மாட்டாயா?'' வீட்டில் நுழைந்து பார்த்தால் பீலுவின் அம்மா, கையில் இரும்புக் கரண்டியுடன் நீலுவைப் பயமுறுத்திக் கொண்டிருக்கிருள். இன்னெரு கையில் மூக்கு உடைந்த பீங்கான் டீ பாட். அதில் அவள் ரவை போட்டு வைத்திருப்பது வழக்கம். கோபத்தில் டீ பாட்டைக் கீழே வைக்க மறந்திருக்கிருள். முழு விவரமும் கேட்டேன். நீலு, பீலு இருவரும் பேஹ்பூத் மோத்தாரின் இலந்தைத் தோட்டத்திலுள் பழம் பறித்துத் தின்றபோது பேஹ்பூத் மோத்தாரின் மாப்பிள்ளை இருவரையும் பிடித்து விட்டார். இருவரையும் ஓர் இலந்தை இலையில் துப்பச் சொல்லி, அந்த எச்சிலை அவனவனை நக்கச் செய்து, இனிமேல் இலந்தைப் பழம் பறிக்க வரமாட்டேன் என்று சொல்லும்படியாய்க் கட்டாயப்படுத்தி இருக்கிருர். அதைச் செய்யாவிடில் அடிப்பதாகவும் ஹெட்மாஸ்டரிடம் சொல்லி விடுவதாகவும் பயமுறுத்தி இருக்கிருர். நீலு பயத்தில் எச்சிலை நக்கிவிட்டான். பீலு மறுத்துவிட்டான். இன்னும் ஏதேதோ சொல்லியிருக்கிருன். பிறகு பேஹ்பூத் மோத்தாரின் மாப்பிள்ளை அவர்களை விட்டுவிட்டான்.

இப்பொழுது பேஹ்பூத் மோத்தாரின் பெண் பீலுவின் அம்மாவிடம் வந்து, பீலுவும் நீலுவும் அவள் கணவனை அவமானம் செய்ததாகப் பிராது செய்திருக்கிருள். இதிலிருந்து எல்லா விஷயமும் வெளிப்படையாயிற்று. பீலுவின் அம்மா இன்னமும் அசல் பிரச்னையை அதாவது இலந்தை திருடியதையும், மாப்பிள்ளையை அவமானப் படுத்தியதையும் எடுத்துக் கொள்ளவில்லை. அவளுக்கு முக்கியமாகப் பட்டதையே அதட்டிக் கேட்டுக் கொண்டிருந்தாள். அதாவது, நீலு நக்கியது தன் எச்சிலைத்தாஞ, அல்லது அந்தப் பேஹ்பூத்தின் மாப்பிள்ளையின் எச்சிலையா என்று!

''ஹோ, ஹோ, ஹோ'', என்ற சப்தம் அறை முழுவதையும் நிறைத்துக்கொண்டு, இவ்வளவு சர்க்காக்களின் சப்தத்துக்கு மேலாக எழுகிறது. திடுக்கிட்டு எழுகிறேன். எனது இடப்பக்கத்தில் இரண்டு இடம் விட்டு ஜன்னல், படுக்கை விரிப்புக்களையும், திரைச்சிலையையும் சேர்த்து ஓர் அறை மாதிரி செய்திருக்கிருர்கள். சோஷலிஸ்ட் பார்ட்டியின் 'தாஸ் காபிடல்' வகுப்பு நடப்பது இந்த அறைக்குள் தான். ஃபார்வர்ட் ப்ளாக்கைச் சேர்ந்த நாலு பேரும் இதில் சேருவதில்லை.

அவர்கள் காலையில் ஒன்ருய் உட்கார்ந்து பல மார்க்ஸிஸ்டு புத்தகங்களைத் தாங்களே படித்துக் கொள்வார்கள். தாஸ் காபிடல் படிப்புக்கு நடுவே இத்தனை சிரிப்பு ஏனே, ஆச்சரியந்தான்.

இந்தப் புழுக்கத்தில் இப்படி அறைக்குள் திரைகளைப் போட்டுக் கொண்டு உட்கார வேண்டியதின் அவசியம் என்ன? இந்தக் காலத்துப் பிள்ளைகளின் போக்கே விசித்திரம்! திரைச்சீலைகளுக்கு மேலே புகை வளையம் வளையமாக எழும்புகிறது. சிகரெட்டு குடிப்பதற்காக இப்படித் திரைச்சீலைகளைப் போட்டு வைத்திருக்கின்றனரோ? இருக்காது. அந்த நாளெல்லாம் போய்விட்டது. இலைமறைவு காய் மறைவாகச் சிகரெட்டு, சுருட்டு குடிப்பதெல்லாம் இந்தக் காலத்தில் இல்லை. அவர்கள் கட்சி காம்ரேட் பஞரஸி, பீலுவைவிட எவ்வளவு சின்னவன், பீலுவின் மாணவன் கூட. என்னிடமே வந்து பீலுவைப் பற்றிப் பேசுகிருன், வாயின் ஓரத்தில் ஒரு சிகரெட்டோடு.

''நீங்கள் எவ்வளவு பேர்?'' மணி பதினென்ருகி விட்டதுபோல் இருக்கிறது. புது வார்டர் வந்துவிட்டான். தொங்கும் திரைமறைவின் நடுவிலிருந்து ஒருவன் வார்டரைப் பார்த்துக் கத்துகிருன்: ''போ, போ; சும்மா சத்தம் போடாதே!'' இன்னெருவன், ''வார்டில் எத்தனை பேரா? ஏழரை பேர்'' என்கிருன். வார்டர் கோபத்துடன் முணுமுணுத்துக்கொண்டே போய்விடுகிருன். ''கடை ரொட்டியும் கோழி முட்டையும் அடிக்கிருவனுக இவங்க. காந்தி காரியமா ஜெயிலுக்கு வந்து விட்டார்களாம்.''

திரை மறைவிலிருந்து ஒரு குரல்: ''வைஜய நாத், சீக்கிரம் எழுந்திரு. ராஸ்கல் தலையில் ஒரு கூஜா ஜலம் கொட்டு.'' எல்லாரும் ஹோ, ஹோ என்கிருர்கள். காம்ரேட் வைத்யநாத் ஒரு கிளாஸ் தண்ணீருடன் வெளியில் வருகிருன். நோஞ்சலான வற்றிய உடல். பைஜாமா அணிந்திருக்கிருன். மேலே ஜிப்பா. ஜிப்பாவின் காலர் தூக்கியிருக்கிறது. சோஷலிஸ்டுகள் எல்லாரையும் பார்த்துவிட்டேன். துணிக்கிடங்கு தையல்காரக் கைதிக்குப் பீடி சீடி லஞ்சம் கொடுத்து இதே மாதிரி உடுப்பு தைத்துக் கொள்கிருர்கள். இவர்கள் மேல் சொக்காய் இல்லாமல் வெற்று உடலாய் இருப்பதில்லை. இவர்கள்தான் புவியில் மறுபடியும் சுயராஜ்யம் கொண்டுவரப் போகின்றனராம்!

பதினென்று அடித்தாகிவிட்டது. எல்லாரும் நூற்பதை நிறுத்தி விட்டனர். பஞ்சு, நூற்கண்டு எல்லாவற்றையும் சரிசெய்து கொண்டு எழுந்திருக்கின்றனர். ஒரேயடியாய் இரண்டு மணி நேரத்துக்கு மேல் எல்லாராலும் நூற்க முடியுமா என்ன? தனிநபர்ச் சத்தியாக்கிரகத்தின் போது ஹஜாரிபாக் ஜெயிலில், காந்தி ஜயந்தி தினத்தன்று சேர்ந்தாற்போல் எட்டு மணி நேரம் நூற்றபின் என் ஏறு நீரகத்தில்

கோளாறு ஏற்பட்டுவிட்டது. அதிலிருந்து ஒரே சமயத்தில் நீண்ட நேரம் நூற்க முடிவதில்லை. வேறு காரணத்தினால் அந்தக் கோளாறு ஏற்பட்டிருக்கலாம். ஆனால் ஜெயில் டாக்டர் இப்படி ஒரேயடியாக ஒரே இடத்தில் உட்கார்ந்திருப்பதால் தான் இந்த உபாதை என்றார். டாக்டர் அபிப்பிராயத்துக்கு எதிர்ப் பேச்சு பேசமுடியுமா? யாவரும் தம்தம் இருப்பிடம் சென்று விட்டனர். சதாசிவ், மேஹர்சந்த் இருவரும் மட்டும் நின்று கொண்டிருக்கின்றனர்.

மேஹர்சந்த் சொல்கிறான்: ''மாஸ்டர் ஸாஹேப், ஏதாவது கொஞ்சம் சாப்பிடுங்கள். நாள் முழுவதும் பட்டினி கிடந்தாச்சு. மேஜை மேல் சாப்பாடு இருக்கு. இரண்டு துண்டு ரொட்டி எடுத்துக் கொள்ளுங்கள்.'' ஒரு காகிதத்தில் எழுதிக் காண்பித்தேன், ''இந்தப் புழுக்கத்தில் சாப்பிடப் பிடிக்கவில்லை'' என்று. மேஹர்சந்த் கொஞ்சம் தயிர் கொண்டு வருகிறான். ''எங்கள் வீட்டிலிருந்து அனுப்பியிருக்கிறார்கள். பசுந்தயிர், வீட்டிலிருந்து வந்தது என்பதால்தான் இவ்வளவு வற்புறுத்துகிறேன். நீங்கள் காந்தி சேவா சங்கத்து மெம்பர். எருமைத் தயிர், நெய் சாப்பிட மாட்டீர்கள் என்று யாருக்குத் தெரியாது? அதனால் தான் உங்களுக்கு ஜெயிலில் பால், தயிர், நெய் கிடைப்பதில்லை. தெய்வாதீனமாய் எங்கள் வீட்டிலிருந்து வந்திருக்கும் இதையும் நீங்கள் சாப்பிடாவிட்டால் எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கும்!''

மேஹர்சந்த் கைகளைக் குவித்து, நாடக பாணியில், ''இந்த என் வேண்டுகோளை நீங்கள் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். எங்கள் 'ஃபாதர்' கொண்டு வந்திருக்கிறார்'' என்றான். மறுபடியும், 'ஃபாதர்' என்று சொல்கிறான். பீஹாரில் சிறிது ஆங்கிலமே கற்றிருந்தாலும் அம்மா, அப்பா, அக்கா, அண்ணன் என்று சொந்த பாஷையில் சொல்ல மாட்டார்கள். ஸிஸ்டருக்குக் கல்யாணம் என்பார்கள். ஒருவன் தலையை மொட்டை அடித்துக் கொண்டிருப்பதற்குக் காரணம் கேட்டால், 'மதர் டெத் ஆகிவிட்டாள்' என்பான். பேச்சின் நடுவில் பல ஆங்கிலச் சொற்களைப் பிரயோகிக்கிறார்கள் என்பதல்ல, ஆனால் தந்தை, தாய், சகோதரி ஆகிய சொற்களைச் சொந்த மொழியில் உபயோகிக்க வெட்கப்படுகிறார்கள்.

''ஃபாதர் திரும்பத் திரும்ப என்னிடம் சொல்லிவிட்டுப் போனார், மாஸ்டர் சாஹேப்பைச் சாப்பிடச் செய்து கவனித்துக்கொள், என்று. வறட்டி அடுப்பில் நன்றாய் வற்றக் காய்ச்சிய பாலின் ஃபஸ்ட் கிளாஸ் தயிர்.'' இவ்வாறு தொந்தரவு செய்தான். என்ன சொல்லித் தப்பித்துக் கொள்வது? கொஞ்சமேனும் சாப்பிடாவிட்டால் இவர்களுக்கு மிகவும் வருத்தமாயிருக்கும். சைகையினால் சம்மதத்தைத் தெரிவிக்கிறேன். இவர்கள் விடாக்கண்டர்கள். ஒப்புக்கொள்ளா

விட்டால் ஒரு மணி நேரம் என் காதைத் துளைத்து விடுவார்கள். அவர்களை எனக்கு நன்ருய்த் தெரியும். மேஹர்சந்த், சதாசிவ் இருவரும் ஒருவரோடொருவர் கண்களாலேயே பேசிக்கொள்கின்றனர்.

சதாசிவ் தான் மேஹர்சந்தைத் தூண்டியிருக்க வேண்டும். அவனுக்குச் சுயமாகத் தைரியம் கிடையாது. அவர் ஒப்புக்கொள்ளும் வரை விடாதே என்று சொல்லி இருந்தான் போலும். மேஹர் சந்த் சர்க்காவை மூடி எடுத்து வைக்கிருன். பிறகு ஜமக்காளங்களை மடித்து ஒன்ருக ஒரு மூலையில் வைக்கிருன். தண்ணீர் டிரம் இருக்குமிடத்தில் என் துண்டையும், குவளையையும் வைத்துவிட்டு, கட்டிலின் அடியில் இருந்த என் பாதரட்சையை எடுத்து என் முன்னே வைக்கிருன். என் சொந்தக் குழந்தைகளிடமிருந்து கூட இம்மாதிரியான சிசுருஷை எனக்குக் கிடைத்ததில்லை. ஆனுல் நானும் அவர்களிடமிருந்து இதை எதிர்பார்த்ததில்லை.

வேலையை விடுவதற்குமுன் விடுமுறை நாட்களில் நீலு, பீலுவை வெயிலில் விளையாடாமல் தடுக்கும் உபாயமாக என் தலையிலிருந்து நரை மயிர்களை எடுக்குமாறு மட்டும் சொல்லியிருக்கிறேன். மேலும் 1927-லிருந்து நான் வேண்டுமென்றே யாரிடமிருந்தும் எந்த மாதிரியான சேவையையும் எதிர் பார்ப்பதில்லை. பீலுவின் அம்மாவுக்கு இது விஷயமாக எவ்வளவோ மனத்தாங்கல். அழுதிருக்கிருள். புதிய மரப் பாதரட்சைகளை நாலைந்து மாதங்களுக்கு முன் ராம் சரித்தர்ஜி எனக்கு அன்பளிப்பாகக் கொடுத்தார். அதனுல் மறுக்க முடியவில்லை. பிறகு அது பிடித்துப் போய் விட்டது. பின்னர் பிசுன் தேவ் ராம்சரித்த ரிடம் கேட்பது காதில் விழுந்தது. ''மேல் வாருக்காக எவ்வளவு கொடுத்தீர்கள்?''

''மேல் தோலுக்கு 2 பீடி, கட்டைக்கு 6 பீடி.''

பிசுன்தேவ் திகைத்து, ''என்ன அநியாயம், 10 பீடிக்கு ஒரு ஜெயில் கம்பளியே கிடைக்குமே. நீங்கள் மார்க்கெட்டையே கெடுத்து விடுகிறீர்கள்'' என்ருர்.

அப்படிச் சொல்லு. அதனுல்தான், அகலமாய்ப் புதிய முறையில் அழகாகச் செய்யப்பட்டிருக்கிறது. ஜெயில் ஃபாக்டரி கம்பளியின் கலரில், மேல் வார் செய்யப்பட்டிருக்கிறது. மரச்செருப்பைத் திருப்பிக் கொடுத்தால் மரியாதைக் குறைவு என்று திருப்பிக் கொடுக்கவில்லை. ஆனுல் உபயோகிக்கவும் இல்லை. கட்டிலின் அடியில் வைத்துவிட்டேன். சதாசிவ் மறுபடியும் வெளியில் இழுத்துவிட்டிருக்கிருன். இவர்களுக்கு நடுவே சொந்தக் கொள்கைகளையும் நீதிகளையும் அனுசரிப்பது ரொம்பச் சிரமமாய் இருக்கிறது. மரச்செருப்பைத் திரும்பவும் கட்டிலுக்கு அடியில் தள்ளினேன். பீப்பாயின் அருகில் சென்று முகம், கைகளைக்

கழுவிக் கொண்டேன். சதாசிவ் துண்டை எடுத்துக் கொடுத்தான். பீப்பாய்க்கு அடுத்த இடம் தாஸ்ஜியுடைய்து. அவரது குறட்டை அழைக்கிறது. ஒவ்வொரு முறை சுவாசம் விடும்போதும் வாயிலிருந்து காற்று வெளியே வருகிறது. இரு உதடுகளும் அசைந்து ஒருவிதச் சப்தம் உண்டாகிறது. குதிரை புல்லைத் தின்னும்போது நடுநடுவில் உண்டாகும், ப...ர்...ர் என்ற சப்தம் போல் இருக்கிறது.

அவர் சரியாய் விளக்கு வைத்ததும் படுத்துவிடுவார். படுத்த மாத்திரத்தில் தூங்கியும் விடுவார். பிறகு இரவு இரண்டு மணிக்கு விழித்துக் கொள்வார். இந்த வெப்பத்திலும் இரவு எட்டு மணிக்கே எப்படித் தூங்குகிறார்? ராமாயண, மகாபாரதத்தில் 'நினைத்தபொழுது மரணம்' என்று கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனால் நினைத்த உடன் நித்திரை என்பதும் சாதாரண சாதனையல்ல. அஸ்தமித்த பிறகு அறையில் பிரார்த்தனை நடக்கும். அத்தனை களேபரத்தினாலும் சிறிதும் பாதிக்கப்படாமல் அவர் தூங்கத் தொடங்குவார்.

என் கட்டிலின் அருகில் மேஹர்சந்த் தயிரை எடுத்து மோர் ஆக்கு கிறான். என்னைக் கேட்கிறான்: ''வெல்லம் போடவா, அல்லது பூரா சர்க்கரையா? என்னிடம் கொஞ்சம் சர்க்கரை இருக்கிறது.'' வெல்லமே போடுமாறு சைகை செய்கிறேன். ஒரு செம்பு மோர் தயார் செய்துவிட்டான். சதாசிவ் கம்பளியை விரித்து அதற்கு முன்னால் தரையை ஜலத்தால் சுத்தம் செய்து, செம்பையும் தம்ளரையும் வைக்கிறான். நான் அலுமினிய தம்ளரில் மோரை ஊற்றிக்கொண்டேன். நல்ல கெட்டித் தயிர் இல்லை. ஜெயில் தம்ளர்களும் விசித்திரமானவை. அவற்றிலிருந்து குடித்தால், நிச்சயம் மேலெல்லாம் கொட்டிப் போகும். துணியும் நனையும். மிகவும் இனிப்புச் சேர்த்து விட்டான்.

மேஹர்சந்த் பேசிக்கொண்டு இருக்கிறான். ''இன்று காலை எனக்கு இண்டர்வியூ. இரண்டு சட்டித் தயிர் வந்தது. ஒரு சட்டி எள் உருண்டைகள். ஆபீஸ் ஆசாமிகளின் பேராசை யாருக்குத் தெரியாது! ஜெயிலர் ஹெட்வார்டரிடம் சொல்லுகிறார்: 'தயிர்ச் சட்டியில் குச்சியை நன்றாய் நுழைத்து அடிவரைக்கும் பார், தயிரைத் தவிர வேறு ஏதாவது இருக்கிறதா என்று. அப்புறம் தனியாக எடுத்துவை. டாக்டர் வந்து சரி என்று சொல்லட்டும்' ஜெயிலருக்கு என் மேல் ஏன் இத்தனை கடுப்பு என்று யாருக்குத் தெரியும்? வேறு யாரிடத்திலும் இப்படியில்லை. ஹெட் வார்டருக்கு நாலு உருண்டை கொடுத்துவிட்டுப் பேசாமல் எடுத்து வந்துவிட்டேன்.''

பிறகு மனத்தில் என்ன நினைத்துக் கொண்டானோ? என்னிடம் சொல் கிறான்: ''எள்ளுருண்டை சர்க்கரை போட்டுச் செய்தது. அதனால்

தான் உங்களுக்குக் கொடுக்கவில்லே. இன்னும் ஒரு தம்ளர் குடிக்கிறீர்களா?'' நான் மறுத்தேன். ஒரு தம்ளரே குடிக்க முடியவில்லே. அதற்கு மேல் இன்னும் ஒரு தம்ளரா? வாய், கையைக் கழுவிக்கொண்டு திரும்பவும் ஜமக்காளத்தில் வந்து உட்கார்ந்தேன்.

மேஹர்சந்த் தம்ளரிஞல் செம்பைத் தட்டி, ''வாருங்கள், வாருங்கள், மோர் குடியுங்கள்'' என்று கத்துகிருன். பிசுன் தேவைத் தவிர வேறு ஒருவரும் எடுத்துக் கொள்ளவில்லே. சர்க்கரை போட்டிருந்தால் சில பேர் எடுத்திருப்பார்கள். பிசுன் தேவ் அரைச் சேர் அளவு ரொட்டி தின்பான். சின்ன வயசு. திடகாத்திரமான உடல். இருந்தாலும் கூடப் பகலாஞலும் இரவாஞலும் சாப்பாட்டுக்குப் பிறகு ஒரு பெரிய செம்பு நிறைய மோர். எப்படித்தான் குடிக்கிருனே?

இந்த வார்டிலேயே வெல்லம் சேர்த்த பானங்களே ஒருவரும் விரும்புவதில்லே. பீலுவோ? மூன்ரும் வகுப்புக் கைதிகளுக்கு ஒரு சிறு துண்டு வெல்லம், ஒரு பச்சை மிளகாய் அல்லது வெங்காயம் கிடைத்தாலும் அவர்கள் நன்றியுடையவர்களாக இருப்பார்கள். 'ஸ்கர்வி' வராமல் இருப்பதற்காக வாரத்தில் இரு நாட்கள் இவர்களுக்குச் சிறிதளவு ஊறுகாய் கிடைக்கும். இந்த அரிய பண்டம் கிடைக்கும் நாட்களில் ஊறுகாயுடனேயே எல்லாச் சோற்றையும் தின்றுவிடுவார்கள். பிறகு பருப்புடன் சாப்பிடச் சோறு ஏது? வெகு கஷ்டப்பட்டுச் சண்டை போட்டு, பருப்பில் போடச் சொல்லப்பட்ட மிளகாயும் வீணே. பீலுவுக்கு இரு வேளேயும் அரிசிச் சோறு சாப்பிட்டுத்தான் பழக்கம். இங்கே அதுவும் கிடைக்குமோ, இல்லேயோ? யாருக்குத் தெரியும்? ஜெயில் கோட் பிரகாரம் இருவேளே சோறு உண்ணுவது, பெங்கால் டயட். அது கிடைக்காவிட்டால் மாலேயில் இரு கையளவு, இரு ரொட்டிகள் கிடைக்கும். இந்தப் பாதி வெந்த வறட்டுப் பண்டத்தைத் தின்ன வேண்டுமென்ருல் வஸ்தாதாகவோ, பயில்வாஞகவோ தான் இருக்கவேண்டும். சாதாரண வங்காளிகளால் முடியாது.

பீலுவை நினேத்துக்கொண்டு தான் இந்தத் தடவை நான் ஜெயிலில் பழம், கிழங்கு, பால் முதலியவை சாப்பிடுவதை விட்டுவிட்டேன். கொசுவலே போட்டுக் கொள்வதையும் நிறுத்திவிட்டேன். பீலுவுக்கு இந்தத் தகவலேத் தெரியப்படுத்த வேண்டுமென்று ஆசையாயிருக்கிறது. அவனுக்கு இதஞல் ஓர் திருப்தி ஏற்படலாம். அப்பா அவனேப் பற்றிக் கொஞ்சமாவது நினேத்துக் கொண்டிருக்கிருர் என்பதை அவன் புரிந்துகொள்ளக் கூடும். பீலுவுக்குத் தூக்குத் தண்டனே இல்லாவிட்டால் இந்த நேரத்தில் இந்த மாதிரி ஒரு திரையால் அடைக்கப்பட்ட அறையில் உட்கார்ந்து ஒரு குழுவினருக்கு 'டாஸ் காபிடல்' படித்துக் கொண்டிருப்பான். பீலு இங்கிருந்தாஞல் காம்ரேட் லட்சுமி

சதுர்வேதி 'தலைவனாக' இருக்க முடிந்திருக்காது. மணிஹாரி காட்டில், அவர்களுடைய காரியக் குழுவின் கோடை டிரெயினிங் காம்ப் ஆரம்பித்திருந்தபோது, பீலுதான் அதன் பிரஸிடெண்டாக இருந்தான். காம்ரேட் பனரஜி கூடச் சுருட்டைக் குடித்துக்கொண்டே என்னிடம் சொன்னான்: பீலு பாபு மாதிரி எங்கள் கூட்டத்தில் யாரும் சொல்லித் தர முடியாது. அதனால்தான் ஸோன்பூரில் எங்கள் பிரதேச 'ஸம்மர் காம்ப்' ஆரம்பித்தபொழுது, Dialectical Materialism கற்றுத் தரும் பொறுப்பு பீலுவின் மேல் விழுந்தது.''

சந்தர்ப்பவாதிகளை ஒதுக்கி உண்மை உழைப்பாளிகளை மட்டும் எடுத்துக் கொண்டால், எங்கள் குழுவின் அறிவுஜீவிகளிடையே பீலுவின் ஸ்தானம் மிக உயர்ந்தது. ஆனால் அவனிடம் 'மிலிட்டன்ஸி' கொஞ்சம் குறைவு. அதனால்தான் எங்கள் பார்ட்டியின் மிக உயர்ந்த ஸ்தானத்தை அவனால் எட்ட முடியவில்லை. 'காம்ரேட் பனரஜி' இன்னும் ஏதேதோ சொன்னான். எல்லாம் மனத்தில் இருக்கிறதா என்ன? பேசும்பொழுது அவர்கள் என்ன என்ன வார்த்தைகளெல்லாமோ உபயோகிக்கின்றனர். அவற்றுக்கு உண்மையான அர்த்தம் என்ன என்பதே எனக்கு விளங்குவதில்லை. என்ன சொல்கிறார்கள் என்பதே புரிவதில்லை. சாதாரண நடைமுறை பாஷை இவர்களால் பேச முடியாதா என்ன? வீட்டிலும் இப்படித்தான் பேசுவார்களோ? அவர்கள் பேச்சு பாதிக்குமேல் எனக்கே புரிவதில்லை.

இவர்களுடைய அம்மா, சகோதரிகளுக்கு எப்படிப் புரியுமோ? கதை கேட்டதில்லையா? ஒருவன் ஆங்கிலம் கற்றுக் கொள்ள ஆரம்பித்ததிலிருந்து தன் அன்னையிடமும் ஆங்கிலத்திலேயே பேசுவது என்று தீர்மானித்திருந்தானும். அவளுக்கோ ஆங்கிலம் தெரியாது. இவன் வியாதி வந்து, தாகத்தில் உயிர் விடுகிறான். ஆனாலும் ஆங்கிலத்தில், ''வாட்டர், வாட்டர்'' என்கிறான். அவன் தாயாருக்கு இது புரியவே இல்லை. அது போலத்தான் இருக்கும் இவர்கள் நிலையும்.

பீலுவுந்தான் அவர்களிடையே ஒரு தலைவன். ஆனால் அவனிடம் இம்மாதிரி பழக்கங்கள் உண்டு என்று என் காதில் விழுந்ததில்லை. கட்சிக் கூட்டங்களில் எப்படிப் பேசுவானோ, தெரியாது. ஆனால் அவன் வீட்டில் மட்டும் விநோதமான, கம்யூனிஸக் கருத்துகளுடன் தொடர்புள்ள பதங்களைப் பயன்படுத்தி நான் கேட்டதில்லை. இவர்கள் அணியும் பைஜாமாவும் உயரமான காலர் உள்ள ஜிப்பாவையும் அவன் அணிந்தும் பார்த்ததில்லை. புகையிலையின் நெடியையும் ஒரு நாளும் அவனிடம் கண்டதில்லை. 'மிலிட்டன்ஸி' என்ற வார்த்தைக்கு நீங்கள் கற்பித்துக் கொள்ளும் அர்த்தம் ஒருவேளை எனக்குப் புதிராக இருக்கலாம். எவன் இன்று தேசத்துக்காகத் தூக்கில் தொங்கப்

போகிருனே அவன் வன்முறையாளன் அல்ல என்று நீங்கள் கூறுகிறீர்கள். அவன் எப்படி வன்முறையாளன் ஆவான்? உங்கள் கண்களில் வற்றி உலர்ந்த அந்த வைத்யநாத்தான் வன்முறையாளன். சற்று முன் ஒரு தம்ளர் தண்ணீரை எடுத்துக்கொண்டு வார்டர்மேல் கொட்டுவதற்காக ஓடினுனே, அவன்தான் உங்களுக்கு வன்முறையாளன். இது என்ன விபரீதச் சிந்தனை! பீலு வன்முறையாளனாக இருப்பது கர்வப்பட வேண்டிய விஷயமா என்ன? ஐய்யயோ! மகாத்மாஜி? என்னை மன்னித்து விடு. பனாரஸி சரியாய்த்தான் சொல்லியிருக்கிறுன். பீலு என் வழியில், ஆசிரமத்துச் சூழ்நிலையில் வளர்ந்தவன். மிலிடண்டாக இல்லாமல் இருப்பதுதான் அவன் சுபாவம். சுதாசிவ் என் டேபிள் மேல் காலை ஆட்டிக்கொண்டு உட்கார்ந்திருக்கிறுன். அவன் என்னை உற்று நோக்குகிறுன். நான் திடீரென்று ஏன் கைகளைக் கூப்பினேன் என்பதற்கு அவனாகவே ஏதாவது சமாதானம் செய்து கொண்டிருப்பான்.

''பிசுன்தேவ் பாபு! பிசுன்தேவ் பாபு!'' இடப் பக்கம் 2, 3 இடம் தள்ளிப் பிசுன்தேவின் இடம். இதற்கு எதிரிலிருக்கும் ஜன்னலின் வெளியிலிருந்து ஒரு வார்டர் அவனைக் கூப்பிடுகிறுர். பிசுன்தேவுக்கு வெளியில் கொடுக்கல், வாங்கல் வியாபாரம் எல்லாம் உண்டு. உலகம் தெரிந்த மனுஷன். சொர்க்கத்துக்குச் சென்றுலும் நெல் குத்தி அரிசி வியாபாரம் செய்வான். ஜெயிலுக்குள்ளேயே பெரிய வியாபாரம் நடத்திக் கொண்டிருக்கிறுன். அவன்தான் எங்கள் கிச்சன் மானேஜர். ஜெயில் கண்ட்ராக்டர்களோடு அவனுக்கு வரவு செலவு உண்டு. இந்த வார்டர்தான் ஜெயில் கண்ட்ராக்டர்களுக்கும் அவனுக்குமிடையே தரகன். செய்திகள், சாமான்கள், பரிவர்த்தனை போன்ற காரியங்களைச் செய்து கொடுப்பவன்.

ஒவ்வொரு ஜெயில் கண்ட்ராக்டரும், ரேஷனில் 'ரிக்விஸிஷன்' செய்ததற்குக் குறைவாகவே சாமான்களைக் கொடுத்துவிட்டு, காகிதத்தில் மட்டும் எல்லாவற்றையும் கொடுத்துவிட்டதாய் மானேஜரிடம் கையெழுத்தும் வாங்கிக் கொண்டு போய்விடுவார்கள். பிறகு இரவில் இதே வார்டர் வந்து ரேஷன் கணக்கில் வராத பல்வேறு சாமான்களைத் தந்துவிட்டுப் போவான். ஜெயில் அதிகாரிகளுக்கும் இந்த விஷயம் ஒரு மாதிரியாகத் தெரியும். இதை நிறுத்துவதற்காக ஜெயில் கிடங்கிலிருந்தே 'ஷெடியூல்'படி சாமான்களைக் கொடுக்க ஓரிரு முறை முயற்சி செய்து பார்த்தனர்.

ஆனுல் யுத்தகால நிலவரத்தில் அட்டவணைப்படி எல்லாச் சாமான்களையும் தினமும் கொடுக்க முடிகிறதா? சாமான்களைக் கொடுக்காவிட்டாலும் தொல்லை. மேல் வகுப்புக் கைதிகள் உண்ணாவிரதம்

ஆரம்பித்துவிடுவார்கள். அல்லது லாக் - அப்புக்கு ஒப்புக்கொள்ள மாட்டார்கள். பலத்தைக் காட்டித் தடியடி செய்து பயமுறுத்தி இவர் களைத் தாற்காலிகமாக அடக்கிவிட முடியும். ஆனால் இப்படி நாலு தரம் அடிதடி நிகழ்ந்தால் டிபார்மெண்டில் ஜெயிலருக்கும் சூப்பிரண் டெண்டுக்கும் சாதுரியம் போதாது என்ற கெட்ட பெயர் வந்துவிடும். பிறகு சில நாட்களில் மாற்றலுக்கும் உத்தரவு வந்துவிடும். மேலும் அடித்து, உதைத்து, பயமுறுத்தி விஷயத்தை அடக்கி விடலாம் என்றால், விசாரணைக் கைதிகளும் கூடவே இருப்பதால், அதற்கும் வழி யில்லை. ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டின் உத்தரவு இல்லாமல், அவர்களின் மீது லத்தி சார்ஜ் செய்யலாகாது. ஜெயில் கைதிகளின் எண்ணிக்கை இப்படி நிரம்பி வழிவதால் விசாரணைக் கைதிகளைத் தனியாக ஒதுக்குவ தென்பது இப்போதைக்கு இயலாத காரியம்.

இந்தக் காரணங்களுக்காக ஜெயில்திகாரிகள், அரசியல கைதிகள் அமர்க்களம் செய்யாமல் இருந்தால் போதும் என்றிருக்கின்றனர். ஏதோ ஒன்று, அரை கண்ணில் பட்டாலும் படாததுபோல் இருந்து விடுவது நல்லது. ஏதோ ஒரு மாதிரி ஓடிக்கொண் டிருக்கும்போது குப்பையைக் கிளறிவிடுவானேன்? கண்ட்ராக்டர்களிடமிருந்து அவர் களுக்குக் கிடைக்கும் பங்கில் குறைவு ஒன்றுமில்லை. பிசுன் தேவிற்கும் சௌகரியமாய்ப் போய்விட்டது. பிசுன் தேவும் வார்டரும் தங்களுக் குள் மெதுவாகப் பேசிக்கொள்கிறார்கள். என்னவென்று காதில் விழ வில்லை. பிறகு திடீரென்று பிசுன் தேவ் குரலை உயர்த்தி, ''சிப்பாஹிஜி, கொஞ்சம் மோர் சாப்பிடறியா?'' என்கிறான். வார்டர், ''ஓ! கொடுங்களேன்'' என்கிறான். தம்ளரை ஜன்னல் கம்பி வழியே நுழைக்க முடியவில்லை. ''பொறுங்க! கப் கொண்டு வருகிறேன்.''

பிசுன் தேவ் கோப்பையில் ஊற்றிக் கொடுக்கிறான். ஓ! இதற்காகத் தான் பிசுன் தேவ் சற்று நேரம் முன்பு மேஹர்சந்திடமிருந்து மோர் வாங்கிக்கொண்டானா? என்னடா வெல்லம் போட்ட மோர் குடிப்ப பதற்கு இவன் ஆசைப்படுகிறானே என்று யோசித்தேன். வார்டர் போய்விட்டான். அவன் டியூட்டி வேறு வார்டில் போலும். பூஷண்ஜி தன்னுடைய படுக்கையின் கொசு வலையைப் பிரித்துவிட்டுக்கொண்டு படுத்து விட்டார். அவருடைய படுக்கை பிசுன் தேவிற்கு அடுத்தது. அவர் கொசுவலையின் உள்ளேயிருந்து, ''என்ன வியாபாரம் நடக் கிறது?'' என்கிறார்.

''நியமப் பிரகாரம் இல்லாத வியாபாரந்தான், 'கியாபாரம்.'' கியா பாரம் என்ற வார்த்தைக்கு உண்மையில் அர்த்தம் இல்லை. இது ஜெயிலில் சிருஷ்டியான வார்த்தை. பிசுன் தேவ் தினமும் பீடி கொண்டு வருவான். பகல் வேளையில் மேட்டின் கையில் கொடுத்து,

ஜெயில் ஃபாக்டரியில் விற்பனைக்கு அனுப்பிவிடுவான். அங்கே சாதாரணக் கைதிகள் பத்து பைசா ஒரு கட்டு என்று வாங்குவார்கள். பிசுன் தேவிற்கு இதனால் நல்ல லாபம். மெஸ்ஸில் மெம்பராய் இருப்பவர்கள் ஏதாவது ரகளை பண்ணினால் வாசனைத் தைலம் போன்ற உபயோகமான சிறு சில்லறைச் சாமான்களை நடுநடுவே கொடுத்து அவர்கள் வாயை அடைத்துவிடுவான்.

அது தவிர, ஜெயில் கிடங்குக் கைதிகளுடன் ஏற்பாடு செய்து கொண்டிருந்தான். இரண்டு கட்டுப் பீடிக்குப் பதிலாய் ஒரு தம்ளர் நெய், ஒரு கட்டுப் பீடிக்கு ½ சேர் சர்க்கரை. பீடிதான் ஜெயிலில் 'லீகல் டெண்டர்' நாணயம். பூஷண்ஜி, பிசுன் தேவிடம், ''எனக்கு ஒரு கட்டுப் பீடி கொடு. கம்பளிச் சொக்காயைக் குளிர் காலத்துக்குப் பின் தோய்க்கவில்லை. நாளைக்கு அதைச் சலவைக்கு அனுப்ப வேண்டும். இஸ்திரியும் போட வேண்டும். நாளைக்கு எனக்காகப் பவுண்டன் பேனாவின் மசியும் வாங்கிவரச் சொல்லு, தம்பி'' என்கிறார். சிரித்துக் கொண்டே மேலும் சொல்கிறார்: ''நான் வழிப்பறிச் சாமியார் ('ஜப்டானந்தா') கூட்டத்தைச் சேர்ந்தவன்.''

இந்த 'வழிப்பறிச் சாமியார்' என்பதைப் பற்றி ஒரு புராணமே இருக்கிறது. இதைப்பற்றிப் பிசுன் தேவ் ஒரு பாட்டே எழுதியிருக்கிறான். வார்த்தைகள் நினைவில்லை. ஆனால் அதன் பொருள் வருமாறு: ஜெயிலில் இருக்கும் அரசியல் கைதிகள் அனைவரும் சித்த புருஷர்கள். இந்தச் சாமியார்களை மூன்று வகுப்புக்களாகப் பிரிக்கலாம். முதல் வகுப்பினர்: 'சேகரிக்கும் சாமியார்கள்.' இவர்கள் பீடி அல்லது பணத்தை லஞ்சமாகக் கொடுத்தோ, இனிக்கப் பேசியோ, ஜெயில் டாக்டரைக் குஷிப் படுத்தியோ, ஜெயில் சிப்பந்திகளுடன் நடுநடுவே சண்டை போட்டோ, பலவகைப் பொருள்களைச் சேகரிப்பார்கள். போதைப் பொருள்கள் உட்பட எந்தப் பொருளுக்கும் இவர்களிடம் குறைவு இல்லை. ஒன்றையும் விடாமல் சேகரிப்பதில் விழிப்பாய் இருப்பார்கள்.

இரண்டாவது வகுப்புத்தான் வழிப்பறிக் குழுவினர். இவர்கள் சாதாரணமாய் ஒன்றும் பேசாமல், செய்யாமல் இருப்பார்கள். முகத்தில், கண்களில் ஒன்றிலும் ஆசையில்லாதவர்கள்போல் பாவனை செய்ய முயல்வார்கள். ஆனால் மரத்தின் உச்சாணிக் கிளையில் தியானம் செய்வதுபோல் உட்கார்ந்து கொண்டிருந்தாலும் இலையின் மேல் எப்போதும் கண் வைத்திருக்கும் கழுகு போன்றவர்கள். முதல் வகுப்பினர் கையில் சாமான்கள் சேரும் சமயத்தில் இரண்டாம் வகுப்பினர் தயாராய் வந்துவிடுவார்கள். இவர்களுக்குப் பிடி படுகிற அபாயமும் இல்லை. ஆனால் கிடைப்பது குறைவு. முதல் வகுப்புச்

சாமியாருக்கு, இஷ்டம் இல்லாவிடினும், சிறிது சாமான்களை இவர்களுக்குக் கொடுக்கும் படியாக ஆகிறது. அமர்க்களப்படுத்தக் கூடியவர்களைத் தாஜா செய்து வைத்துக்கொள்ள வேண்டாமா?

மூன்றாவது வகுப்புச் சாமியார்கள் தான், 'முட்டாள் சாமியார்கள்.' இவர்கள் எண்ணிக்கைதான் அதிகம். சேகரிப்பதற்கோ, அல்லது சேகரிக்கப்பட்ட பொருளில் பங்கு பெறவோ இவர்களின் ஆசைக்குக் குறைவில்லை. ரூபாயில் பதினாறு அணா அளவுக்கு ஆசைதான். ஆனால் ஆசை இருந்து என்ன பயன்? சாமர்த்தியம் இல்லாவிட்டால்? இவர்களுக்குப் பயம். பிடிபடா விட்டாலும், தங்களைப் பற்றிக் கடூரமான வதந்திகளை மற்றவர் பரப்பிவிட்டாலோ, அகப்பட்டுக் கொண்டு விட்டாலோ ஒரேயடியாகக் கெட்ட பெயர். ஆனால் இந்த மாதிரி தப்புத் தண்டா காரியங்களிலிருந்து ஒதுங்கி நின்று மற்றவர்களைக் குற்றம் சொல்லும் உரிமையைக் காத்துக்கொள்வதுதான் புத்திசாலிகளுடைய காரியம்!

ஒரேயடியாகச் சத்தம் போட்டுக்கொண்டு வலப் பக்கத் திரை மறைவு அறையிலிருந்து எல்லாரும் வெளியே வருகின்றனர். வகுப்பு முடிந்துவிட்டது. பகல் முழுவதும் நேரம் இருக்கிறது. ஆனால் இவர்கள் மட்டும் இரவில் விழித்திருந்துதான் படிப்பார்கள். காலையில் எட்டு மணிக்கு முன் எழுந்திருப்பது என்ற பேச்சே கிடையாது. ஆனால் அரசியல் களத்தில் குதித்த பிறகும் இவர்கள் படிப்பை மறந்துவிடவில்லை என்பதைப் பார்க்கும்போது உண்மையிலே சந்தோஷமாக இருக்கிறது. வாத்தியாராக இருந்திருக்கிறேன், அல்லவா? அதனால் தான் பசங்கள் படிப்பைக் கண்டால் மனத்தில் ஆனந்தத்தை மறைக்க முடியவில்லை. சோஷலிஸ்டுகள், ஃபார்வர்டு பிளாக் வாலிபர்கள், கம்யூனிஸ்டு கிஸான் சபாவைச் சேர்ந்த இரு வாலிபர்கள், இவர்கள் எல்லாருமே படிப்பில் ஆர்வம் காட்டுகின்றனர். இவர்களை எங்கள் கட்சித் தொண்டர்களுடன் ஒப்பிட்டுத் திகைப்படைகிறேன். இங்கே ஃபார்வர்ட் பிளாக்காரர்கள் மூன்றே பேர். ஆனாலும் அவர்கள் எவ்வளவு செலவு செய்து சென்ஸார் செய்யப்படாத மார்க்ஸிஸ்ட் புத்தகங்களை வாங்குகிறார்கள்! கம்யூனிஸ்டு வாலிபர்களும் சிறு சிறு துண்டுப் பிரசுரங்களைக் கொண்டு வந்தவண்ணம் இருக்கின்றனர். இவர்கள் பாணியில் கடிகாரத்தைப் பின்பற்றி நாங்கள் வகுப்பு நடத்தப் போனால் எங்கள் கட்சிப் பையன்கள் சேரமாட்டார்கள். அது தான் கண் கூடாகப் பார்த்த விஷயம் ஆயிற்றே!

சதாசிவ்வின் உற்சாகத்தினாலும் தொந்தரவினாலும் குளிர் காலத்தில், நான் விளா மரத்தடியில் ஆக்கப்பணித் திட்டம் (Constructive Programme) பற்றி வகுப்பு நடத்தத் துவங்கினேன். முதல் வாரத்தில் சில பேர் இருந்தனர். சில நாட்களுக்குப் பிறகு சதாசிவ், தாஸ்ஜி, ராம்

சரண்ஜி மூவர் மட்டுமே இருந்தனர். இதற்கு மாறுக ஸி. எஸ். பி. யின் ருஷ்யப் புரட்சி வரலாறு பற்றிய வகுப்பில் ஒரே கூட்டம் தெரிகிறது. என் பிள்ளைகளும் அந்த வகுப்பில் உட்கார்ந்திருக்கின்றனர். இதில் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது? நீலு, பீலுவின் அணியினரின் காரியத் திட்டம் தற்கால மனிதனின் மன நிலையை ஒட்டி அமைந்தது. எங்கள் திட்டமோ ஹிம்சை, பேராசை இல்லாத புருஷர்களின் மன நிலையை ஒட்டி அமைந்தது. அதனால்தான் சாதாரண மக்களை அவர்களுடைய வழியே அதிகம் ஈர்க்கிறது.

நீலு, பீலுவுக்குத்தான் படிப்பில் எவ்வளவு ஆர்வம்! ஆனல் எங்கள் கட்சி ஆட்களுக்கோ? அதைச் சொல்லி என்ன பிரயோஜனம்? நான் கையில் ஒரு புத்தகத்தை எடுத்துக்கொண்டு உட்கார்ந்தால் போதும். உடனே, ''என்ன மாஸ்டர் ஸாஹேப்! மறுபடியும் பரீட்சை எழுதப் போகிறீங்களா என்ன?'' என்பார்கள். எங்கள் குழுவில் ராமச்சந்தர், ஹரிஹர் இவ்விருவருக்கு மட்டுமே படிப்பதில் சிறிதளவு உற்சாகம் உண்டு. ராமச்சந்தர் ஜல சிகிச்சைபற்றிப் படிப்பார். ஹரிஹர் ஆசனம், யோகாப்பியாசம், பிராணயாமம் பற்றிய நூல்களைப் படிப்பார்.

'காந்தி வழியைப் பின்பற்றுவோருக்குப் புதிதாய்ப் படித்துத் தெரிந்து கொள்வதற்கு இன்னும் என்ன இருக்கிறது?' என்ற எண்ணம் இவர்களுக்கு. காரணம் இல்லாமலா எங்களை நீலு கேலி செய்கிறன்? நான் டூர் போவதற்காகப் பீலுவின் அம்மா, என் பெட்டியில் துணிமணிகளை அடுக்கிவைத்துக் கொண்டிருக்கும்போது எவ்வளவு முறை கேட்டிருக்கிறேன்! நீலு அவன் அம்மாவிடம் கேலியாகச் சொல்வான்: ''அம்மா, பழைய சர்வோதயப் பத்திரிகைகளை எடுத்து வைத்திருக்கிறயா?''

நீலுவுக்குச் சின்ன வயதிலிருந்தே அற்ப விஷயம், முக்கியமான விஷயம் என்ற பாகுபாடு கிடையாது. இது விஷயத்தில் இவனுக்கும், பீலுவுக்கும் ஆகாச பாதாள தூரம். நீலு எப்போதுமே எளிதில் படபடப்படைந்துவிடுவான். கோபம் வந்துவிட்டால் தன்னையே மறந்து விடுவான்.

ஒரு முறை வீட்டினுள் நுழைந்தவுடன் பார்க்கிறேன். சமையலறை வராந்தாவில் பீலுவின் அம்மா, நீலு, பீலு ஆகிய மூவரும் ஒருவருக்கொருவர் ஒரு சம்பந்தமும் இல்லாதது போல் தனித்தனியாக உட்கார்ந்திருக்கின்றனர். பீலுவின் அம்மாவும், பீலுவும் அழுது கொண்டிருக்கின்றனர். நீலு ஒரு துடைப்பக் குச்சியை எடுத்துக் கொண்டு, தரையில் ஏதோ எழுதிக்கொண்டோ வரைந்துகொண்டோ இருக்கிறன். பக்கத்தில் அரிவாள் மனை கிடக்கிறது. அருகில் சென்றவுடன் பீலுவின் அம்மா எதையோ துணியில் மூடி மறைக்கப் பார்க்கிறள். விசாரித்ததில் விஷயம் வெளியில் வந்தது.

பீலுவின் கையிலிருந்த இங்கிப் புட்டி தவறிப் போய்க் கவிழ்ந்து நீலுவின் 'பால் பொம்மை' புத்தகத்தில் விழுந்து அட்டை எல்லாம் கறை படிந்துவிட்டது. உடனே நீலு வெறி பிடித்தவன் மாதிரி, பீலுவின் மாஸ்டர் சரித்திரப் புஸ்தகத்தைக் கத்தியால் இரண்டு துண்டாக வெட்டிப் போட்டிருக்கிறுன். பார்ப்பதற்கு இரண்டு சிறிய நோட்டுப் புத்தகங்கள் கீழே கிடப்பது போலிருக்கிறது. விசித்திரமான பிள்ளை! இவர்கள் அம்மாவும் இவர்களுக்கு இடம் கொடுத்துக் கெடுத்து விட்டிருக்கிறுள். பையன் தப்புப் பண்ணியிருக்கிறுன். என்னிடம் வந்து சொல்லாமல் அதை மூடி மறைக்கப் பார்க்கிறுள்.

''என்ன சதாசிவ், பூமிஹார் - ராஜ்புத் மஹாசபை முடிந்து விட்டதா?'' காம்ரேட் வைத்யநாத் சதாசிவைக் கிண்டல் செய்கிறுன். பேச்சு, நூல் நூற்பு யக்ஞத்தைப் பற்றி. பிகாரிலுள்ள தீவிரவாதிகள், அதாவது சோஷலிஸ்டு, கம்யூனிஸ்டு, ஃபார்வார்டு ப்ளாக், கிஸான் சபை அங்கத்தினர்கள், வலது சாரியினரை இப்படித்தான் பரிகசிப்பது வழக்கம். பிகார் பிரதேசத்துக் காங்கிரஸ் பூமிஹார், ராஜ புத்திர ஜாதிகளின் மோதல்கள் நிறைந்த முகப்பாக இருக்கிறது. பிரதேச காங்கிரஸினுள் காணப்படும் குழுக்கள் பெரும்பாலும் ஜாதியை ஒட்டியோ அல்லது தனி நபர்களைச் சுற்றியோ அமைந்தவைதாம். இது பொய்யில்லை. ஜெயிலிலேயே பார்க்கிறேனே? ராம் சரண்ஜி, ஹரிஹர்ஜி இருவருமே ஜாதி அடிப்படையில், தம் தம் அணிகளை உருவாக்க முயல்கிறுர்கள்.

ஜெயிலில் இருந்து கிளம்பி வெளியில் வந்த பிறகும் தங்கள் தலைமை நீடிக்க வேண்டாமா? அதற்காகத்தான் நம் நாட்டில் எப்பொழுதேனும் சுதந்திரம் வருமா? சில சமயங்களில் வெறுப்பாக இருக்கிறது. நீலு, பீலு குழுவினர் சொல்வது எல்லாமே தவறில்லை. ஆனுல் சற்று முன்பு நடந்த நூல் நூற்புக்கும், ஜாதி வேறுபாட்டுக்கும் என்ன சம்பந்தம்? சதாசிவ் உன் வயதுக்காரன்தான். ஆனுலும் அவன் என் முன்னுல் இருக்கும்போது இப்படிப் பேசினுல் என்னையும் தாக்குவதாகத் தானே அர்த்தம்? வயதில் பெரியவர்களுக்குக் கொஞ்சம் மரியாதை அளித்து விட்டால் என்ன, மஹாபாரதம் அசுத்தமாகிவிடுமா என்ன?

சதாசிவ் பதில் அளிக்கிறுன்: ''சும்மா இரு, 'லால் தாஸியா.' என்னவோ சொல்லுவாங்களே, பாப்பானுக்குச் சோறும் ராஜபுத்திரனுக்குச் சலாமும், காயஸ்தனுக்குக் காசும், பாக்கி எல்லாச் சாதிக்கும் அடியும் கொடுத்துக் காரியத்தைச் சாதித்துக்கொள்ள வேண்டும் என்று. இரண்டு காசு கிடைத்தால் பார்ட்டியை விட்டுவிட நீ தயங்க மாட்டாய். காயஸ்தர்களை எனக்குத் தெரியாதா என்ன?''

வைத்யநாத் காயஸ்தன். மிதிலாவைச் சேர்ந்த காயஸ்தர்கள் தங்கள் பெயருடன் 'தாஸ்' அல்லது 'லால்' என்ற பதத்தைச் சேர்த்துக் கொள்வார்கள். அதனுல்தான் காயஸ்தர்களை அடிக்கடி 'லால் தாஸியா' என்று சில பேர் அழைப்பார்கள். பெரும்பாலும் இவர்கள் ஜமீந்தார்களின் காரியஸ்தர்கள், அல்லது மணியக்காரர்களாக இருப்பார்கள். இந்தத் தொழில் இந்தச் சாதியின் ஏகபோகம். அதனுல் ஏழைக் குடியானவர்களுக்கு இவர்களைப் பிடிக்காது. நாளாவட்டத்தில் 'லால் தாஸியா' என்ருல் ஏதோ ஓர் இடத்தில் பிறந்த காயஸ்தன் என்று இல்லாமல் ஒரு பணத்தாசை பிடித்த பட்வாரி, அல்லது மணியக்காரரின் புத்தி கொண்ட மனிதன் என்ருகி விட்டது.

வைத்யநாத் சொல்லுகிருன்: ''ஆமாம், ஆமாம். இன்னெரு பழமொழியும் இருக்கிறது. மாட்டுக்காரன் பார்வையில் பட்ட புல்லுக்கும், பிராமணன் கண்ணில் பட்ட தயிருக்கும் ஒரே 'கல்யாண ஊர்வலந்தான்' '' என்று.

அவன் பதில் அளித்தான்: ''நான் அதை ஒப்புக்கொள்கிறேன். நான் கொடுத்த தயிரை மாஸ்டர் ஸாஹேப் உண்டதைப் பார்க்க வில்லையா? காயஸ்தர்கள் பற்றிய பழமொழியின் உண்மையை ஒப்புக் கொள்ளாததினுல் தான் வார்த்தை மேலும் வளருகிறது.''

அதன் பிறகு சதாசிவ் மேசை மீதிருந்து இறங்கி வைத்யநாத் அருகில் சென்ருன். இருவரும் கசமுசவென்று பேசுகிருர்கள். இவர்களுக்கு இரகசியக் குரலில் பேசத் திடீரென்று என்ன விஷயம் முளைத்திருக்கும்? இன்று வைத்யநாத்தின் கட்சியில் தலைவர் பதவியில் இருக்கும் ஒரு காம்ரேட் தூக்கிலிடப்பட இருக்கிருன். இருந்தும் இவர்களின் செயல்களில் வித்தியாசம் எதுவும் தெரியவில்லை. அதே திரைமறைவு அறையில் வகுப்பு, அதே சிரிப்புக் குரல். நடுநடுவே வால்யூ, லேபர், ஸர்ப்ளஸ் ஆகிய அதே வார்த்தைகள். என் இடப்பக்கத்தில் இருப்பவர்களின் செயல்களிலும் எந்த மாறுதலும் இல்லை. எங்கேயும் ஒரு கீறல் கூடப் படவில்லை. எல்லார் மனத்திலும் ஏதோ உறுத்திக் கொண்டிருக்கிறது. இல்லையென்ருல் தாஸைத் தவிர மற்ற எல்லாரும் இன்னும் விழித்துக் கொண்டிருப்பானேன்? பூஷண், பிசுன் தேவ் இருவரும் கொசுவலையை விரித்துப் படுத்திருக்கிருர்கள். இருந்தாலும் அவர்கள் பேச்சுக் குரல்களைச் சற்று முன்புகூடக் கேட்டேனே? அவர்களும் இன்னும் தூங்கி விடவில்லை. அநேகக் கட்டில்களில் கொசுவலை விரித்திருக்கிருர்கள். ஆகவே, வெகு தூரம் பார்க்க முடியவில்லை. ஆனுல் காதில் பேச்சுக் குரல் விழுகிறது. ஆஸ்கர் வைல்டின் Ballad of the Reading Gaol-இல் உள்ள தூக்கு இரவின் வரிகள் ஞாபகம் வருகின்றன.

But there's no sleep where men must weep
Who never yet have wept,
So, we the fool, the fraud, the knave—
That endless vigil kept'
And through each brain, on hands of pain,
Another terror Crept...

இதற்கு மேல் ஞாபகம் வரவில்லை. வாத்தியார் உத்தியோகத்தைவிட்டு வெகு நாளாகிறது. ஏதோ, இந்தச் சில வரிகள் நினைவில் இருப்பதே ஆச்சரியந்தான். மேலும் நினைவு படுத்திக்கொள்ள முயல்கிறேன். ஆனால் நினைவுக்கு வரவில்லை. பின்னர் எப்பொழுதோ வேண்டாத சமயத்தில் திடீரென எதிர்பாராத வண்ணம் மனசில் தோன்றும்.

இவர்கள் எல்லாரும் பயத்தினால் விழித்துக் கொண்டிருக்கிறார்களா, இல்லை, அநுதாபத்தினாலா? ஹூம். இவர்கள் வேண்டுமென்றே விழித்துக்கொண்டிருக்க வில்லை. என்ன முயன்றும் இவர்களுக்கு உறக்கம் வரவில்லை என்று நினைக்கிறேன். பேச்சில் தங்கள் மனப் பளுவைக் குறைக்கப் பார்க்கிறார்கள். என் மனங்கூட அமைதியாகத் தான் இருக்கிறது. பிள்ளைகளிடம் எவ்வளவு ஆழ்ந்த அன்பு செலுத்தி யிருக்க வேண்டுமோ அவ்வளவு செலுத்தவில்லை என்று நினைக்கிறேன். இல்லையென்றால் இந்தச் சமயத்தில் கூட என் மனத்தில் ஒரு விதமான சலனமும் ஏற்பட வில்லையே?

வைத்யநாத் இடத்துக்குப் பக்கத்தில் சதாசிவும் வைத்தியநாத்தும் நாற்காலிகளைக் கொண்டு போடுகின்றனர். இரவு இத்தனை நேரத்துக்கு மேல் மறுபடியும் நாற்காலிகள் எதற்கு? சதாசிவ் என் கட்டிலில் வந்து உட்கார்ந்திருக்கிறான். நான் கீழே ஜமக்காளத்தில் உட்கார்ந் திருக்கிறேன். வைத்யநாத், லட்சுமி சதுர்வேதி, ராம்பிரகாஷ், கிரிதர் ஆகியோர் நாற்காலிகளில் உட்கார்ந்திருக்கின்றனர். இவர்கள் இரவு முழுவதும் விழித்திருக்கப் போகிறார்களா, என்ன?

பீலுவுக்கும் இரவில் விழித்திருந்து படிக்கும் பழக்கம். எவ்வளவு நாட்கள் கண்டித்திருக்கிறேன்! இப்பொழுது பீலு என்ன செய்து கொண்டிருப்பான்? பைத்தியம் மாதிரி ஸெல்லின் குறுக்கும் நெடுக்கு மாக உலாவிக் கொண்டிருப்பான். ஒரு தரமாவது அப்பாவை நினைப் பானோ என்னவோ? பயப்படக்கூடிய பிள்ளை இல்லை அவன். ஆனால் ராட்டையில் நூற்க மாட்டான். கடவுளிடம் நம்பிக்கை கிடையாது.

இன்று இரவு, இந்த இரண்டில் ஒன்று இருந்தாலும் மனத்துக்கு எவ்வளவு தெம்பாய் இருக்கும்! பள்ளிக்கூடத்துச் சம்ஸ்கிருத பண்டிதர் ஜெயிலில் 'மத போதகர்'. ஜெயிலில் ஹிந்துக் கைதிகளுக்குத் தர்மோபதேசம் செய்ய வருவார். நான் ஹெட்மாஸ்டராய் இருந்த சமயத்தில் தான் பண்டிட் வேலையில் சேர்ந்தார். அதனால் அன்று

பார்க்க வந்திருந்தார். பீலு அவருடைய மாணவன். வருத்தப் பட்டுக் கொண்டார். பீலுவின் ஸெல்லுக்குப் போயிருந்தாராம். தர்மோபதேசம் தனக்கு அவசியமில்லை என்று சொல்லி விட்டானும். ஆனால் பீலு அவர் காலைத் தொட்டு நமஸ்கரிக்கத் தவறவில்லை என்றும் சொன்னார். பீலு மரியாதை தெரியாத பையனா, என்ன? அது சரி. பகவானிடம் நம்பிக்கை இருந்தால் சோஷலிஸ்டாக இருக்க முடியாதா?

காவி உடை உடுத்திய சாமியார்களை எல்லா அரசியல் கட்சிகளிலும் பார்த்திருக்கிறேன். அவர்கள் பகவானிடத்தில் நம்பிக்கை வைக்க வில்லையா என்ன? அன்று ஒரு அஸிஸ்டெண்ட் ஜெயிலர் கையில், பீலுவுக்காக ஒரு பாக்கெட் ஸைஸ் பகவத்கீதை கொடுத்தனுப் பினேன். அஸிஸ்டெண்ட் ஜெயிலர் மறுநாளே அதைத் திருப்பிக் கொண்டுவந்து கொடுத்துவிட்டு, ''உங்கள் பிள்ளை இந்தப் புத்தகம் தனக்குத் தேவையில்லை. வேறு ஏதாவது நல்ல புத்தகம் இருந்தால் கொடுங்கள், படிக்கிறேன் என்று சொல்கிறார்'' என்று சொல்லி விட்டுப் போனான். என்னிடம் வேறு சில புத்தகங்கள் இருந்தன. அவனிடம் அந்தப் புத்தகங்களைப் பீலுவுக்குக் கொடுக்கச் சொல்லிச் கேட்டுக் கொண்டேன். அவன் சொன்னான்: ''மத சம்பந்தமான புத்தகங்களைக் கொடுக்க எனக்கு அதிகாரம் இருக்கிறது. மூன்றும் டிவிஷன் கைதிகளுக்கு வேறு புத்தகம் கொடுக்க வேண்டுமென்றால் ஸுப்பிரண்டெண்ட் பர்மிஷன் வேண்டும். துரை ரொம்ப இரக்க சுபாவமுள்ளவர். நல்ல மனுஷர். அவர் உங்கள் பிள்ளையிடம் ஏதாவது வேண்டுமா என்று கேட்டுப் பார்த்தார். ஆனால் அவன் அவர் முகத்துக்கு எதிராகவே, தனக்கு ஒன்றும் வேண்டாம் என்று சொல்லி விட்டான்.''

சரியாகத்தான் சொன்னான். இத்தகைய பதிலைத்தான் பீலுவிட மிருந்து எதிர் பார்க்க முடியும். கடைசி விநாடிவரை தலையை உயர்த்தி வைத்துக்கொண்டே போய் விடுவான். என் பெயரைப் பிரகாசிக்கச் செய்துகொண்டு எல்லாவிதமான ஈனத்தன்மையையும் உதைத்துத் தள்ளிவிட்டு கம்பீர முகத்துடன் உதாசீனமாய்ச் சிரித்துக்கொண்டே 'மிலிடெண்ட்' இல்லாத பீலு சென்று விடுவான்.

சென்ற மகாயுத்தத்துக்குப் பின் வெளியான ஒரு கேலிச் சித்திரம் நினைவுக்கு வருகிறது. 'பஞ்ச்'ல் வெளிவந்தது. இரண்டு வயதான வர்கள்—'லார்ட்'கள்—'அரிஸ்டோக்ராடிக்' கிளப்பின் திண்டுகள் நிறைந்த ஸோபாவில் உட்கார்ந்து கொண்டிருக்கின்றனர். வாயில் சுருட்டு, மேஜைமீது பாட்டில், கிளாஸ். யாருடைய எத்தனை பிள்ளைகள் யுத்தத்தில் உயிர் இழந்தனர் என்று பேசிக்கொண் டிருக் கின்றனர். பிள்ளைகளின் மரணம் அவர்களை வருத்தவில்லை. மற்றவனைத்

தோற்கடிக்கும் பெருமையில் பிள்ளைகளின் சாவு இரண்டாம் பட்சமாக இருந்தது.

என்னுடைய பெருமையும் இதே மாதிரி ஏளனத்துக்கு உரியது தான். எந்தப் பிள்ளையின் பால் ஒரு தகப்பனின் கடமையை நான் செய்யவில்லையோ அந்தப் புத்திரனின் சாகசச் செயலிலிருந்து எழும் பெருமையில் மட்டும் பங்கு கொள்ள என் மனம் தயங்கவில்லை. நான் இந்த வழியில் வந்திருக்காவிட்டால் பீலுவுக்கு இந்த நிலை வந்திருக்குமா? என் அப்பா ஒரு சர்க்கார் உத்தியோகஸ்தர். நான் சர்க்கார் வேலையில் இருந்தேன். என் பிள்ளையும் மற்ற வீட்டுப் பிள்ளைகளைப் போல் படித்து முடித்து ஏதோ சம்பாதித்துக் கொண்டு மனைவி, குழந்தை குட்டிகள் என்று குடும்பம் நடத்தியிருப்பான். எங்கள் பேட்டையின் மித்திர் கிழவர் சொன்னது சரியே. கல்யாணம் செய்து கொண்ட பிறகு, அதுவும் குழந்தைகள் பிறந்த பிறகு, சுயேச்சையாக வாழ்க்கை நடத்தும் அதிகாரம் ஒருவருக்கும் கிடையாது. அவர்கள் வாழ்க்கை கேவலம் தம் சொந்தப் பராமரிப்புடன் முடிவதல்ல, மற்றும் பலருடைய பொறுப்பும் அவர்கள் மேல் விழுகிறது. கையில் பணம் என்ற பேச்சே கிடையாது. பணம் இருப்போர் இம் மாதிரி காரியங்களில் இறங்குவதற்கு முன் மனைவி மக்களுக்கு ஏதோ ஒருவித ஏற்பாடு செய்யலாம். ஆனால் அப்படிச் செய்துவிட்டால் அவர்கள் கடமையை ஆற்றியதாகிவிடுமா? அதனால் குழந்தை குட்டிகள் சிறிது சுகமாய்க் காலம் தள்ளலாம். ஆனால் சௌகரியமாய் இருப்பது ஒன்றுதான் பூமியில் ஒரே காரியமா? இல்லற வாழ்க்கையில் பரஸ்பரம் இடையில் உண்டாகிற இனிய சம்பந்தத்துக்கு ஏதாவது விலை உண்டா? ராஜ்யத்தையும், செல்வங்களையும் வைத்துவிட்டுத் துறவு பூண்டதால், சித்தார்த்தன் தன் மனைவி குழந்தைகளிடம் சரிவர நடந்து கொண்டான் என்று சொல்ல முடியுமா, என்ன?

பீலு ஆங்கிலக் கல்லூரியில் படிக்கவில்லை. அவன் அம்மாவின் தொந்தரவினால் இங்கிலீஷ் ஹைஸ்கூலில் மெட்ரிகுலேஷன் பரீட்சை வரை அவனைப் படிக்கவைத்தேன். என் இஷ்டப்படி நடந்திருந்தால் இங்கிலீஷ் ஸ்கூலில் இத்தனை தூரம் கூடப் படித்திருக்க மாட்டான். அவனைப் பிகார் வித்யா பீடத்தில் படிக்கவைக்க வேண்டும் என்பதே என் அவா. இதனால் சகபாடிகளிடமிருந்து பலவிதப் பேச்சுகள் கேட்க வேண்டியதாயிற்று. மகாத்மா அவர்கள் ஆசிரமத்துக்கு வந்திருந்த போது, ஜயஸ்வாலின் சகோதரி இந்த விஷயத்தை அவர் காதிலும் போட்டுவைத்தாள். அவள் 'ஒரு மாதிரி' மனுஷி. அவளாகவே செய்திருக்க மாட்டாள். என் க்ஷேமத்தில் அக்கறை கொண்ட யாரோ ஒரு நண்பரின் தூண்டுதலின்பேரில்தான் இது நடந்திருக்கிறது. மகாத்மா காந்தி அப்பொழுது என்னிடம் ஒன்றும் சொல்லவில்லை. இவ்வளவு

விசாலமான தேசத்தில் நாலு தினுசான பிள்ளைகள் இருக்கத்தான்
இருப்பார்கள். என் பிள்ளைகளும் தான் என்னிடம் தப்புக் கண்டுபிடிக்
கின்றனர்'' என்று சொல்லிச் சிரித்து ஒதுக்கிவிட்டார். என் தலை
வெட்கத்தினுல் கவிழ்ந்தது.

காந்திஜியின் இந்தத் தீவிரமான அபிப்பிராயம் பீலுவையும் அவன்
அம்மாவையும் வெகுவாகப் பாதித்தது. அதனுல் மெட்ரிகுலேஷ
னுக்குப் பிறகு அவனும் அவன் அம்மாவும், அவன் காசி வித்யா
பீடத்தில் படிப்பதே உசிதம் என்று தீர்மானித்தனர். ஆங்கிலக்
கல்லூரியை விட என்ன குறைவாகவா இங்கே சொல்லிக் கொடுக்
கின்றனர்? நீலு பி.ஏ. பாஸ் செய்திருக்கிருன். அவனுக்குப் பீலுவை
விட எந்த விஷயத்திலும் அதிகம் தெரியுமா என்ன? பீலுவின் கட்சியில்
முக்கால்வாசிப் பேர் பி.ஏ., எம்.ஏ. படித்தவர்கள். இருந்தாலும்
அவர்கள் பீலுவிடம் பாடம் கேட்பானேன்? இருந்தாலும் நடை
முறையில் தெளிவாகத் தெரிவது என்னவென்ருல், மக்கள் வித்யா
பீடத்தின் 'சாஸ்திரி' பட்டத்தை இளப்பமாய்க் கருதுகின்றனர். பீலு
பாசாகிவிட்டான் என்ற செய்தி கிடைத்த அன்று அவன் அம்மாவிடம்
சொன்னேன். ''இன்றிலிருந்து பீலு. பூர்ண சந்திர சாஸ்திரி.''
மிகுந்த உற்சாகத்துடன் இதை வரவேற்பாள் என்று எதிர்பார்த்தேன்.
ஆனல் அவளோ பதிலே சொல்லவில்லை. தலையைக் குனிந்து பருப்பு
உருண்டைகளைச் செய்துகொண்டே இருந்தாள். அதன் பிறகும் பல
சமயங்களில் கவனித்திருக்கிறேன். படிப்புப்பற்றிய பேச்சு வரும்
போதெல்லாம் பேச்சை மாற்றிவிடுவாள். இப்படிப் பல காரணங்
களினுல் பீலுவுக்கு ஒரு தாழ்வு நவிற்சி உண்டாகி விட்டது. பீலுவின்
அம்மாவுக்கும் தன் பிள்ளைக்கு உயரிய படிப்பு கிடைக்கவில்லை என்று
எண்ணம். அது பையனின் தப்பில்லை. அவனுடைய தசை அப்படி என்று
மனத்துக்குள்ளேயே குடைந்து கொண்டிருந்தது. அதுவும் முக்கியமாக
என் தவறினுல் என்பது அவள் எண்ணம்.

உண்மையிலேயே பீலுவைப் போன்ற புத்திசாலிப் பிள்ளைக்கு,
சந்தர்ப்பம் கிடைத்திருந்தால் பெரிய புரொபஸராகவோ அல்லது
விஞ்ஞானியாகவோ வந்திருப்பான். புதிய, புதிய ஆராய்ச்சிகள் மூலம்
அவன் புகழ் உலகமெங்கும் பரவியிருக்கும். அதற்குப் பதிலாக நான்
அவன் வாழ்க்கைக்கு வேறுவிதமான சூழ்நிலையை அமைத்துக்கொடுத்து
விட்டேன். இந்தச் சூழ்நிலையிலிருந்து ஜெயிலுக்கு வந்தாலே நிம்மதி,
சாந்தி கிடைக்கும் என்ருகிவிட்டது. அவன் வளர்ந்த உலகத்தில்
தூக்குத் தண்டனை சாதாரணமாக நிகழக்கூடிய ஒரு விபத்தே ஒழிய
வேருென்றும் இல்லை. பீலு முட்டாள் இல்லை. நல்லது, கெட்டது தெரிந்
தவன். வயது வந்தது முதல் அவன் வழியை அவனே வகுத்துக்கொண்
டவன். இதைத் தவிர, அவனுல் என்னதான் செய்திருக்க முடியும்?

திடுக்கிட்டேன். இப்படித்தான் கதவைத் தடதடவென்று தட்ட வேண்டுமா, என்ன? கதவு மூடி இருக்கிறதா, இல்லையா என்று பார்ப்பது தானே உன் கடமை? அதற்கு இவ்வளவு பலமாய்த் தட்டுவானேன்? பக்கத்துக் கட்டிலிலிருந்து ஒருவர், ''ஆமாம்! உடை, உடைத்து நொறுக்கு'' என்றார்.

இன்னொருவர், ''அப்போது தப்பித்து ஓடலாம் அல்லவா?'' என்றார்.

அப்படியானால் ஒரு மணிக்கு வரவேண்டிய வார்டர் வந்துவிட்டான் போலிருக்கிறது. வார்டர் என் பக்கம் திரும்புகிறான். பெரிய நரைத்த மீசை, களையான முகம். என்னைப் பார்த்தவுடன் கைகுவித்து நமஸ்காரம் செய்கிறான். பிறகு, நாற்காலியில் உட்கார்ந்திருக்கும் வைத்யநாத் முதலியோர் பக்கம் திரும்பி, ''நமஸ்தே! எல்லாரும் சௌக்கியம் தானே?'' என்கிறான்.

லட்சுமி சதுர்வேதி, ''அடே, சிங்ஜியா? வெகு நாட்களுக்குப் பிறகு டியூட்டிக்கு வந்திருக்கிறாயே, என்ன விஷயம்?'' என்றார்.

''ஒரு வாரம் லீவு போட்டு வீட்டுக்குப் போயிருந்தேன். நேற்று ஜாயின் ஆகிவிட்டேன். சண்டை சமாசாரம், ஏதனைச்சும் சொல்லுங்களேன்!''

''நாங்கள் உனக்கு நியூஸ் சொல்வதா? நாங்கள் ஜெயிலில் இருக்கிறோம். நீ எங்களுக்கு வெளி விஷயங்களைச் சொல்வாயா? எங்கிட்டேயே சமாசாரம் கேட்கிறாயே?''

''நீங்கள் எல்லாரும் இங்கிலீஷ் பேப்பர் படிக்கிறீங்க. அதனால் தான் கேட்டேன்.'' பிறகு தானாகவே ஆரம்பித்துவிட்டான். யுத்தம், நகரம், அவன் போயிருந்த சொந்த கிராமம், மகாத்மாஜி இன்னும் எதை எல்லாமோ பற்றிக் கதைகள் சொன்னான். ஒரேயடியாகக் கூட்ஸ் வண்டிகளில் நரி, நாய் எல்லாம் அடைத்து யுத்த களத்துக்கு அனுப்புகிறார்கள். மகாத்மா உண்ணாவிரதம் தொடங்கிய அன்று திடீரென்று, என்ன காரணத்தினாலோ தெரியாது, கவர்னரின் மாளிகைக் கூரை பட்டென்று பிளந்து போய்விட்டது. மகாத்மாவை எதிர்த்த ராஜ்கோட் திவானுக்கு என்ன ஆயிற்று? இன்னும் எத்தனையோ சமாசாரங்கள். இவற்றை எங்களுக்குச் சொல்வதற்காகவே துடித்துக் கொண்டிருந்திருக்க வேண்டும். முதலில் நடந்த தகலப் பிரச்னம் எல்லாம் இதற்கு ஒரு பீடிகைதான். பிறகு வைத்யநாத்தின் ஜன்னல் பக்கம் வெளிவராந்தாவில் உட்கார்ந்து கொண்டு நன்றாய் அளக்க ஆரம்பித்தான். வேறு நாளாயிருந்தால் இவன் இரவு டியூட்டியின் போது ஒருவரும் விழித்துக் கொண்டிருக்க மாட்டார்கள். அப்போது மிகவும் தனிமையாக இருப்பதாய்த் தோன்றும். தூங்கி வழிந்துகொண்டு புகையிலையைத் துப்பிக்கொண்டு மற்றக் காவல்

காரர்களை எழுப்பிக்கொண்டு குறுக்கும் நெடுக்குமாக நடந்துகொண்டு இருந்தாலும் இரண்டு மணி நேரத்தைக் கழிப்பது கஷ்டமாக இருக்கும் இவனுக்கு. அவர்கள் பேச்சுக்களிடையே வார்டரும் உட்கார்ந்து கொண்டு பங்கு கொள்வது வைத்யநாத் குழுவினருக்குப் பிடிக்கவில்லை என்று நினைக்கிறேன்.

வைத்யநாத் சொல்கிறான்: ''சிங்ஜி, துவாபர யுகத்தில் கிருஷ்ணனின் தாயையும் கிருஷ்ணனையும் ஜெயிலில் அடைத்து வைத்தாய். இன்னும் இந்த யுகத்தில் மகாத்மாவையும் அவருடைய குழந்தைகளையும் அடைத்து வைத்திருக்கிறாய்.''

''விதியின் விளையாட்டிலிருந்து தப்பிக்க முடியுமா பாபு? கிருஷ்ணனைத் தான் எவ்வளவு நாள் ஜெயிலில் வைச்சிருந்தோம்? நீங்களும் எவ்வளவு நாட்கள் இருப்பீர்கள் என்று நான் எப்படிச் சொல்ல முடியும்? இந்தச் சனியன் பிடித்த யுத்தம் வேறே முடியும் என்று தோணலையே? கிருஷ்ணா! கிருஷ்ணா!''

வைத்யநாத்தின் குழுவினர் ஓஹோவென்று சிரித்துவிட்டனர். சிங்ஜி அவர்கள் வலையில் மாட்டிக் கொண்டான். சாதாரணமாக 'ராதாகிருஷ்ணா' பெயரை எடுத்தாலே சிங் கடுகடுப்பான். ''சீதாராம் என்று சொல்லுங்கள்'' என்பான். இன்று அவனாகவே தன்னையும் அறியாமல் ''கிருஷ்ணா, கிருஷ்ணா'' என்று சொல்லி விட்டான். வெட்கத்தால் சிரித்துக் கொண்டே இரண்டு கைகளையும் கொட்டிக்கொண்டு அவன் ஓடிப் போய் விட்டான். வைத்யநாத் முதலியோர் கூப்பிடுகிறார்கள். ''சிங்ஜி, இதைக் கேட்டு விட்டுப்போ! எங்களுக்கு விடுதலை கிடைக்கப் போகிறது.'' அவன் காதில் இது எங்கு விழப்போகிறது? அவன் கணத்தில் வார்டின் மறுபக்கம் போய் விட்டான். வார்டரின் கையில் இருப்பது ஒரு விளக்கு. அதையும் ஜன்னலுக்கெதிராய் வைத்துப் போய் விட்டான். காம்ரேட் கிரிதர், கம்பிகளின் நடுவில் கையைவிட்டு அந்த விளக்கிலிருந்து எண்ணெயை ஒரு டீக்கோப்பையில் ஊற்றுக்கொள்கிறான். இந்த யுத்த சமயத்தில் கெரோசின் கிடைப்பது அரிது. எல்லோரும் விடுதலையைப் பற்றியே பேசிக்கொண்டிருக்கிறார்கள்.

'ஹோம் மெம்பர் ஸ்டேட்மெண்டின் தொனி, லார்டு அமெரி பார்லிமெண்டில் என்ன சொன்னார்? எந்த எந்தக் காங்கிரஸ்காரர்கள் விடுதலையாகியுள்ளனர்?' என்பவற்றை அடிப்படையாகக் கொண்டு வாதப் பிரதிவாதங்கள், ஆசை அபிலாஷைகள், கற்பனைகள். சர்க்காரின் நோக்கங்களில் ஏதேனும் மாறுதல் ஏற்பட்டுள்ளதா என்று துருவித் துருவி ஆராய்ச்சி செய்கின்றனர். ஜெயிலுக்குள் வந்த புதிதில் முதலில் நிம்மதியாய் 'அப்பாடா' என்றிருக்கும். ஆனால் சில நாட்களிலேயே அலுப்பாகி விடுகிறது. அதன் பிறகு ஆரம்பமாகும்,

விடுதலையைப்பற்றிய பேச்சு. இரவு பகலாக ஜெயிலிலிருந்து எப்பொழுது வெளியே போகப் போகிறோம் என்ற ஒரே பேச்சுத்தான்.

தினசரிகளிலிருந்து அதற்குச் சாதகமாகவோ, பாதகமாகவோ செய்திகளைச் சேகரிப்பார்கள். ஃபுதன் பாபு ஜெயிலிலிருந்து விடுதலை பெறுவதைப் பற்றிய சமாசாரங்களைச் சேகரிப்பதை ஒரு பொழுது போக்காகக் கொண்டிருக்கிறார். அவர் பத்திரிகை படித்து முடித்தவுடன் அவரைச் சுற்றிலும் என்ன கூட்டம்! பிசுன் தேவ் இது பற்றித் துளஸிதாஸரின் 'தோஹா'ச் செய்யுள் அமைப்பில் ஒரு கவிதையே தயாரித்து விட்டான். பிரதி தினமும் மேட் அன்றைய பத்திரிகைக் கட்டுடன் உள்ளே நுழையும்பொழுது யாராகிலும் ஒருவர் அந்தக் கவிதையை ஒப்பிப்பார்.

''துளஸி, டூண்டத் ஜேஸ்மே வஹ படியா அக்பார் ஜிஸ்மே சர்ச்சா ஸுலஹ்கி, கர்தி ஹோ சர்க்கார்.'' அதாவது ஜெயிலிலிருக்கும் துளஸிதாஸ் தேடும் அழகான நாளேடு எது தெரியுமா? அதுதான் 'சர்க்கார் நம்முடன் சமரசத்துக்கான ஆலோசனைகளை நடத்துகிறது' என்று சொல்லும் ஏடு!

இன்று இல்லாவிட்டாலும் என்றோ ஒரு நாள் எல்லாரும் விடுவிக்கப் படப் போகிறார்கள். ஆனால் பீலுவோ? பீலுவை என் கூட அழைத்துச் செல்ல முடியாது. நானோ கிழவனாகிவிட்டேன். இருந்தாலும் வாழ வேண்டும் என்ற துடிப்பு இன்னமும் உள்ளது. பீலுவுக்குந்தான் அப்படி என்ன வயதாகிவிட்டது? அவன் முழு வாழ்வும் அவன் முன்னால் இருக்கிறது. நான் திரும்பிவிடுவேன். ஆனால் பீலுவால் முடியாது.

ஒரு வேளை பீலுவுக்குக் கல்யாணமாகி இருந்தால் காந்திக் கொள்கையில் நம்பிக்கை வைத்திருப்பானோ, என்னவோ? விவாகத்துக்குப் பிறகு வாழ்வின் வெறியூட்டும் கிளர்ச்சிகள் குறைந்து விடுகின்றன. பொறுப்புணர்வு அதிகரிக்கிறது. பீலு சோஷலிஸ்டுகளின் அபாயங்கள் நிறைந்த வழியில் தொடர்ந்து சென்றிருக்க மாட்டான். 'ஸர்வோதய'த்தில் காகா காலேல்கர், இதையே வேடிக்கையாகச் சொல்லியிருக்கிறார்.

''நான் கவனித்த மட்டும் காங்கிரஸ் தலைவர்களில் யார் யாருடைய மனைவியர் உயிருடன் இருக்கின்றனரோ அவர்கள் மிகவும் சாந்த குணம் படைத்தவர்களாக இருக்கின்றனர். கல்யாணம் செய்துகொள்ளாதவர்களாகவோ அல்லது மனைவியை இழந்தவர்களாகவோ இருந்தால் அவர்கள் உக்ரஸ்வரூபிகளாக இருக்கின்றார்கள். ஜவாஹர்லால், சுபாஷ் போஸ், வல்லபாய் படேல் ஆகியோரால் எதையும் பதற்றமில்லாமல் ஆராய முடியாது.'' ஊஹூம். பீலு சோஷலிஸ்டு கட்சியில் சேராதிருந்தாலும் என்னால் அவனைக் காப்பாற்றியிருக்க முடியாது. இந்தப் போராட்டத்தில் எத்தனை பேர் உயிரிழந்து இருக்கின்றனர்!

இவர்கள் உண்மையில் அரசியலுடன் ஒருவிதச் சம்பந்தமும் அற்ற வர்கள். மகாத்மாவின் சிஷ்யர்களிலும் கூட எத்தனை பேர் வன்முறைச் செயல்களில் ஈடுபட்டிருக்கிறார்கள்! இதற்கு ஏதாவது கணக்கு இருக்கா என்ன? பிறப்பு, இறப்பு என்பது மனிதன் கையில் இல்லை.

சரஸ்வதிக்கும், பீலுவுக்கும் கல்யாணம் நடந்திருந்தால் நன்றாய் இருந்திருக்கும். இருவரும் சந்தோஷமாக இருந்திருப்பார்கள். நல்ல பெண் சரஸ்வதி. ஆகஸ்டு மாதத்தில் போலீசார் அவளைக் கைது செய்தனர். மூன்று மாதங்களுக்குப் பிறகு ருசு இல்லாததினால் விட்டு விட்டனர். திரும்பவும் 26 ஜனவரி, சுதந்தரத் தினத்தன்று ஜெயிலுக்கு வந்து விட்டாள். அவளுடன் விவாகமாகியிருந்தால் இருவருமே அரசியல் பணியுடன் கூடவே குடும்ப வாழ்க்கையையும் நடத்தியிருக் கலாம். லெனின் கூடத்தான் விவாகம் செய்து கொண்டார். கபில்தேவும் அவன் அம்மாவும் இதைப்பற்றி என்னிடம் பிரஸ்தாபித் தனர். அவர்கள் குடும்பத்தில் ஏதோ ஒரு களங்கம் இருந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் இந்த மாதிரி, அதிகப் படிப்பில்லாத பூமிஹார் பிராம்மண குடும்பத்தவர் ஒரு வங்காளிக்குப் பெண் கொடுக்க முன் வருவார்களா? என்னைப் பொறுத்தவரை இதில் எவ்வித ஆட்சேபமும் இல்லை. பீலுவின் அம்மாவுக்குத்தான் இஷ்டமில்லை. பீலுவின் விருப்பத்தைக் கேட்கவேயில்லை. இந்தக் காலத்துப் பிள்ளை அவன். அபிப்பிராயத்தை முன்பே கேட்டுத் தெரிந்து கொண்டிருந் திருக்க வேண்டும். ஆனால் அம்மாவுக்கே விருப்பம் இல்லாதபோது அவனைக் கேட்டு விஷயத்தை வளர்ப்பதில் என்ன பயன்?

பீலுவின் அம்மாவே வெகு நாட்களுக்கு முன் என்னிடம் சொல்லி யிருந்தாள். பீலுவின் அபிப்பிராயம், அரசியலில் ஈடுபடுவோர் கல்யாண ஆசைகளை விட்டுவிட வேண்டுமென்பது. ஆனால் சரஸ்வதி இவனுக்கு நல்ல ஜோடி. இன்றைய சராசரி நடுத்தர வங்காளிக் குடும்ப பெண்களைவிடக் கெட்டிக்காரப் பெண். ஆரோக்கியத்திலும் சிறந்தவள். வீட்டை நன்றாக வைத்துக்கொள்ளக் கூடியவள். பார்ப் பதற்கும் கேட்பதற்கும் நன்றாகவே இருக்கிறாள். எவ்வளவு பெரிய வளாக வளர்ந்துவிட்டாள்!

கபில் தேவுக்கு எப்பொழுதும் கோர்ட்டில் கேஸ், வழக்கு. கேஸ் விஷயமாய் வரும்போது ஆசிரமத்தில் தங்குவான். அநேகமாக ஒவ்வொரு தடவை வரும்போதும் சரஸ்வதியையும் அழைத்து வருவான். ஒரு தடவை ரோஜாத் தோட்டத்து விழா பார்ப்பதற்காக வந்திருந்தாள், சின்னஞ்சிறியவளாகச் சிவப்புப் புடைவை கட்டிக் கொண்டு, மாட்டு வண்டியில். எங்கள் வீட்டுச் சிறுமிகளாயிருந்தால் ஃபிராக் போட்டுக் கொண்டிருப்பார்கள். சமையலறை வராந்தாவில் பீலுவின் அம்மா அவளுக்குச் சாப்பிட [illegible]தா கொடுத்திருந்தாள்.

பால் கிண்ணத்தில் வாய் வைத்தவுடன் அழத் தொடங்கிவிட்டாள். கேட்டால் ஒன்றும் சொல்லமாட்டேன் என்கிறாள். சகாதேவ் வந்து அவளைத் தாஜா செய்து, அழுகையின் காரணத்தைக் கண்டுபிடித்தான்.

அவளுக்கு எருமைப் பால் குடித்துப் பழக்கம் ஆனதினால் பசும்பாலின் ருசி பிடிக்கவில்லை. எனவே, சாப்பிட முடியவில்லை. கல்யாணம் ஆகாததும் நல்லதுதான். ஆகியிருந்தால் இன்னோர் அபாக்கியவதி கூடியிருப்பாள். அவ்வளவுதான். என் சுமையும் அதிகமாகியிருக்கும். பொறுப்பும் பந்தங்களும் அதிகரித்திருக்கும். தவிரவும் நானுந்தான் இன்னும் எவ்வளவு நாள் உயிர் வாழப்போகிறேன்? அதன் பிறகு நீலு தான். நீலு இருப்பதும், இல்லாதிருப்பதும் ஒன்றுதான். அவன் பொறுப்பில் விட்டால் அவ்வளவுதான்! பொறுப்புப் பற்றிச் சிறு பிள்ளைத்தனமான போக்கு. பீலு ஒருவனுக்கு மட்டுமே கட்டுப்படுகிறவன். வேறு யாரையாவது அவன் மனிதனாக மதித்தால் அல்லவோ அவர்கள் பேச்சைக் கேட்க. சிறு வயதிலிருந்தே கட்டுப்பாட்டுக்கு அப்பாற்பட்டவன். பெரியவனான பிறகு சாந்தமாய், கம்பீரமாய் இருக்கிறான். சிறு வயதில் தான் எத்தனை விஷமம்! ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு ரகளை.

ஒரு நாள் துர்க்கா பாபுவின் வாத்தைப் பிடித்துக் கொன்று சமைத்து விட்டிருக்கிறான். ஆசிரமத்துக்கு மேற்கில் இருக்கும் மூங்கில் காட்டில் துர்க்கா பாபு படபட வென்று புகார் செய்தார். அவரையும் அழைத்துக்கொண்டு நீலுவைத் தேடிப் புறப்பட்டேன். துர்க்கா பாபுவின் பெரிய பிள்ளையும் கூடவே இருந்தான். அவன் தான் முதலில் சமாசாரம் சொன்னது. குற்றவாளி மூங்கில் காட்டில் அகப்பட்டான். கூடவே பேட்டையைச் சேர்ந்த பல சிறுவர்கள். எல்லாவற்றையும் விட ஆச்சரியம் என்னவென்றால், துர்க்கா பாபுவின் சிறிய பிள்ளை நீருவும் அவர்களுடன் இருந்தான். நீலுவை வாத்தை அறுத்த விஷயம் பற்றிக் கேட்டால், நீரு, ''ஆமாம். நாங்கள் எல்லாரும் சேர்ந்துதான் வாத்தைக் கொன்றோம்'' என்றான். இந்தக் கேள்வியை முன்பே எதிர் பார்த்துத் தயாராய் இருந்திருக்கிறார்கள். பிறகு விஷயம் வெளியாயிற்று. கத்திக் கொண்டு வந்தது நீரு. வெட்டியது நீலு. வெட்டுவதற்கு முன்பு நீலு எல்லாரிடமும் ஷரத்து வாங்கிக் கொண்டிருக்கிறான், தான் வெட்டும்போது தன்னை எல்லாரும் தொட்டுக் கொண்டிருக்க வேண்டும் என்று. அவன் வெட்ட, அவன் பின்னால் ரெயில் வண்டிபோல் நீரு முதலியோர், ஒருவர் பின் ஒருவராகத் தொட்டுக் கொண்டு நின்றிருந்திருக்கின்றனர். என்ன அபார மூளை!

நீலுவுக்குத் திடகாத்திரமான உடல். சிந்தனை ரேகையே தென்படாத முகம். பீலுவின் முகத்திலிருந்து முற்றும் மாறுபட்டது.

இப்போது எல்லாம் நீலுவைப் பார்க்கும்பொழுது அவன்தான் பீலுவை விடப் பெரியவன் மாதிரி தோன்றுகிறது. நீலு மனத்தில் தோன்றியதைச் செய்வான். அவனது கட்டுக்கடங்காத துணிச்சலுக்கு எதிரில் எல்லா இடைஞ்சல்களும் துரும்பாகி விடுகின்றன. நீலுவிடம் எதையும் சொல்லவே பயமாய் இருக்கிறது. அவன் வாயில் எது வரும், எது வராது என்று சொல்லவும் முடியாது. ஆனால் பீலுவிடம் ஏதாவது சொல்வதற்கு முன்பு, அதனால் அவனுக்கு வருத்தம் உண்டாகுமா என்று யோசித்து நிச்சயம் செய்து கொண்டு பேச வேண்டும். பீலு, வாய் திறந்து ஒன்றும் சொல்லமாட்டான். ஆனால் அவன் கண்களில் நீர் நிரம்பி விடும். நீலுவோ என் மனத்தைப் புண்படுத்துவதற்கு எந்த வாய்ப்புக் கிடைத்தாலும் விடமாட்டான்.

அவன் காலேஜில் சேர்ந்து படிப்பதைப் பற்றிப் பேச்சு எழுந்தபோது, நான் தடை செய்யவில்லை. முக்கியக் காரணம் நீலுவுக்கு இஷ்டம் என்பதுதான். மேலும் பீலுவுக்கும் அவன் அம்மாவுக்கும் அவன் ஆங்கிலக் கல்லூரியில் படிக்கவேண்டும் என்பது நான் விருப்பம். காசி வித்யா பீடத்தில் படித்ததில் அவனுக்கு அவ்வளவு திருப்தியில்லை. அவன் அம்மா அதைப் படிப்பாகவே கருதவில்லை. கடைசியில் ஒரு விதமாக ஏற்பாடுகள் செய்து முடித்த பிறகு திடீரென்று நீலு ஒரு புதுப் பிரச்னையைக் கிளப்பினான்—தான் காந்தி சேவா சங்கத்துப் பணத்தில் காலேஜில் படிக்கமாட்டேன் என்று.

அவனுக்குக் கொனஷ்டை புத்தி. வேலை செய்தபோது சேமித்து வைத்திருந்த ஏதோ கொஞ்சத் தொகையைச் சிறிது சிறிதாகச் செலவழித்தாகிவிட்டது. சொந்தப் பணத்தைப் போட்டு ஆசிரமம் தொடங்கினேன். அதில் ரொம்பப் பணம் செலவிழிந்துவிட்டது. மூன்று முறை அபராதம் கட்டியதில் 900 ரூபாய் போயிற்று. பலர் காங்கிரஸின் பெயரைச் சொல்லிக்கொண்டு எனக்கு உதவ முன் வந்தனர். நான் இந்த உதவியை நிராகரித்துவிட்டேன்.

மற்ற ஆசிரமங்களில் நடப்பது போன்ற சந்தா வசூல் போன்ற வழக்கங்களுக்கு என் ஆசிரமத்தில் முதலிலிருந்தே நான் இடம் கொடுக்கவில்லை. சந்தா வாங்கிக் கொண்டால் நம் சுயமரியாதையைக் காப்பாற்றிக் கொள்வது கஷ்டம். பாரபட்சமில்லாமல் தைரியமாக வேலை செய்ய முடியாது. பணவசதி குறைந்துபோய் என் அன்றாட வாழ்க்கை மிகவும் கடினமாகப் போய்விட்டபோது காந்தி சேவா சங்கத்திலிருந்து எனக்கு மாதம் 75 ரூபாய் அனுப்பப்படும் என்ற செய்தி வந்தது. மகாத்மாஜிக்கு எல்லாம் தெரிந்துவிட்டது போலும்! இந்தப் பணம் வந்திருக்காவிட்டால், என் சொந்தச் செலவுக்காக ஆசிரமத்தின் வரும்படியையே நம்ப வேண்டியிருந்

திருக்கும். ஆசிரமத்துக்குத்தான் அப்படி என்ன பெரிய வரும்படி? வாடகைக்கு விடப்படும் இரண்டு மாட்டு வண்டிகள், இரண்டு செக்குகள், ஒரு கிராமத் தொழிற்சாலைக் கிடங்கு, துணி துவைக்கும் சோப்புத் தயாரிப்பதற்காக. ஓரிரண்டு தினசரிப் பத்திரிகைகளின் ஏஜென்ஸி—இவைதாம் மொத்த வரும்படி வசதிகள். பட்டுப் புழுக்கள் வளர்ப்பது, தேனீக் கூட்டிலிருந்து தேன் சேகரிப்பது போன்ற முயற்சிகளிலிருந்து ஆசிரமத்துக்கு எப்போதுமே வரும்படி கிடையாது. ஆசிரமத் தோட்டத்தில் விளையும் கறிகாய்கள் ஆசிரமவாசிகளின் சாப்பாட்டுக்குப் போதுமானதாக இருந்தது.

இவை எல்லாம் இருந்தும், ஆசிரமத்திலிருந்த வாலன்டியர்களின் சாப்பாடு, துணிமணிச் செலவுக்கு ஆசிரம வரும்படி போதாது. இதற்குமேல் என் சொந்தச் செலவும் ஆசிரம வரும்படியிலிருந்து வரவேண்டும் என்றால் ஆசிரமத்தின் லைப்ரரி என்ன ஆவது? ஜில்லா காங்கிரஸின் வாரப் பத்திரிகையை எப்படி வெளியிடுவது? ஜில்லா காங்கிரஸின் மற்றச் செலவுகளுக்கும் ஆசிரமத்துக்கும் ஒருவிதத் தொடர்பும் இல்லை என்பது வாஸ்தவந்தான். காந்தி சேவா சங்கம் அனுப்பிய மாதாந்திரத் தொகை, என்னை இந்தக் கவலைகள் எல்லாவற்றிலிருந்தும் விடுவித்தது என்னமோ உண்மைதான். அதைப் பெற்றுக் கொள்வதில் ஒருவித அவமானமும் இருப்பதாக எனக்கு ஒரு விநாடி கூடத் தோன்றியதில்லை. இந்தப் பணம் எந்த நிறுவனத்திலிருந்து வந்தது, எந்தக் கோடீஸ்வரன் இதை தானமாகக் கொடுத்தான் என்பது போன்ற சர்ச்சைகள் என் மனத்தில் எழவே இல்லை. மகாத்மாவின் ஆசியாகத்தான் நான் அதைக் கருதினேன். தம் தொண்டர்களில் ஒருவனின் கஷ்டத்தைக் கவனித்துச் செய்த ஓர் ஏற்பாடு. இந்த நீலுவோ என்றால் 'நான் காலேஜில் சேர்ந்து படிக்கப் போவதில்லை. ஏன் என்றால் அப்படிச் செய்தால் காந்தி சேவா சங்கத்தின் பணத்தை ஏற்றுக்கொள்ள வேண்டி வரும்' என்று பிடிவாதம் பிடிக்கிறான்.

காந்திஜி, ஜெயஸ்வால்ஜியின் சகோதரியிடம் சொன்னது எல்லாருடைய ஞாபகத்துக்கும் வந்தது. யாரையும் கட்டாயப் படுத்தக் கூடாது. பீலுவும், பீலுவின் அம்மாவும், நீலுவின் வாதத்தை ஒப்புக் கொண்டார்கள். எனது நோக்கிலிருந்து இந்த விஷயத்தைப் பார்க்க ஒருவரும் தயாராக இல்லை. எனக்கும் என்னுடைய குடும்பத்துக்கும் இடையே இவ்வளவு ஆழமான ஒரு பள்ளம் இருப்பதை இதற்கு முன் நான் உணரவே இல்லை. பீலுவின் அம்மாவின் சகிப்புத்தன்மையை நான் உற்சாகமான சம்மதம் என்று இத்தனை நாட்களாகத் தப்பாக எண்ணியிருந்தேன்.

என் இரு பிள்ளைகளும் வேறு விதமாக அரசியல் பாதைகள் வகுத்துக் கொண்டதற்கு காரணமே எங்கள் இருவருக்குமிடையே எழுந்த இந்தப் போராட்டமோ என்னவோ? இதற்குப் பிறகு நீலு காலேஜில் சேர்ந்து படித்தான். ஆனால் என்னிடமிருந்து ஒரு காலணுகூடப் பெற்றுக் கொள்ளவில்லை. காலேஜ் செலவைப் பீலு ஏற்றுக்கொண்டு விட்டான். பிகார் பூகம்ப நிவாரண வேலை காங்கிரஸ் தொண்டர்கள்மேல் விழுந்தது. இந்தப் பணியில் பூர்ணியா ஜில்லாவில் அக்கவுண்டண்டாக வேலை செய்தான் பீலு. இதற்காக மாதம் ஐம்பது ரூபாய் அலவன்ஸ் கிடைத்தது. அதை நீலுவின் காலேஜ் படிப்புக்காக ஒதுக்கிவிட்டான்.

அண்ணாவிடமிருந்து பண உதவி பெற்றுக்கொள்வதில் நீலுவுக்கு எவ்வித ஆட்சேபமும் இல்லை. என்னிடமிருந்து பெற்றுக் கொள்ளத்தான் அவனுக்கு இஷ்டமில்லை. என் வாழ்க்கையில் இதை விடக் கடுமையான தாக்குதலை நான் வேறு யாரிடமிருந்தாவது பெற்றிருக்கிறேனா என்பது சந்தேகம். இருந்தும், எனக்கு நன்றாகத் தெரியும்; படிப்புத் தவிர எந்தக் களத்தில் நீலுவை விட்டாலும் சரி, அதில் அவன் முதல் இடத்தைப் பிடித்துவிடுவான். பீலுவோ என்றால் படிப்பில் தவிர, வேறு எந்தத் துறையிலும் முழு வெற்றியைக் காண மாட்டான். எத்தனை மாணவர்கள் என் கை வழி போயிருக்கிறார்கள்! எனக்குத் தெரியாதா என்ன?

'ஆனால் நீலு, உன் அண்ணாவுக்கு எதிராக நீ சாட்சி சொன்னதின் மர்மம் மட்டும் புரியவில்லை. உன்னுடைய பார்ட்டியின் ஆணையின் விளைவாக நீ இவ்வாறு செய்திருந்தால், நான் ஒன்றும் சொல்வதற்கில்லை. நானுந்தான் மகாத்மாஜி ஆணையிட்டால் எதையும் தியாகம் செய்யத் தயாராக இருக்கிறேன். ஆனால் எந்த அரசியல் கட்சியாவது இத்தகைய ஆணையிட முடியுமா?' நீலு, பீலு இவ்விருவருடைய கட்சிகளின் நோக்கும் ஒன்றுதான் — நடைமுறையில் ஒரு சில வேற்றுமைகள் இருக்கலாம். இவ்வேற்றுமைகளின் விளைவு இவ்வளவு தூரம் போயிருக்க முடியுமா? மக்கள் ஆதரவை நாடும் கட்சிகள் என்றால் அவற்றின் முதல் கடமை மற்றக் கட்சிகளின் தவறுகளை மக்களுக்கு எடுத்து உணர்த்தி, அவர்களை அந்தத் தவறான வழியிலிருந்து விடுவித்துத் தம் பக்கம் இழுத்துக் கொள்வது. 'நீலு, உனது கட்சியின் ஆணையை நீ நிச்சயமாகத் தவறாகப் புரிந்து கொண்டுள்ளாய். இந்தத் தவறின் பலனை நீ அநுபவிக்கத்தான் போகிறாய். சூத்திர ரூபத்தில் நீ வடித்து எடுக்கும் தர்க்க நியாயங்களை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை என்பது உண்மையாக இருக்கலாம்.

'ஆனால் எனது சாதாரண புத்திக்கு எட்டியவரை, நீ புரிந்து கொண்டது சரியா, தப்பா என்பதைப் பற்றி உன் கட்சித் தலைமை

பிடமிருந்து கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும். ஆனால் இதெல்லாம் இப்பொழுது சரியா, தவறு என்று தெரிந்து ஆகவேண்டியது என்ன? நேர வேண்டிய தவறு, அநியாயம், நேர்ந்துவிட்டது. உன் வாழ்க்கை முழுவதும், உட்காரும் போதும், எழுந்திருக்கும்போதும் இந்த விஷயம் உன்னைக் குத்திக்கொண்டேயிருக்கும். அணு அணுவாகப் பச்சாதாபம் உன்னை வறுத்து எடுக்கும். அப்பொழுது கூட நீ செய்த செயலுக்குப் பிராயச்சித்தம் கிட்டாது.'

சீ சீ. என்ன இது? சபித்துக் கொண்டிருக்கிறேனே! 'இல்லை நீலு, பகவான் உனக்குக் கிருபை செய்யட்டும். ஒருபோதும் செய்த தவறை நீ உணராதவாறு கருணை காட்டட்டும். நீ உன் பார்ட்டியின் ஆணையை எவ்விதம் புரிந்துகொண்டாயோ, அதுவே சரியாக இருக்கட்டும். இந்த நம்பிக்கையின் பலனாகவேதான் நீ இப்பொழுதும் நிமிர்ந்து நின்று கொண்டிருக்கிறாய். உன் மனோதிடம் எவ்வளவு பலமுள்ளதாக இருந்தாலும், உனது தர்க்க நியாயத்தில் உனக்குச் சந்தேகம் ஏற்பட்டுவிட்டால் நீ சரிந்துவிழுந்துவிடுவாய். எனக்கு நன்றாகத் தெரியும், உன் அண்ணா உனக்கு எப்படியிருந்தான் என்று.'

''ஐயா.''

கண்ணைத் திறந்து பார்த்தால் எதிரில் கேதன்லால்ஜி நின்று கொண்டிருக்கிறார். ''தூக்கம் வருகிறது போலிருக்கிறது'' என்கிறார்.

இவர் உட்காராமலிருப்பதே நல்லது. உட்கார்ந்துவிட்டால் அசட்டுப் பிசட்டு என்று ஏதாவது உளறிக்கொண்டே இருப்பார். அர்த்தமில்லாமல் பேசிக்கொண்டிருப்பதில் இந்த மனிதனுக்கு ஈடு இணை யாரும் இல்லை. இவருக்கு மூன்று பிள்ளைகள். ஸ்வராஜ் பிரஸாத், ஸ்வதந்திர பிரஸாத், ஸங்கடன் பிரஸாத். என்ன விநோதமான பெயர்கள்! நீலு, பீலு என்ற என் குழந்தைகளின் பெயர்களோ எவ்வளவு சாதாரணமானவை! அதிகம் யோசிக்காமல் வைத்த பெயர்கள். அப்பா பீலுவைப் 'பலாய்' என்று அழைப்பார். அதுவே நாளடைவில் பீலுவாக மாறிவிட்டது. அப்பா நீலுவைப் பார்த்ததில்லை என்று நினைக்கிறேன். இல்லை, நீலு பிறந்த ஆண்டிலேயே அப்பா இறந்துவிட்டார் என்று நினைக்கிறேன். நன்றாக யோசித்துப் பெயர் வைப்பதிலும் ஒரு சங்கடம் இருக்கிறது. கேதன்லால்ஜி தம் இரண்டாவது பிள்ளை ஸ்வதந்திர பிரஸாதத்துக்குக் கடிதம் எழுதியிருந்தார். அந்தக் கடிதத்தில் அவரது மற்றப் பையன்களின் பெயர்களும் குறிப்பிடப்பட்டிருந்தன. ஜெயில் ஸி. ஐ. டி. அந்தக் கடிதங்களைப் 'பாஸ்' செய்ய மறுத்துவிட்டான். 'இந்தக் கடிதங்கள் மூலமாக ஏதோ 'கோட்' மூலம் ரகசிய சமாசாரம் வெளியே அனுப்பும் முயற்சி நடக்கின்றது' என்பது அவனுடைய திடமான

நம்பிக்கை. இந்த நிகழ்ச்சிக்குப் பின் இவ்விருவருக்குமிடையே எப்பொழுதும் சண்டை, பூசல். விஷயத்தைச் சண்டை போடாமல் விளக்கி இருக்கலாம். ஊஹூம், இருவரும் தங்கள் கௌரவத்தை விட்டுக் கொடுக்க விரும்பவில்லை. தம் கடைசிப் பையனுக்குக் கடிதம் எழுதியிருந்தார். இவ்விருவரின் சண்டையின் விளைவாக அது முந்தா நாள் திரும்பி வந்துவிட்டது. கடிதத்தில் ஒரு வரி, ''இத்தனை நாட்களாக நான் எழுதிய கடிதங்கள் கிடைக்காததற்கு நான் காரணம் அல்ல. இந்தக் கடிதத்தை எந்த ஆந்தையின் அப்பனும் தடுக்க முடியாது.'' அந்தக் கடிதம் திரும்பி வந்துவிட்டது கூடவே ஸி.ஐ.டி. யின் கையெழுத்தில் ஒரு குறிப்பும் இருந்தது.' கைதி இந்தக் கடிதத்தில் தம் தகப்பனுரைப்பற்றி எழுதியுள்ளது சந்தேகாஸ்பதமாயிருக்கிறது. ஆகவே இந்தக் கடிதம் அனுப்புவதற்கான அனுமதி மறுக்கப்படுகிறது.'

இது என்ன, கேதன்லால்ஜி எழுந்திருந்து போகிருர்? இப்பொழுது தானே நான் கேட்டுக் கொண்டதின் பேரில் என் கம்பளியில் உட்கார்ந்தார்? அதற்குள் கிளம்பி விட்டாரே! ஒரு வேளை நான் வாய் திறந்து பேசவில்லை என்பதனுலோ? அல்லது என் மேல் வருத்தமோ என்னவோ? அவர் கிளம்பி போய் வைத்யநாத்தின் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு விட்டார். வைத்யநாத்தின் குழு தூங்கப் போய்விட்டனர் போலும். இப்பொழுது உட்கார்ந்து கொண்டிருப்பவர்கள் கேதன்லால்ஜி, சூரஜ்வல்லி பாபு, ஹரிஹர்ஜி, ராம் சரண்ஜி. இவர்கள் எல்லாரும் முன்னேற்பாடாக மாற்றி மாற்றி எனக்குத் துணையாக உட்கார்ந்து கொண்டிருக்கிருர்கள் என்று நினைக்கிறேன். எல்லாரும் என்னவோ விழித்துக் கொண்டுதான் இருக்கிருர்கள். நான்கு, நான்கு நபர்களாக முறை போட்டுக்கொண்டு என் அருகில் வந்து உட்கார்ந்து கொண்டிருக்கிருர்கள். இந்த வகையில்தான் வைத்யநாத் குழுவினரும் சற்று நேரம் முன்பு வரை இங்கு உட்கார்ந்திருந்தனர் போலும். வைத்யநாத், சதாசிவ் இவ்விருவரிடையே நடந்த 'ப்ரைவேட்' பேச்சுவார்த்தை இது பற்றியதாகவே இருந்திருக்க வேண்டும். இப்பொழுது புரிந்து விட்டது. இவர்கள் என் பேரில் ஒரு கண் வைத்துக் கொண்டிருக்கின்றனர். பாரா போட்டுக்கொண்டிருக்கின்றனர், நான் ஏதாவது விபரீதமாகச் செய்துவிடப் போகிறேனே என்ற பயத்தில். இவர்கள் நினைக்கும் அளவுக்கு நான் மனம் கலங்கிப் போகவில்லை என்பதை எப்படி இவர்களுக்குப் புரிய வைப்பது? என் மகன் மீது அவ்வளவு பிடிப்பு இருந்திருந்தால், பீலு இன்று இந்த நிலைக்கு வந்திருப்பானு, என்ன? இந்தச் சதாசிவ் எங்கே போய்விட்டான்? என் கட்டிலில் தானே உட்கார்ந்திருந்தான்? ஓ, இதோ, என் படுக்கையிலேயே படுத்துக்

கொண்டிருக்கிறன். ஒரு வேளை அவனுக்குக் கண்ணைச் சுற்றியது போலும். பாவம், அவனைக் கொசு பிடுங்கித் தின்று கொண்டிருக்கிறது. எழுந்துபோய் இந்தக் கொசுவலையை இறக்கி விடுகிறேன். நான் எழுந்திருப்பதைப் பார்த்துவிட்டு சூரஜ்வல்லி பாபு, ஹரி ஹர்ஜி இருவரும் பரபரப்புடன் எழுந்திருக்கின்றனர்: ''என்ன, என்ன விஷயம்? நீங்கள் விடுங்கள், நாங்கள் கொசு வலையை இறக்கி விடுகிறோம். நீங்கள் உட்காருங்கள்.''

இந்தக் களேபரத்தில் சதாசிவ் எழுந்து உட்கார்ந்து கொள்கிறன். அவன் முகம் கலவரம் அடைந்திருக்கிறது. இந்த ரகளைக்கெல்லாம் நான்தான் காரணம் என்ற எண்ணத்தில் மறுபடியும் என் கம்பளியில் வந்து உட்காருகிறேன்.

''உட்காருங்கள், சூரஜ்வல்லி பாபு!''

சூரஜ்வல்லி பாபு என் கம்பளி பக்கத்தில் வந்து உட்காருகிறர். எனக்குப் பிடித்த மனிதர். சுபாவத்திலேயே மிகவும் அடக்கமானவர். சென்ற ஆகஸ்ட் மாத இயக்கத்தின்போது அவரது ஒரே பிள்ளை துப்பாக்கிக் குண்டுக்கு இரையாகிவிட்டான். பத்து வயதுப் பையன். அவனுடைய தகப்பனர் அரெஸ்ட் செய்யப்பட்டுப் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்லப் பட்டபோது, மக்கள் திரள் திரளாகப் பெரும் ஊர்வலமாகப் போலீஸ் ஸ்டேஷனை நோக்கிப் போய்க் கொண்டிருந்தனர்.

இந்தக் கூட்டத்துக்கு நடுவிலே வந்து கொண்டிருந்தான், அப்பா ஜெயிலில் அடைபடுவதற்கு முன்பு அவரை ஒரு தடவை பார்ப்ப தற்காக. வீட்டில் பாட்டி அழ ஆரம்பித்துவிட்டாள். அம்மா ஜன்னல் கம்பிகளைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். ஆனல் இவனுக்கு மட்டும் இதெல்லாம் வேடிக்கையாக இருந்தது.

''சூரஜ்வல்லிக்கு ஜே'' என்ற கோஷம். கணக்கற்றவர்களின் உதட்டிலே தன் தந்தையின் பெயர்! எல்லாரும் அவர் புகழ் பாடு கின்றனர்.

''பம்பாயில் மகாத்மாஜியின் மீட்டிங் நடந்தது. மகாத்மாஜி கைது செய்யப்பட்டார்'' என்ற விஷயத்தை அன்று காலை தான் எல்லோருக்கும் அவன் தந்தை தெரிவித்திருந்தார். அதற்குப் பிறகு தான் அவரும் அரெஸ்ட் ஆனர். விநாடிகளுக்குள்ளேயே மக்கள் வாயிலிருந்து தன் தகப்பனரின் பெயர்! அப்பா, மகாத்மாஜி மாதிரி பெரியவராகிவிட்டார். போலீஸ்காரர்கள் மீது பையனுக்கு மிகவும் கோபம் வந்தது. யார் கண்டது, அப்பாவுக்கு அவர்கள் ஏதாவது செய்துவிட்டால்? முன்பெல்லாம் ஜெயில் என்றலே அவனுக்குப் பயம். ஆனல் போன வருஷம் அப்பா சத்தியாக்கிரகம் செய்து ஜெயிலுக்குப் போனபோது அவர் கழுத்தில்தான் எவ்வளவு சாமந்திப்பூ மாலைகள்!

பாட்டி கூட அதற்கு முன்னலேயே சொல்லியிருந்தாள். ''யாரெல்லாம் இங்கிலீஷ்காரன் சண்டைக்கு ஒரு பைசாவும் கொடுக்க மாட்டோம், ஒரு ஆளும் கொடுக்கமாட்டோம் என்று கோஷமிடுகிருர்களோ அவர்களை எல்லாம் போலீஸ்காரன் லட்டியினுல் அடித்து நொறுக்கி விடுவான்'' என்று. ஆனல் அதற்கு நேர் மாருக அந்தப் போலீஸ் இன்ஸ்பெக்டர், எவ்வளவு பெரிய மனிதர், தன் தந்தையைத் தம் வீட்டுக்கு அழைத்து விருந்து அளித்ததை அவனே பார்த்தான். இன்ஸ்பெக்டரின் மனைவி இவனையும் கூப்பிட்டுச் சாப்பாடு போட்டாள். சில மாதங்களுக்குப் பிறகு ஜெயிலிலிருந்து திரும்பி வந்தபொழுது பெட்டி நிறைய என்னவெல்லாம் கொண்டு வந்திருந்தார்! சோப்பு, பென்ஸில், கோடு போட்ட நோட்டு. ஜெயிலில் க்ஷவரம் செய்து கொள்வதற்காக அவருக்குக் கொடுத்திருந்த பிளேடிலிருந்து அவன் ஒரு கத்தி செய்து கொண்டான். அந்தப் பெட்டியில் 'சீமைப் பல்குச்சி' இருந்தது. தாத்தா 10, 12 நாள் க்ஷவரம் பண்ணிக்கொள்ளாமல் இருந்தால் அவர் மயிர் எப்படியிருக்குமோ அதே மாதிரி இந்தச் சீமைப் பல்குச்சியில் 'ரோமங்கள்' இருந்தன. அதன் மேல் பால் மாதிரி 'மருந்து' வைத்துப் பல் தேய்க்கணும். அவனுடைய தங்கை தன்கனியா இருக்கிருளே, அவள் சுத்த அசடு. இந்தப் 'பல்குச்சியை' அவள் கன்னத்தில் லேசாகத் தடவினுல் கூட அழ ஆரம்பித்து விடுவாள். சின்ன வயசுலே தாத்தா கூட இப்படித்தான் அவள் கன்னத்திலே, 'தாடியைத் தேச்சுடுவேன்'' என்று பயமுறுத்துவார்.

போலீஸ் ஸ்டேஷனைச் சுற்றியிருக்கும் முள் கம்பியைச் சுற்றிக் காடு மாதிரி அடர்த்தியாக மக்கள் கூட்டம். போலீஸ் ஸ்டேஷனின் கூரையைப் பார்க்கக்கூட முடியவில்லை. அப்பாவையா பார்க்க முடியும், இந்தக் கூட்டத்தில்? முள் கம்பி வேலியை உடைத்துக் கொண்டு மக்கள் சமுத்திரம் போலீஸ் ஸ்டேஷன் காம்பவுண்ட்டுக்குள்ளேயே புகுந்தது. கூட்டத்தின் நடுவில் இருந்த இந்தச் சிறுவன் அதனுலேயே தள்ளப்பட்டு முன்னுல் போய்ச் சேர்ந்து விட்டான். ''சூரஜ்வல்லி பாபுவுக்கு ஜே!'' எல்லாரும் போலீஸ் ஸ்டேஷன் பக்கம் ஏன் ஓடுகிருர்கள்? பிறகு?

பிறகு, மறுநாள் இரவு சூரஜ்வல்லி பாபுவை லாக்-அப்பில் இருந்து வெளியில் அழைத்துச் சென்றனர். ஸதர் ஆஸ்பத்திரிக்குக் கூட்டிக் கொண்டு போகிருர்கள் என்று கேள்விப்பட்டேன். அவர்களின் கரையற்ற கருணை! கடைசிச் சில விநாடிகளில் பையனைப் பார்ப்பதற்கு அனுமதித்தார்கள். சில மணி நேரம் சுடுகாட்டில் இருக்கவும் அனுமதித்தனர். சிறுவனின் இடக் காலில் முழங்கால் வரை ஆம்புடேட் செய்ய வேண்டியதாயிற்று. இந்த ஆபரேஷனுக்குப்

பிறகும் கூடப் பையன் பிழைக்க மாட்டான் என்று சிவில் ஸர்ஜனுக்குத் தெரிந்துவிட்டது. மறுநாள் சாயந்திரம் மறுபடியும் எங்கள் நடுவில் திரும்பி வந்து சேர்ந்தபோது அவருக்கு முன்னால் போவதற்குச் சங்கோஜமாக இருந்தது. அந்த ஆழமான, அதிகம் பேசாத மனிதருக்கு என்ன ஆறுதல் கூறமுடியும்? அன்று நானும் இன்று அவர் செய்த மாதிரி அவர் பக்கத்திலே போய் உட்கார்ந்து கொண்டேன். ''உட்காருங்கோ'' என்று ரொம்ப நேரத்துக்குப் பிறகு ஒரே ஒரு வார்த்தை சொன்னார்.

கண நேரந் தான் நினைவு இருந்தது. அப்பொழுது என் கழுத்தைத் தழுவிக் கொண்டு, ''ஓ, ரொம்ப ஜோராமாக இருக்கு இல்லேப்பா'' என்றான். அதற்குப் பிறகு இரண்டு மணி நேரத்தில் எல்லாம் முடிந்து விட்டது. இது என்ன விபரீதம்! என் கண்ணிலா கண்ணீர்! இல்லை இது சூரஜ்வல்லி பாபுவின் மீதுள்ள அனுதாபத்தினால் எழுந்த கண்ணீர். பீலுவைப் பற்றிய எண்ணத்தில் எழுந்தது அல்ல. சூரஜ்வல்லி பாபுவின் கண்களிலும் ஜலம் கசிவது தெரிகிறது. ஒருவர் அழும்போது பக்கத்தில் இருப்பவர் கண்களில் ஜலம் வருவதைத் தடுப்பது கஷ்டம். சீ சீ! கொஞ்சம் கூட உணர்ச்சிகளை அடக்கிக் கொள்ளும் மனோதிடம் இல்லையே, என்னிடம்! மஹாத்மாஜி! என் மனத்தைத் திடப்படுத்துங்கள்! சூரஜ்வல்லி பாபு ஒருவர்தான் என் மனோநிலையைப் புரிந்து கொண்டிருக்கிறார். அவரது அனுதாபம்....

வராந்தாவில் ஓடி வந்து கொண்டிருப்பது யார்? வார்டர் ஸிங்ஜி மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க ஜன்னலுக்கு முன்னால் விளக்கைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு நிற்கிறான். பிறகு நிதானமாக மிகவும் கவலைத் தோய்ந்த முகத்துடன் வேறொரு திசையில் போகிறான். இரண்டொரு நிமிஷங்களுக்குப் பிறகு கதவுக்குப் பின்னால் வந்து நிற்கிறார் ஜஃபர் துரை, அஸிஸ்டெண்ட் ஜெயிலர். எங்கள் எல்லாரையும் நோக்கிப் புன்சிரிப்புடன் மரியாதை செலுத்துகிறார். பிறகு ஒன்றுமே சொல்லாமல் போகிறார். இரவு ரவுண்டில் வந்திருக்கிறார். ஒவ்வோர் இரவும் ஒவ்வோர் அஸிஸ்டெண்ட் ஜெயிலருக்கு டியூட்டி. இதனால்தான் வார்டர் விளக்கை எடுத்துக்கொண்டு போனான்.

ஆமாம், சூரஜ்வல்லி பாபுவுக்கு அவர் பிள்ளையின் தகன காரியங்களைச் செய்வதற்காகச் சுடுகாட்டுக்குச் செல்ல அனுமதித்த மாதிரி என்னையும் சுடுகாட்டுக்குச் செல்ல அனுமதிப்பார்களா? மாட்டார்கள் என்று தோன்றுகிறது. அப்படி ஓர் எண்ணம் இருந்திருந்தால் இதற்கு முன்பே எனக்கு அறிவித்திருந்திருப்பார்கள். அனுமதித்திருந்தால் பீலுவின் முகத்தைக் கடைசி முறையாகப் பார்க்கும் வாய்ப்பு கிடைத்திருக்கும். பார்ப்பதற்குத்தான் என்ன இருக்கிறது? சமயம் வரும்

போது ஒரு வேளை என்னால் அந்தப் பக்கமே திரும்பிப் பார்க்கக்கூட முடியாமலிருக்கக்கூடும். ஊஹூம், நீலுவின் சுந்தர வடிவம் என் மனத்தில் எப்படிப் புதைந்து கிடக்கிறதோ, அப்படியே இருக்கட்டும். வேறு பார்க்கத்தான் என்ன இருக்கிறது? ஆனாலும் நாளை வெளியே போக முடிந்தால் நீலுவை ஒரு வேளை பார்க்க முடியலாம். அவனைக் கட்டாயம் பார்க்க வேண்டும் எனக்கு. அவனுடைய மனம் இப்போது எந்த நிலையில் இருக்கும்? கடைசியில் ஏதாவது விபரீத மாகச் செய்துவிடுவானோ என்ற பயம் எனக்கு. ஒருவன் தான் போய் விட்டான். மற்றவன் தலையில் என்ன எழுதியிருக்கிறது என்பது, பகவானே, உனக்குத்தான் தெரியும். எனக்கு நேர வேண்டியது நேர்ந்துவிட்டது.

என் கவலையெல்லாம் நீலுவின் அம்மாவைப் பற்றித்தான். அவள் கட்டாயம் சாப்பாடு கீப்பாடு எல்லாவற்றையும் நிறுத்தி இருப்பாள். ஜெயிலுக்குள் தான் செய்திகள் வெகு சீக்கிரம் பரவி விடுகின்றனவே! எல்லா விஷயங்களும் அவளுக்கு எட்டியிருக்கும். நீலு சாட்சி சொன்ன விவரமும் அவளுக்குத் தெரிந்திருக்கக் கூடும். இந்தப் பேரிடியை அவளால் எப்படித் தாங்கிக்கொள்ள முடியும்? முட்கள் நிறைந்த அரசியல் களத்தில், அவள் தானாக ஆசைப்பட்டு இறங்கவில்லை. காட்டு வெள்ளத்தில் அடித்துத் தள்ளப்பட்டு மிதந்து வரும் கட்டைபோல் அரசியலில் மாட்டிக்கொண்டவள், இவள். குடும்பம் தான் இவளது இயற்கையான களம். தான் பேணி வளர்த்த குடும்பத்தில் ஊறும் ஆழ்ந்த இன்பம் மட்டுமே நிறைந்த சிறிய உலகம். வெளியுலகில் வீசும் புயல்கள் புகாதபடி சுவர்களை எழுப்பி, அதற்குள் இயங்கும் சிறு உலகத்தில், தன் அநுபவத்துக்கு அப்பாற்பட்ட எதையும் நுழைய விடாத தெளிவும் உறுதியும் நிறைந்த வாழ்க்கை நடத்துவதுதான் இவளது ஆசையெல்லாம். அத்தகைய உலகத்திலிருந்து அவளைத் தெளிவான, முடிவில்லாத முட்கள் நிரம்பிய பாதையில் நான் வலுக் கட்டாயமாக இழுத்துக் கொண்டு வந்து விட்டேன். வாயைத் திறந்து ஒன்றும் சொல்லாவிட்டாலும் இதையெல்லாம் அவள் எதற்காகச் சகித்துக் கொள்ள வேண்டும்? நீலுவின் தாயார் எவ்வளவோ தாங்கிக் கொண்டு விட்டாள். ஆனால் பொறுமைக்கும் எல்லை இல்லையா என்ன? நாளைத் தகன காரியங்களுக்கு அவளைப் போக விடுவார்களா? போகவிடாமல் இருந்தாலே நல்லது. ஆட்சியாளர்கள் யாரையுமே போகவிடமாட்டார்கள் என்று தோன்றுகிறது.

ராணுவ லாரியில் ஒரு வேளை சவத்தை எடுத்துச் செல்லலாம். மிகவும் தயவு கூர்ந்து சூப்பிரண்ட் துரை ஒரு பிராமண வார்டரைக் கொண்டு தகனக் கிரியைகளைச் செய்ய ஏற்பாடு செய்யக்கூடும்.

ஜெயிலின் நாலா பக்கங்களிலும் இன்றிரவு ஆயுதப் போலீஸ் பாரா போடுகின்றனரா என்ன? மதில்களைச் சுற்றி வளைய வந்து கொண்டிருக்கின்றனர். அர்த்தமற்ற வீண் சிரமம். இவ்வளவு கண்காணிப்புக்கு அவசியமே இல்லை. ஜெயிலுக்கு வெளியே சூழ்நிலை எப்படியிருக்கிறது என்று எனக்குத் தெரியாது. ஆனால் ஜெயிலுக்குள் ஒரு துளியளவு கோபதாபமோ, சலசலப்போ இல்லை. மற்ற நாட்கள் போலவேதான் இருக்கிறது.

காலையில் ஜெயில் கேட் அருகில் ஒரு சிறிய கூட்டம் இருக்கலாம். தடையுத்தரவுகளை மீறி ஓரிரண்டு அநுதாபக் கூட்டங்கள் நடைபெறலாம். அதிகமாகப் போனால் நகரத்தில் ஹர்த்தால் நடக்கலாம். ஆனால் இவை எல்லாம் எனக்கு நேரவிருக்கும் பெரும் இழப்பை ஈடு செய்யாது. பீலுவின் அம்மாவுக்கு அநுதாபம் காட்டுவதற்குக் கூட மனிதர்கள் கிடையாது. அவளுடைய தங்கை பிருந்தாவனத்தில் இருக்கிறாள். சம்சார பந்தங்களிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டவள் அவள். மருமான்கள் பரிசயம் கூட அவளுக்குக் கிடையாது. பூலுவின் மாமா ஒரு சர்க்கார் உத்தியோகஸ்தர்.

விஜயதசமியன்று கூட வாழ்த்துத் தெரிவித்து ஒரு கடிதம் கிடையாது அவரிடமிருந்து. இதற்கெல்லாம் மேல் இப்போது இந்த அபாண்டம். இனிமேல், தம் உத்தியோகத்தின் பொருட்டு எங்களுடைய உறவைக் கூட ஒப்புக்கொள்ள மாட்டார். நீலுவோ, பீலுவோ மாமாவின் வீட்டுக்குப் போகவே மாட்டார்கள். பெரியவர்களான பிறகு ஒரு தடவை போயிருந்தார்கள். ஒரு நாள் திடீரென்று திரும்பி வந்து நின்றார்கள். ஏன் என்று ஒன்றுமே புரியவில்லை. பிறகு சமாசாரம் தெரிந்தது. இவர்களுடைய மாமா என்னை ஒரு 'வாகபாண்ட்' (விடலை) என்று வர்ணித்தாராம். இந்த அவமானம் அவர்களுக்குப் பொறுக்கவில்லை. ஆனால் அவர் அப்படிச் சொன்னது நியாயந்தானே! அவர் நோக்கில் நான் நாடோடியில்லாமல் வேறு என்ன? குடும்பப் பொறுப்பில்லை. பணம் சேமித்து வைக்கவில்லை. 'லோ, லோ' என்று ஊர் சுற்றிக்கொண்டிருக்கிறேன். உலக அநுபவமுடையவர்கள் இத்தகைய மனிதனை 'வாகபாண்ட்' என்று சொல்லாமல் வேறு யாரைச் சொல்லுவார்கள்? சாதாரணமாகவே இவர்கள் எங்களைச் சற்றுப் 'பைத்தியம்' என்று நினைப்பவர்கள். கொஞ்சம் மரியாதையுடன் எங்களைக் குறிப்பிட வேண்டுமென்றால் 'வாகபாண்ட்' என்று சொல்லுவார்கள்.

சீமையில் முன்பு எல்லாம் 'வாகரென்ஸி ஆக்ட்' என்ற சட்டம் உண்டு. அதில் நான் கட்டாயம் பிடிபட்டுப் போயிருப்பேன். இங்கு இப்போது கூட எங்கள மேல் பி. எல். கேஸ் (bad livilihood case)

தொடரலாம். 1921-22-இல் பல பெரிய காங்கிரஸ் தலைவர்கள் பி.எல். கேஸ்களில் தண்டிக்கப்பட்டார்கள். குழந்தைகள் இம்மாதிரி விஷயங்களில் மிகவும் தொட்டாற்சிணுங்கிகளாக இருக்கின்றனர். நானாயிருந்தால் சிரித்துவிட்டுப் போயிருப்பேன். இந்த நீலுவுக்கு அப்பாவிடம் எவ்வளவு மரியாதை என்று வீட்டில் எல்லாருக்கும் தெரியும். ஆனால் வெளி மனிதர் யாராவது அவமரியாதையாக என்னைப் பற்றிப் பேசி விட்டால் தொலைத்துவிடுவான். ஒரு விஷயம் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். இப்பொழுதும் என் முன்னால் ஒன்றும் சொல்லமாட்டான். இன்று வரை என்னை அவன் நேருக்கு நேராக எதிர்த்துப் பேசியதில்லை.

போய் முகத்தில் கொஞ்சம் ஜலத்தைத் தெளித்துக்கொண்டு வருகிறேன். உட்கார்ந்து உட்கார்ந்து கால், முதுகு எல்லாம் ஒரேயடியாக வலிக்கிறது. யாராவது தம் உடம்பைப் பற்றி விரும்பி நினைத்துக் கொள்கிறார்களா என்ன? உடம்புதான் ஞாபகப்படுத்துகிறது. எழுந்திருக்கும்போது சூரஜ்வல்லி பாபு கேட்கிறார்: ''என்ன சமாசாரம்? எங்கே கிளம்பிவிட்டீர்கள்?''

''டிரம்மிலிருந்து ஜலமெடுத்துக் கை, முகம் இரண்டையும் அலம்பிக் கொண்டு வருகிறேன்'' என்றேன்.

மேலே ஏதோ ஏரோப்ளேன் சத்தம் கேட்கிறது. இவற்றுக்கு ஓய்வே கிடையாதா? இவர்கள் தேசத்து மக்கள் நூற்றுக்கணக்கில் சண்டையில் மரிக்கும்போது, தனி ஓர் உயிரின் மதிப்பு இவர்களுக்கு எப்படித் தெரியும்? என் கண்களுக்குப் பீலு என்னுடைய மகன். இவர்கள் கண்களில் மஹாயுத்தம் நடந்துகொண்டிருக்கும்போது சாதாரண காலத்துக்கு உரித்தான தர்ம நியாயங்களை எதிர்பார்க்க முடியுமா, என்ன? இன்றைய சாதாரண மனிதன் ரத்த மாமிசத்தினால் உருவாக்கப் பட்ட பிரகிருதியாக இயங்குவதில்லை. இன்று அவன் ஒரு ஐடென்டிடி கார்ட், ரேஷன் கார்டில் ஒரு நம்பர்.

களத்தில் யுத்தம் புரியும் சிப்பாய்களை விட்டுவிடுவோம். சாதாரண மக்களின் வாழ்க்கையே உலகமெங்கும் மாறிவிட்டது. முன்பெல்லாம் ஓரிரண்டு ஏரோப்ளேன் பறந்தாலே வாயைப் பிளந்து வானத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும் மக்கள் இப்பொழுது மூன்று டஜன் 'பாம்பர்கள்' சேர்ந்து பறந்தாலும் திரும்பிக்கூடப் பார்ப்பதில்லை.

கல்கத்தாவில் 'பாம்' விழுந்தபோதுகூட மக்கள் அதை அலட்சியம் செய்துவிட்டு, தங்கள் காரியங்களைத்தான் கவனித்துக் கொண்டிருந்தார்களா? கொஞ்சங் கூடப் பரபரப்பு அடையவில்லையா? இவர்களுக்கெல்லாம் இப்போது பீலுவைப்பற்றி யோசிக்க அவகாசம் ஏது? மக்களே சிந்திக்காதபோது, சர்க்கார் மாத்திரம் இதைப்பற்றிச் சிந்தித்துக் குழப்பிக் கொள்ளப் போகிறதா, என்ன? பீலுவின் கட்சி

சொல்வது சரிதான். யாருடைய உள்ளத்தை மாற்ற முடியும்? மாற்று வதற்கென்று ஒரு உள்ளம் இருந்தால்தானே மாற்றுவது என்ற பிரச்னை எழ முடியும்? ஆனால் எவ்வளவுக்கெவ்வளவு வன்முறைகளை உபயோகிக் கிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு அவற்றை அழுக்குவதற்கான அடக்கு முறையும் கடுமையாகும். அந்த அடக்குமுறையைச் சகித்துக் கொள்ளும் சக்தி மக்களுக்கு இருக்கிறதா? லட்சியத்தை அடைய வேண்டும் என்ற வேகத்தின் அளவுகோல், அதற்காக நாம் செய்ய தயராக இருக்கும் தியாகந்தான். இந்தச் சாதாரண உண்மையைப் பீலுவும், அவன் சகபாடிகளும் புரிந்துகொள்ளவில்லை. குதிப்பதற்கு முன்னால் சாமர்த்தியத்தையும் அளந்து வைத்துக்கொள்ள வேண்டும்.

கைகள், முகம் இரண்டையும் அலம்பிக்கொண்டு துண்டால் துடைத்துக் கொள்கிறேன். இதென்ன! தாஸ்ஜி வந்து நிற்கிறாரே? என்ன விஷயம்? நீரை அள்ளிவிட்டுக் கொள்ளும்போது எழுந்த சத்தம் கேட்டு அவர் தூக்கம் கலைந்து விட்டதா என்ன? ஊஹூம்...

மூன்றுமணி அடித்துவிட்டது என்று நினைக்கிறேன். ஒவ்வொரு நாளும் காலை மூன்று மணிக்கு எழுந்துவிடுவார். அதற்குப் பிறகு குளிர் காலமோ, வெயில் காலமோ, அரை மணி ஸ்நானத் தொட்டியில் உட்கார்ந்துவிடுவார். இந்தத் தொட்டி அதிகச் செலவில் ஃபாக்டரியில் ஸ்பெஷலாகத் தயாரிக்கப்பட்டது. பார்த்தால் ஒரு ஈஸிசேர் மாதிரி இருக்கும். இதில் கழுத்தளவு தண்ணீரில் உட்கார்ந்துகொண்டு வாயால் ஒருவித ஒலி எழுப்புவார். ஒரு சின்ன துவாரத்தின் வழியாக நீர் செல்லும்போது எழும் ஒலிபோல் இருக்கும் இது. இந்தத் தொட்டியைச் சுற்றி நாலு பக்கங்களிலும் பெட்ஷீட்டினால் ஒரு படுதா மாதிரி தொங்கவிடுவார். ஸ்நானம் முடிந்த பிறகு சிரசாசனம். அரைமணிக்கும் மேலாகத் தலையைக் கீழே வைத்துக் காலை உயர்த்தி அசையாமல் நிசப்தமாக இருப்பார். எனக்குப் பயம், என்றாவது ஒரு நாள் வாயிலிருந்தும் மூக்கிலிருந்தும் ரத்தம் பொங்கி வராமல் இருக்கவேண்டுமே என்று.

மறுபடியும் திரும்பி என் இடத்துக்கு வருகிறேன். சூரஜ்வல்லி பாபு உட்கார்ந்து கொண்டிருக்கிறார். பீலு இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறானோ? ஒருவேளை பயத்தாலும் கவலையாலும் அரிக்கப் பெற்று செல்லினுள் மேலும் கீழுமாக நடந்துகொண் டிருக்கிறானோ? என்னைப்பற்றிய சிந்தனை ஒரு தடவையாவது அவன் மனத்தில் எழுமா? கடைசி நிமிஷங்களில் என்னைப்பற்றி என்ன நினைக்கிறான் என்று மட்டும் தெரியுமானால்...? நீலுவின் மேல் பழி சொல்லமாட்டான். அவளை மன்னித்து விடுவான். இது மட்டும் நான் நிச்சயமாகச் சொல்ல முடியும். அவன் என்ன நிலையில் இருக்கிறான் என்று பகவானுக்குத்

தான் தெரியும். ஒரு வேளை பைத்தியம் மாதிரி ஆகிவிட்டானே? வெறிபிடித்துத் தலைமயிரைப் பிய்த்துக் கொள்கிறானே? அல்லது இரும்புக் கம்பிகளில் தலையை மோதிக் கொள்கிறானே? அல்லது குழந்தை மாதிரி, கதவைத் திறந்து விடுமாறு வார்டர்களைக் கெஞ்சிக் கொண்டிருக்கிறானே? ஊஹூம். ஒருக்காலும் இருக்காது. பீலு இப்படி ஒரு காரியம் செய்யவே மாட்டான். சகிக்க முடியாத வேதனையில் அவன் இதயம் தூள் தூளாகப் போனாலும், அவன் முகத்தில் ஒருவிதச் சலனமும் இருக்காது. கடைசி விநாடி வரை அவனது ஆதர்சத்தின் ஒளியை மங்காமல் பாதுகாத்துக்கொள்வான்.

சூப்பிரண்டிற்குக் காட்டுவதற்காக முகத்தில் சிரிப்பை வரவழைத்துக் கொள்வான். ஜெயிலருடன் கிண்டலாகக் கூடப் பேசுவான். தூக்கு மேடைப் படி ஏறும்போது, இவ்வளவு அழகான விடியற்காலையில் காலை நட்சத்திர சாட்சியாகத் தன்னைத் தூக்கிலிடுவதற்காக ஜெயில் அதிகாரிகளுக்கு நன்றி சொல்லுவான். ஆனால் கொஞ்சமாவது தன் பலவீனத்தைக் காட்டித் தன் கட்சிக்குக் களங்கத்தை ஏற்படுத்த மாட்டான்.

என் மகன், மூத்த மகன், அவனை எனக்குத் தெரியாதா என்ன? காரணம் இல்லாமலா எல்லாரும் அவனை நேசிக்கின்றனர்? ஹர்தேவ் துபே, அவர் மனைவி இருவருமே 'பீலு' என்றவுடன் மனம் நெகிழ்ந்து விடுகின்றனர். ஸகா தேவின் தாயாருக்குப் பீலு என்றாலே உயிர். அவன் பெரியம்மா, ஜிதேனின் அம்மா, என் மன்னியைப்பற்றிக் கேட்கவே வேண்டாம். பீலுவுக்குத் தன்னை எல்லாரும் கொஞ்ச வேண்டும் என்ற ஆசை. பெரியம்மாவுக்கு அவன் 'வீட்டு மனிதன்'. இதைவிடக் குறைவான பரிசயமுள்ள இடங்களிலுங் கூடச் சிறிதளவு அன்பும் ஆதரவும் கிட்டினால், அதைப் பேணி வளர்த்து நிரந்தர மாக்கிக் கொள்ள முற்படுவான் பீலு.

ஹோலிப் பண்டிகைக்குப் பிறகு சில இடங்களுக்குச் சென்று தனது வணக்கத்தைச் செலுத்திவிட்டு வருவான். வேறு சில இடங்களுக்கு ஆசிரமத்து எலுமிச்சம்பழம் அனுப்பி வைப்பான். மற்றும் சில இடங்களில் சிறுவர்கள் யாருக்காவது படிப்புக்கு ஏற்பாடு செய்து கொடுப்பான். இந்த மாதிரியான அவனது பணிகளுக்கு முடிவே இல்லை. இவையெல்லாம் நட்பின் பொறுப்பிலிருந்து எழவில்லை. ஒருவிதக் கட்டாயத்திலிருந்து பிறக்கவில்லை. எக்காலத்துக்கும் இதே உறுதி யுடன் இருக்கும் பந்தம் என்றும் சொல்வதற்கில்லை. மற்றவர்களின் பாசத்தைச் சம்பாதித்துக் கொள்ள வேண்டும் என்ற வெறி. வீட்டில் தன் தாயாரிடமிருந்து பெறும் அன்புக்குமேல் உபரியாகப் பெரும் ஆதரவு. அதனாலேயே தான் இவை இவ்வளவு இன்பமாக இருக்

கின்றன. நீலுவுக்கு இவை பொருட்டுப் பெருமை இல்லை. அன்பு அவனது பிறப்புரிமை. அதைப் பெறுவதற்காக அவன் மதுரமாக இரண்டு வார்த்தைகள் பேசுவாஞ என்ன? தன் எண்ணங்களிலேயே திளைத்திருப்பவன் அவன். தன் கருத்துக்கள் மட்டுந்தான் அசைக்க முடியாத உண்மை வாய்ந்தவை என்ற நினைப்பில் அவற்றை மற்றவர்கள் மீது திணிப்பதற்கே எப்போதும் முயன்று கொண்டிருப்பான். பீலு மாதிரி நட்பின் கடனைத் திணிப்பதற்காகச் சின்னச் சின்னக் கடமைகளை எப்போதும் செய்துகொண்டு காலத்தை வீணுக்குவது என்பது நீலுவால் முடியாது. அவற்றைக் கடுமையாக விமர்சிப்பதிலேயே அவனுக்கு அதிக ஆனந்தம். ஆனல் பீலுவோ மற்றவர்களை மந்திரத்தால் கட்டுவது போல் கட்டிவிடுவான். ஏன்! என் அப்பாவையே மயக்கிவிட்டானே! சொல்லக்கூடாது, பரமபதம் அடைந்துவிட்டார். ஆனல் அப்பாவுக்கு முன்கோபம் எப்போதுமே உண்டு. எவ்வளவோ நாட்கள் பார்த்திருக்கிறேன். சாப்பிட உட்காருவார். சாப்பாடு அவருக்குப் பிடிக்காதிருக்கும். முதலில் கொஞ்சம் முணுமுணுப்பு, பிறகு 'ரெட்சட் டயட்' என்று சொல்லி டம்ளரை 'டக்' என்று வைத்துவிட்டு எழுந்துவிடுவார்.

இங்கே வீட்டில் அம்மா நாள் முழுதும் பட்டினி. டீ கொஞ்சம் நன்ருக இல்லையா? ''சீ, என்ன கழுநீர்!'' என்று கப்பைவீசி எறிந்து விடுவார் அப்பா. இந்த மாதிரி எத்தனை நிகழ்ச்சிகள்? வயது ஆக ஆக அவர் கோபமும் அதிகரித்தது. கடைசிக் காலத்தில் மூளைக் கோளாறுக்கான சின்னங்களும் தோன்ற ஆரம்பித்தன. கால்கள் இரண்டும் கொஞ்சங் கொஞ்சமாகச் சுவாதீனமிழந்தன. வேறு வழி இல்லாமல் காசியை விட்டுவிட்டுப் பூர்ணியாவிற்கு வரவேண்டியதாயிற்று. உடல்நிலை மோசமாக ஆகக் கோபம் அதிகரித்தது. இந்தச் சமயத்தில்தான் பீலு பிறந்தான். இரவு, பகல் எல்லாம் அவர் குழந்தையுடன்தான் இருப்பார். நடமாட்டம் இல்லை. ஈஸிசேரில் படுத்துக்கொண் டிருப்பார். ஆனல் 'பலாயி' (அதாவது பீலு) மேல் வைத்திருந்த கண்ணை எடுக்கமாட்டார்.

பக்கத்து வீட்டுப் பெண்கள் யாராவது வீட்டுக்கு வந்தால் ''இவர்கள் சூனியக்காரிகள். பீலுவுக்குச் சூனியம் வைக்க வந்திருக்கிருர்கள்'' என்று சொல்லுவார். இது விஷயமாகப் பீலுவின் அம்மாவுக்கு எவ்வளவு திட்டுக்கள்! கடைசிக் காலத்தில் படுக்கையோடு படுக்கையாகப் போனபோது, அவருடைய மூளைக்கோளாறு மேலும் அதிகமாகி விட்டது. அவரது கட்டிலைச் சுற்றி ஒரு 'ப்ரேம்' போட்டுவிட்டேன், தம்மையறியாமல் உருண்டு கீழே விழாமல் இருப்பதற்காக. பேச்சு கிட்டத்தட்ட நின்றுவிட்டது. கண்களை மூடிக்கொண்டே

கிடப்பார். ஆட்களை அடையாளம் கண்டு பிடிப்பது கூடக் குறைந்து விட்டது. ஆனால் கோபம் மட்டும் குறையவில்லை. பீலுவின் அம்மாவையும், என்னையும் பிராண்டிக் கிள்ளி எடுத்து விடுவார்.

சாப்பாடு வைக்கும்போது குழந்தை பீலுவைப் பக்கத்தில் உட்கார வைத்துவிட்டால் கோபம் நிமிஷத்தில் பறந்துவிடும். சில சமயம் கோபத்தில் படுக்கையில் சின்னக் குழந்தை மாதிரி புரண்டு படுத்திருக்கும்போது, பீலுவின் பிஞ்சு விரல்களை அவர் முகத்தில் வைத்து விட்டால் மந்திரத்தில் கட்டுண்ட பாம்பு மாதிரி அடங்கிவிடுவார். சில சமயங்களில், கண்களை மூடிக்கொண்டு படுத்திருக்கும்போது, நாங்கள் பல தடவை கூப்பிட்டாலும் கண்களைத் திறக்க மாட்டார். எவ்வளவுக்கு எவ்வளவு கூப்பிடுகிறேனோ அவ்வளவுக்கு அவ்வளவு அவரது வீம்பு அதிகரிக்கும். நாங்கள் உடனே, ''பீலு, தாத்தாவைக் கூப்பிடு'' என்றவுடன், என்ன ஆச்சரியம்! அந்த அரை நினைவு நிலையிலும் பீலு கூப்பிடுகிறான் என்பதைப் புரிந்து கொண்டுவிடுவார். அவர் கை 'பீலு எங்கே?' என்று தேடும். பிறகு கண்களைத் திறந்து திரும்பிப் பார்ப்பார்.

அவர் இறந்த தினம், கடைசி விநாடிகளில் அப்பா காதில், ''அப்பா, பலாயி கூப்பிடுகிறான். பலாயி, பலாயி'' என்றேன். பீலுவின் பெயரைக் கேட்டால் அவருக்குக் கொஞ்சம் தெம்பு வரும் என்று நினைத்தேன். ஆனால். அப்பொழுது அவர் எல்லாவிதமான குரல்களுக்கும் அப்பால் போய்க்கொண் டிருந்தார். பீலு மிகவும் சூட்டிகையான பையன். அப்படித்தான் அவனுக்கு அப்பொழுது என்ன வயது? தன்னைத் தவிர யாரும் தாத்தாவைக் கட்டுப்படுத்த முடியாது என்பதை மட்டும் எப்படியோ புரிந்து வைத்துக் கொண்டிருந்தான். எங்கள் குரலிலிருந்தே, தாத்தாவைச் சாந்தப்படுத்தவோ, சாப்பிட வைக்கவோ தான் தேவைப்படுகிறோம் என்பதை அவன் அறிந்து வைத்திருந்தான். அந்தச் சமயங்களில் ஒரு வித அலட்சிய பாவம், அல்லது பொய் காம்பீர்யத்தை வரவழைத்துக் கொள்வான். ஒருவேளை தாயார் தன்னைக் கொஞ்சம் கெஞ்சித் தயவு நாடவேண்டும் என்ற எண்ணமோ என்னவோ? பீலு அவனுடைய தாத்தாவை மறுபடியும் பார்ப்பானா? அப்பா! கடைசியில் உன் பிரிய பலாயியை இப்படியா உன்னிடம் இழுத்துக்கொள்ளப் பார்க்கிறாய்?

மனசு சிறகடிக்கிறது. இந்த அறையில் தான் எத்தனை மக்கள், எல்லாரும் விழித்துக் கொண்டிருக்கிறார்கள். அறைக்கு வெளியில் வார்டரின் பேச்சுக் குரல் தாழ்ந்துவிட்ட போதிலும் முழுவதும் ஓய்ந்து, நிச்சப்தமாக இல்லை. தாஸ்ஜியின் ஸ்நானத்தின் ஒலி கேட்கிறது. அறை கொஞ்சம் குளிர்ந்திருக்கிறது. வெளியில் ஏதோ நாய்

குலைத்துக் கொண்டிருக்கிறது. இருந்தும், ஏதோ ஓர் அழுத்தமான நிலை, ஆகாசத்தில், காற்றில், எல்லா இடங்களிலும் நிலவுகிறது.

அறையின் வெளிச்சம் கம்பிகளிடையே ஊடுருவி வராந்தாவில் விழுகிறது. புடைவை கட்டிக்கொண்டு... இது யார் ஓ! ஏதோ சில விறகுக் கட்டைகளைச் சேர்த்துப் போட்டிருக்கிறார்கள். அவற்றின் மீது விழும் வெளிச்சம் இந்தப் பிரமையை உண்டு பண்ணியிருக்கிறது. பிஷுன் தேவ்ஜி மெஸ்ஸிற்கான விறகுகளைச் சேர்த்து வைத்திருக்கிறார். ஜெயிலில் இருக்கும் ஒவ்வொருவரிடமும் இந்தச் 'சேமிப்பு'ப் பழக்கத்தைக் கவனித்திருக்கிறேன். கிழிந்த சட்டைகள், பழைய செருப்புகள் எல்லாவற்றையும் சேகரித்து வைத்துக் கொள்கிறார்கள்.

ஜெயிலில் இருந்தாலே இந்த மாதிரி ஒரு மனோவிருத்தி ஏற்படுகிறது போலும்! விறகுக் கட்டையைப் பார்த்து இந்த மாதிரி திடீரென்று ஒரு பிரமை தோன்றக் காரணம்? ஆசிரமத்தில் சமையல் அறைக்குப் பக்கத்திலிருக்கும் வராந்தாவில் விறகு, வரட்டி இரண்டும் கிடக்கும். உள்ளே பீலுவின் அம்மா சமைத்துக் கொண்டிருக்கிறாள். பீலுவுக்கு எங்கோ போகவேண்டும். அதற்காகத் தானே சாப்பிட உட்கார்ந்து கொண்டிருக்கிறான். அவன் ரொம்பவும் அவசரம் அவசரமாகச் சாப்பிடுவான். ஆற, அமர உட்கார்ந்து நன்றாகக் கடித்துச் சுவைத்துச் சாப்பிடுவது இல்லை. தலை மயிர் கலைந்து கிடக்கிறது. பாதி அழுக்கடைந்த நீல நிற அரை நிஜார். பனியன், ஜெயிலில் கொடுப்பது, அணிந்து கொண்டிருக்கிறான். நோயாளி மாதிரி, வெளிறி மெலிந்து இருக்கிறான்.

பகவானே! காந்திஜி, உங்களுடைய நாமத்தை ஜபித்தால் கூட மனசு திடமடையவில்லையே, ஏன்? மறுபடியும் சர்க்காவை எடுத்து வைத்துக்கொண்டு உட்காருகிறேன். இதுவே எனது கடைசித் துணை, குருடனின் தடி, எனது ஜபமாலை! திபேத்தில் ஏரவாடாச் சர்க்கா போன்ற ஒரு யந்திரத்தை ஓட்டிக்கொண்டே பகவானின் நாமத்தை ஜபிப்பார்களாம்.

சூரஜ்வல்லி பாபுவின் பக்கம் திடீரென்று என் பார்வை திரும்புகிறது. கவலை தோய்ந்த முகத்துடன் என்னையே உற்றுப் பார்க்கிறார். என் கண்களும், முகபாவமும் ஏதோ அசாதாரணமான மனோநிலையைக் காட்டியிருக்க வேண்டும். எவ்வளவு மோசமான பஞ்சு! நூலிழைகள் அறுந்து அறுந்து போகின்றன. மேலை நாடுகளில் சிறிது உடல் நலம் இல்லாமல் இருந்தால் கூட மக்கள் கலவரப்படுகின்றனர். தங்களுக்கு நெருக்கமாயுள்ள மனிதர்களைப் பார்ப்பதற்கு ஆவலாயிருக்கின்றனர். தன் வீட்டு மனிதர்களின் அன்பு கலந்த சிசுருஷைகளுக்கு ஆசைப்படுகின்றனர். ஆனால் இன்று பீலுவின் பக்கத்தில் தன் வீட்டு

மனிதர்கள் இல்லை. சொல்ல வேண்டிய விஷயங்கள் அநேகம் இருந்திருக்கலாம்.

தன் குழந்தைகளுக்கு உடம்புக்கு வந்துவிட்டால், பீலுவின் அம்மாவின் ஸ்நான பானங்கள் நின்றுவிடும். இரவு, பகலெல்லாம் பிணியுற்ற குழந்தைகளின் படுக்கைக்குப் பக்கத்திலேயே இருப்பாள். கை விசிறியை வீசிய வண்ணமே இருக்கும். ஜுரம் குறைந்து உடல் நலம் திரும்பும்போது பத்திய, அபத்தியங்களைப் பற்றி எத்தனை கவலைகள்! ஜுரம் விட்ட மறுநாள் கொஞ்சம் 'சுக்கோ'* மட்டுந் தான். அடுத்த நாள் பாலும் ரொட்டியும். அதற்கு மறுநாள் சப்பாத்தி, அதற்குப் பிறகுதான் சாதம். நீலுவுக்கும், பீலுவுக்கும் தெரியும், காய்ச்சல் வந்துவிட்டால் இந்த நியமத்திலிருந்து தப்பமுடியாது என்று. இன்று நான் இவர்களை எந்த நிலைக்குக் கொண்டு வந்துவிட்டேன்? பீலுவின் அம்மா பீலுவின் கடைசிக் கணங்களில் அவன் பக்கத்தில் இருக்க முடியவில்லை. பல பிராணிகள் தங்கள் குழந்தைகளையே சாப்பிட்டுவிடுமாம். நானும் அந்தக் கூட்டத்தில் சேர்ந்தவனோ? மறுபடியும் இழை அறுந்து விடுகிறது. ஒருவேளை மிகவும் சன்னமான இழையாக வருகிறது போலும். அதனால் திரும்பத் திரும்ப அறுந்து விடுகின்றன. ஊஹூம்... இதைவிட கட்டையாக நூற்றால், ஜமக்காள நூல் மாதிரிதான் இருக்கும்.

கேள்விப்பட்டிருக்கிறேன், நேபாள தேசத்தில் ஒருவருக்குப் பதிலாக மற்றொருவர் ராஜ தண்டனையை அநுபவிக்க முடியுமாம். இது உண்மையா, பொய்யா என்று எனக்குத் தெரியாது. ஆனால் கேள்விப் பட்டிருக்கிறேன். பெரிய மனிதர்கள் தங்கள் வேலையாட்களைத் தங்களுக்குப் பதிலாக ஜெயிலுக்கு அனுப்பிவிடுவார்களாம். அப்படிப் பட்ட வழக்கம் இங்கு இருந்தால் பீலுவுக்குப் பதில் நான் போகலாமே!

ஒருவருடைய நோயை மற்றவர் ஏற்றுக் கொண்டுள்ளதாக எத்தனை கதைகள் படித்திருக்கிறோம்! ஹுமாயூன் மரணப் படுக்கையில் இருந்தபோது பாபர் இவ்வாறு செய்தாராம். யுத்த காலங்களில் 'ஹாஸ்டேஜ்' எடுத்துக் கொள்வதுகூட இந்த மாதிரி ஓர் உயிருக்கு மறு உயிரை ஈடாக்குவதுதானே!

மறுபடியும் நூல் அறுகிறது. பஞ்சு பழசு என்று நினைக்கிறேன். இந்த மாதிரி திரும்பத் திரும்ப அறுந்தால் எப்படி நூற்க முடியும்? இதே பஞ்சுப் பட்டையைக் கொண்டு முன்பு நூற்றிருக்கிறேனே? அப்போதெல்லாம் இவ்வாறு அடிக்கடி அறுபட்டுப் போகவில்லையே? என் கை, கால்கள் நடுங்குகின்றன போலும். பஞ்சைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு இழையை நேராக இழுக்க முடியவில்லை. என் கண்

* வங்காளத்தில் சீக்காளிகள், விதவைகள் உண்ணும் ஒரு வகை உணவு.

களும் துடிக்கின்றன. நூல் மறைகின்றது. விளக்கில் எண்ணெய் குறைந்து போய்விட்டதோ? இன்னும் எத்தனை நாள் தான் என் கண் பார்வை இருக்கும்? வயது என்ன குறைச்சலா எனக்கு? ஊஹூம்... என்னையே நான் எவ்வளவு நேரம் ஏமாற்றிக் கொள்ள முடியும்? என்னுடைய இப்போதைய மனோநிலையில் நூற்பது என்பது முடியாது.

ஸோராப் ரஸ்தோம் கதைக்குச் சரித்திர பூர்வமான ஆதாரம் கிடையாது தான். பூராவும் கற்பனைதான். தகப்பனும் மகனும் இந்த மாதிரி இருக்க முடியுமா என்ன? ஏன் முடியாது? இந்தப் பூமியில் எதுதான் முடியாது? சிங்காசனத்துக்கென்று தகப்பனும், பிள்ளையும் சண்டை போடுவது சகஜந்தானே? ஆனால் எனக்குத் தான் எத்தகைய கொடிய தண்டனை கொடுக்கப்படுகிறது? சீக்கிய குரு பாந்தாருக்கு விதிக்கப்பட்ட தண்டனை; தன் கையாலேயே தன் அருமை மகனைக் கொலை செய்ய வேண்டும் என்று. ''ஐயோ! என்ன ரத்தம்! மார்பிலிருந்து குழல்கள் மாதிரி ரத்தம் பீறிட்டுக் கொண்டு வருகிறதே!''

சூரஜ்வல்லி பாபு கேட்கிறார்: ''ஏதாவது சொன்னீர்களா என்ன?''

சற்றே லஞ்ஜையுற்று, ''ஒன்றுமில்லையே'' என்கிறேன். ஒரு வேளை அந்தக் கடைசி வார்த்தைகளை என்னை அறியாமலே உரக்கப் பேசி விட்டேன் போலும். தயங்கியவாறே சூரஜ்வல்லி பாபு சொல்லுகிறார்: ''நூற்பதை ஒரு வேளை கொஞ்ச நேரம் நிறுத்தி விடுங்களேன்.''

''இல்லை, இல்லை. சரியாகத்தானே வருகிறது.''

ஏதோ தப்புக் காரியம் செய்யும்போது அகப்பட்டுக் கொண்டது போல் மனத்தில் தோன்றுகிறது. வார்த்தைகளை மென்று விழுங்குகிறேன். ஒரு மாதிரி பேச்சை முடித்துவிட்டு நூலின் மேல் கவனத்தைச் செலுத்துகிறேன். பஞ்சில் இருந்து நூல் எழும் முனையில் என் பார்வையைச் செலுத்தி அதன் மூலம் என் கண்களை யாரும் பார்க்க முடியாதபடி செய்ய முயலுகிறேன். கண்களில் நீர் முட்டுகிறது. இரவு முழுவதும் விழித்துக் கொண்டிருந்தால் போதும், வேறு காரணம் தேவையில்லை. இரவு விழித்துக் கொண்டிருந்தாலே கண்களில் எரிச்சல் ஏற்படும். ''மஹாத்மாஜி! என் நெஞ்சைத் திடப்படுத்து! என் மனோபாவம் தளர்கிறது. என்னை நான் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் தவிக்கிறேன்.''

சூரஜ்வல்லி பாபு சொல்கிறார்: ''மாஸ்டர் ஸாஹேப், மாஸ்டர் ஸாஹேப்...ஓ! மாஸ்டர் ஸாஹேப்!'' ஏனோ வெகு தூரத்திலிருந்து வரும் சப்தம் காதில் நுழைவது போல் இருக்கிறது. கனவுகளில் தூரத்திலிருந்து வரும் ரெயில் வண்டியின் சப்தம் போல் சூரஜ்வல்லி பாபு கூப்பிடுவது கேட்கிறது. ஆனால் பதில் சொல்ல விருப்பம் இல்லை.

சூரஜ்வல்லி பாபு எழுந்து நின்று என்னை முதுகில் தொடுகிறார். ஆதரவுடன் கூடிய அந்தக் கையின் ஸ்பரிசம் பட்டவுடனேயே என் தன்னடக்கம் தகர்ந்து போகிறது.

''பீலு, பீலு!'' கையிலிருக்கும் பஞ்சை விட்டெறிந்துவிட்டுச் சூரஜ் வல்லி பாபுவின் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறேன். நாங்கள் இருவருமே பேச்சற்று நிற்கிறோம். அவர் கண்களிலிருந்து நீர் பிரவாகம் எடுத்து ஓடுகிறது. பாக்கி நால்வரும் தங்கள் நாற்காலி களை விட்டு விட்டு ஓடி வருகின்றனர். சீ! என்ன காரியம் செய்து விட்டேன். ஒரு கூட்டமே கூடிவிட்டது. அவசரமாகக் கையை விடுவித்துக் கொள்கிறேன். மறுபடியும் சர்க்காவை எடுத்து வைத்துக் கொண்டு நூற்க முயல்கிறேன். பயனற்ற முயற்சி. சதாசிவ் மறுபடியும் எனக்கு விசிறுகிறான். அவன் தூங்கிவிட்டான் என்றல்லவா நினைத்துக் கொண்டிருந்தேன்? மறுபடியும் ஏன் எழுந்திருந்தான்? உடம்புக்கு ஒன்றும் இல்லாத மனிதனுக்கு எதற்காக விசிறவேண்டும்? நான் மூர்ச்சை அடைந்து விடுவேன் என்று பயப்படுகிறார்களா என்ன?

சதாசிவ்விடம் சொல்கிறேன்: ''நல்ல இதமான குளிர்காற்று வீசுகிறது. அநாவசியமாக நீ விசிற வேண்டாம்.''

யார் யாருடைய வார்த்தையைக் கேட்கிறார்கள்?

சில கணங்களுக்குப் பிறகு சூரஜ்வல்லி பாபு மிகவும் மெதுவாக என்னிடம், ''கீதை படிக்கிறேன், கேட்கிறீர்களா?'' என்கிறார்.

எவ்வளவு ஆதரவான அன்பு கலந்த வார்த்தைகள்! அவருடைய வேண்டுகோளை மறுக்கும் தெம்பு இல்லை. ''படியுங்கள்'' என்றேன்.

மறுபடியும் சர்க்கா பக்கத்தில் உட்காருகிறேன். அவர் கீதா பாராயணம் ஆரம்பிக்கிறார். அவர் என் முன்னால் கீதா பாராயணம் செய்ய விரும்புகிறார் என்பது எனக்குப் புரிகிறது. எனக்கு மனோபலம் கொடுப்பதற்காக அல்ல, தம் அனுதாபத்தை காட்டுவதற்காகவும் அல்ல, மனோவியாகூலத்தைப் போக்கடிப்பதற்காகவும் இல்லை. மரித்த தேகத்தை எடுத்துச் செல்லவிருக்கும் லாரியின் சப்தம், டாக்டர், மாஜிஸ்ட்ரேட், துரைகள் வரும் கார்களின் சப்தம் ஆகியவை என் காதில் விழாமல் தடுப்பதற்காகத்தான் இந்தக் கீதா பாராயணம். இதற்கு முன்னால் நடந்த பல தூக்குத் தண்டனைகள் ஒவ்வொன் றிற்கும் முன்னால் இந்த மாதிரிதான் பீதி கலந்த எதிர்பார்ப்புடன் இந்தச் சப்தத்துக்காகக் காத்திருப்போம். அந்த மாதிரி சந்தர்ப்பங் களில் மோட்டார் நிற்கும் கிரீச் என்ற சப்தம் நரம்புக் கோளங்களைத் துடிக்க வைத்து வதைக்கும். இதற்குப் பிறகு வார்ட் முழுதும் ஒரே நிசப்தம். இந்த நிசப்தத்தில் தன் இதயம் விலாவில் முட்டுவதைக் கேட்க முடியும். அப்போதெல்லாம் நேரம் அசைவற்று நின்றுவிடும்.

காலை மறுபடியும் விடியாது என்ற மாதிரியில் மனசு ஓடும். மறுபடியும் மோட்டார் லாரியின் சப்தம் எழும்போது தான் மரித்த தேகம் வெளியில் போகிறது என்று எல்லாருக்கும் தெரியும். அதற்குப் பிறகு ஒன்பது தடவை மணி அடிக்கும், கைதிகளை எழுப்புவதற்காக. தூக்குத் தண்டனை நிறைவேற்றப்படும் தினங்களில் எல்லாருமே விழித்துக் கொண்டிருப்பார்கள். இருந்தாலும் நியமத்திலிருந்து வழுவுதல் என்பது முடியாது. இதற்குப் பிறகு இரண்டு மணிகள் கேட்கும்—காலை அட்டென்டன்ஸ். இரவு அடைக்கப்பட்ட கைதிகளின் எண்ணிக்கை காலையில் அப்படியே இருக்கிறது! கூடுதலும் இல்லை, குறைவும் இல்லை என்று தெரிவிக்கிறது இந்த மணி.

எல்லா வார்டர்களும் தங்கள் வார்டுகளில் உள்ள கைதிகளின் கணக்கை மணிக்கூண்டுக்குத் தெரிவிப்பார்கள். இந்த எண்ணிக்கைகளைக் கூட்டிப் பார்த்து முதல் நாள் இரவில் எடுத்த எண்ணிக்கையுடன் ஒத்துப் பார்ப்பார்கள். இந்த நம்பமுடியாத ஆச்சரியமான விஷயத்தை உலகத்துக்கெல்லாம் அறிவிப்பதற்காகத்தான் இந்த இரண்டு மணிகள். ஜெயிலர் துரை ஜமேதாரிடம் சாவி கொடுப்பார். பிறகு எல்லா வார்ட் கதவுகளும் திறக்கப்படும். எறும்புச் சாரிகள் போல் கைதிகள் வெளியில் வருவார்கள். ''ஜோடி ஃைபல், ஜோடி ஃைபல்''! அவர்களுடைய தண்டனையில் மற்றுமொரு நாள் கழிந்து விட்டது. தங்களை வறுத்தி வாட்டும் மற்றொரு தினத்தை அழிக்கப் புது உற்சாகத்துடன் தொடங்குகிறார்கள். ஒவ்வொரு மணி நேரத்துக்குப் பிறகும் அவர்களுக்கு ஞாபகப்படுத்தப்படுகிறது, ஒரு நாளைக்கு இருபத்து நாலு மணி நேரம் என்று. ஒரு நாள் கழிந்தது. இன்னும் எவ்வளவு நாட்கள் பாக்கியிருக்கின்றன?

இவர்கள் என் மனசை வேறு திசையில் திருப்ப முயலுகிறார்கள். ஆனால் இந்தச் சமயத்தில் பீலுவைப் பற்றி நினைக்காமல் இருக்க முடியுமா என்ன? எவ்வளவு முயற்சி செய்தாலும் வேறு விஷயங்களில் மனத்தைச் செலுத்த முடியுமா என்ன? அப்படி முடிந்தால் எவ்வளவோ சௌகரியமாக இருக்கும். பிழைத்துப் போய் விடுவேனே! பகவானின் அளவற்ற அருள் என்னவென்றால், ஒரே சமயத்தில் ஒரு விஷயத்துக்கு மேலாக நினைக்க முடியாது என்பதுதான். கடைசிச் சில விநாடிகளில் பீலு தன் மரணத்தைத் தவிர வேறு ஏதாவது ஒரு விஷயத்தை நினைத்துக் கொள்ள முடியுமானால், அநாவசியமான சோர்விலிருந்தும் ஆதங்கத்திலிருந்தும் தன்னை விடுவித்துக் கொள்ள முடியும். ஒரு வேளை தன் வேதனையைக் கூட உணராமல் இருக்கக்கூடும்.

பகவானே! உன்னிடமிருந்து எனக்கென்று ஒரு வரம், என்றுமே நான் யாசித்ததில்லை. இன்று இந்தக் கடினமான விபத்தில் என் எல்லாச்

சித்தாந்தங்களையும் தாரை வார்த்துவிட்டு, எனது ஆசையால் உன்னிடம் பிச்சை கேட்காமல் இருக்க முடியவில்லை. பீலுவின் கடைசி விநாடிகளில் மற்ற விஷயங்களைப் பற்றி நினைக்கும் திண்மையை அருள்வாய். கடைசிக் கணத்தின் முன்பு துளித்துளியாக அவனை மரிக்கச் செய்யாதே. டெலிபதி என்பது உண்மையா? என் மனத்தின் விருப்பங்களும் ஆசைகளும் பீலுவினிடம் போய்ச் சேர்ந்து விடுமா? பீலு, நீயே பார். உனக்காக உன் தகப்பனார், தன் முன்னால், தன் கடவுளின் முன்னால், எவ்வளவு சிறுமைப்படுகிறார் என்று.

சூரஜ்வல்லி பாபு கீதை படிக்கிறார். பரிசயமான சுலோகங்கள், காதில் விழுந்தும் கேட்கவில்லை. கேட்டாலும் புரியவில்லை. சப்த அலைகள் காதில் நுழைகின்றன என்றாலும், மனசிலோ, இதயத்திலோ ஒரு விதமான நெகிழ்ச்சியும் ஏற்படவில்லை. பரந்த யுத்த களத்தின் நடுவில் நின்று கீதையின் ஒலியைக் கேட்பது என்பது துவாபரயுகத்தில்தான் சாத்தியம். நான் என்ன அர்ச்சுனனா? எனக்குக் கீதையின் மர்மம் எப்படிப் புரியும்? கீதையைத் திருப்பி அனுப்பிய நாஸ்திகனான பீலு கர்மயோகத்தின் மூல மந்திரத்தைப் புரிந்து கொண்டவன் - தன் கடமையில் தன்னையே செலவழித்துக் கொண்டவன். நீலுவோ? அவன் மட்டும் என்ன குறைச்சல்? தன் கடுமையான கடமை உணர்ச்சியின் முன்னால் நட்பு, அன்பு, தர்மத்தின் ஆதேசம், பொது ஜன அபிப்பிராயம், அவன் நெக்குருகி நேசிக்கும் அண்ணன் எல்லாமே துச்சமென மதித்தவன். இவர்களையா நான் நாஸ்திகர்கள் என்று சொல்வது? கடவுளிடம் உள்ள நம்பிக்கை நம் ஆத்ம பலத்தை அதிகரிக்கலாம். ஆனால் கடவுளிடம் அவநம்பிக்கை, இவர்களின் மனத்தைப் பலவீனப்படுத்தவில்லை. மற்றவர்களைக் கீழே வீழ்த்தும் விஷயங்களே தாந்திரீக சாதகர்களுக்குச் சித்தியைக் கொடுக்கின்றன.

''ஆ!'' திடுக்கிட்டுப் போய்விட்டேன். கையிலிருந்த பஞ்சு கீழே விழுந்து விட்டது. சர்க்காவின் ஹுங்காரத்தையும், கீதா பாராயணத்தின் ஒரே மாதிரியான ஸ்வரத்தையும், மற்றும் பல ஒலிகளையும் அமுக்கிவிட்டு எழுகிறது, லாரியின் ஹார்ன் சப்தம். அதற்குப் பிறகு மோட்டார் நிற்கும் சப்தம். இந்த லாரி என் மார்பின் மேல் ஓடுவது மாதிரி ஒரு பிரமை. அதை மட்டும் பிடித்து இழுத்து நிறுத்தி விட்டால், எனது சரீரத்தின் பலத்தால், எனது கரங்களின் வலுவால்? கற்கள் நிறைந்த பாதையில் என்னையும் இழுத்துச் செல்கிறது, இந்த லாரி. அதன் சக்கரங்களை நிறுத்துகிறேன். அத்தனை சக்தி என்னிடம் இருக்கிறது. லாரி நிற்கிறது. என் இதயத் துடிப்புக்கு இசைவாக லாரியின் இன்ஜினுடைய சப்தம் இருக்கிறது, வெறிகொண்ட இரக்க

மற்ற மிருகத்தின் கர்ஜனையைப் போல. சதாசிவ் மிருதுவாக முதுகைத் தடவிக் கொடுக்கிறான். நாலு பக்கங்களிலும் எல்லாரும் வந்து நிற்கிறார்கள், சாலையில் யார் மேலாவது கார் ஏறியிருந்தால் கூடும் கூட்டத்தைப் போல.

சதாசிவ் சொல்கிறான், ''வாருங்கள், எல்லாரும் சேர்ந்து பிரார்த்தனை செய்வோம்.'' எல்லாரும் அங்கேயே உட்காரு கிறார்கள். வைத்யநாத்தின் குழு, ஃபார்வார்ட் ப்ளாக் குழு, கிஸான் சபாவைச் சேர்ந்த இளைஞர்கள், கம்யூனிஸ்ட் பார்ட்டி இளைஞர்கள் மற்றும் பலர். மேஹர் சந்த்ஜி, 'ராஷ்டிர வானத்தின் திவ்விய ஜோதி' என்ற பாட்டைப் பாடுகிறார். இன்று யாரும் பிரார்த்தனைக்கு ஆட்சேபிக்கவில்லை. அதைப் பரிகசிக்கும் கேலிப்பாட்டு கிளம்பவில்லை. மேஹர்சந்த்ஜி வரிகளை மறந்து விடும்போது மற்றவர்கள் அதை எடுத்துக்கொடுத்து உதவுகிறார்கள். தம் பையிலிருந்து புஸ்தகத்தை எடுத்துப் பார்க்கவேண்டிய நிர்ப்பந்தத்தை அவருக்குக் கொடுக்க வில்லை. எல்லாரும் தங்கள் குரல்களை முடிந்த வரை உயர்த்திப் பாடுகின்றனர். இந்தப் பெரும் சப்தத்தில் மாஜிஸ்ட்ரேட், டாக்டர் ஆகியோருடைய காரின் சப்தம் காதில் விழாது. இந்தக் காரணத்துக் காகவே தான் இவர்கள் இந்தப் பிரார்த்தனையில் உட்கார்ந்திருக் கிறார்கள். மேஹர் சந்த்ஜி தம் பாட்டை முடித்தவுடனேயே சதாசிவ் ஆரம்பிக்கிறான்: ''ரகுபதி ராகவ ராஜாராம்.''

மஹாத்மாஜிக்குப் பிடித்த பாட்டு. எத்தனை மதுரமான, என்றுமே புதுப் பொலிவுடன் துலங்கும் கீதம்! பீலுவின் கட்சியாளர் அன்று இந்தக் கீதத்தைப் பாடுவதற்கு ஆட்சேபிக்கவில்லை. முதலில் பாடியது 'தேசீய கீதம்.' தேசீயக் கொடியைப் பற்றியது. ஆனால் இது ஒரு பக்திப்பாடல் ஆயிற்றே! பீலுவின் கடைசி விநாடிகளில் அவன் தகப்பனாரின் மனத்தை வேறு திசையில் திருப்புவதற்காக, இவர்கள் தங்களது தீவிரக் கொள்கைகளில் ஒரு சிலவற்றைத் தளர்த்திக் கொள் கிறார்கள். பீலுவின் கட்சியினர் இவ்வளவு கூடச் செய்யமாட்டார்களா என்ன? ஒரு வேளை நீலு இந்தப் பஜனையில் பங்கு கொண்டிருப்பானா? ஒருக்காலும் மாட்டான். அவனை உடைக்க முடியும், ஆனால் வளைக்க முடியாது. நீலு, பீலு இருவரும் முன்பெல்லாம் இந்தக் கீதத்தை எவ்வளவு அழகாகப் பாடுவார்கள்! மஹாத்மாஜிக்கு முன்னால் ஒரு தடவை பாடினார்கள். தங்கள் மனத்தில் எழும் கலவரத்தை மறைப் பதற்காக மிகவும் உயர்ந்த குரலில் இப்பொழுது பாடுகிறார்கள். பாடுவதை நிறுத்தவில்லை. எவ்வளவு நேரம் முடியுமோ அவ்வளவு நேரம் பாடுவது என முடிவெடுத்து விட்டார்கள். தூக்குமேடையில் பீலு ஏறுகிறான். ஐயோ! வெறுங்காலுடன் நடக்கும்போது ஒரு விரல்

இடருகிறது. எவ்வளவு மெலிந்து விட்டிருக்கிறுன்! அவனுடைய கழுத்து, பறவையின் கழுத்து மாதிரி சுருங்கியிருக்கிறது. அவனது மூக்கு ஒரு போர்வாள் மாதிரி நேராகவும் கூர்மையாகவும் நிமிர்ந்து நிற்கிறது. கீழே ஒரே இருள்—கயிறு திடீரென்று இழுக்கப்படுகிறது. பீலு—பீலு! போய்விட்டால் என்ன ஆகும்? எத்தனை பீலுக்களைத் தனக்குப் பின்னல் விட்டுவிட்டுப் போயிருக்கிறுன்? பகவானே! மஹாத்மாஜி! பீலுவின் அம்மாவுக்கு இதைச் சகித்துக் கொள்ளத் தேவையான சக்தியைக் கொடு. நீலுவுக்கு மனோபலத்தைக் கொடு. பீலுவின் ஆத்மாவுக்குச் சாந்தியைக் கொடு.

பஜனை நடந்து கொண்டிருக்கிறது—

''ரகுபதி ராகவ ராஜாராம்
பதீத பாவன சீதாராம்
ஜயரகு நந்தன ஜயகனஸாம்
ஜானகி வல்லப சீதாராம்''

உரக்க, இன்னும் உரக்கப் பாடிக் கொண்டிருக்கிறுர்கள்.

# அம்மா - பெண்கள் வார்ட்

சரஸ்வதி கிளம்பிப் போய்விட்டாள். கதவு அடைக்கும் நேரம் வந்துவிட்டது என்று நினைக்கிறேன். ஆமாம், அதேதான். அதோ ஹெஸி*ஜமோதரிணியின் குரல் கேட்கிறதே! சரஸ்வதி கொஞ்சம் தலையைப் பிடித்து விட்டுப் போனாள். இதமாக இருந்தது. மென்மையான விரல்களால் இரண்டு பொட்டுகளிலும் லேசாக அமுக்கி, முதலில் புருவத்துக்கு மேலே, பிறகு மூக்குக்குக் கீழே என்று மெதுவாக விரல்களை இழுத்து வருடுவாள். உடனேயே தலை தெறிப்புக் குறைந்து விடுகிறது. தலையில் கட்டியாய், கனமாய் இருக்கிற ஒன்று கரைந்து போனதுபோல் உணர்வு ஏற்படுகிறது.

இந்த ஜமோதரிணி ஒரு நிமிஷம் அதிகமாக இருக்க விடுவாளா என்ன? வீட்டில் இருந்தால் மனசை விட்டு இரண்டு வார்த்தை பேச முடியும். ஊஹூம், விடமாட்டாள். சரஸ்வதி 'ஸி' கிளாஸ் கைதி. அவளுடைய வார்டு வேறு. இவ்வளவு நேரம் அவளை இங்கே விட்டு வைத்திருந்ததே, பெரிய காரியம். பாவம். மறுபடியும் ஜெயிலுக்கு ஏன் திரும்பி வந்து விட்டாள் என்று எனக்குத் தெரியும். என்னிடமிருந்து ஒளிக்க முடியுமா என்ன? முன்னாடியே தெரிந்திருந்தால், ஸஹதேவனுடைய அம்மாவுடன் இதைப் பற்றிப் பேசியபோது, ஒத்துக் கொண்டிருப்பேன். அப்படி நேர்ந்திருந்தால் எனக்கும் பீலுவுக்கும் இந்த நிலையே வந்திருக்காது. எப்படி ஒத்துக் கொண்டிருப்பேன்? பகவான்தான் என்னை இப்படிப் படைத்திருக்கிறானே!

இல்லையென்றால் அருகில் வருகிற எல்லாரையும் ஏன் நாசம் பண்ணிக் கொண்டிருக்கிறேன்? 'மூளி கண்பட்டால் ஸமுத்திரம் கூட வற்றிப் போகும்' என்று வசனம் இல்லையா? அதே தான் என் விஷயத்

திலும். சரஸ்வதியின் தலையெழுத்தும் அப்படித்தான். ஒரு வேளை கல்யாணமாயிருந்தாலும் இதே விதிதான் இருந்திருக்குமோ? இந்த விஷயத்திலே பீலுவின் அபிப்பிராயம் என்ன என்று கூடக் கேட்டுத் தெரிந்துகொள்ளவில்லை. பெண்ணுக்குப் படிப்பு இல்லை. இந்தக் காலத்துப் பசங்களுக்கு இப்படிப்பட்ட பெண் பிடிக்குமா என்ன? இதை ஜாடையாக ஸஹதேவனின் அம்மாவுக்குச் சொன்னேன். அவள் பதில் எதுவும் சொல்லவில்லை. வாயைப் பிளந்து கொண்டு, என்னை வெறிச்சென்று பார்த்தாள்.

ஆனால் இது நடந்த கொஞ்ச நாட்களுக்குப் பிறகு, ஸஹதேவ் இதற்குப் பதில் சொல்லாமல் விடவில்லை. சொன்னான்: ''ஆமாம், நாங்கள் எல்லாம் குடியானவங்கதானே! எங்க தங்கையெல்லாம் எட்டாங் கிளாஸோடு படிப்பை முடித்துக் கொள்ளாமல், ஸரோஜினி நாயுடு, விஜயலக்ஷ்மி பண்டிட் போன்ற மேதாவிகளாயிட முடியுமா என்ன? ஆனால் பீலு பாபு மட்டும் என்ன அப்படிப் படிச்சிக் கிழிச்சி ருக்காரு? வித்யாபீட் சாஸ்திரிதானே?''

ஸஹதேவனின் பார்வை ஒரு மாதிரி. கண் துடித்துக் கொண்டே இருக்கும், மாட்டுத் திருடன் கண் மாதிரி. ஆனால் பேச ஆரம்பித்தால், சுரீரென்று உறைக்கிற மாதிரி பேச்சு. என் பிள்ளையின் கல்யாணம் எனக்குப் பிடிச்ச இடத்தில் நடக்கும், பிடிக்காத இடத்திலே நடக்காது. இதிலே யார் என்ன சொல்ல இருக்கு? இவா ரெண்டு பேரும் சரியான ஜோடி என்று எனக்குப் படலே. பெங்காலிப் பைய னுக்கும், பீஹாரிப் பெண்ணுக்கும் எப்படிப் பொருத்தம் இருக்க முடியும்? அந்த அந்த ஊர் அந்த அந்த ஊரில்! ஒரு மரத்தை மற்றொரு மரத்துடன் கட்டிப் போட்டால் அவை ஜோடியாகி விடுமா என்ன?

நான் 'சரஸ்வதி' என்று சொல்லுவேன். அவா சொல்லுவா, 'சரஸோயாதி' என்று. சரஸ்வதிக்குச் 'சுக்தோ'[1] பண்ணத் தெரியுமா? கோகுல் பீடே[2]ன்னா என்னன்னு தெரியுமா? பீலுவுக்குத் துவரம்பருப்பு என்றாலே பிடிக்காது. இவர்களுக்குத் துவரம்பருப்பைத் தவிர வேறு எந்தப் பருப்பும் பிடிக்காது. இவர்கள் பயற்றம்பருப்பைப் பிரசவத் துக்குப் பிறகு உடம்பு தேறும் சமயத்தில் மட்டுமே சாப்பிடுவார்கள். ஒரு தடவை பஹுரியாஜிக்கு, 'டாண்டா சச்சரி'[3] கறி சாப்பிடக் கொடுத்தேன். அவன் தண்டை மாத்திரம் எடுத்துச் சப்பிவிட்டுத் துப்பிக் கொண்டிருந்தான். ''எனக்கு டண்டா ரொம்பப் பிடிக்கும்'' என்றான். அதை எப்படிச் சாப்பிடக் கூடாது என்றுகூடத் தெரிய வில்லை.

---

[1] அவியல் போன்ற தயாரிப்பு. [2] இட்டிலி போன்ற தயாரிப்பு.
[3] ஒருவகைச் செடியின் தண்டு.

தவிர, இவர்களுக்குப் பெங்காலி பேசுவது சுலபமா என்ன? ஒரு நல்ல தித்திப்புப் பணியாரம் பண்ணத் தெரியுமா? ஜெயிலில் தான் பார்த்துக் கொண்டிருக்கேனே! இவா ஊர்லே தான் ஆயுள் பூரா ஒட்டியிருக் கேனே! இவாளைப் பத்தி மேலும் தெரிந்து கொள்ளப் பாக்கி ஏதும் இல்லை. இன்னிக்கெல்லாம் இவர்களுக்குத் தெரிந்தது பூயா. நாள், கிழமை யென்றால் இது ஒன்றுதான். ஜலத்திலே கொஞ்சம் மாவு, வெல்லம் கலந்து, எப்படியோ வறுத்து எடுத்து விட்டால், ஆயிடுத்து பூயா. இரண்டு கறிகாய் போட்டு ஏதாவது கறியோ கூட்டோ பண்ணினால் இவர்களுக்குப் பொறுக்காது. இவர்களுடன் பீலுவுக்குக் கல்யாணம் செய்யணுமாம்.

ஒரு நாள் ரெண்டு நாள் விவகாரமா என்ன? ஆயுள் பூரா பூண்டும் மிளகாயும் சாப்பிட்டுக் கொண்டு ஒரு பெங்காலிப் பையனால் இருக்க முடியுமா என்ன? ஆனாலும், சரஸ்வதியை எனக்கு ரொம்ப ரொம்பப் பிடிச்சிருக்கு; அவளை என் பிள்ளைக்குப் பண்ணிக்க இஷ்டமில்லை என்கிற தனாலே, எனக்குக் கண்ணா இல்லை என்று அர்த்தமா என்ன? சின்ன வயசிலேருந்தே அவளைப் பார்த்துண்டு வரேன். கபில்தேவ் உடன் வருவான். எவ்வளவோ தடவை எவ்வளவோ நாள் ஆசிரமத்தில் இருந்திருக்கான். நீலு, பீலு மாதிரி ஸஹதேவனும் சரஸ்வதியும் நான் எடுத்து வளர்த்த குழந்தைகள்னு சொல்லணும். அப்படி என்ன வயது? இப்போ தானே ஒரு சின்னப் பெண்ணா இருந்தாள்!

நம்ம வீட்டுச் சமையலுள் வராந்தாவில்தான் எப்போ பார்த்தாலும் ஒரு மூங்கில் ஊஞ்சலில் ஆடிண்டிருப்பாள். நல்ல விஷமம். மஞ்சளில் பூப்போட்ட பிருந்தாவனி கதர்ப் புடைவை. தலைமயிர் எங்கேயோ, புடைவை எங்கேயோன்னு பார்க்காமல் இப்படியும் அப்படியுமா ஊஞ்சல் ஆடுவாள். நான் சொல்வேன், ''போதும்டி, தலைச்சுற்றல் வந்து கீழே விழுந்துடுவே, வாந்தி வந்துடும்னு.''

அவளா சட்டை பண்ணுவாள்? ஊஹூம், பீலு வருவான். 'சரஸ்வதியின் பள்ளிக்கூடம், வாத்தியாரெல்லாம் படு மோசம்' என்று பாடுவான். அப்பவும் இந்தப் பெண் நிறுத்துவாளா, என்ன? ஆடிண்டே பீலுவுக்குப் பதில் சொல்லுவாள்: ''மியாவ், மியாவ் கூ, பூனை அண்ணா தாங்க் யூ.'' அவளோட சேர்ந்துண்டு, பீலுவும் அதே மெட்டிலே பாடுவான், ''கோழிக்கறி, தின்னியா, கோழிக்கறி தின்னியா?'' என்று. அப்போது தான் ஆட்டத்தை நிறுத்துவாள். சிரிச்சுக் கொண்டே 'தப்'னு வராந்தாவில் விழுவாள்.

நல்ல வாட்டசாட்டமான உடம்பு இந்தப் பெண்ணுக்கு. வீட்டு வேலையெல்லாம் கச்சிதமாப் பார்த்துப்பா. எந்தப் பெங்காலிப் பெண்ணால் சமாளிக்க முடியும், இந்தக் காங்கிரஸ் ஆசிரமத்துச்

சமாசாரத்தை? அது ஆசிரமமா என்ன? ஒரு ஹோட்டல். கேஸூ, கேஸூ என்று சொல்லிண்டு எப்போ பார்த்தாலும் கோர்ட்டிலேயே பழி கிடக்கும் மனுஷா வருவா. அவ்வளவுதான். ஆசிரமத்திலே நாள் கணக்கா டேராப் போட்டுடுவா. அப்புறம் இருக்கவே இருக்கு, மீட்டிங். எப்போ பார்த்தாலும் மீட்டிங். வேளை, போது கிடையாது. ராத்திரி, பகல் கிடையாது. மனுஷா வந்தவண்ணம், போன வண்ணம் இருப்பார்கள். நாளுக் கொண்டு சமாளிக்க முடிந்தது. வேறு யாராவது இருந்திருந்தா அழுது செத்திருப்பா. ஆனால் சரஸ்வதி சமைச்சுப் போட்டுப் பீலு வயிறு ஒரு நாளும் ரொம்பாது. நான் பண்ணிப் போடும் கறி பீலுவுக்கு ரொம்பப் பிடிக்கும். கொஞ்சம் கொஞ்சமாக் கொரிச்சுண்டு இருப்பான். சாதம் எவ்வளவோ, அவ்வளவு கறி வேணும் அவனுக்கு. இப்படிச் சாப்பிட்டுத் தான் எலும்பையும் தோலையும் ஒண்ணு வெச்சிண்டிருக்கான். சாதம் சாப்பிடுவதில் தான் எவ்வளவு திருட்டுத்தனம்! பறவை கொரிக்கிற மாதிரி ஏதோ நாலு பருக்கை வாயிலே போகும், அவ்வளவுதான்.

இந்தச் சரஸ்வதியைச் சேர்ந்தவர்களுக்கு எல்லாம் கறி பண்ணிப் போடுகிற பழக்கம் இருக்கா என்ன? அவர்களுக்குள் லட்சாதிபதிகள் தான் ஜம்பம் அடிச்சுப்பா, ''சாதத்துடன் இரண்டு மூன்று விதமான கறி வகைகள் சாப்பிடுவோமாக்கும்''னு, உடனே ஊரெல்லாம் இதைப்பற்றிப் பேசிக்கொள்வார்கள். சாதாரண குடும்பத்தில் எல்லாம், செப்புத் தாம்பாளத்திலே, சிவப்பு அரிசிச் சாதத்தின் நடுவிலே, ஒரு கரண்டி துவரம்பருப்பு, தட்டு ஓரத்திலே ஒண்ணு, ரெண்டு கறி, நெற்றியில் இட்டுக் கொள்ளும் மிகச் சிறிய சந்தனப் பொட்டு மாதிரி மினுக்கிக் கொண்டிருக்கும். இதைச் சாப்பிட்டுவிட்டு ரொம்பத் திருப்தியா அவர்கள் எல்லாம் எழுந்திருப்பார்கள். கபில்தேவும், ஸஹதேவும் அதற்கப்புறம் ஒரு சொம்பு தண்ணீர் குடிப்பார்கள்.

யார் அது? ஏன் இப்படி என் காலை பிடிச்சிழுக்கிறு? யார் அது? மன்சானியாவா? என் கால்லே யார் உன்னை எண்ணெய் தடவச் சொன்ளு? ஆமாம், பஹூரியாஜியாகத்தான் இருக்கும். தான் இராமாயணம் கேட்கப் போயிட்டு, என் கழுத்தை அறுக்க இவளை அனுப்பிவிடுகிறுள். ராமாயணப் பாடம் நன்னு களை கட்டியிருக்குன்னு தெரிகிறது. பஹூரியா வாசிக்க, பாக்கி பதினேழு பேரும் கூடச் சேர்ந்து பாடுகிறுர்கள். என் காதுக்கு நாராசமாக இருக்கு. நம்ம ஊர்கள்ளே, யாரானும் ஒருவர் வாசிக்க, மற்றவர்கள் வெறுமனே கேட்டிண்டிருப்பா. எப்போவாவது ஒருதடவை 'ஆஹா' என்று மெதுவாச் சொல்லுவா. இந்த ஊர் மக்கள் எல்லாமே ஒரு மாதிரி. ''யே மன்சானியா, யார் என் காலில் எண்ணெய் தடவச் சொன்ளு?''

''சரஸ்வதி அம்மா போறபோது சொல்லிட்டுப் போச்சு, கொஞ்ச நாளா அம்மாவுக்குப் பித்தம் ஜாஸ்தியாய் இருக்கு, கால் கையெல் லாம் ஒரேயடியாய் நோவுது, ''நீ போய் கொஞ்சம் கையிலே கால்லே எண்ணெய் தடவி விடுன்னு. நீங்க கோவிச்சுக்குவீங்கன்னு இத்தனை நேரம் தடவி விடல்லே. கதவுகிட்ட சும்மா உட்கார்ந்துண்டு இருந் தேன், இந்த ஜமோதாரிணி வந்து போனா. 'ஏய், என்ன இப்பவே தூங்கி வழியறே? அம்மாவைக் கவனிச்சுக்கற ட்யூட்டி உனக்கும் கல் கட்டிக்கும் போட்டிருக்கு. கதவுக்கு வெளியிலே என்ன செய்யறே? பாதி ராத்திரி வரை நீ, அப்பாலே கல்கட்டி முழிச்சிண்டு வேலை செய்யணும், தெரியுமில்லே?'ன்னு சத்தம் போட்டுட்டு வெளியே போயிட்டா. சர்க்கார் என்னை ஜெயில்ல அடைச்சிருக்காங்க. ஆகவே நீங்க சொல்றதையெல்லாம் கேட்டுத்தான் ஆகணும். ரொம்பப் பாவம் பண்ணியிருக்கேன். இல்லேன்னா, பிராமணப் பெண்ணாப் பிறந் துட்டு, மற்றவா காலைப் பிடிச்சு விடணும் என்கிற தலைவிதி ஏன் ஏற்படணும்? அவா கட்டளைப்படி உன் காலைப் பிடிச்சுவிட வந்தேன், நீயானா என்னைக் கோவிச்சுக்கறயே அம்மா?''

முப்பது வயசு இருக்கும் இந்த மன்சனியாவுக்கு. அவள் 'ஸி' கிளாஸ், சாதாரணக் கைதி. நல்ல களையான முகம். சின்ன வயசி லேயே அறுத்துப் போயிட்டா, பிராமணப் பெண். கொஞ்ச நாளைக்கு முன்னாலே தான் ஒரு குழந்தை பிறந்தது. மூங்கில்புதர் நடுவிலே ஒரு சட்டியில் அந்தச் சிசுவின் சவம். அதன் கழுத்திலே அஞ்சு விரலும் பதிஞ்சிருந்தது. கண்ராவி! வெண்ணெய் மாதிரி கழுத்து, ரத்தம் உறைந்து நீலம் பாரிச்சிருந்தது. ஒரு சின்ன மாமிசப் பிண்டம்.

மன்சனியாவுக்குப் பத்து வருஷம் தண்டனை. அவ அம்மாவுக்கு இரண்டு வருஷம். நன்னா வேணும். நீ ஒரு தாயார். உன் வயத்திலே வளர்ந்த குழந்தை, அது அழக்கூடக் கத்துக்கலே. அம்மாவா இருந் துண்டு அந்தக் குழந்தையையா இப்படிச் செஞ்சே? உன் மாதிரி அம்மாவையெல்லாம், முட்டிக்கிக் கீழே முள்ளு, தலைக்கு மேலே முள்ளுன்னு செருகி, எரியற நெருப்பிலே போட்டு மெதுவா வறுத்து எடுக்கணும். ஊஹூம். ஒரு நாளும் இவ இதைத் தானே செஞ்சிருக்க மாட்டாள். செஞ்சிருந்தாலும் தன் நினைவு இல்லாமல் இருந்திருப் பாள். இந்தக் காரியத்தை அவ அம்மாதான் செஞ்சிருக்கணும். அவ அம்மா ஒரு பிடாரி. அவளுக்குத் தண்டனை இரண்டு வருஷம். இவா சட்டத்திலே நியாயம்னு ஒண்ணு உண்டா என்ன? இருந்தால் என் பீலுவுக்கு இப்படி ஒரு தண்டனை கெடைச்சிருக்குமா என்ன? யாரை யும் கொலை செய்யலே, யாரையும் அடிச்சுத் தள்ளல்லே. ஏதோ காங்கிரஸ் வேலை செஞ்சான். அதுக்கு வேணா, ஜெயில்லே தள்ளு,

சாபம் கொடுப்பாளா? இந்தக் குழந்தை உங்க குடும்ப விளக்கா இருக்கப் போறு. இந்த ஊர்லே ஒரு மகான் சந்நிதி இருக்கு, தெரியுமா, பூர்ணேசுவரி கோவிலுக்குப் பக்கத்திலே? ரொம்பச் சக்தி வாய்ந்த தெய்வம். உன் பிள்ளை பேரை ஒரு செங்கல்லில் எழுதி அங்கே இருக்கிற மரத்திலே கட்டி விட்டுடு.''

போகட்டும். அந்தக் கதை முடிந்தது. ஜெயிலுக்குத் திரும்பி பிறகு என்ன கேள்விப்பட்டேன் தெரியுமா? இன்ஸ்பெக்டர் என் பேரில் புகார் கொடுத்திருக்காளும்: 'சர்க்கார் ஜப்தி செய்திருக்கும் ஜில்லா காங்கிரஸ் ஆபீசுக்குள் அதிகாரம் இல்லாமல் நுழைஞ்சுட்டேன்' என்று. அதுக்காகத்தான் என்பேரில் கேஸ் போடப் போகிருளும். எப்படி இருக்கு இந்த அக்கிரமம்! ஆகாசத்திலே சூரியன், சந்திரன் எல்லாம் இருக்கச்சே இப்படி ஓர் அபாண்டமான பொய். அவனே சொன்னுன் எங்கிட்டே, உங்க வீட்டிலே நீங்க குஷாலா இருக்கலாம்னு, அதிலே எந்தப் பிரச்னேயும் இல்லேன்னு. சர்க்கார் அதை ஜப்தி செய்யல் லேன்னு. அதற்கப்புறம் அவனே இப்படி ஒரு புகார் எழுதிக் கொடுத்திருக்கான்.

ஜெயில் டாக்டரும் இந்த இன்ஸ்பெக்டர் மாதிரியேதான். சிவப்பு, நீலம்னு ஏதோ கலரில் தண்ணியைக் கொடுத்துக் கைதிகளைக் குணப் படுத்த வேண்டியது அப்புறம் தூக்கிலே தொங்கறதுக்கு அனுப்ப வேண்டியது, துலுக்கன் கோழி வளர்க்கற மாதிரி. அப்புறம் என்னே அம்மான்னு வேற கூப்பிட்டுண்டு வரது. ஒருத்தன் 'அம்மா'ன்னு கூப்பிட்டப்புறம் எப்படி அவனேப் போய் இரண்டு வார்த்தை திட்டிக் கொட்டி மனசிலே இருக்கிற சுமையைக் குறைச்சுக்க முடியும்? நான் இந்தப் பாரத தேசம் முழுவதற்கும் அம்மா, ஜில்லாவிலுள்ள எல்லாக் காங்கிரஸ்காரர்களுக்கும் அம்மா. உலகமெல்லாம் எனக்குக் குழந்தைகள். ஆனுல் என் மனசு என்னமோ இந்தப் பீலு, நீலு மேலேயே இருக்கு. இவர்களேத் தவிர வேறு யாருக்கும் நான் அம்மாவா இருக்கணும்னு ஆசைப்படலே. இவா இரண்டு பேரையுமே நான் ஆசை தீர நேசிக்க முடியல்லே. இல்லேன்னு பீலு அன்புக்காக இப்படி ஏங்கி நின்னுண்டு இருப்பானு? எதுக்காக அவனுடைய பெரியம்மா, ஜிதேனின் அம்மாவைப் போய் அவன் 'அம்மா'ன்னு கூப்பிடணும்?

நீலுவுக்கும் அவள் பெரியம்மாவிடம் எத்தனே பிரியம்? நீலுவும், பீலுவும் என்னுடை தனிச் சொத்தாக இருக்கணும், வேறு ஒருத்தரும் அவா மேல் உரிமை கொண்டாடக்கூடாதுன்னு என் மனசு துடிக்கிறது. ஆனுல் நான் அவாளே என்னுடே பிணேச்சுக்க ஆசைப்பட்டு என்ன பிரயோஜனம்? உலகம் பூரா அவாளே இழுத்துக்கிறதே? நீ என்ன அவாளேப் பிடிச்சு இழுத்து நிறுத்தி வைச்சுக்க முடியுமா என்ன?

சாதாரணமாகவே பீலுவுக்கு ரொம்ப இளகின மனசு. தொட்டால் சுருங்கி. ஆசையாப் பேர் சொல்லிக் கூப்பிடாட்டா கண்ணில் ஜலம் வந்துடும். அன்னிக்கு ஒரு நாள் இவர் மத்தியானச் சாப்பாட்டின் போது, ''எங்கே பெரிய மனுஷரை வீட்டில் காணும்? இன்னும் திரும்பி வரலே போலிருக்கே?'' என்ருர். பீலு பக்கத்து அறையில் இருந்தான். அந்த வார்த்தையைக் கேட்டு விட்டு அழுது தீர்த்து விட்டான். நீலுன்னு 'ஹோ, ஹோ'ன்னு சிரிச்சு வீட்டை இரண்டாக்கி இருப்பான். ''அக்கா! உனக்குத்தான் ஜிதேன், தீரேன், ஹேப்லு, பேலா, மாட்டுப் பெண், பேரன், பேத்தி எல்லாரும் இருக்காளே! குடியும் குடித்தனமுமா லக்ஷ்மி நடமாடற குடும்பம். உனக்கு ஒரு குறையும் இல்லே. என்னத்துக்காகப் பீலுவை எங்கிட்டே இருந்து பிடுங்கி எடுத்துக்கணும்? ஏன் அவனே, எனக்கு வேற்று மனுஷனுக்குகிருய்? என் குழந்தைகளின் ஒரு விரலேக்கூட நான் மற்றவர்களுக்குக் கொடுக்க மாட்டேன்.''

என் வாழ்க்கையிலே நீலு,பீலு தவிர வேறு எதுவுமே இல்லே. அரிசி இல்லே, அடுப்பு இல்லே, தலேக்கு மேலே ஒரு கூரை இல்லே. பணம், காசு இல்லே. வீடு, மனேன்னு ஒன்றும் இல்லே. என் பசங்க மூஞ்சியைப் பாத்துண்டு என் துக்கத்தையெல்லாம் மறந்திருக்கேன். பகவானே, அதுவும் உனக்குப் பொறுக்கல்லே. ஏதோ மந்திரம் போட்டு மயக்கி எல்லாரும் என்னே என் பிள்ளேக்கு வேற்று மனுஷியாக ஆக்க அநுமதித்தாய். ஜிதேன் அம்மா பார்ப்பதற்கு என்னவோ நல்ல மனுஷி யாட்டந்தான் இருக்கா. ஆனுல் உள்ளூறக் கபடமான மனசு, சுருள் சுருளா ஜிலேபி மாதிரி. யார் வீட்டிலாவது புதுசா ஒரு நகை நட்டுன்னு பண்ணட்டும், அதைப் பத்தித் துருவித் துருவிக் கேட்டு, அதைப்பத்திப் பத்துவிதமாப் பேசுவாள். ஊர் விவகாரம் எல்லா வற்றையும் இழுத்துப் போட்டுப்பா. இவ போட்டுண்டு இருக்கிறது தங்கந்தாஞ? அதிலே எத்தனே கலப்பு? யாரு தட்டான்? எவ்வளவு காரெட்? கூலி எவ்வளவு கொடுத்தா? குறைச்சலாக் கொடுத்திருந்தா எப்படி இவ்வளவு நல்ல நகை பண்ணியிருக்க முடியும்?

பீலு நீலுவைக் கேட்டு எங்க வீட்டுச் சமாசாரம் பூரா தெரிஞ்சுக் கணும் அவளுக்கு. ''உங்க அம்மா எண்ணெயிலே தாளிக்கிருளா, இல்லே நெய்யிலா? கத்திரிக்காய் நிறைய எண்ணெய் விட்டு வதக்குகிருளா, இல்லே வெறுமனே பிரட்டி எடுக்கிருளா?''—அப்படி இப்படின்னு சின்ன வயசிலே நீலுவைப் போட்டுத் துளேச்சுடுவாள். இதெல்லாம் அவளுக்குத் தெரிஞ்சு என்ன ஆகணும்னு கேட்கிறேன். பீலு கெட்டிக்காரன், ஒண்ணும் சொல்ல மாட்டான். ஆனுல் நீலு எங்கிட்ட வந்து அவ மாதிரியே பேசி எல்லாவற்றையும் கொட்டிடு

வான் அப்படியே. ஒரகத்தி மாதிரியே பேச்சு, கை கால் ஆட்டறது எல்லாம்! சிரிச்சு உயிர் போயிடும். ஆனால் அவ இப்படிப் பண்றது சரியா? எங்க குடும்பம் ஏழைக் குடும்பம். நீங்களெல்லாம் நம்மாத்து மனுஷா. இந்த விஷயத்தை எடுத்துண்டு இவ்வளவு தூரம் அலசி எடுப்பானேன்? எங்களுக்கு ரொம்பச் செஞ்சிருக்கா. நான் இல்லேன்னு சொல்லலே. உடம்பு கிடம்புக்கு வந்துடுத்துன்னா, நன்னாப் பார்த்துப்பா. வாய்க்கு ருசியா ஏதானும் பண்ணினால் கொண்டு வந்து கொடுப்பா. சொல்லப்படாது, சளைக்காமல் செய்வா. இப்போ கூட நீலு அவா வீட்டில் தான் தங்கிருக்கான். உயிரை விட்டுச் செய்வா. ஆனால் தான் செய்வதைச் சொல்லிக்காட்டாமல் இருக்க மாட்டா. அவ சுபாவம் அப்படி. கொஞ்சம் கூடக் கம்பீரம் கிடையாது. வளவளன்னு எப்போப் பார்த்தாலும் பேச்சு. பீலுவைப் 'பிராமண சிகாமணியின் புத்திரனே'ன்னு கூப்பிடுவா. நீலுவை, 'ஏண்டா மீன் தின்னி'ன்னு பரிகாசம் பண்ணுவாள். அவா அப்பாவுக்குத் 'தாடி'ன்னு பேர் வெச்சிருக்கா! அவர் சொந்தப் பேரைச் சொல்லிக் கூப்பிடாமே ஏன் இப்படிக் கேலியா கூப்பிடணும்?

எங்க நாள்ளே மூடியில் மனுஷா மூஞ்சி வரைஞ்ச சின்னச் சம்புடம் கடையிலே கிடைக்கும். இவ மூஞ்சி அப்படியே இருக்கு. வெள்ளரிக் காய் விதைபோலே எப்பவும் பல்லு. ஒரு மூட்டை புகையிலையை வாயில் அடக்கிண்டு தூ, தூன்னு துப்பிண்டே இருப்பா. பிராமண, புரோகித குடும்பம். நைவேத்தியத்துக்கு வந்த அரிசியையும் வாழைக் காயையும் சாப்பிட்டு வளர்ந்தவள். 12 வயசு வரை குருக்களுக்குக் கிடைக்கிற செகப்புக் கரை போட்ட துணி தவிர வேறு உடுத்திண்டதில்லே. குருட்டு அதிர்ஷ்டத்தில் பெரிய இடத்திலே கலியாணம் ஆயிடுத்துன்னு அவ கால் தரையிலே பாவறதில்லே. அஞ்சு காலுள்ள பாம்பைப் பார்த்தது போல நடந்துக்கிறா. பகவான் உனக்குக் கொடுத்திருக்கான். நீ சௌக்கியமாயிரு. ஆனால் ஒண்ணுமில்லாத வாளும் மனுஷா தான் என்கிற எண்ணம் இருக்கணும். நானும் அப்படியொண்ணும் சோற்றுக்குப் பறக்கிற குடும்பத்திலே பிறக்கல்லே. கையைப் பிடிச்ச மனுஷருக்கும் ஒண்ணும் குறைச்சல் இல்லே. ஆனால் போன ஜென்மத்திலே பண்ணின பாவம் தங்கத்தைத் தொட்டாலும் புழுதியாக மாறி விடுகிறது.

ஆமாம் அக்கா! நானுந் தான் கேட்கிறேன், பீலு உன்னைப் பெரியம்மான்னு கூப்பிட்டா உன் மனசு நிரம்பாதா என்ன? நிஜமாச் சொல்றேன் அக்கா, உன் பேரிலே எனக்குக் கொஞ்சங் கூடக் கோபம் இல்லே. நீங்களெல்லாம் இருக்கிறதினாலே தான் பீலு, நீலு அவா ஆயுசிலே ஏதோ அரை குறைச் சுகத்தைக் கண்டா. இவர் ஜெயிலுக்குப்

போன போதெல்லாம் ஒதுங்கறதுக்கு என்று அவாளுக்கு ஓர் இடம் இல்லாதபோது நீதான் அவாளை வெச்சுக் காப்பாத்தினே. பீலு போய் விட்டால் என்னோட துக்கத்தைவிட உன் துக்கம் குறைச்சலா இருக்குமா, என்ன? முழு மனசுடன் பீலுவை உனக்கே கொடுத்துட் டேன்னு உன்னாலே அவன் உயிரைக் காப்பாத்த முடியுமா? பீலு மட்டும் பிழைச்சுடட்டும், அவனை உன்கிட்டே ஒப்படைச்சுட நான் தயங்கவே மாட்டேன். இப்போ உனக்கு மிஞ்சியிருக்கிறதெல்லாம் பீலுவைப் பற்றின சில ஞாபகங்கள் தாம். என் கதியும் அதேதான். அதை வெச்சுண்டு, திருப்பித் திருப்பிப் பார்த்துண்டு பாக்கியிருக்கிற ஆயுசை ஓட்டியாகணும். நிஜமாச் சொல்கிறேன் அக்கா, உன்னுடைய கருணை, அக்கறை இரண்டையும் நான் ஒரு நாளும் மறக்க முடியாது.

என் பசங்களுக்கு மீன் என்றால் ரொம்பப் பிரியம். ஆனால் ஆசிரமத் திலே மீன் சமைக்கக் கூடாது. நாங்க வயசானவா. இருபது வருஷமாக் காந்தி சொன்னபடி மீன், மாமிசம் எல்லாம் விட்டுட்டோம். ஆனால் பசங்களை எப்படிக் கட்டாயப்படுத்த முடியும்? என்னோட மனசைப் புரிஞ்சுண்டவ நீ. நித்தியம் பசங்களைக் கூப்பிட்டு அவாளுக்கு மீன் சாப்பாடு போட்டிருக்கே. என்னைக் கூட மீன் சாப்பிட உங்க வீட்டுக்கு எவ்வளவு தடவை கட்டாயப்படுத்தி அழைச்சிண்டு போயி ருக்கே! உன்னுடைய பிரியம் எனக்கு நன்னாப் புரியறது. ஜன்ம ஜன்மாந்தரத்துக்கும் உன்னிடம் நான் கடன்பட்டிருக்கேன். உன்னைப் பத்திக் கெடுதலாப் பேசினா என் நாக்கு அழுகி விழுந்துடாதா? உன்னைப் பத்தித் தப்பா நினைக்கிறதுக் கூடப் பாவம். இன்னிக்கு என் மனசு சரியாக இல்லை அக்கா. உலக சமாசாரம் எல்லாமே விஷமாயிடுத்து. நல்ல எண்ணங்கள் எப்படி மனசிலே உதிக்கும்? நீயும் தான் பீலுவோட அம்மா — புதுசா உனக்கு என் மனசைப் பத்திச் சொல்ல வேண்டியது இல்லை. உன் பேரில் பீலுவுக்கு எத்தனை பிரியம்! எத்தனை பக்தி! யாரை ஒரு தடவை அம்மான்னு பீலு கூப்பிடுவானோ அவா மேலே இன்னிக்கு எனக்குக் கோபம் வருமா என்ன? பீலு உன்னை அம்மான்னு கூப்பிட்டதன் காரணம் எனக்குத் தெரியும். வெறும் வாயா வார்த்தையாச் சொல்ற பேச்சு இல்லை. அவனோட மனசு பூரா அந்த அம்மாங்கிற வார்த்தையோடு கூடப் போகும். இரண்டும் எனக்குக் குழந்தைகளா என்ன? இல்லை, சத்து ருக்கள். இந்தக் குழந்தைகளைப்பற்றி நான் நினைச்சு மாய்ந்து போன நேரத்தில் பாதி நேரம் பகவானைப் பத்தி நினைச்சிண்டு இருந்தேன்னா, கட்டாயம் அவன் கால்லே போய்ச் சேர்ந்திருப்பேன். ஆனால் எவ்வளவுக்கெவ்வளவு சேர்த்துப் பிணைச்சுக்கப் பார்க்கிறேனோ, அவ்வளவுக்கவ்வளவு கையை விட்டுத் தப்பி ஓடிப் போயிடறா,

எவ்வளவுக்கெவ்வளவு இறுக்கப் பார்க்கிறேனோ அவ்வளவுக்கவ்வளவு நழுவிப் போய்க் கொண்டிருக்கிறது இந்தப் பந்தம். இல்லேன்னு இந்தப் பையன் பீலு வராந்தாவில் படிச்சிண்டு உட்கார்ந்து கொண்டிருக்கச்சே, சத்தம் போடாமே மெதுவா நடந்து அவன் பின்னுலே போய் நின்னு, ''அம்மா வாசனை வரது, அம்மா வாசனை வரது''ன்னு சொல்லுவானு? நிஜமாகவே அவனுக்கு அந்த வாசனை அடிக்கும்னு நினைக்கிறேன். சின்னப் பையனு இருக்கிறபோது நான் ஸ்நானம் பண்ணிட்டு வந்த உடனே என் கழுத்தைக் கட்டிண்டு, ''அம்மா, நீ குளிச்சுட்டு வந்தேன்னு உன்மேல் அம்மா வாசனை வந்துடறது''ன்னு சொல்லுவான். நான் கோவிச்சுப்பேன், ''போடா, துஷ்டா, உன் விழுப்புத் துணியோடு என்னைத் தொடாதே. ஸ்வாமி உள்ளிலே எனக்கு ஆயிரம் காரியம் கொட்டிக் கிடக்கு'' என்று. குழந்தை கேட்பானு என்ன? ''பட்டுப் புடைவையைத் தொட்டாக்கூட விழுப்பு வந்துவிடுமா என்ன?'' என்று கேட்பான்.

அப்புறம் அந்த ராட்சசன் நீலு இருக்கானே, என்னிக்கோ எங்கெங்கேயோ நடந்ததையெல்லாம் மனசிலே சேர்த்து வச்சுண்டு என்னைச் சீண்டுவான். ''அம்மா, என்னைவிட உனக்கு அண்ணு பேரிலே தான் ரொம்பப் பிரியம்'' என்பான். ''போடா பைத்தியம், அப்படி ஒரு நாளும் இல்லை. ஒரு பிள்ளையைவிட இன்னொரு பிள்ளை மேலே ஒரு அம்மாவுக்குப் பிரியம் இருக்க முடியுமா என்ன? பகவான் நியமமே அப்படியில்லை'' என்பேன். நீலு உடனே சொல்லுவான்: ''அப்போ நான் ஒண்ணு சொல்றேன். பூர்ணியாவிலிருந்து அந்தப் பகாசுரன் வரான்னு வச்சுக்கோ. அவன் சின்னப் பசங்க மாமிசந்தான் சாப்பிடுவான். வேறே எந்த மாமிசமும் சாப்பிடமாட்டான். ஒவ்வொரு வீட்டிலேருந்தும் ஒவ்வொருத்தரும் வரிசையா ஒரு குழந்தையை அவன் சாப்பாட்டுக்குக் கொடுத்தே ஆகணும்னு வெச்சுக்கோ. இன்னிக்கு நம்ம வீட்டு முறை. இப்போ சொல்லு, அந்தப் பகாசுரனுக்கு என்னைக் கொடுப்பியா, இல்லை அண்ணுவையா?''

''போடா, தத்துப்பித்துன்னு பேசாதே. இந்த மாதிரி கோணல் எண்ணமெல்லாம் எங்கேந்து வரதோ உன் மூளேலே! யாரையும் கொடுக்கமாட்டேன்.'' உடனே, ''ஆ! புரிஞ்சுது, புரிஞ்சுது''ன்னு வீடு இரண்டாகும்படியாகக் கத்துவான் நீலு. ''ஆமாம், புரிஞ்சுது!. உனக்கு என்னிக்குமே, எதுவுமே புரிஞ்சதில்லை. அம்மாவோட மனசு உங்களுக்குப் புரிஞ்சிருந்தா, எனக்கு ஏன் இவ்வளவு துக்கம்? இல்லேன்னு ஒரு நாள் தாயாரின் அன்பும் கூடச் சுயநலத்தை அடிப்படையாகக் கொண்டதுதான்னு எனக்குப் புரியவைக்கப் பார்த்திருப்பானு? அதுக்காக ஒரு கதை கூடச் சொன்னுன்: ''ஒரு பூனையையும் அதன்

குட்டியையும் ஒரு சட்டியிலே போட்டு மூடி, அடுப்பு மேலே வெச்சு, கீழேயிருந்து நெருப்பை மூட்டினார்களாம். கொஞ்சம் கொஞ்சமாகச் சூடேறத் தொடங்கிப் பொறுக்க முடியாமல் போனபோது, குட்டியின் முதுகு மேலே அம்மாப் பூனை ஏறி உக்காந்துடுத்தாம்.''

எல்லா அம்மாவும் இந்த மாதிரிதானும். தன் உடம்பிலே நெருப்புப் படாத வரைக்கும் தான் 'குழந்தை, குழந்தை'ன்னு அடிச்சுக்குவாளாம். எங்கேயிருந்து இந்தக் கோணல் வாதங்கள் எல்லாம் கத்துண்டு வரா, இந்தக் காலத்துப் பசங்கன்னு புரியவே இல்லே. காலேஜிலே இதெல்லாம் நான் சொல்லிக் கொடுக்கிறுளா இந்த நாள்ளே? பீலு ஒரு நாளும் இந்த மாதிரி பேசமாட்டான். நீலு இந்த வார்த்தை சொன்ன பிறகு அவனோடே இதைப்பத்தித் தர்க்கம் பண்ணல்லே. 'சீ'ன்னு விட்டுட்டேன். ஆனால் அவன் சொன்னது மட்டும் மனசுலே பதிஞ்சு போச்சு. மறக்கவே மாட்டேன்.

இன்னொரு நாள் இன்னொரு கதை சொன்னுன் அதுவும் தாயார்களின் சுயநலத்தைப் பற்றித்தான். பெரிய பூகம்பத்துக்குப் பிறகு அரை குறையா சின்னப் பூகம்பங்கள் வரும். அந்த மாதிரி வந்த ஒரு நாள் ராத்திரி, ஜீதேனோடே மனைவி, பாவம், தூக்கக் கலக்கத்திலே பயந்து போய் மடியிலே இருந்த குழந்தையைக் கீழே விட்டுவிட்டு அறையிலிருந்து வெளியே ஓடி வந்துட்டா. அப்புறம் கேட்பானேன்? அவாத்து மனுஷாளெல்லாம் அவளைப் பிடுங்கி எடுக்காம விடுவாளா என்ன?

நீலுவுக்கும் தாயார்களுடைய சுயநல புத்தியைப்பற்றி எனக்குச் சொல்லிக் காட்ட இன்னொரு கதை கிடைச்சுடுத்து. ''ஆமாண்டா, பெரிய மனுஷா. தாயார்கள் எல்லாம் சுயநலவாதிகள் தாம். குழந்தைகள் அன்பெல்லாம் அப்படியே தன்னலமற்றது. கொஞ்சங்கூடக் கலப்படமில்லாத அன்பு, போதுமா? இப்படிச் சொல்றதைக் கேட்கிறதிலே திருப்தின்னு அப்படியே வெச்சுக்கோ.''

சின்ன வயதிலிருந்து என்ன என்ன பாடுபடுத்தியிருக்கான், இந்த நீலு? சேர்ந்துதான் அண்ணுவும் தம்பியும் வளர்ந்தா. ஆனுல் நீலுவுக்கு இவ்வளவு பொல்லாத்தனம் எங்கேயிருந்து வந்ததுன்னு யோசிக்கிறேன், புரியல்லே. எத்தனை தடவை என்னை அழ வெச்சிருக்கான்? ஒரு நாள் மத்தியான வேளையிலே கொஞ்சம் தலையைச் சாய்ச்சேன். எங்கேயிருந்தோ பால்ஸம் விதைகளை எடுத்துண்டு வந்து மூக்குக்குள்ளே ஒண்ணொண்ணுப் போட்டிருக்கான். சில விதைகள் மூக்குக்குள்ளும் காதுக்குள்ளும் போயிடுத்து. 'குய்யோ முறையோ'ன்னு கத்திண்டு எழுந்திருந்தேன். திட்டிக் கொட்டினு, ஏதாவது அவன் உடம்புலே உறைச்சாத்தானே? 'ஹா! ஹா!'ன்னு சிரிக்கிறுன். எது முக்கியம் எது முக்கியமில்லை என்ற விவேகம் கிடையாது. மனசுக்குத்

தோணறபடியெல்லாம் செய்யறது. ஒரு சமயம் என்ன பண்ணினுன் தெரியுமா? இத்தனை உயரந்தான் இருப்பான் அப்போ. ஒவ்வொரு மூட்டைப்பூச்சியா சொடுக்கி, ரத்தத்தைச் சேகரித்து, போர்டில் 'அஹிம்ஸா பரமோதர்ம'ன்னு எழுதிவிட்டான். எனக்குத் தெரியும், யாரைச் சீண்டுவதற்கு இதை எழுதினுன் என்று. அதனுலேயே அவன் எழுதினதைப் பார்க்காத மாதிரி பாவனை பண்ணினேன். ''ஏய் நீலு என்னிக்கு அப்பா, அம்மா இல்லேன்னு வருமோ, அப்போ தெரியும் அப்பா, அம்மான்னு என்னன்னு! பல் இருக்கிற வரைக்கும் பல்லோட அருமை தெரியுமா என்ன?'' அவ அப்பாவைச் சீண்டணும்னு நீலு என்ன பண்ணுவான் தெரியுமா? கோல் வெச்சு அளந்து, ஆசிரமத்து எல்லைக்கு ஓரிரண்டு அங்குலத்துக்கு வெளியிலே மாமிசம் சமைச்சுச் சாப்பிடுவான். அப்புறம் சொல்லுவான், 'ஆசிரமத்துக்கு உள்ளே தானே ஆடு சாப்பிடக்கூடாது? இங்கே இல்லையே?' என்று.

ஏண்டா நீலு! மஹாத்மாஜி ஆட்டுப் பால் சாப்பிடுவார் என் பதற்காகத்தான் ஆசிரமத்திலே மாமிசம் சாப்பிடுவதில்லை என்ற நியமமா, என்ன? ஆசிரமத்தில் ஏன் மாமிசம் சாப்பிடறதுக்குத் தடை என்று உனக்கும் தெரியும், எனக்கும் தெரியும். பின்னே எதுக்காக அவர் மனசு நோக இப்படியெல்லாம் பேசறே? உனக்கு மாமிசம் பிடிக்கும்; அதை உனக்குப் பண்ணிப் போட முடியல்லயேன்னு எனக்கு இல்லியா? ஆனுல் ஆசிரமத்தின் நியமம் அப்படி என்ருல் நான் என்ன செய்ய முடியும்? எத்தனை நாள் நீயும் பீலுவும் பெரியம்மா வீட்டில் மீன் சாப்பிடுவதைப் பார்த்துண்டு உட்கார்ந்திருந்திருக்கேன்? நீலுவுக்கு மீன்னு உசிர். ரேவா மீனுனுல் எலும்பைக்கூட கடிச்சு சாப்பிட்டுடுவான். பீலு ரொம்ப நாள் வரை தான் மாமிசம் சாப்பிடறதை விட்டுடப் போறதாச் சொல்லிண்டு இருந்தான். நானும் அவன் பெரியம்மாவுந் தான் அவனைத் தடுத்தோம். சாதாரணமாகவே அவன் உடம்பு என்ன உடம்பு! பெரியம்மா வீட்டில்தான் ஏதோ ஒண்ணு, இரண்டு மீன் வயத்திலே விழறது. சின்ன வயசுலே, எங்க ஊர்லே, நினைச்சுப் பார்க்கக்கூட முடியாது, மீன் இல்லாமல் ஒருவேளைகூடச் சாப்பிட முடியும்னு. குழந்தைகளை இந்த நிலைக்கு நாங்கள்தான் கொண்டு வந்துட்டோம். வங்காளத்தில் அவா இருந்ததே இல்லை. அந்த ஊர் பழக்க வழக்கம் ஒண்ணுமே அவாளுக்குத் தெரியாது.

நீஞ்சத் தெரியாது. வன்யா, ஹிஜல், சால் போன்ற மரங்களின் பேர்கூடத் தெரியாது. ஒரு நாள் பசங்களிடம், 'டப் கீர்த்தனை' பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தேன். 'டப்' என்கிற வார்த் தையைக் கேட்டவுடனேயே நீலுவுக்குச் சிரிப்புத் தாங்கலே. இப்படி வேடிக்கையாக ஒரு பேர் நான் கேட்டதே இல்லை என்று சிரிக்கிருன்.

ஒரு நாள் பக்கத்து ரூமிலேருந்து 'திஜேல்' கொண்டுவான்னு பீலு விடம் சொன்னேன். ''திஜேல்னு என்னம்மா''ன்னு கேட்கிறுன். எங்க ஊரில் சின்னக் குழந்தைக்குக்கூட இது தெரியும். ஆனு இவங்க தெரிஞ்சுக்கல்லியே.

பன்னிரண்டு மாசத்திலே பதிமூனு விரதம் உண்டுன்னு இவாளுக்குத் தெரியுமா? பீலு இதைப்பத்தி என்னைக் கேட்பான். இதெல்லாம் அவனுக்குத் தெரிஞ்சாகணும். ''அம்மா, தேல் பூஜான்னு என்ன? சாரக் பண்டிகையிலே நீ சின்ன வயசிலே என்ன செய்வே? காஜன் பாட்டுக்கு மெட்டு எப்படி? உங்க ஊர்லே பைராகிகள் உண்டா?'' இப்படிக் கேட்டுண்டே இருப்பான். எப்போ நடந்ததுன்னு ஞாபகம் கூட இல்லை. பீலு அப்போ ரொம்பச் சின்னப் பையன். ஒரு நாள் பேசிண்டே இருக்கிறபோது கிராமத்திலே நிகில் சௌதுரி, பிசாசுகளை வெல்லும் சித்தி பெறுவதற்காகச் சுடுகாட்டுக்குப் போய்ச் செத்துப் போய்விட்டான்னு சொன்னேன். அன்னிக்குக் கூட இதைப் பற்றி அவன் பேசிண்டிருந்தான்.

''இந்தப் பழக்கத்தையெல்லாம் தெரிஞ்சுண்டு உனக்கு என்னடா பிரயோஜனம்''ன்னு கேட்டா, ''நீ குழந்தையா இருந்த நாட்களை யெல்லாம் அப்படியே மனப்பாடம் பண்ணிப்பே''ன்னு சொல்லுவான். ''நான் சின்னவளாக இருந்த நாட்களை நீ ஏண்டா மனப்பாடம் பண்ணணும்?'' எவ்வளவு இனிமையாகப் பேசுகிறுன் குழந்தை! கேட்கும்போதே உடம்பெல்லாம் புல்லரிக்கிறது. நீலுவுக்கு இதெல் லாம் ஒன்றும் கிடையாது. இதெல்லாம் கேட்க அவனுக்கு நேரமோ, பொறுமையோ எங்கே? இரவு, பகல் பாராமல் எங்கே யாவது சுத்த வேண்டியது. நடுவிலே எப்போவாவது சில தடவை தடா புடா என்று வீட்டுக்குள்ளே நுழைய வேண்டியது; சட்டையைக் கழற்றி எறிய வேண்டியது. 'அம்மா, இதுக்குச் சோப்புப் போட்டுத் தோய்த்துக் கொடு''ன்னு அதிகாரம் பண்ண வேண்டியது. தலையிலே ஒரு சொட்டு எண்ணெயை வெச்சுண்டு, இரண்டு சொம்புத் தண்ணியை விழுந்தும் விழாமலும் கொட்டிக்க வேண்டியது. உடனே வந்துடுவார் துரை சமையல் அறைக்கு, ''இன்னுமா சாதம் தட்டிலே போடல்லே?''ன்னு கேட்டுண்டு. எவ்வளவு நேரமா, பீலுவும் நானும் இவன் தட்டிலே போட்ட சாதத்தைக் கவனிச்சுண்டு இவனுக்காகக் காத்துக் கொண் டிருந்தோங்கறது அவனுக்குத் துளிக்கூடப் புத்தியிலே உறைக்காது. தவிர, பீலு தன் துணிமணிகளைத் தானே துவைத்துக் கொள்வான். ஏன், இவனோட துணியெல்லாம்கூடச் சமயத்திலே துவைத்துப் போட்டிருக்கான். எதை எதோடு எடை போட்டுப் பார்க்கிறது?

''இப்போ எப்படி இருக்கேள்?'' விரலாலே என் விலாவிலே குத்தி விட்டுக் கரிசனமாக் கேட்கிறுள் நைனு தேவி.

ஒரு நிமிஷம் மூச்சுவிட விடமாட்டார்களா இவர்கள்? இரண்டு நொடி நிம்மதியாகப் பீலுவைப்பற்றி நினைச்சிண்டு அவனை என்னிடம் இழுத்து வைத்துக்கொள்ள வழி இருக்கா என்ன? எவ்வளவு உருகு கிறுள் என் பேரிலே! ஏழு கேள்விகளைத் திருப்பித் திருப்பிக் கீறல் விழுந்த கிராமபோன் பிளேட் மாதிரி கேட்கிறு. ஒரு கேள்விக்குப் பதில் சொல்லி ஓய்ந்தவுடனேயே இன்னொண்ணுக்குத் தயார் பண்ணிக் கணும். ஜெயில் நெருப்புப் பிடிச்சு சாம்பலாப் போனலும் அவள் கேள்வி கேட்பதை விடமாட்டாள். நைனுதேவி கஷ்டப்படறவாளைக் கண்டா அப்படியே மாய்ஞ்சு போயிடுவா. பதில் சொன்னேன்: ''நன்னுவே இருக்கேன். இப்போ வாந்தி எடுக்கணும் போல இல்லே. தலைவலி குறைந்து விட்டது. உடம்பெல்லாம் ஒரேயடியாச் சுடலே. வயித்தில் எரிச்சல் இல்லே. வாய் புளிச்ச மாதிரி தோன்றவில்லே. கம்பளியை உதறிப் படுக்கையைச் சரி பண்ணத் தேவையில்லே. போதுமா? என்னைப் பற்றிக் கவலைப்பட அவசியமே இல்லே. இப்போ சத்தம் போடாமல் உன் படுக்கைக்குப் போய்ச் சௌக்கியமாய்ப் படுத்துக்கோ, போ.''

என் பதிலைக் கேட்டு அசந்து போயிருக்கணும் நைனுதேவி. எனக்கு மூளை கலங்கி விட்டதோன்னு நினைச்சுக்கிறுளோ என்னவோ? ஒரு வார்த்தைகூடச் சொல்லாமல் தன் படுக்கைக்குப் போய்விட்டாள். யார் கிட்டேயிருந்தும் திட்டு வாங்கிக் கொண்டு சும்மாயிருக்க முடியாது அவளால். ஒரு நாள் இல்லாட்டா ஒரு நாள் நான் சொன்னதை வெச்சுண்டு வம்பு பண்ணத் தான் போறுள். கொஞ்ச நாளைக்கு முன்னே, அவ அம்மா 'இன்டர்வியூ'க்காக வந்திருந்தா. என்ன பண்ணிணு தெரியுமா? ஜெயிலில் அவளுக்குக் கொடுத்த சோப்பு, பென்சில், நோட்டுப் புத்தகம், வெண்ணெய், திராக்ஷை இன்னும் என்னவெல்லாமோ எடுத்துண்டு ஜெயில் கேட் கிட்டப் போனு—அம்மாவுடன் இவற்றையெல்லாம் வீட்டுக்கு அனுப்பிடலாம்னு நினைச்சுண்டு. அங்கே இருந்த ஸி.ஐ.டி.க்காரன் பிடிச்சுண்டுட்டான். முதலில் அவனேட சண்டை போட்டுப் பார்த்தா, இதெல்லாம் என் சொந்தச் சாமான், ஏன் நான் வெளியே அனுப்பக் கூடாது, அப்படி, இப்படின்னு. ஸி.ஐ.டி.க்காரன் சொன்னுன்: ''இதோ பாரும்மா! சட்டம் பேசி என்னைப் பயமுறுத்தாதே. பேசினு, இதெல்லாம் வெளியிலே போக விடமாட்டேன். மரியாதையாக் கேட்டால், இதெல்லாம் வீட்டிலே தேவையாயிருக்குதுன்னு சொன்னு, போனல் போறதுன்னு எடுத்துக்கொண்டு போகவிடுவேன்'' என்றுன். கடைசிலே நைனுதேவி ஒத்துக் கொள்ள வேண்டிய தாயிற்று. கேட்டிலிருந்த போலீஸ்காரனுக்குக் கொஞ்சம் திராட்சைப் பழம் லஞ்சம் கொடுக்க வேண்டியதாகவும் ஆயிடுத்து. என்ன

அவமானம் பார்த்தியா? அவமானம் அவளுக்கு மட்டுமா? எங்க எல்லாரோட மூஞ்சிலேயும்னு கரி பூசின மாதிரி ஆயிடுத்து. ஜமோதரிணி எங்க வார்டுக்கு வந்து எல்லாக் கதையும் சொல்லிட்டா. இந்தப் பஹூரியாஜிக்கு நாக்குப் பொல்லாது. இங்கிதம் தெரியாதவள். இதைப்பற்றி நைனுதேவியிடமே ஏதோ கேட்கப் போய் ஒரே ரகளை, நெருப்புப் பிடிச்சிண்ட மாதிரி. பஹூரிமாஜி தப்ப முடியுமா என்ன? நைனுதேவி அவளை அடிக்கவே போயிட்டா. நல்ல வழுக்குகிற மண்ணில் மாட்டிக்கொண்டு விட்டாள் அல்லவா?

ஸி.ஐ.டி. முன்னல் எங்கே போச்சு இந்த ரோஷமெல்லாம்? பதினஞ்சு நாளைக்கு இவளுக்கும் அந்தப் பஹூரியாஜி கட்சியினருக்கும் ஒரே யுத்தம். இவள் ஒருத்தி, அவர்கள் நூறு பேர். அவள் வார்த்தையில் தான் எவ்வளவு விஷம்! மிளகாய் மாதிரி எவ்வளவு காரம்! வசனம் கேட்டதில்லையா? ''எருமை மாட்டுக்குக் கொம்பு வளைந்திருக்கும், சண்டை மட்டும் அது தனியாகப் போடும்'' என்று. அவ ஒருத்தி யாகவே சண்டை போட்டு எல்லாரையும் அடக்கினுள். யாருக்குத் தெரியும், என் பேரில் பாய்ந்தால் என்ன செய்வாள் என்று? செய்ய றதைச் செய்யட்டும், விட்டுத் தள்ளு. நான் சாகணும்னு வேண்டிக் கிறதைவிட மோசமா என்ன சபிக்க முடியும்? பகவான் எனக்குச் செய்த கொடுமையைவிட இவள் என்ன கொடுமை செய்ய முடியும்? எதுக்கும் ஓர் எல்லே உண்டு. மனுஷாளோட கஷ்டத்துக்கு மட்டும் எல்லே இல்லையா என்ன?

ஏற்கெனவே பீலுவைப் பத்தி நினேச்சு நினேச்சு என் ரத்தமெல்லாம் ஜலமாப் போயிருக்கு. இது போதாதுன்னு இந்த நேரத்திலே ஜமோதரிணி வந்து எங்கிட்ட சொல்ரு: ''பெங்காலி அம்மா, கேட்டிங்களா கதையை? உங்க பிள்ளைக்குத் தண்டனையைச் சர்க்கார் வேணுமென்று கொடுக்கல்லே. உங்க இன்னொரு பிள்ளை இருக்கா மில்லே, அது சாட்சி சொல்லி வாங்கிக் கொடுத்ததாம்'' என்று. என்ன சொல்ரு இவ? உடம்பெல்லாம் பதறிப் போச்சு. அவளைக் கேட்டேன்: ''யாருடி சொன்னு உனக்கு?'' என்று!.

''நைனுதேவி ஒரு நாள் இப்படிஒரு விஷயம் கேள்விப்பட்டதாச் சொல்லி, யாராவது வார்டர்கிட்டே கேட்டு தெரிஞ்சுண்டு வான்னு சொன்னுங்க. வெளியில் கேட்டதில் நைனுதேவி சொன்னது சரிதான்னு தெரிஞ்சுது. உங்க கிட்டே சொல்லாதேன்னு நைனுதேவி சொன்னுங்க. ஆனு என் மனசு கேக்கல்லே, இது உங்க வீட்டு விஷயம். எல்லா ருக்கும் தெரியும். இதைப் பத்திப் பேசிக்கிட்டு இருக்காங்க. ஆனுக்கூட உங்களுக்கு மட்டும் ஒண்ணுமே தெரியல்லேன்னு நல்லாயிருக்கா? தர்மம், நியாயம்னு ஒண்ணு இல்லையா? ஆமாம், ஏம்மா உங்க பசங்

களுக்குள்ளே சண்டையா? என்னோட அண்ணன்மாருங்க கூட இரண்டு பேர் ஒரு சமயம் ஒரு பலா மரத்துக்காகச் சண்டை போட்டுக் கொண்டானுவ. ஒரே அடிதடி. போலீஸ், அது இதுன்னு பெரிய ரகளையாயிடிச்சு. கை நிறையப் பணம் செலவழிக்க வேண்டியதாப் போயிடிச்சு. பதினேழு ரூபா வாங்கிண்டு இன்ஸ்பெக்டர் கேஸைத் தள்ளுபடி செஞ்சான். உங்களுக்கு நிறைய நிலம், நீச்சு, மாடு, கன்னுன்னு இருக்காம்மா? அந்தப் புள்ளே, காந்தி பேரை ஜபம் செய்வாருன்னு சொன்னுங்களே? எந்த வயத்திலே, எந்த மாதிரி குழந்தையை இந்தக் கடவுள் கொடுப்பாருன்னு ஒண்ணுமே சொல்ல முடியாது.''

இதைக் கேட்டு என் நாக்கு உலர்ந்து போச்சு. ''ஏண்டி! பொய்யும் புளுகுமா, அபாண்டமா என்னவெல்லாமோ பரப்பிண் டிருக்கே நீ? உன்னை ரிப்போர்ட் பண்றேன் பார்'' என்று சத்தம் போட்டேன். அவ சொன்னு: ''கோவிச்சுக்காதே அம்மா. உனக்கு நல்லது செய்யறதாக நினைச்சு உங்ககிட்டச் சொன்னேன். எல்லாம் பொய்யாகவே இருக்கலாம். காதில் விழுந்ததை அப்படியே சொன்னேம்மா. ஒரு வார்த்தை கூட நானுக ஜோடித்ததில்லே. என் பேரில் ரிப்போர்ட் செய்யாதேம்மா! என் புருஷன் மூணு வருஷமாப் பாரிசவாயு வந்து படுத்துக் கிடக்கான். என் வரும்படியிலே தான் குழந்தை குட்டிங்க இரண்டு கை சோறு தின்னுதுங்க.''

''சரி, சரி போய்ச் சேர். ஆனுல் ஜாக்கிரதை. இந்த மாதிரி இனி மேல் எங்கிட்ட வந்து உளறுதே'' என்றேன்.

அவ போயிட்டா. ஆனுல், அன்னிலேந்து என் மனசு அலை பாயறது. இவ்வளவு அபாண்டமாக்கூட மனுஷா பேசுவாளா?

நிஜார் போட்டுண்டு, பெரியவன் பீலு, குழந்தை நீலுவின் கன்னத்தைச் செல்லமாகக் கிள்ளி விட்டுண்டு, ''நீலு-நில்லு-பில்லு-பில்லு'' என்று கொஞ்சுவானே!

அந்த நீலு, பீலுவுக்கு எதிராகச் சாட்சி சொல்லுவானு? செத்தாலும் என்னுல் இதை நம்பமுடியாது. நீலு முட்டாள், பிடிவாதக்காரன், நீலுவுக்குக் காரியத்திலே கண்—எல்லாம் சரி. ஆனுல் அண்ணன்னு அவனுக்கு உயிர் ஆயிற்றே. நீலுவுக்கு இப்படிப் பண்ண மனசு வருமா? அன்னிலேருந்து இந்த விஷயம் நினைவுக்கு வரும்போதெல்லாம் என் நெஞ்சு அப்படியே பனிக்கட்டியா உறைஞ்சு போயிடறது. இது நிஜமா இருந்தா...? ஜெயில் கேட் கிட்ட அன்னிக்கு இவரோட இன்டர்வியூ இருந்தது. சூப்பிரண்ட் பெரிய மனசு பண்ணி, நடுவிலே நடுவிலே ஒருத்தரை ஒருத்தர் பார்த்துப் பேசிக்கிறதுக்கு அநுமதி கொடுத்திருக்கார். அன்னிக்குத் தோணித்து, ஒரு தடவை அவர் கிட்டே

இதைச் சொல்லி அவருக்கு ஏதாவது தெரியுமான்னு கேட்கலாம்னு. அப்புறம் தோணித்து. இதென்ன விசாரிக்கக் கூடிய விஷயமா? ஒரு வேளை அவர், 'நீலுவுக்கு எதிரா நீ கூட இப்படி ஒண்ணை நம்பறயா?'ன்னு கேட்டுவிட்டால்? சரி, அவள் சொன்னதெல்லாம் நிஜம்னே வெச்சுக்கோ. இப்பவே அவர் மனசுலே பெரிய புயல் அடிச்சிண்டு இருக்குன்னு அவர் மூஞ்சியைப் பார்த்தாலே தெரியறது. என் நெஞ்சிலே என்ன நடக்கிறதுன்னு எனக்குத் தெரியும். இதை வெச்சிண்டே அவருடைய மனோநிலையை என்னாலே புரிஞ்சிக்க முடியறது. என் மூஞ்சியைப் பார்க்கவே அவரால முடியல்லே என்கிறதையும் கவனிச்சேன். கடைசிலே, ஏதேதோ யோசிச்சுட்டு இதைப்பத்திக் கேட்காமலே இருந்துட்டேன். உதட்டிலே இருந்த வார்த்தை உதட்டிலேயே தங்கிவிட்டது. ''அப்போ, திரும்பிப் போகலாமா? டயம் ஆயிடுத்து''ன்னு ஸி. ஐ. டி. ஆளு சொன்னான். திரும்பி வந்தப்புறம் இதே விஷயந்தான் மனசிலே வளைய, வளைய வந்துண்டிருக்கு. நீலு இப்படிக்கூடச் செய்வானா? அண்ணாவென்றால் அவனுக்கு அஞ்ஞானம். சின்ன வயசிலேந்தே அண்ணா என்ன செய்யறானோஅதையே தானும் செய்யணும். நீலுவையும், பீலுவையும் பிரிச்சு வெச்சுப் பார்க்கக்கூட என்னாலே முடியாது. நீலு கோபக்காரன். வெளியே போனான்னா என்ன அமர்க்களம் செஞ்சிண்டு இருக்கானோன்னு மனசு அடிச்சிண்டே இருக்கும் எனக்கு. ஆனால் அப்போதெல்லாம், 'கூடவே அவன் அண்ணன் இருக்கான், சமாளிச்சுடுவான்'ன்னு ஒரு நம்பிக்கை மனசிலே. அவன் ஜெயிலுக்குப் போனபோது கூட இந்த நம்பிக்கை எனக்கு உண்டு. சின்ன வயதில் யாராவது ஏதாவது சொன்னால் உடனே நீலு, பீலுகிட்ட வந்து புகார் செய்வான். ''அண்ணா, அண்ணா இவனைப் பார் அண்ணா'' என்று.

ஒரு தடவை சின்ன வயசுலே நீலுவும், பீலுவும் ஹெட்மாஸ்டர் குவார்ட்டர்ஸ் பக்கத்தில் இருக்கிற மாமரத்தடியில் விளையாடிக் கொண்டிருக்கா. ஹமீத் தஸீப்தரி வரான். கேட்டிற்குள் நுழைந்த உடனேயே பெரிய 'ஸலாம்' போட்டுவிட்டுச் சொல்லுகிறான்: ''ஆதாப், நீலு பாபு! ஒரு வயதான துரைசானிக்கு உன்னைக் கண்ணாலம் பண்ணிவைக்கலாம்னு இருக்கேன். நேத்துக்கூட ஒரு துரைசானிக் கிழவி சொன்னா, நீலு பாபுவைத் தவிர வேறே யாரையும் கண்ணாலம் பண்ணிக்க மாட்டாளாம்.''

''பார் அண்ணா இவனை! என்னவெல்லாமோ சொல்றான் என்கிட்ட.'' பீலு, நீலுவுக்குப் புரியவைக்கிறான்: ''அசடு, அவன் நிஜம்மாவா சொல்றான்? உன்னைக் கேலி பண்றான். துரைசானிக் கிழவி எங்கேயாவது கல்யாணம் பண்ணிப்பாளா?''

நீலு சொல்றான்: ''மாட்டா, பின்னே ஏன் எங்கிட்டே இப்படி இவன் சொல்றான்?''

தஃப்தரி மறுபடியும் சொல்லுகிறான்: ''இந்தக் கிழ துரைசானிக்கு மெல்லிசா மீசை இருக்கு. முதல்லே என்னைத்தான் கேட்டா கல்யாணம் பண்ணிக்க. நான் சொல்லிட்டேன், தாடி இல்லாத பொம்பிளையை நான் கல்யாணம் கட்டிக்க மாட்டேன்னு. உடனே அவ சொன்னா, 'அப்போ நீலு பாபுவோட எனக்குக் கண்ணாலம் கட்டிவுடு'ன்னு.''

''அண்ணா! பாரண்ணா இவனை!'' நீலு அழ ஆரம்பிச்சுட்டான். பீலு அவனைச் சமாதானம் பண்ணிக்கொண்டு என்னிடம் வந்தான்: ''போடா முட்டாள் பையா! கேலி பண்ணினா அழுவாளா? அழ அழ எல்லாரும் இன்னும் அதிகம் கேலி பண்ணுவா.'' அப்புறம் எங்கிட்ட சொல்றான் பீலு: ''இவனுக்குக் கொஞ்சங்கூடப் புத்தியில்லே. எவ்வளவு சொல்லிப் புரிய வெச்சாலும் அழுதுகொண்டே இருக்கான்.'' அப்போ நான் சொன்னேன்: ''நீ தானே அண்ணா? நீ புரிய வைக்கல்லேன்னா யார் அவனுக்குப் புரிய வைப்பா?''ன்னு. இதைக் கேட்ட உடனேயே பீலுவுக்கு ரொம்பச் சந்தோஷம். அண்ணாங்கிற பொறுப்பு என்ன லேசா?

நீலுவைக் கண்ணுக்குள்ளே வெச்சிண்டிருந்தான் பீலு. நீலு 'கேல்கை' விதையை வெச்சிண்டு விளையாடுவான். நான் பீலு கிட்ட சொன்னேன்: ''பீலு, ஒரு கண் வெச்சுக்கோப்பா நீலு பேர்லே. இந்த விதையை எங்கேயாவது நீலு சாப்பிட்டு விடுவானோன்னு எனக்கு ஒரே பயம். அது விஷம், தெரியுமோன்னோ?''

பீலு பெரிய அநுபவஸ்தன் மாதிரி பதில் சொன்னான்: ''இது எனக்குச் சொல்லணுமா என்ன? அன்னிக்கு இந்த நீலு எல்லாரும் ஏதோ விதையைச் சாப்பிடறேன்னுட்டுச் சேர்த்து வெச்சிண்டிருந்தா. இதுக்குப் பேர் 'ஹிந்துஸ்தானி விதை'ன்னு ஏதோ பேத்திண்டிருந்தா. நான் தான் அதைச் சாப்பிடக்கூடாதுன்னு தடுத்து விட்டேன்.''

நிஜமா சின்ன வயசுலே நீலுவை ஒரு கணம் கூட விடாமல் தன் பார்வையிலேயே வெச்சிண்டிருந்தான் பீலு. அப்போ அவனும் சின்னவன்தானே! நீலுவின் சொக்காய்க்குப் பித்தான் போட்டு விடறது, பூட்ஸ் கட்டிவிடறது எல்லாம் இவனே செய்வான். அந்த நீலு எப்போவாவது பீலுவுக்கு எதிராப் போவானா? அப்படிப் போயிருந்தாலும் தன் நினைவோட ஒரு நாளும் போயிருக்க மாட்டான். போலீஸ் கட்டாயத்திலேதான் செய்திருப்பான். இந்தப் போலீஸ் காரங்களெல்லாம் என்ன வேணும்னாலும் பண்ணுவா. நீலுவைச் சித்திரவதை செஞ்சாலும் செஞ்சிருப்பா. நீதிபதிக்கு முன்னாலே சாட்சி சொல்லும்போது அவன் நெஞ்சு வெடிச்சிருந்தாலும் வெடிச்சிருக்கும். கண்ணில் ஜலம் வந்திருக்கும். சாட்சி சொல்லாமல்

தப்பிக்க முடியாத நிலைமை இருந்திருக்கும். ஹூம்! நீலு தன் அண்ணுவுக்கு எதிராகச் சாட்சி சொல்றது நம்பத்தக்க விஷயமே இல்லே. யாரிடம் என்ன கேட்டாளோ இந்த சமாரின் ஜமோதாரிணி— அதுக்குக் கண்ணு, மூக்கு வெச்சுப் புரளி பண்ணிண்டு இருக்கா. நீலு மட்டும் இப்படிப் பண்ணியிருந்தா அவனை முகாலோபனம் பண்ண மாட்டேன். கண்ணை மூடிண்டு வேறு எங்கேயாவது போயிடுவேன். என் நெஞ்சு சொல்றது இப்படி நடந்திருக்காதுன்னு. ஒரு தாயாரின் நெஞ்சு பொய் சொல்லுமா என்ன?

அந்தக் கபில்தேவின் கல்யாணத்துக்கு நீலு, பீலு இரண்டு பேரும் போயிருந்தா. அவா போவதில் எனக்கு இஷ்டமே இல்லே. அப்போ அவா ரொம்பச் சின்னவா. போய் உடம்பு கிடம்புன்னு வந்துடுத்துன்னு? அவா வீட்டு வழக்கமெல்லாம் இவாளுக்குத் தெரியாது. யாருக்குத் தெரியும், என்னமாதிரியெல்லாம் நடந்துப்பான்னு? ஆனால் என்னிக்கி தஹியாத் கிராமத்திலேருந்து நாவிதன் வந்தானே, இந்தப் பசங்க கையில் மஞ்சள் தடவின பாக்குக் கொட்டை வெச்சுக் கல்யாணத்துக்கு கட்டாயம் வரணும்னு உபசாரம் செய்தானே, அன்னிலேருந்தே இவங்க கல்யாணத்துக்குப் போகணும்னு ஒரே பிடிவாதம் செய்ய ஆரம்பிச்சுட்டா. கபில் தேவின் அப்பா அப்போ உயிரோட இருந்தார். அவரே ஒரு நாள் வந்து மாட்டு வண்டியிலே பசங்களை அழைச்சிண்டு போனார். பத்து நாளைக்கு மேலே அங்கே தங்கல்லே. ஆனால் என்னவெல்லாம் கத்துண்டு வந்தான்கள்! என்ன என்னவெல்லாமோ பாட்டு. புழக்கடையில் ஒரு பக்கம் நீலு உட்கார்ந்திருப்பான். இன்னொரு பக்கத்திலே பீலு. நடுவிலே ஒரு பழைய பிஸ்கெட் டப்பா. இரண்டு பேர் கையிலேயும் குச்சி. அதாலே டப்பாவை அடிச்சிண்டே இருக்கா. நீலு சொல்றான்: ''அண்ணு இந்தத் தடவை 'ஆட்டுக்கு ஐந்து கால்' பாடப்போவதில்லே. 'தக்க திக்க தக்க தீம் மக்காச்சோளம் சாப்பிடுவேன்' பாட்டும் பாடப் போவதில்லே. கல்யாணத்தில் பாடினாளே, அந்தப் பாட்டு பாடலாமா?'' என்றான். இரண்டு பேரும் பாட ஆரம்பிச்சா.

பீலு முதலில் பாடுகிறான். அவன் பிள்ளை வீட்டு மனுஷன்.

''கபில்தேவுக்குக் கண்ணாலம்! கண்ணாலம்! அஞ்சு பெண்சாதி கட்டிக்கிட்டான், ஆறு வைப்பாட்டி* கட்டிக்கிட்டான்.'' பெண் வீட்டாரின் சார்பில் நீலு பாடுகிறான். ''மேளம் கொட்டு! மேளம்

---

* ''சும்மேளனு'' என்ற சொல்லின் தளர்ந்த மொழிப் பெயர்ப்பு. மூலத்தில் உள்ள அடிக்குறிப்பின்படி, சடங்குகள் சரிவர அனுஷ்டிக்கப்படாமல் செய்து கொண்ட கல்யாணத்தை இந்தச் சொல் குறிக்கும். பிகார்ப் பிராந்தியத்தில் கீழ்ச் சாதிகளில் விதவைகளின் திருமணம் இம்முறையில் தான் நடக்கும்.

கொட்டு! கபில்தேவின் பெண்சாதிக்கு ஆறு புருஷன்! ஆறு புருஷன்! தய்! தய்! தக்க! தய்!''

சீசீ! இந்த அசிங்கமான பாட்டெல்லாம் கீழ் ஜாதிகள் பாடும். பிராமணக் குழந்தைகள் வாயில் வருகிற பாட்டா இது? நான் நன்னுத் திட்டினேன், இரண்டு பேரையும். பீலுவுக்கு ஒரேடியா வெட்க மாயிடுத்து. நீலு கேட்கிறுன்: ''தஹிபாத்தில் ஸகாதேவனுத்துப் பையன்கள், பெண்கள் எல்லாரும் இந்த பாட்டைப் பாடிறு. அவாளெல்லாம் என்ன கீழ் ஜாதியா?'' எனக்குத் தெரியும், நான் எதைக் கூடாதுன்னு தடுக்கிறேனே அதைச் செஞ்சிண்டே இருப்பான் நீலு. பீலுவுக்கு நான் சொல்றது புரியறது. பீலு நிறுத்தின பிறகு எத்தனை நேரம் நீலு தனியாப் பாடிண்டே இருக்கமுடியும்? அவன் எப்போதும் அண்ணுவைக் காப்பி அடிக்கிறவன்தானே? பீலு நிறுத்தின பிறகு கொஞ்ச நேரம் என் காதுலே படணும்னு குரலை உசத்தி, ''ததிகிடத்தோம் மக்காச் சோளம் சாப்பிடுவேன்'' என்று பாடிண்டே இருந்தான். அப்புறம் கொஞ்சம் கொஞ்சமாச் சூடு இறங்கிப் போச்சு. கொஞ்ச நேரம் கழிச்சு அவன் அண்ணுவிடம் ரகசியமாக, ''நிஜமாவே அந்தப் பாட்டு மோசமான பாட்டா அண்ணு?'' என்று கேட்கிறது காதில் விழுகிறது. அண்ணு அது மோசம் தான் என்று சொல்லி விட்டால், அது வேத வாக்கியம். நான் இத்தனை நேரம் திட்டிக் கொட்டினேன், தடுத்து நிறுத்தினேன். சத்தம் போட்டு மாய்ந்து போனேன். ஊஹூம். அதெல்லாம் ஒரு பொருட்டே இல்லை அவனுக்கு.

பெரியவர்களான பிறகு அடிக்கடி பார்த்திருக்கிறேன். அண்ணுவும், தம்பியும் ரூமில் உட்கார்ந்து அரட்டை அடிச்சிண்டு இருப்பா. ஏதோ பேசுவதற்கோ, அல்லது வெறுமனேயோ அந்த உள்ளே நான் போவேன். நான் நுழைந்த உடனேயே, 'தாட்பூட்னு' ஏதோ இங்கிலீஷில் அண்ணுவிடம் சொல்லிவிட்டு, 'ஹே, ஹோ'ன்னு சிரிப்பான். என்னைப்பத்தி ஏதோ கேலியாகச் சொல்லியிருக்கணும். பெரியவாளைப்பத்தி அவமரியாதையா இங்கிலீஷிலே சொன்னு அது தப்பு இல்லை போலிருக்கு! இவாளுக்கெல்லாம் என்ன சிட்சை சொல்லிக் கொடுத்திருக்கா? ''அம்மா, கோவிச்சுக்காதே. நீலு தப்பா ஒண்ணும் சொல்லிடல்லே. ஏய் நீலு! ஏண்டா அம்மாவை வீணுச் சீண்டறே?''ன்னு சொல்லிச் சமாதானப்படுத்துவான் பீலு.

உங்களிடம் நான் என்ன கேட்கிறேன்? அன்பான இரண்டு வார்த்தை, அவ்வளவுதான். இது கூட முடியாதா? ஒரு நாளில் எத்தனை தடவை என்னேடு பேசறே, நீலு? அந்த இரண்டு வார்த்தைகூட மனுஷாளை எட்டி உதைக்கிற மாதிரி இல்லாமலிருக்கக் கூடாதா? மறுபடியும்

சிரிக்கிறாயே, வெட்கமே இல்லையா உனக்கு? சின்ன வயசிலேருந்தே இந்த மாதிரியே வளர்ந்துட்டே. ''அங்கார் சத தௌதேன மலினஸ்ச ந முஞ்சதி.'' நீலு மறுபடியும் சிரிக்கிறான். சுலோகத்தைத் தப்பாச் சொல்லிவிட்டேன் போல இருக்கு.

''ஜமேதாரிணி! ஜமேதாரிணி! அந்தப் பெங்காலி அம்மா தூங்கிறாங்களா?''

எங்கே அந்த ஜமேதாரிணி? எங்கே அந்த மஞ்சனியா? ஜமேதாரிணி வராந்தாவிலே தூங்கறா. மஞ்சனியா என் பக்கத்திலே உட்கார்ந்துண்டு ஆடி விழறா. நர்மதா தேவியின் கூப்பாட்டுக்கு யார் பதில் சொல்லப் போகிறார்கள்? பதில் சொல்லாமலிருப்பதே நல்லது. இல்லேன்னா மறுபடியும் கொஞ்ச நேரத்துக்கு மஞ்சனியா என்னைப் பிடுங்கி எடுப்பா. நர்மதா தேவியுடைய ஊர் ஆமதாபாத். ரொம்பப் பெரிய இடத்துப் பெண். சீமைக்கெல்லாம் போயிட்டு வந்திருக்கா. பழக்க வழக்கம், துணிமணி தவிர மிச்சமெல்லாம் துரைசானி மாதிரி. மகாத்மாஜியின் பிரிய சிஷ்யைகளில் இவளும் ஒருத்தி வெள்ளை வெளேர்னு நிறம், கதர்ப் புடைவை. ஜம்ஷெட்பூர்த் தொழிலாளிகளுக்குச் சேவை செய்யறதுக்காகப் பீஹாருக்கு வந்திருக்கா. அங்கே தான் அவளைக் கைது பண்ணினா. எங்க வார்டுக்கு முன்னாலே ஒரு சின்ன அறை. முன்னெல்லாம் பிரசவத்துக்காகவோ, தொத்து வியாதிக்காரர்களைத் தனியா வைக்கிறதுக்காகவோ அந்த அறையை உபயோகிச்சிண்டு இருந்தா. நர்மதா தேவிக்கு இங்கிலீஷ் தெரியும். ஆகவே சூப்பிரண்டு கிட்டே அவளுக்கு நல்ல பழக்கம். அதனாலேயே அவளுக்கு மட்டும் தனியா இந்த ரூம் கிடைச்சுது. பெரிய இடத்துப் பெண். எங்கள் எல்லாரோடும் சேர்ந்து இருப்பது அவளுக்கு அசௌகரியமாயிருந்தது. அறையை நன்னா அலங்காரம் பண்ணி வச்சிண்டிருக்கா. எத்தனை படுதா! எத்தனை டேபிள் கிளாத்!! அறையைச் சுத்தி ஒரு பூந்தோட்டம் போட்டிருக்கா. இராப்பகலா இந்தத் தோட்டத்திலே தான் வேலை செஞ்சிண்டிருப்பா. தினமும் எனக்குக் கொஞ்சம் பூ கொண்டு கொடுப்பாள். இப்போ கூட என் தலைமாட்டிலே ஒரு பூ ஜாடியிலே அவ கொடுத்த பூ இருக்கு. கொஞ்சங்கூட வாசனையே இல்லை. காகிதப்பூ மாதிரி இருக்கு. நீலு இருந்தா இந்தப் பூக்களோட பேர் எல்லாம் சொல்லியிருப்பான். ஆசிரமத்திலே எவ்வளவு பூச்செடி நீலு கொண்டு வந்திருக்கான்! கணக்கு உண்டா என்ன? சீசனுக்கு சீசன் மாறும் பூக்களின் பேரெல்லாம் சொல்லுவான் எனக்கு. அந்த இங்கிலீஷ் பெயர்களெல்லாம் ஞாபகம் இருக்குமா என்ன? நீலு மாதிரி நர்மதா தேவிக்கும் பூ மேலே ரொம்ப ஆசைங்கிறதனாலே அவ பேர்லே எனக்குப் பிரியம். ஆனால் எனக்கு இவ்வளவு பூ தந்து என்ன

புண்ணியம்? எனக்குத் தான் பூவைப்பத்தி ஒண்ணும் தெரியாதே? ஏழைக்கு முன்னாலே முத்தை விட்டெறியற மாதிரி.

தினமும் பீலுவுக்கு அவன் ஸெல்லில் வைத்துக் கொள்ள பூ உன்னாலே அனுப்பி வைக்க முடிஞ்சால், உன்னோட இங்கிலீஷின் மகிமையை நான் ஒத்துக் கொள்வேன்! நர்மதா பஹன் துரைக்குச் சொன்னா, துரை கட்டாயம் தினமும் பீலுவின் ஸெல்லுக்குப் பூ அனுப்ப அநுமதி கொடுத் திருப்பார். இதை மனசிலே வெச்சுண்டுதான் ஒரு நாள், "பீலுவுக்குப் பூவென்றால் உசிரு" என்று நர்மதா பஹன் கிட்ட சொல்லிப் பார்த் தேன். அவ மூளையிலே இது ஏறவே இல்லே. சீமைக்குப் போய் அரிசிச் சோறு தின்னு, எழுதப் படிக்கக் கத்துண்டு வந்தா! படிப்பு வேறு, புத்தி சாலித்தனம் வேற. அன்னிலேந்து தினம் எனக்குப் பூ கொண்டுவப்து கொடுத்திண்டு இருக்கா. துரைகிட்ட ஏதாவது ஒரு சலுகை கேட்கிற சமயம் வந்தபோது தனக்கு யூரோப்பியன் டயட் வேணும்னு கேட்டுண்டா. துரை தினமும் தன் வீட்டிலிருந்து ஆடை தடவின ரொட்டி அனுப்பறான், இவளுக்கு. மனசிலே இருக்கிறதைப் பளிச்சுனு இவ கிட்ட சொல்றதுக்கு எனக்குச் சங்கோஜம். இந்த மனுஷியோ பெரிய இடத்துப் பொண்ணு. உபன்யாசம் பண்றவா மாதிரி எப்போப் பாத்தாலும் பகல்ல வந்து 'சத்தியம்', 'அகிம்சை'ன்னு என்ன என்னவோ எனக்குப் பிரசங்கம் பண்றா. அவ பேசற இந்தி என்னுடைய இந்தி மாதிரியே இருக்கு. உடைஞ்ச இந்தியிலே அவ சொல்றதில் பாதி எனக்குப் புரியறதேயில்லே. நடு நடுவில், 'சத்தியம்', 'அகிம்சை' என்கிற வார்த்தைகள் மட்டும் காதில் விழும். லெக்சர் அடிக்கணும்னு இருந்தா, கதாகாலட்சேபம் பண்றவா மாதிரி சொல்வதைச் சுவாரசிய மாச் சொல்லக் கத்துக்கணும்.

காந்திஜி ஆசிரமத்திலே இந்த லெக்சர் எல்லாம் சொல்லிக் கொடுக் கிறாளா? ஊஹூம். பீலு தான் ஒரு தடவை போயிருந்தானே, சபர் மதிக்கு—அவன் ஒண்ணும் இப்படிச் சொன்னதில்லேயே? அது சரி, இவ்வளவு பேர் இருக்காளே, நர்மதா பஹன் எனக்கு மாத்திரம் இந்த விஷயங்களைப் பற்றி அதிகப்படியா ஏன் சொல்றா? நான் சத்தியம் பேசறதில்லேன்னு எண்ணமா? இல்லே, மத்தவாளோட நகை நட்டைப் பார்த்துட்டு, பொறாமையால் மனசில எரிஞ்சுண்டு இருக்கேன்னு நினைச்சிண்டிருக்காளா? விட்டுத் தள்ளு! இந்தப் பேச்செல்லாம் அவ என்ன எனக்குச் சொல்லக் கிடக்கு? இருபது வருஷமா இதெல்லாம் கேட்டுக் கேட்டு என் காது புளிச்சுப் போச்சு. எத்தனை பேச்சாளர்களைக் கேட்டிருக்கேன்! இப்போ ஏதோ புதுசா எனக்குச் சொல்லிக் கொடுக்கப் போறதா இவள் நினைச்சிண்டிருக்காளா? முதல் முதல்லே இந்த வீட்டில் புகுந்தபோது, இவர் இதெல்லாம் எனக்குச் சொல்லிக்

கொடுத்துப் புரிய வைக்க ரொம்ப முயற்சி பண்ணினுர். அப்போ, என் கவலையெல்லாம் நீலு, பீலு, பல்வேறு குடும்ப விஷயங்கள்—ஆகியவை பற்றித்தான்.

எல்லா விஷயங்களையும் புரிந்து கொள்ளணும்னு எனக்கு ஆசையும் கிடையாது, புரிவதும் இல்லே. ஒரு காதிலே புகுந்து இன்னெரு காது வழியா வெளியிலே போயிடும். அந்தப் பேச்சுக்களினுலே எனக்குக் கிடைச்ச ஒரே லாபம், அவர்கிட்ட நெருக்கம் கொஞ்சம் அதிகமாச்சு. எப்போதுமே அவர் கொஞ்சம் கம்பீரமான மனுஷர். அவரோட என்னிக்காவது நெஞ்சைத் திறந்து பேச முடிஞ்சுதா என்ன? மனசை விட்டு ஒரு வார்த்தை—ஊஹூம்! பயத்தினுல் செத்துப் போயிடுவேன். மற்ற தம்பதியர் மாதிரி இல்லே நாங்க இரண்டு பேரும். புருஷன் கிட்ட மனசில் வந்ததைச் சொல்ல முடியாத நிலே. சிரிப்பு வந்தா அதைச் சட்டுனு அடக்கிக் கொள்கிறது. எப்போப் பார்த்தாலும் என்ன தப்பு செஞ்சுட்டோம், என்ன தப்பு செஞ்சுட்டோம் என்கிற பயம்—இதெல்லாம் அநுபவச்சவாளுக்குத்தான் தெரியும். அவர் எனக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க ஆரம்பிச்சார்.

இந்தி பேசுபவர்கள் முன்னுல் சர்க்கா, மகாத்மாஜி, தேசத்தின் நிலேமை போன்ற விஷயங்களேப் பற்றி எப்படிப் பேச வேண்டும் என்று சொல்லிக் கொடுப்பார். பெங்காலியில், 'சர்க்கா என் அருமைப் பிள்ளே, சர்க்கா என் அருமைப் பேரன்' என்று ஒரு பாட்டு உண்டு. இதை அப்படியே இந்த ஊரில் சொன்னுல் இவர்களுக்குப் புரியாது. அதனுலேயே எனக்கு ஹிந்தியிலே சில விருத்தங்கள் சொல்லிக் கொடுத்தார். அவர் எவ்வளவோ இடங்களிலே தினமும் லெக்சர் பண்ருர். அவருக்கு இதெல்லாம் அவசியம். எனக்கு எல்லாம் மறந்து போயிடறது. ஒண்ணு மாத்திரம் ஞாபகம் வரது—ஒருத்தன் இரண்டாம் தரம் கல்யாணம் பண்ணிக்கப் பார்க்கிருன். முதல் மனேவிக்கு இது தெரிந்து விடுகிறது. அவ சொல்ருு: ''ஆசை எப்போ வந்துடுத்தோ அப்போ பண்ணிக்கோ கல்யாணம். கவலே வேண்டாம் என்னேப் பத்தி, சர்க்கா இருக்கு என் கையிலே''ன்னு.

இதே மாதிரி எவ்வளவோ கதைகள் அவர் சொன்னுர். அவர் நினேச்சிண்டிருந்தார், நானும் அவர் மாதிரி லெக்சர் அடிச்சிண்டு, சுத்திண்டு இருப்பேன்னு. பின்னுலே இவருக்கே புரிஞ்சுடுத்து, இதெல்லாம் என்னுல் முடியாது, இதெல்லாம் சாம்பலில் நெய்விடற மாதிரின்னு. அதற்குப் பிறகு இதையெல்லாம் நிறுத்தி விட்டார். எனக்கும் நிம்மதியாப் போச்சு. நீங்க எல்லாவற்றையும் துறந்து விட்டு இங்கே வந்துட்டேள். ரொம்ப சரி, நானும் உங்களேத் தடுக்கல்லே. ஆயுசு முழுதும் கஷ்டம் அநுபவிக்கணுமா? சரி, அதற்கும்

தயார். ஜெயிலுக்குப் போகச் சொன்னேன்; ஜெயிலுக்குப் போனேன். ஆனால் ஒரு சந்தையில் ஆயிரம் பேர் முன்னாலே நின்று கொண்டு, 'அன்பு மிக்க சகோதரர்களே'ங்கிறது என்னாலே முடியாது. உங்கள் ஆசிரமத்து உலகை நடத்துவது, குழந்தைகளை வளர்த்து ஆளாக்குவது—இவையும் ஒரு காரியந்தானே!

ராம்கார் காங்கிரஸுக்குக் கொஞ்சம் முன்னாலே உங்க வார்த்தையைத் தட்டமுடியாமல் பாபன்காமுக்குப் போயிட்டு எத்தனை கஷ்டப்பட்டேன்? அப்பா! போதும், போதும்! பாட்னாவிலிருந்து கடுதாசி வந்தது, உடனே சில 'ஸ்வச்ச ஸேவிகா' (தொண்டர்கள்) அனுப்ப வேண்டும் என்று. ஜபர்தஸ்தான் உத்தரவு ரொம்ப அர்ஜண்ட். உடனேயே அவர்களுக்குப் பயிற்சி கொடுத்தாக வேண்டும். இல்லாவிட்டால் காங்கிரஸ் மகாநாடு நடக்கவிருக்கும் சமயத்துக்குள் தயாராக இருக்க மாட்டா. மகாராஷ்டிராவிலிருந்து ஒரு அம்மா வந்து ராம்காரில் உட்காந்திருக்கா, பயிற்சி தருவதற்காக. நம்ப மானம், மரியாதை எல்லாம் போயிடும். ஜில்லாவின் இஜ்ஜத் (கௌரவம்) செத்துப் போயிடும். அப்படி இப்படின்னு. கணக்கு எடுத்தால் ஜெயிலுக்குப் போவதற்குத் தயாராக இருக்கும் மனுஷிகள்னு ஜில்லா பூராவிலும் ஐந்து பேர் தேறுவா. நான், ஹர்தர் துபே, பஹூரியாஜி, தன் கட்டாவைச் சேர்ந்த சரளா தேவி, சோப்ராவைச் சேர்ந்த காதிஜுன்னிஸா. இவள் கூட, படலம் விழுந்து கண்கள் தெரியாமல் போய்விட்டதால் கொஞ்ச வருஷமா வீட்டை விட்டே வெளியில் வருவதில்லை. சரஸ்வதியோ இப்போதுதான் வந்திருக்கிறாள்.

ஆம், எனக்கு உத்தரவு வந்தது, கோடா தாணாவில் இருக்கிற காங்கிரஸ்காரர்கள் வீட்டுக்கெல்லாம் போக வேண்டும் என்று. என்ன பண்ணியோ, அவர்கள் வீட்டுப் பெண்களை யெல்லாம், 'ஸ்வச்ச ஸேவிகா' பிரதிக்ஞையில் கையெழுத்துப் போடச் செய்து வாங்கிக் கொண்டு வரவேண்டும். "ஆண் பிள்ளைகள் மட்டும் போனால் போதாது, நீங்களும் போகணும், யாரெல்லாம் போறாளோ, அவாளுக்குக் காசில்லாமல் காங்கிரஸ் பார்க்கிற வாய்ப்புக் கிடைக்கும். இத்தனை வயசுக்கு மேலே இருக்கக் கூடாது, அது, இதுன்னு ஒருவிதத் தடையும் இல்லை. வயசான பெண்களாயிருந்தால் அவாளுக்கு லேசான வேலை கொடுப்பா. மத்த பெண் தொண்டர்களுடைய குழந்தை குட்டிகளைப் பார்த்துக்கொள்வது, உக்கிராண அறையின் சாவியை வைத்துக் கொள்வது, என்பவை போல."

இந்த மாதிரி இரண்டு, மூன்று விஷயங்களைப் பற்றி அரைகுறையாகச் சொல்லி என்னை அனுப்பிவிட்டார் இவர் வாலண்டியர் மிஸ்திரி என்னை மாட்டு வண்டியில் பாவன் கிராமத்துக்கு ஓட்டிண்டு போனான்.

அன்று மத்தியானம் பேட்டையிலுள்ள பெண் பிள்ளைகளெல்லாம் ஜாபாடி என்பவரின் வீட்டில் சேர்த்து வைக்கப்பட்டார்கள். நானும் அவாளோட பேசிண்டிருந்தேன், எப்படி அவர்கள் சேவிகைகளாக ஆகலாம் என்பதைப் பற்றி. என்ன என்ன கேள்விகள் அவா என்னைக் கேட்டா? செருப்பு போட்டுக்காம இருக்கலாமா? குதிரைச் சவாரி செய்யவேண்டியிருக்குமா? நெற்றியில் தலைமயிர் வகிடு எடுக்கிற இடத்திலே பொட்டு வெச்சுக்கலாமா, கூடாதா? ஞாயிற்றுக்கிழமை யன்று லீவு உண்டா?—அப்படி இப்படீன்னு இன்னும் எவ்வளவோ அசட்டுக் கேள்விகள்.

கொஞ்ச நேரத்துக்கு அப்புறம் ஏதோ கொஞ்சம் பேர் சரின்னு சொன்னு. ஆனு ஒரு நிபந்தனை: அவாத்து ஆம்பிள்ளைகள் ஒத்துக்கணு மாம். இதுக்காக உடனே அவர்களுடைய 'யஜமானர்கள்' கிட்டப் போனேன். முன்னேயே அவாளை எல்லாம் ஒரு மாதிரியா தெரியும் எனக்கு. ஆசிரமத்துக்கு வந்துண்டு போயிண்டு இருக்கிறவாதானே! அவாளும் முதல்லே அப்படி இப்படின்னு மேலும் கீழும் பார்த்தா. அப்புறம் ஒத்தர் சரின்னு சொன்னவுடனே எல்லாரும் ஒப்புக்கொண் டார்கள். இதற்குப் பிறகுதான் பிரதிக்ஞைப் பத்திரத்தை எடுத்துக் கொண்டு திரும்பிப் போனேன், அவர்களிடம் கையெழுத்து வாங்க.

மை வந்தது, பேனு வந்தது, கொஞ்ச பேர் கையெழுத்துக்கூடப் போட்டாச்சு. அப்போதான் அந்தச் சகுந்தலா என்கிற பெண் ஃபாரத்தில் கையெழுத்துப் போடுவதற்கு முன் அந்தக் கடுதாசியில் இருந்ததைக் கத்திப் படிச்சா: ''நான் தேசத்திற்காக எல்லாவிதமான 'குர்பானி'யும் செய்யத் தயாராக இருக்கிறேன்.''

படிச்சுட்டு, ''ஆமாம், பெங்காலி அம்மா. இந்தக் 'குர்பானி'ன்னு என்ன? புரியல்லியே? 'தேசத்துக்காக எல்லாவிதக் குர்பானியும் செய் வேன்'னு எழுதி வாங்கிக்கிறது சரியான்னு கேட்க ஆரம்பிச்சுட்டா. ஆரம்பத்தில் எல்லாரும் சிநேகமாகத்தான் இருந்தா. ஆனல் இப் பொழுது பேல்கராமியாவுடைய பாட்டி சட்டுன்னு கோவிச்சுண்டு, ''இதோ பாரும்மா! இந்த மஹாத்மாஜி, கிஹாத்மாஜி இதெல்லாம் எங்களுக்கு ஒண்ணும் தெரியாது. நீ செய்யற காரியம் நன்னயிருக்கா? நீங்கள் எல்லாம் துலுக்காளாப் போகணும்னு போயிக்குங்கோ. எங்களை ஏன் எங்க ஜாதியிலேருந்து இழுக்கப் பார்க்கிறேள்? இந்தக் காரியம் பண்ணுவதற்காகவா ஆசிரமத்திலிருந்து இவ்வளவு தூரம் வந்தே? சீசீ, வெட்கமா இல்லே? பசு மாடு சாட்சாத் பகவதியாக்கும். எங்க ஜாதி, குலத்தை எல்லாம் குட்டிச்சுவராக்கத்தான் காகிதத்திலே பிரமாணம் செய்து கையெழுத்து வாங்கிண்டு போக வந்தாயா?''

எல்லாரும் ஒரேடியா என்மேலே பாய ஆரம்பிச்சுட்டா. எனக்குச் சரியாகப் பதில் சொல்லத்தான் தெரியலே. ஏன் இந்த 'குர்பானி' வார்த்தையை உபயோகிச்சு இருக்கா? இங்கே வரும்போது என்னவெல்லாமோ சொல்லி அனுப்பிஞரே, இதைப்பத்தி ஒண்ணுமே சொல்லல்லியே? ஒருவேளை ஹிந்துக்களுக்கு அனுப்பவேண்டிய பிரமாண பத்திரங்களுக்குப் பதிலாக முஸ்லிம்களுக்கு அனுப்ப வேண்டிய பிரமாண பத்திரங்களை அனுப்பி வெச்சுட்டார்களோ?

எனக்குப் பயத்திலே உடம்பெல்லாம் வேர்த்துப் போச்சு. நான் அவர்களைச் சமாதானப்படுத்தப் பார்த்தேன்: ''எனக்கு ஹிந்தி சரியாத் தெரியாது. ஒருவேளை காகிதம் மாறியிடுத்தோ என்னமோ?'' என்று சொன்னேன். இதனுல் அவர்கள் கோபம் குறைஞ்சுதா என்ன? ஊஹூம். பிறகு வெளியே வந்து ஜா பாபுவிடம் சொன்னேன்; ''வேறே பிரமாணப் பத்திரம் எடுத்துண்டு இன்னொரு நாள்தான் வரவேண்டும் போலிருக்கிறது'' என்று.

ஜாபாபு பிரமாணப் பத்திரத்தைப் படித்துவிட்டு ஒரேயடியாச் சிரிச்சான்: ''சரியாத்தான் எழுதியிருக்கு. ஹிந்தியிலே, 'குர்பானி'ன்னு தியாகம்னு அர்த்தம்'' என்று. பார்த்தியா என்ன வீண் அமர்க்களம்! குர்பானி எங்கே? தியாகம் எங்கே? எனக்கு இதெல்லாம் தெரியுமா என்ன? எனக்குத்தான் தெரியல்லே, அங்கே இருந்த ஒரு பெண்ணுக்கும் இது தெரியவில்லையே? அப்படியிருக்கச்சே, இப்படி ஒரு வார்த்தையைப் போடுவானேன்? யாருக்காக எழுதப்படறதோ அவாளுக்குப் புரியாத மாதிரி எழுதணுமாக்கும்.

எப்படியோ ஒரு மாதிரி அன்னிக்குக் காரியம் முடிஞ்சுது. ஆசிரமத்துக்குத் திரும்பி வந்து, ''இந்தாங்கோ ஒங்க காகிதம். இந்தமாதிரி காரியத்துக்கெல்லாம் ஆயிரம் கோடி நமஸ்காரம். இனிமேல் இந்த மாதிரி காங்கிரஸ் காரியத்துக்காக வெளிலே போனேன்னு......'' இந்தச் சம்பவத்தை வைத்துக்கொண்டு பிற்பாடு என்னை எவ்வளவு கேலி செய்திருக்கிருன், நீலு.

சகாவதியின் குழந்தை சிணுங்குகிருன். ''பங்காஜி, பங்காஜி'' என்று அழுகிருன். இது அவன் எனக்கு வைத்த பெயர். என்னிடம் ரொம்ப ஒட்டுதல் அவனுக்கு. ராத்திரி, பகல் பாராமல் என்னைச் சுத்திச் சுத்தி வந்திண்டிருப்பான் குழந்தை—நான் மடியிலே எடுத்து வைத்துக் கொள்ள வேண்டுமென்று. ரொம்ப விஷமம் செய்தால், சொன்னதைக் கேட்காவிட்டால், எங்கிட்ட அவனை அனுப்பிச்சுடுவ அவ அம்மா. என் மடியிலே ஏறின உடனேயே அடங்கிப் போயிடுவான். இப்போக்கூட எடுத்திண்டு வந்திருக்கணும். மன்சனியாவும் அப்பவே தூங்கிப் போயிட்டா. அவளை இப்போ எழுப்பறது என்ற

பேச்சே கிடையாது. இப்போ கல்கட்டிக்கு ட்யூட்டி. அவளும் ஜெயில் விசிறியை வெச்சிண்டு கிட்ட உட்கார்ந்துண்டே தூங்கி வழியறு. நாள் பூரா அரிசி பொறுக்கற வேலே; எப்படி ராத்திரி பூரா முழிச்சிண்டு இருக்க முடியும்? ஜெயிலுக்கு வந்துட்டால் வீட்டிலேயே தூக்கம் கீக்கம் எல்லாவற்றையும் விட்டுவிட்டு வந்து விட்டாள் என்று அர்த்தமா? அப்படி என்ன பெரிய தப்பு பண்ணி விட்டாள் அவள்? உதவாக்கரைப் புருஷனின் கொடுமை தாங்காமல் தற்கொலே பண்ணிக்கப் பார்த்தாள். கத்தியாலே தன் தொண்டையைத் தானே அறுத்துக் கொண்டாள். நினேச்சாலே கை, காலெல்லாம் நடுங்கறது எனக்கு. இப்பக்கூட அவ கழுத்துப் பக்கம் பார்க்க முடியறதில்லே என்னலே. ரணம் எதுவுமில்லே, ஆனல் அவள் குரல் வளேயில் சின்ன தாக ஒரு துவாரம் தெரிகிறது. உள்ளே பார்க்க முடியும். இந்த துவாரத்தை மறைக்க இருபத்துநாலு மணி நேரமும் ஒரு சின்னத் துணியைக் கட்டி வெச்சிருக்கா. ''இந்தத் துணி இல்லேன்ன, பேசற போது 'புஸ் புஸ்'னு துவாரம் வழியாக் காத்து வறது. சாப்பிடற போது சாப்பாட்டுச் சாமானெல்லாம் வெளியே வந்துடறது''ன்னு சொல்லுவா.

ஏதாவது குடிக்கும்போது ஜலம் பட்டு இந்தத் துணி லேசா ஈரமாயிடறது. பார்த்தியா இவள் தலேவிதியை? செத்துப் போயிருந்தா அவளும் பொழச்சிருப்பா, அவ புருஷனுக்கும் நிம்மதியா இருந்திருக்கும். அவ செத்தும் போகல்லே. தற்கொலே பண்ணிக்கப் பார்த்ததுக்காக ஒரு வருஷம் தண்டனே. இவாளோட சட்டத்தின் அழகை பார்த்தியா? தன்னுடைய உயிரை விடக்கூட அதிகாரம் இல்லே. யாரு சாகக்கூடாதுன்னு இருக்காளோ அவாளுக்குத் தூக்கு தண்டனே. யார் சாகக்கூடாதுன்னு ஆசைப்படருளோ அவாளேப் பிடிச்சு இழுத்துண்டு வந்து ஜெயிலில் வைக்கிறது.

குழந்தை தொண்டை கிழிந்து விடும்போல் அலறுகிருன். அவன் அம்மாவுக்குத்தான் என்ன மூளே பார்! இன்னிக்குப் பூரா என்கிட்ட குழந்தையை வர விடல்லே. அவ சொல்ரு குழந்தையிடம்: ''பங்காஜி கிட்ட போகணுமா கண்ணு? இன்னிக்குப் பங்காஜிக்கு உடம்பு சரியா யில்லே. நாளேக்குக் காத்தாலே போகலாம். உடம்பு சரியில்லாதபோது கிட்டப் போகக் கூடாது, இல்லேயா?''

ஒரு விநாடி குழந்தை அழாமல் அம்மா சொல்றதைப் புரிஞ்சிக்கப் பார்க்கிருன். மறுபடியும் அழுகை, ''பங்காஜி''ன்னு. சகாவதி சள்ளுன்னு குழந்தை மேலே விழரு. ''இதோ பார், அங்கே கல்கட்டி உக்கார்ந்திருக்கா. உன்னேப் பிடிச்சிண்டு போயிடுவா'' என்று பயமுறுத்தரு. குழந்தை உடனே அழுகையை நிறுத்திவிடுகிறது. பயம். ஆனல் மறுபடி கொஞ்ச நேரத்துக்குப் பிறகு ''பங்காஜீ...''

''அப்பா! என்ன பிடிவாதம் இந்தக குழந்தைக்கு! இத்தனூண்டு குழந்தைக்கு இவ்வளவு பிடிவாதமா?''ன்னு அவ அம்மா பட்டு, பட்டு என்று அடிக்கிருள். என்ன மனுஷி! ஒரு தாயின் பாசம் கொஞ்சம் கூடக் கிடையாதா இவளுக்கு? ''கல்கட்டி, ஓ கல்கட்டி! சீக்கிரம் போய் அந்தக் குழந்தையை என்னிடம் அழைச்சிண்டு வா பார்க்கலாம்''னு சொல்றேன். கல்கட்டி, உடைந்த குரலில் கேட்கிருள்: ''அந்தக் குழந்தை என் இடுப்பிலே வருமா?''ன்னு. கல்கட்டிதான் எவ்வளவு சோம்பேறி! தூக்கம் வரது, எழுந்திருக்கப் பிடிக்கல்லே. ஏதோ சாக்குச் சொல்லணும். நான் கல்கட்டியைக் கூப்பிடறதைக் கேட்டு விட்டுப் பஹுாரியாஜி, கமலா எல்லாரும் வந்து, ''என்ன விஷயம்? குடிக்க ஜலம் வேணுமா?'' என்று ஆரம்பிச்சுட்டா. ராமா, ராமா! என்னத்துக்காக நான் இந்தக் கல்கட்டியைக் கூப்பிட்டுத் தொலேச்சேன்!

இவாள்ளாம் சத்தம் போடாமல் பக்கத்திலே உட்கார்ந்திண்டு இருக்கான்னு எனக்குத் தெரியுமா என்ன? நிஜமாகவே கல்கட்டியைக் கண்டால் குழந்தை பயத்திலே ஒரேடியா உறைஞ்சு போயிடுவான். ஹுஸி ஜமோதரிணி கிட்டேயிருந்து எங்க வார்டில் சில பேர் துணி தோய்க்கும் சோப்பைக் கொடுத்துப் பதிலுக்குப் பீடி வாங்கிப்பா. அந்தப் பீடியைக் கல்கட்டிக்குக் கொடுத்து அவள் அதைக் குடிக்கும் போது அவள் தொண்டையில் இருக்கிற ஓட்டை வழியாகப் புகை வரதையும் வேடிக்கை பார்ப்பா. நாலு பீடி கொடுத்தால், துணியை எடுத்துவிட்டுத் தன் தொண்டை ஓட்டையைக் காட்டுவாள். இதை யெல்லாம் பார்த்துவிட்டுக் குழைந்தை பயந்து நீலமாப் போயிடுவான். என்னேக் கெட்டியாப் பிடிச்சுப்பான். பெரியவாளுக்கே இதைப் பார்த்தால் தலே சுத்தும். அவனே குழந்தை.

என்னிடமிருந்து பதில் வராததைப் பார்த்துவிட்டுப் பஹுாரியாஜி தூங்கிவழியும் கல்கட்டியைப் பிடித்து ஆட்டி, ''பெங்காலி அம்மா என்னடி கேட்டா உன்னே?'' என்று கேட்கிரு.

''அந்தக் குழந்தையை எடுத்திண்டு வரச் சொன்னுங்க.''

''சொல்றதுக்கு என்ன? நான் போய் எடுத்துண்டு வரேன். நீ கொஞ்ச நேரம் கதவு கிட்டப் போய் உக்கார்ந்துக்கோ. நீ இருந்தால் குழந்தை பயந்து அழுவான். அவன் தூங்கிப் போனப்புறம் நீ திரும்பி வரலாம்.''

கல்கட்டிக்கு அப்பாடின்னு நிம்மதி. பஹுாரியாஜி குழந்தையை எடுத்து வந்து என்னிடம் கொடுக்கிருள் குழந்தை ஒரேயடியா என் கழுத்தைக் கட்டிண்டுட்டான். ''தூங்கணுமா, தூங்குடா கண்ணு. கொஞ்சம் விசிறட்டுமா? சமத்துக் குழந்தைகள் ராத்திரி இத்தனே மணி நேரத்துக்குத் தூங்காம இருப்பாளா? சமத்து. சொன்னதை டக்குன்னு கேட்டுட்டானே?'' எங்கே போச்சு அழுகையெல்லாம்? எங்கே போச்சு

பிடிவாதம்? மார்பை அணைச்சுண்டு படுத்துண்டிருக்கு, குழந்தை. அவன் கையில் நர்மதா பஹன் கொடுத்த பூவிலே ஒரு கொத்தைக் கொடுத்தேன். ''நாளைக்குக் காலை எல்லாப் பூவும் உனக்கு'' என்று சொன்னேன். ஆனால் கையில் கொடுத்த பூவை விட்டெறிஞ்சுட்டான். அவனுக்கு இப்போ பூ எதற்கு? அவனுக்கு எது வேணும்னு இருந்ததோ அது கிடைச்சுப் போச்சு. கொஞ்சம் விசிறட்டா? கொசு கடிச்சுத் தின்னுடும், இல்லாட்டா.

விசிறியைத் தேடறேன். நான் விசிரியைத் தேடறதைப் பார்த்துப் பஹுரியாஜி என் பக்கத்திலே வந்து உக்காந்துக்கறாள், விசுறுவதற்காக. இதுவரை தைரியம் வரல்லே, நான் கோவிச்சுக்கப் போறேனோன்னு பயம். ஆமாம், குழந்தை என் பேரிலே இவ்வளவு ஆசையாக இருக்கான் என்று சகாவதிக்கு என் பேரிலே வெறுப்பா இருக்குமோ? அப்படித் தோணலியே? நான் மட்டும் ஏன் ஜதேனின் அம்மா மேலே அவ்வளவு பொறாமைப்பட்டேன்? என்னைவிடச் சகாவதிக்கு நல்ல மனசு என்று தான் சொல்லணும். காரணம் இல்லாமல்தானா அகிம்ஸையைப் பற்றி எனக்கு லெக்சர் அடிக்கிறாள் நர்மதா பஹன்?

பஹுரியாஜிக்குக் கூட இந்தக் குழந்தை லாட்லி மேல் ரொம்பப் பிரியம். அவளுடைய சின்னப் பெண் லஜ்ஜா லாட்லியுடன் ரொம்ப ஒட்டிண்டு இருந்தது இல்லியா? லஜ்ஜாவுக்கு அஞ்சு வயசு. ஆனால் அம்மாவை விட்டுத் தனியா இருக்க முடியாது. அவளை அரெஸ்ட் பண்ணும்போது எப்படியாவது லஜ்ஜாவை அவ மாமிகிட்ட விட்டுட்டு வரணும்னு பஹுரியாஜிக்கு எண்ணம். ஆனால் குழந்தை அம்மா புடைவைத் தலைப்பை விடவே மாட்டேனுட்டா. ஒரே கஷ்டமாப் போயிட்டுது. மூணு வயசுக்கு மேலே இருக்கிற குழந்தைகளை இங்கே அழைச்சுண்டு வரக்கூடாதுன்னு நியமம்.

இன்ஸ்பெக்டர் குழந்தையை, ''விட்டுட்டு வாங்க'' என்று சொன்னான். குழந்தையின் பிடிவாதத்தாலே வேறு வழியில்லாமல், இன்ஸ்பெக்டரோட சண்டை போடவேண்டியதாப் போயிடுத்துப் பஹுரியாஜீக்கு, ''யார் சொல்லுவா இந்தக் குழந்தைக்கு மூணு வயசுக்கு மேலேன்னு? அளந்து பாரு. ஒண்ணரை சாண் உயரம் இருக்கிற குழந்தைக்கு எங்கேயாவது அஞ்சு வயசு இருக்க முடியுமா? அவளை என் கூட வரவிடல்லேன்னா, எப்படி என்னைப் பிடிச்சு இழுத்துண்டு போவேன்னு பார்த்துடறேன். எங்கள் வாலண்டியர்களை விட்டு உன்னை அரெஸ்ட் பண்ணிடுவேனாக்கும்'' என்று சத்தம் போட்டா. இன்ஸ்பெக்டர் யோசிச்சான்; என்னத்துக்கு இவளோட அநாவசியத் தர்க்கம்? லஜ்ஜாவையும் கூட வரச்சொல்லிட்டு இரண்டு

பேரையும் ஜெயிலிலே போட்டு அடைச்சுட்டான். நாள் பூராவும் லஜ்ஜாவும் லாட்லியும் சேர்ந்து விளையாடுவா. என்ன விளையாட்டு? லஜ்ஜா லாட்லியை எப்போப் பார்த்தாலும் இடுப்பிலே வெச்சுண்டு சுத்திண்டிருப்பாள். இங்கே வேறே யாரு இருக்கா கூட விளையாடற நுக்கு? விளையாடணும்னு இன்னொரு வார்டில் இருக்கிறவாளோட கலந்துக்கணும். அந்த வார்டில் இருக்கிறவா கீழ் ஜாதி மக்கள். அந்தக் குழந்தைகளுக்கு என்ன என்னவோ வியாதிகள். இருபத்துநாலு மணிநேரமும் கெட்ட வார்த்தையால் திட்டிக்கொட்டிண்டு இருக்கும். அவாகூட நம்மவீட்டுக் குழந்தைகளைப் பழக விட முடியுமா என்ன? அதனுலேயே, எப்போப் பார்த்தாலும் நாங்கள் எல்லாரும் இந்தக் குழந்தைகள் பேரிலே ஒரு கண் வெச்சிண்டு இருப்போம்.

ஐயோ பாவம்! ஒரு நாள் ரத்தபேதி வந்து குழந்தை போயிடுத்து. பஹுரியாஜிக்குத்தான் எத்தனை துக்கம்! எப்படி அடிச்சிண்டு அழுதா? பெத்த மனசு இல்லியா? மார்லே அடிச்சிண்டு, ''அவளை இங்கே அழைச்சிண்டு வந்திருக்காட்டா, இந்தக் கண்ருவி நடந்திருக்காது'ன்னு அலறுவா. லஜ்ஜா செத்துப் போனப்புறம், லாட்லி சுத்திச் சூம்பிப் போக ஆரம்பிச்சுட்டான். ஜெயிலில் அவனுக்குத் தினமும் அரைச் சேர் பால் கொடுப்பா. அதுவும் என்ன, ஜெயில் பால். ஆடையை எடுத்துட்டு நிறையத் தண்ணீர்விட்ட பாலைத்தான் காண்டிராக்டர் கொண்டு வருவான். இந்தப் பால் கேட், ஸ்டோர், வார்ட் என்று எங்கெல்லாம் போறதோ, அங்கேயெல்லாம் வார்டர், மேட், போலீஸ் காரன், கைதிகள் எல்லாரும் ஒரொரு டம்ளர் பால் எடுத்துண்டு, காய்ச்சாமலே சாப்பிட்டுடுவா. இது நன்னு ஊறிப் போன வழக்கம். ஒளிவு மறைவுன்னு ஒண்ணுமே கிடையாது. ஒரே ஒரு கண்டிஷன் தான். யார் ஒரு டம்ளர் பால் எடுத்துக்கிருளோ அவா கொஞ்சம் சிரமத்தைப் பார்க்காமே சரியா அளந்து ஒரு டம்ளர் ஜலத்தைப் பால் டிரம்மில் ஊத்திவிடணும். இந்த ரீதியிலே, இங்கே வந்து சேரும்போது அந்தப் பால் குழந்தைகள் சாப்பிட்டுப் புஷ்டியா வளருகிற மாதிரியா இருக்கும்? சின்னக் குழந்தைகளுக்கு ஜெயிலில் சோறே துணிமணியோ கிடையாது. பால் மாறிப் போய்ச் சாதம், கீதம்னு சாப்பிடும் வயசு வந்த குழந்தைகள் எதுக்காக அவா அம்மாகூட ஜெயிலுக்கு வரணும் என்று நினைக்கிறு போலிருக்கு. அதுவும் நியாயந்தான்.

ஐயோ பாவம்! குழந்தை வயிறுதான் எப்படிச் சூம்பிக் கிடக்கு? ஏன், ராத்திரி சாப்பிட ஒண்ணும் கொடுக்கல்லியா இவ அம்மா? இங்கே கட்டில் தலைமாட்டிலே எனக்காகச் சாப்பாடு வெச்சிருக்காளே? அதிலேருந்து கொஞ்சம் கொடுக்கட்டுமா? வேண்டாம், இதையெல்லாம் சாப்பிட்டுட்டு உடம்புக்கு வந்துடுத்துன்னு, அவ அம்மாவுக்கு இன்னும்

கஷ்டமாப் போயிடும். எவ்வளவு மென்மையா இருக்கு, இவன் உடம்பு! பீலு சின்னவனு இருக்கச்சே இப்படித்தான் மாரோடு அணேச்சிண்டு ஒட்டிண்டு படுத்திருப்பான். அவன் தாத்தாவுடைய மடியிலே ஒக்காந்திண்டு போட்டோ எடுத்துண்டபோது அவன் இத்தனூண்டாகத்தான் இருந்தான். ஒரு நிமிஷம் கூடச் சும்மா உட்காரல்லே. கொஞ்ச தூரத்திலேருந்து நான் அவனுக்கு ஒரு கல்கண்டுத் துண்டைக் காட்டிண்டு இருந்தேன். அந்தக் கல்கண்டை நினேச்சிண்டு அவன் சிரிச்சபோது மச்சினர் 'டக்குன்னு' எடுத்த படம் அது. இன்னிக் கதையா என்ன அது? உடம்புக்கு வந்து படுத்துண்டப் புறம் எப்படி இளேச்சுட்டான்? இருபத்துநாலு மணி நேரமும் பசி. ஆனு வாயைப் பிளந்துண்டு 'ஆ, ஆ'ன்னு அலர்ற வழக்கம் அவனுக்கு ஒரு நாளும் கிடையாது.

சில சமயம் நான் அவனேப் படுக்கையில் விட்டுட்டு, சமையல் கட்டு அறை வேலேலே மாட்டிண்டுடுவேன். கொஞ்ச நேரம் கழிச்சுத் திரும்பி வந்து பார்த்தால், இண்டு கண்ணிலேருந்தும் ஜலம் பெருகி, குழந்தை மாரெல்லாம் நனேஞ்சிருக்கும். கீழ் உதடு துடிக்கிறது. அழுகையா வரது. நான் வரத்துக்கு நாழியாயிடுத்துன்னு என்ன அழுகை, என்ன துக்கம்! ''இந்த அம்மாவை அடி! சுத்த மோசம்! என் சமத்துப் பாப்பா, என் செல்லம் பீலு''ன்னு கொஞ்சிண்டு அவனே மாரோடு அணேச்சுக்குவேன். உடனே சரியாப் போயிடும். நடுநடுவிலே ஒரு விம்மல். இப்போக்கூட அந்த விம்மலின் உஷ்ணக் காற்று என் கழுத்துப் பக்கமாப் படற மாதிரி இருக்கு. லாட்லி, நீ தான் அந்தச் சின்ன வயசு பீலுவா? உன்னேட மிருதுவான உடம்பிலே அந்த நாளில் தடவின மாதிரி தடவட்டுமா? ஹூம். இவாள்ளாம் பார்த்துண்டு இருக்கா. பார்த்தால் பார்க்கட்டுமே? என்ன நினேச்சுக்கப் போரு? பீலு மட்டும் இப்போ எனக்குக் கிடைச்சால், அவனே ஒரு தடவை மாரோடு அணேச்சுக்குவேன். ஒரே நிமிஷம் தான்னுக் கூட, நெஞ்சிலிருக்கிற வேதனே கொஞ்சம் குறையும். இரண்டு பேரும் சேர்ந்து அழுதால், கொஞ்சம் நிம்மதி கிடைக்கும்.

கடைசிச் சமயத்திலே அவன் கிட்ட இருப்பேங்கிற ஒரு சின்ன உபகாரம் கூடப் பகவான் செய்யல்லே. நாலு பக்கமும் இரும்புக் கதவு, பூட்டு. யுத்தத்தின்போது ரொம்ப இரும்பு தேவைப்படும்னு கேள்விப் பட்டிருக்கிறேன். பீலு ஒரு தடவை சொல்லியிருக்கான்; யுத்தத் துக்காக மாதாகோவில் மணியையெல்லாம் உருக்கிப் பீரங்கி பண்ணிடுவார்களென்று. அப்போ இந்த ஜெயிலில் குவிந்து கிடைக்கும் இரும்பெல்லாம் இவா கண்ணில் படல்லேயா? இங்கே இருக்கிறவா நெஞ்சிலேருந்து வர விம்மல்களினுல் யமனின் சிம்மாசனத்தைக்கூடக் குலுக்கி ஆட்டலாமே!

''பஹுரியாஜி, நிஜமாச் சொல்லு. பகவான் எனக்கு ரொம்ப அநியாயம் பண்ணி இருக்கார் இல்லியா?''

பஹுரியாஜி என் முகத்தை வெறிச்சுப் பார்த்துண்டு இருக்கா. இந்தக் கேள்வியை அவள் எதிர்பார்க்கவில்லை. பதில் சொல்லவில்லை. நைனு தேவி பக்கம் திரும்பி ஏதோ சைகை செய்கிறாள். பிறகு கிட்ட வந்து விரலால் மெதுவாக என் கேசத்தைக் கோதி விடுகிறாள். வேகமா விசிற ஆரம்பிக்கிறாள். கேள்வி திடீரென்று என் வாயில் வந்து விட்டதென்னவோ வாஸ்தவந்தான். ஆனால் நான் பதில் எதுவும் எதிர்பார்க்கவில்லை.

லாட்லி எப்பவோ தூங்கிப் போய்விட்டான். இத்தனூண்டு குழந்தை. ஆனால் குறட்டையோ பெரியவா குறட்டை. அடடே, இதென்ன! குழந்தை ஒரு பக்கமாகத் திரும்பிப் படுத்திண்டிருக்கு! அதன் இடுப்பிலே கட்டியிருக்கிற அரைஞாண் கயிற்றில் இருக்கும் வெள்ளித் தாயத்து வயத்திலே பதிஞ்சு காயப்படுத்திண்டு இருக்கே? எதுக்காகத்தான் இதை இடுப்பிலே கட்டி விடுறாளோ? சகாவதிக்கு இது ரொம்ப அழகா இருக்குன்னு நெனைப்பு. எத்தனை தடவை சொல்லியிருக்கேன்; ''இது ஜெயில், ஆயிரம் தினுசு மனுசா இருக்கா, வெள்ளி மேலே ஆசை பட்டுண்டு, குழந்தையை யாராவது ஏதாவது பண்ணிட்டா, அப்புறம் அழுது புரண்டால் ஏதாவது பிரயோஜனம் உண்டா?'' என்று. ஆனால் இதையெல்லாம் சகாவதி கேப்பாளா, என்ன? என்ன மந்திரம் பண்ணிப் போட்டிருக்காளோ, இந்தத் தாயத்தை? அதில் என்ன சக்தி இருக்கோ, யாருக்குத் தெரியும்?

பீலு சின்னவனா இருந்தபோது நான் அவனுக்குத் தலை பின்னி விடுவேன். வியாதிக்காரக் குழந்தையோ இல்லயோ, அதனால் வயிறு உப்பிப் பிள்ளையார் வயிறு மாதிரி இருக்கும். விளையாட்டா அவன் சாப்பிட்டு முடித்த பிறகு சொல்லுவேன்: ''ஆச்சு! இப்போ எழுந்திருக்கணும்.''

ஆனால் அவன் உடனே எழுந்திருக்க மாட்டான். 'அப்பாடி'ன்னு தன் வயிற்றையே பார்த்துக் கொண்டு, ''ஊஹூம், வாதாபி, வாதாபி பண்ணு'' என்பான். என்றைக்கோ ஒரு நாள் சாப்பிட்டப்புறம் அவன் வயிற்றைத் தடவி, ''வாதாபி, ஜெரிச்சுப் போ, வாதாபி ஜெரிச்சுப் போ. பீலுபாபு சாப்பிட்டதெல்லாம் ஜீரணமாகட்டும். அவனுக்கு ஒரு நாளும் உடம்புக்கு வரக்கூடாது'' என்று நான் சொல்லியிருக்கேன். அதை மனசிலே வெச்சுண்டு ஒவ்வொரு நாளும் அவனுக்கு 'வாதாபி' பண்ணி விடணும். அப்புறம் சாப்பிட்டு முடிஞ்சு எழுந்திருக்கிற போதெல்லாம் 'அப்பாடி'ன்னு பெரியவா சொல்ற மாதிரி சொல்லிண்டு, கஷ்டப்பட்டுண்டு எழுந்திருக்கிற மாதிரி பாவனை பண்ணுவான்.

எத்தனை சின்னச் சம்பவங்கள், எப்பவெல்லாமோ நடந்தது. எல்லாம் ஒண்ணு பின்னாலே ஒண்ணு ஞாபகம் வரது. பீலு! உன்னை எவ்வளவு கஷ்டப்பட்டு வளர்த்து மனிதனாக்கினேன்? இப்படி என்னை ஏமாத்திட்டுப் போகலாமா? என்னோட துக்கத்தை நினைச்சுண்டு உன்னோட கடைசி நேரத்திலே உன் துக்கத்தை அதிகப்படுத்திக் கொள்ளாதே. உன் கஷ்டத்தை இலேசாக்கத்தான் என்னாலே முடியல்லே. இப்போ அவன் மனசில் என்ன நடக்கிறது என்று எனக்குத் தெரியாதா என்ன? இதற்கு மேலே, என்னை நினைச்சுண்டு உன் பாரத்தை அதிகமாக்கிக் கொண்டால் என் துக்கத்துக்கு முடிவே இருக்காது. அம்மாவுக்கு உன் மேல் பிரியமே இல்லேன்னு நினைச்சுக்கோ, அது தான் நல்லது.

நைனாதேவி, பஹூரியாஜியிடம் என்னமோ சொல்லிண்டிருக்கா. குரல் கொஞ்சம் சூடாவே இருக்கு. ''இதிலே பகவானை எதுக்காக இழுக்கணும்? தண்டனை கொடுக்கிறது சர்க்கார், இவ இழுக்கிறா பகவானை. கதை சொல்றதில்லையா? ஒரு பிராமணனுக்கு ஒரு குதிரை இருந்தது. பக்கத்து வீட்டுக்கார வண்ணான் கிட்ட ஒரு கழுதை இருந்தது. பிராமண சிரோமணி பூஜையில் உட்காரும் போதெல்லாம் வண்ணானின் கழுதை உரக்கக் கத்த ஆரம்பிக்கும். இந்த அவஸ்தை தாங்காமல் பிராமணன், பகவானிடம் பிரார்த்திக் கொண்டான். ''ஹே பகவான்! இந்தக் கழுதை ஒரு நாளும் என்னைப் பூஜை பண்ண விடாது. அது போடும் சத்தத்தில் என் வார்த்தைகள் உன் காதில் விழவே விழாது. அதைக் கொஞ்சம் கொன்னு போட்டுவிடு.''

கொஞ்ச நாட்களுக்குப் பிறகு பிராமணனுடைய குதிரைக்குக் காய்ச்சல் வந்து செத்துப் போய் விட்டது. அப்பொழுது பிராமணன் பகவான் கிட்டச் சொல்றான்: ''எத்தனை நாள் பகவானா இருந்திருக்கிறாய், குதிரைக்கும் கழுதைக்கும் கூடவா வித்தியாசம் தெரியல்லே?'' என்று. அந்த மாதிரிதான் இருக்கு, இவ சொல்றது. பகவானுக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்?

மூக்கை மூடிக்காமலே மூச்சை அடைச்சுக்க முடிகிறதே, அதே மாதிரி காதைப் பொத்திக் கொள்ளாமலே கேட்பதை ஏன் நிறுத்த முடிவதில்லை? இப்போக் காதைப் பொத்திண்டா நன்னாயிருக்காது. எல்லாரும் பார்ப்பா. இவ நாக்கு விஷம்னு எனக்குத் தெரியாதா என்ன? இவ பஹூரியா கூடச் சும்மா பேசிண்டிருக்காளா, இல்லே வேறு ஏதாவது செஞ்சிண்டிருக்காளா?

கொஞ்ச நேரம் முன்னாடி அவளோட கொஞ்சம் கடுமையாகவே பேசிட்டேன் இல்லியா, அதான் இவ்வளவு கோபம். அப்பொழுதே தெரியும், இவள் குரோதக்காரி, நான் சொன்னதை மறந்து விட மாட்

டாள் என்று. இந்த மாதிரி ஒரு ராத்திரியிலே கூட என்னை மன்னிக்க முடியல்லே அவளாலே. நீயும் தான் குழந்தைகளுக்குத் தாயார். இந்தக் கதையிலே ஏதாவது அர்த்தம் இருக்கா? தலையும் இல்லை, காலும் இல்லை. எங்கேயிருந்து கேட்டிண்டு வந்தாளோ? பெரிய படிச்ச விதூஷின்னு எண்ணம் மனசுக்குள்ளே! என்னுச்சு? இதுக்குள்ளேயே பேச்சை நிறுத்தி விட்டாளே? பஹுமரியாஜீ அடைச்சு நிறுத்தி விட்டாள் போலிருக்கிறது.

நீலு, பீலுவைப் பற்றி சின்ன வயதுச் சம்பவங்கள் மாத்திரமே ஞாபகம் வரதே, ஏன்? அவர்கள் சின்னவாளாகவே என்னுடன் தங்கி விட்டாலோ? இரண்டு பேரும் ஒரே படுக்கையில் படுத்துக் கொண்டு இருக்கா. நான் என் காரியத்தை எல்லாம் முடிச்சுட்டு வந்து ஹிந்தியில் சொன்னேன்: ''ஏய் பச்கன், சட்கன் இரண்டு பேரும் தூங்கியாச்சா?'' பீலு பச்கன், நீலு சட்கன். உடனே இரண்டு பேரும் சிரிக்க ஆரம்பிச்சுட்டா. வழக்கம் போல என் ஹிந்தி தப்பா இருந்திருக்கு. நீலு சொல்ருன், ''எத்தனை தடவை இந்த அம்மாவுக்குச் சொல்லிக் கொடுத்திருக்கேன் 'கூம்' என்ருல், ஹிந்திலே, சுத்திண்டு திரியறது, பெங்காலி மாதிரி 'தூங்கறது'ன்னு அர்த்தமில்லேன்னு. ஹூம். அவ மனசுலே இது தங்கவே மாட்டேங்கிறது.''

பீலு சொல்ருன்: ''போடா, முட்டாள். அம்மா வேணும்னே அப்படிச் சொல்ரு, நம்மைச் சிரிக்க வைப்பதற்காக.''

இத்தனூண்டு பசங்கள் எப்படிப் பெரிய பண்டிதர்கள் மாதிரி இதைப் பத்தி ஆழமான சர்ச்சை பண்ணுகிருர்கள்! இந்தக் காந்தி வழியில் மாத்திரம் வராமல் இருந்திருந்தால்? ஆனுல், வருவதும் வராததும் அவர்கள் கையிலா இருந்தது? அது அவா அப்பாவோட இஷ்டம். இப்போ மாத்திரம் பீலுவோட அப்பாவை ஒரே ஒரு தடவை பார்க்க முடிந்தால் என்ன சொல்லுவேன் தெரியுமா? ''இதோ பாருங்கோ, தகப்பனராக இருந்துண்டு பசங்களை எங்கே கொண்டு வந்து விட்டிருக்கேள்? என் ஆயுசுதான் ஏதோ ஒரு மாதிரி போயிடுத்து. எனக்கு ஒரு நாள் நிம்மதி கூட இல்லேன்னு ஆயிடுத்து. இந்தக் குழந்தைகள் சந்தோஷமா, சிரிச்ச முகமா இருக்கும்படி என்னுலே பண்ண முடியாமப் போச்சு. ஆயுசு பூரா வீட்டுக்குள்ளே காலையிலிருந்து மாலை வரை எலும்பு முறிய வேலை செய்தது எல்லாம் இதுக்காகத்தானு? பசங்க சின்னவாளா இருந்தபோது, இவாளை எப்படியாவது இழுத்துப் பிடிச்சு பெரியவாளாக்கி விட்டுடணும்னு நினைச்சிருப்பேன். பெரியவாளா ஆனப்புறம் தங்கள் வழியிலே போயிருப்பா, அப்புறம் என்ன கவலை? அவர்கள் சம்சாரம், வீடு வாசல்னு இருப்பா. நினைக்கும் போதே எவ்வளவு நிம்மதியா இருக்கு! ஆனுல் நடந்தது என்ன? பெரிய

பிள்ளையை நீங்க படிக்கவே வைக்கல்லே. அப்புறம் அந்தப் படிச்ச பிள்ளை மாத்திரம் என்ன? அவன் மனசும் இந்த வழியிலே போய் விட்டது. இந்தத் தடவை நான் ஜெயில்லேருந்து வெளியிலே வந்தப் புறம் பாருங்கோ—நீலுவை இந்த வழியிலே விட்டு வைக்கிறேனு, என்று. என் தம்பி வீட்டில் துடப்பக் கூட்டையால் அடி வாங்கிக்க வேண்டும் என்றால் கூட நீலுவை அவன் வீட்டுக்கு அனுப்பி விட்டுத்தான் மறு காரியம். ஏதோ நாலு காசு வரும்படிக்கு அவன் கட்டாயம் ஏற்பாடு பண்ணித் தருவான். என்னைக் கல்யாணம் பண்ணிண்டு அழைச்சிண்டு வந்தேள். உங்களுடைய ஆசிரமம் எனப் படும் ஹோட்டலின் வேலைக்காரரை விடவும் கேவலமான ஸ்தானத் திலே இருந்துண்டு நான் எத்தனை நாள் வேணுமானுலும் கடத்தத் தயார். ஆனுல் என் குழந்தைகளை இதன் நடுவில் ஏன் வளர்க்கணும்? வாயைப் பொத்திண்டு ரொம்பச் சகிச்சுண்டு இருந்தாச்சு. இனிமேல் முடியாது, பொறுமைக்காகக் கொடுக்க வேண்டிய விலை கடைசிப் பைசா வரை கொடுத்து விட்டேன்.

காந்திஜிக்குச் சேவை செய்வது உங்களுடைய லட்சியம். என்னைப் பற்றியோ என் குழந்தைகளைப் பற்றியோ ஒரு தடவையாவது நினைத்தது உண்டா? இன்று ஓர் உத்தரவு, நாளைக்கு மற்றோர் உத்தரவு. கொஞ்ச நாளைக்குப் பருப்புத்தான் சாப்பாட்டுக்கு. அப்புறம் கொஞ்ச நாளைக்குத் தினமும் கீரை. அப்புறம் கொஞ்ச நாளைக்குத் தக்காளி ரசம். அந்தப் பச்சைக் கோவைக்காயைச் சாப்பிட்டு விட்டு உங்களுக்கு எப்படி உடம்புக்கு வந்தது? தக்காளியை முழுசாச் சாப்பிடணும்னு காந்திஜி சொன்னாராம். அப்படிச் சாப்பிடறதுதான் நல்லதாம். அதை வெட் டிண்டு கிட்டிண்டு நேரத்தை அநாவசியமா வீணுக்கக் கூடாதாம்! காந்திஜியோட ஆசிரமத்திலே இதுதான் வழக்கமாம். ஆகவே எங்க ஆசிரமத்திலேயும் இதே நியமம். எப்படியிருக்கு? திடீரென்று ஒரு காரணமும் இல்லாமல் இந்தச் சட்டத்தையும் மாத்தியாச்சு. ஏனென்றால் சேவாகிராமத்து ஆசிரமத்திலே மாத்திட்டாளாம்.

மகாதேவ தேசாய் கடிதம் எழுதி விட்டார்: ''முழுசாகச் சீமைத் தக்காளி சாப்பிடறது தப்பு என்று காந்திஜி அபிப்பிராயப்படுகிறார். ஏனென்றால் அதைக் கடிக்கும்போது சாறு பீறிட்டிண்டு வந்து துணி மணியிலெல்லாம் விழுந்துடறதாம்.'' அப்புறம் பேச முடியுமா? நாங்களும் அந்த மாதிரி தான் பண்ணணும். இத்தனை நாள் கண்ணை மூடிண்டு சாப்பிட்டிண்டிருந்தாளா, என்ன? பகலில் சாதத்தைத் தவிர, கறி, கூட்டு என்று எண்ணி ஐந்து வகைக்கு மேல் சாப்பிடக் கூடாது. ஆறு சாப்பிட்டால் மஹாபாரதம் தீட்டாகப் போயிடும். ஆயுசு பூராவும் இந்த மாதிரிக் கணக்கு போட்டுச் சாப்பிட்டிண்டு இருக்க

முடியுமா? பசுநெய் இல்லாட்டா சாப்பிட மாட்டேன். இந்த ஊரில் பசு நெய்க்கு நான் எங்கே போறது? அடிக்கு அடி பிடுங்கல், காந்திஜி வகுத்த வழிக்கு வந்ததுக்கப்புறந்தான் இப்படின்னு இல்லே. அதுக்கு முன்னாலே மட்டும் என்ன வாழ்ந்தது? சாவிக்கொத்து தன் கிட்டேயே. ஸ்கூலுக்குப் போறதுக்கு முன்னால் எண்ணி ஒரு ரூபாய் வீட்டுச் செலவுக்காகப் பட்டுவாடா செய்யப்படும். சாவி எங்கிட்ட இருந்தா எல்லாப் பணத்தையும் எடுத்துத் தின்னுடுவேனா? இல்லே, உங்க கஜானாவைக் காலி செய்து பிறந்தாத்துக்கு அனுப்பிச்சுடுவேனா? என்ன நினைச்சிண்டேள்னு யாருக்குத் தெரியும்? அந்த விஷயத்தைப்பத்தி ஒரு நாளும் கேட்டதில்லை. தெரிஞ்சுக்கணும்னு உத்தேசமும் இல்லே.

சின்ன மனுஷாளுக்கு முன்னாலே ஒரு நாள் என்ன அவமானம் எனக்கு? எண்ணெய் விக்கிறவள் ஒரு நாள் காலை ஸ்கூல் குவாட்டர் ஸுக்கு எண்ணெய் கொண்டு வந்திருந்தா. கடை எண்ணெய் நன்னா யில்லை. அதனாலே இவளிடம் ஒரு ரூபாய்க்கு எண்ணெய் வாங்கிண்டு, வாசல் ரூமில் ஐயா கிட்ட காசு வாங்கிக்கோன்னு சொல்லி அனுப்பிச்சேன். அம்மம்மா! கொஞ்ச நேரத்திலே அந்த எண்ணெய்க் காரி திரும்பி வந்து ஒரே சத்தம் போட்டா! ''இந்தாம்மா, எண்ணெயைத் திருப்பிக் கொடு இப்பவே! என் பொழுதை வீணாக் கிட்டே!'' அப்படி இப்படின்னு. ஐயா, ''யார் எண்ணெய் வாங்கச் சொன்னது''ன்னு கேட்டாராம். அவமானத்தால் என் தலை வெடிச்சுப் போச்சு. இந்த விஷயமெல்லாம் ஒவ்வொண்ணா மனசிலே பதிஞ்சு போச்சு. நீங்கள் சுதந்திரத்துக்காக எல்லாவற்றையும் தியாகம் பண்ணிட்டேள், வாஸ்தவந்தான். ஆனால் எனக்குக் கொஞ்சங்கூடச் சுதந்திரம் தந்ததில்லை. எவ்வளவோ தடவை நினைச்சதுண்டு. பசங்க பெரியவாளாப் போனப்புறம் இந்த விஷயத்தை அவர் கிட்டே சொல்லுவோம்னு. கடைசி வரையில் சொல்லவேயில்லை.

பசங்களிடம் இதையெல்லாம் சொல்லிக் கொள்ள முடியுமா என்ன? நீங்க கிழித்த கோட்டை என்றுமே தாண்டியதில்லை. பசங்க முகத்தைப் பார்த்திண்டு சும்மா இருந்திருக்கேன். இத்தனை நாளும் என் வரைக்கும் நடந்தது நடந்து போச்சு. அதைப்பற்றி நான் கொஞ்சங்கூட நினைக்க வில்லை. ஆனால் உங்களாலே தான் என் பசங்க கதி இப்படி ஆச்சு. என் குடும்பம் அழிஞ்சு போச்சு. உங்களாலே தான் என் கூடப் பிறந்த அண்ணா தன்னோட மருமான்களைப் பற்றி விசாரிப்பது கூட இல்லை. அவர் வீட்டில்தான் எத்தனை ஊர்களிலிருந்து பையன்கள் வந்து தங்கிப் படிக்கிறா. ஆனால் தன் மருமான்களை ஏன், எங்கே என்றுகூடக் கேட்கிற தில்லை. அந்தப் பீரேன்னோட அம்மா, ஒரு நாளைக்கு வந்து என்ன வெல்லாம் கொட்டிவிட்டுப் போனா! ஏதோ அவள் பையன் பெங்காலி

என்கறதனுலே அவனை இந்தக் காங்கிரஸ்காரா ஜில்லா போர்ட் வேலை யிலிருந்து எடுத்துட்டாளாம். என் மூஞ்சிக்கு நேரவே சொல்ரு; ''வாத்தியார் ஐயாவாம், பெரிய வாத்தியார் ஐயா! பெரிய எம். ஏ. யாம்! வெறும் கழுதை தான் தலையாரியா அதிகாரம் பண்ணனும் என்பதற்காக, காங்கிரஸிலே பெங்காலி பசங்க மூஞ்சியில் கரியைத் தீட்டிண்டிருக்கா''ன்னு, ஐய்யய்யோ! என்ன ஆச்சு எனக்கு, எங்கே பார்த்தாலும் ஒரே இருட்டாயிருக்கே!

''காந்திஜீ, என்ன காரியம் செஞ்சுட்டே நீ? எங்களை ஒரு பிச்சைக் காரக் குடும்பமாத் தெருவிலே கொண்டு நிறுத்திட்டியே! நிஜம்மா பிச்சைக்காரா தான். மாசக்கடைசிலே இரண்டு காசு கையிலே நீ வெச்சாத்தான் நாங்க நாலு பிராணிகள் சாப்பிட முடியும். நான் வணங்கும் தெய்வங்களை யெல்லாம் நகர்த்திவிட்டு உன்னையே தெய்வமாப் பூஜிச்சுண்டு வந்தேன். உன்னுலேயே தான் எனக்கு ஆப்த மானவர்கள், பந்துபாந்தவர்கள் எல்லாரையும் தள்ளி வச்சுட்டேன். அதுக்குப் பிரதியாய் நிறையக் கொடுத்திருக்கே. நீ காட்டின வழியிலே புருஷன்-மனைவிக்கு இடையே பூசல்தான் ஏற்பட்டது. அப்பாவுக்கும் பிள்ளைகளுக்கும் அபிமானம் என்கிற பிணைப்பு இல்லாமப் போச்சு. அண்ணனுக்குத் தம்பி சத்துருவா மாறிப் போய்விட்டான். வீடு இரண்டாகப் போய்த் துவம்ஸமாயிடுத்து. ஒவ்வொரு நாளும் விளக்கு வைச்சவுடன் என் இஷ்ட தேவதைகளின் பேரைச் சொல்வதற்குப் பதிலாக உன் பேரைச் சொல்லி ஜபிச்சிண்டு இருந்தேன். எவ்வளவோ வருஷங்களுக்கு முன் எங்கள் ஆசிரமத்தில் நீ தங்கியிருந்த அறையில் நித்தியம் விளக்கேற்றி வெச்சிண்டிருந்தேன். ஒரு நாளாவது சர்க்கா சுத்துவதை விட்டதில்லை. இதெல்லாம் கடைசியில் இதற்குத் தானு?

பறையனை ஹரிஜன் என்று கூப்பிட்டேன். அரைத்துணி கூட இல்லாத அவன் பிள்ளையைச் சமையலறைப் பக்கத்து வராந்தாவிலே நீலு, பீலு கூட உட்காத்தி வெச்சுச் சாப்பாடு போட்டேன். ஊர் ஜனங்களெல் லாம் சிரிச்சா. ஆனுல் இதன் பலன் என்ன? துர்க்காவோட அம்மா சரியாத்தான் சொன்னு: ''வேணும்னு அந்தச் சுதேசிகளுக்காக உழைக்கணும்னு உழைச்சுக்கோ. ஆனுல் இந்த அக்கிரமமெல்லாம் பண்ணுதே. தேவதைகள் அபசாரம் மட்டும் நல்லதுக்கில்லை'' என்ருள்.

அப்போதெல்லாம் உன் முகத்தையே பார்த்துக்கொண்டு அவ சொன்னதையெல்லாம் காதிலே வாங்கிக்கலே. இன்னிக்கு உள்ளூற அவள் சொன்னது புரியறது. இன்னிக்கு மட்டும் இங்கே துர்க்காவோட அம்மா, கேதீனின் அம்மா, ஏன் ஜிதேனின் அம்மா, என் ஒரகத்தி இருந்தா அவா கழுத்தைக் கட்டிண்டு ஒரு குரல் அழுது தீர்ப்பேன். மனசு கொஞ்சம் லேசாகும். எனக்கு மஹாத்மா வேண்டாம். அவர்

மூஞ்சி ஒரு சன்யாஸி மூஞ்சியாட்டமாவா இருக்கு? சீ, என்ன பண்ணிண்டு இருந்திருக்கேன் இத்தனை நாளா? இந்த லோகத்தில் இருக்கிற மனுஷாள் எல்லாம் சேர்ந்துண்டு என்னை என்னவெல்லாம் பண்ண வெச்சிருக்கா? என் உடம்பைப் பிச்சுப் பிச்சுத் தின்னுடலாம்னு தோன்றது. மண்டையை இடிச்சுண்டு சாகணும் போல இருக்கு. முடியாது, இனிமேலும் படமுடியாது. இந்தச் சர்க்காவைத் தூள் தூளாக உடைச்சுத் தூக்கி விட்டெறியணும். இந்த மேஜைலே தானே வெச்சிருந்தேன்.

சர்க்காவை எடுக்கிறதுக்காக எழுந்து உட்கார்ந்து கொள்கிறேன். எழுந்து நிற்க முடியுமா? இடது பக்கம் தலை இரும்புக் குண்டுபோலக் கனக்கிறது. யாரோ என் தலையைத் தலைகாணி மேலே சாய்ச்சு வைக்கிறு. பஹாரியாஜி, கமலா தேவி இரண்டு பேரும் அலறிண்டு வரா.

''எதுக்காக எழுந்தே பங்காலி அம்மா? என்ன தேடறே? ஏன் இப்படி நாலு பக்கமும் வெறிச்சுப் பார்க்கிறே?. படுத்துக்கோ, தலையிலே கொஞ்சம் ஜில்லுனு தண்ணி தெளிக்கட்டுமா?''

எல்லாரும் சேர்ந்து என்னைக் கட்டாயப்படுத்தி, படுக்க வெச்சுடரு. எதைத் தேடினேன் என்று அவர்களிடம் சொல்ல முடியாது. உடனே எனக்கு மூளை கலங்கிப் போச்சுன்னு நினைச்சுப்பா. இப்பவே என்ன நினைச்சிண்டிருக்காளோ, யார் கண்டா? நெத்தியிலே 'ஒடிகலோன்' தடவுரு. வார்டில் இருக்கிறவா எல்லாரும் ஒவ்வொருத்தரா எழுந்து வந்து என் படுக்கையைச் சுத்திண்டு நிக்கரு. கல்கட்டி உலை துருத்தி மாதிரி மூச்சு வாங்கிண்டு, ஹாஸி ஜயோதரிணியைக் கூப்பாடு போட்டு அழைக்கிரு. அவளிடம் என்னவெல்லாமோ சொல்லிண்டு இருக்கா. என்னைப் பத்தித்தான் இருக்கணும். அவ இப்ப அமர்க்களம் பண்ணி ஆஸ்பத்திரிக்கு ஆள் அனுப்பி ரகளை பண்ணுமல் இருக்கணும்.

சகாவதி மெதுவா, எங்கிட்டேயிருந்து தூங்கிண்டிருக்கிற லாட்லியை எடுத்துண்டுட்டா. அவளுக்கு என்ன பயமோ, நான் அவள் குழந்தையை ஏதாவது செஞ்சுடுவேனோன்னு? எடுத்துக்கோடி அம்மா எடுத்துக்கோ, எது நல்லதுன்னு படறதோ அதைச் செய். அவனோட அம்மா நீதானே! அவனுக்கு எது நல்லது என்பது உன்னைவிட எனக்கு அதிகமாத் தெரியுமா என்ன? அவா எல்லாரும் என்னைச் சுத்தி நாலு பக்கமும் நிசப்தமா உட்கார்ந்து இருக்கா. ஊசி விழுந்தாக்கூடச் சப்தம் கேட்கும். கை விசிறி வீசற சப்தம் ஒண்ணு தான் கேட்கிறது. 'போ-ஒங்'னு சத்தம் போட்டுண்டு ஒரு வண்டு தனியாச் சுத்திண்டிருக்கு, சடக்னு கீழே விழுந்துடுத்து. மறுபடியும் மேலே எழும்புகிறது. மறுபடியும் எதிலேயோ இடிச்சுண்டு கீழே

விழுந்துடறது. இப்போ மேலே வரல்லே, இன்னும் வரல்லே. இப்போ மேலே வரும். 'ஒண்ணு, ரெண்டு' என்று பத்து வரை எண்ணணும். பத்து எண்ணுவதற்குள், அது கீழே விழுந்துடுத்துன்னா, பீலு ஒரு நாளும் பிழைக்க மாட்டான். அது கீழே விழறதுக்கு முன்னாடி நான் பத்து எண்ணிவிட்டேன்னா? பகவான் எப்படியாவது பீலுவைக் காப்பாத்தியே விட்டுடுவார். ரொம்ப வேகமாக எண்ணணும், எவ்வளவு வேகமாக முடியுமோ அவ்வளவு வேகமா.

இதோ, மேலே கிளம்பிடுத்து. ஒண்ணு, ரெண்டு, மூணு, நாலு, அஞ்சு, ஆறு, ஏழு, ''ஐய்யய்யோ வண்டு கீழே விழுந்துடுத்தே! பகவானே! என்ன பண்ணிட்டே நீ? கொஞ்சம் இருந்த நம்பிக்கையையும் உடைத்துப் போட்டு விட்டாயே!'' விட்டுத் தள்ளு. இந்த அசட்டு எண்ணத்துக்கெல்லாம் தலைகால் என்று ஏதாவது இருக்கா என்ன? நானே உண்டாக்கினேன். நானே அழிச்சுப் போட்டுட்டேன். வண்டைப்பற்றி நான் நினைச்சது ஒரு நாளும் சரியில்லே. எல்லாம் பகவானுடைய கையிலே. இந்தப் பகவானைத்தான் நான் இத்தனை நாளா எவ்வளவு அவமரியாதையா நடத்திக் கொண்டிருக்கேன்.

அம்பா! பூர்ணேசுவரி! என் தவறுகளையெல்லாம் மன்னிச்சுடு தாயே! உன் அருள் கடாட்சத்தால் தான் பீலு என் வயத்தில் வந்து பிறந்தான். உன் பேர் தானே பீலுவுக்கு வைத்தேன், 'பூரணன்' என்று. என் குடும்பம் பூராவும் உன் கோவில் மகாபிரசாதத்தைச் சாப்பிடுவதில்லை என்று உனக்கு என் பேரில் கோபமா? பீலுவுக்கு உடம்புக்கு வந்தபோது வேண்டிண்டேனே, அதைப் பூர்ணேசுவரி கோவிலில் செலுத்திட்டேனா? ஞாபகம் வர மாட்டேங்கிறதே, மறந்து போயிட்டேனா? பார்த்தியா, பார்த்தியா? ஒரு சின்ன மறதியிலேந்து என்ன என்ன விபரீதம் எல்லாம் வரது? அம்மா, பூர்ணேசுவரி? ஏன் இந்த விஷயத்தை முன்னேயே எனக்கு ஞாபகப்படுத்தலே? ஊஹூம், இல்லே. கட்டாயம் பிரார்த்தனை செலுத்தியாச்சு. ஆனா, ஏன் இப்படியெல்லாம் ஆச்சு? ''அம்பா, நீ மகா சக்தி வாய்ந்த தேவி. பீலு உன் குழந்தை. இந்த ஒரு தடவை அவனைக் காப்பாத்திடு. அப்புறம் உனக்கு ஒரு அபசாரமும் செய்யவே மாட்டேன். உன்னைவிட காந்தி மேலானவர்னு ஒரு நாளும் நினைச்சுக்க மாட்டேன். பைரம்தான் கோவிலில், பீலு பிறந்தபோது மரத்தில் கட்டின செங்கல்லை அவிழ்த்து விட்டேனா? ஆமாம், ஜிதேன் அம்மா கூடத்தானே போயிருந்தேன். அப்போ கூடக் காலில் பாத்திரம் விழுந்து விரல் நசுங்கிப் போயிருந்ததே. அப்போதான் நான் தப்பு பண்ணியிருக்கணும். வேற ஏதோ செங்கல்லை அவிழ்த்து விட்டிருக்கணும். ஆமாம், அப்படித்தான் இருந்திருக்கணும். அத்தனை செங்கற்களில் எப்படிச் சரியா அடையாளம் கண்டுபிடிக்க முடியும்?

அந்தச் சரஸ்வதி வீட்டுக்குப் பக்கத்திலேயே ஓர் அரசமரம் இருக்கு. அதன் வேரில் எப்போதும் குங்குமம், சிந்தூரம் தடவியிருக்கும். அந்த மரத்தடியிலேதான் இருக்கு, 'டிஹீவார்' என்னும் கிராம தேவதை. டிஹீ என்றால் கிராமத்து எல்லை என்று அர்த்தம். மண்ணாலே செய்த குதிரைகளை அந்தத் தேவதைக்குக் காணிக்கையாகச் செலுத்துவா.

சரஸ்வதியின் அம்மா சொன்னாள்: ''காலரா, பஞ்சம், அது, இதுன்னு வரும்போது, அம்பாளின் அருளினால் இந்தத் தேவதை கிராமத்தைச் சுற்றிப் பாரா கொடுக்குமாம். கிராமத்துத் தலையாரி எவ்வளவோ இரவுகளில் கண்ணாலேயே பார்த்திருக்கானும்.''

சரஸ்வதி அம்மாகிட்ட ஒண்ணும் சொல்லல்லே. ஆனா மனசுக் குள்ளேயே சிரிச்சுண்டேன். அறுபது முழ உயரமுள்ள டிஹீவார் தேவதை குதிரைமேலே ஏறிக்கொண்டு சவாரி செய்வதா? இது எங்கேயாவது முடியுமா? டிஹீவார் தேவதை அப்போ நான் நினைச்சிண்டதைக் கட்டாயம் புரிஞ்சிண்டு இருக்கணும். அதனாலேயே என்பேரில் கோபித்துக்கொண்டு என்னை இந்த நிலைக்குக் கொண்டு வந்துடுத்து. இல்லேன்னா, அவா கிராமத்துச் சரஸ்வதியைப் பீலு கல்யாணம் செய்து கொள்வதை நிறுத்திவிட்டேன் என்கிற கோபத்தால் இப்படிச் செஞ்சிருக்குமோ?

ஹே! டிஹீவார் தேவதையே! இன்று என் பீலுவைக் காப்பாற்றி விடு. அதற்குப் பிறகு உனக்கு என்ன பிரியமோ அதையெல்லாம் செய்கிறேன். தேவதைகள், நீங்கள் எல்லாம் கோபித்துக் கொண்டால் எங்களைப் போன்ற சாமானிய மனிதர்கள் எப்படிப் பிழைக்கிறது?

'அதோ! அதோ!' மோட்டார் ஹார்ன் சப்தம். அப்படின்னா... என் பீலு?

அந்தப் பச்சை பாட்டிலே யாரோ என் மூக்கு கிட்டே பிடிக்கிறா.

# நீலு - ஜெயில் கேட்

ஜெயில் கேட்டுக்கு முன்னால் இருக்கும் போர்ட்டிகோவுக்குக் கீழே வார்டர் நிஹால் ஸிங்குடன் நின்று கொண்டிருக்கிறேன். கேட்டுக்கு வெளியே துப்பாக்கியும் கையுமாகக் காவல்காரர்கள். கேட்டுக்கு உள்ளே நல்ல பிரகாசமான விளக்கு. விளக்கின் கீழே ஒரு 'டெஸ்க்கு'க்கு முன்னால் உயரமான ஒரு ஸ்டூல் மேலே உட்கார்ந்திருக்கிறான் சுபேதார். நிஹால் சொல்லியிருந்தது போல் போர்டிகோவுக்குக் கீழே ஒரு சின்னக் கைப்பிடிச் சுவர்மேல் உட்கார்ந்திருக்கிறேன்.

''பாபூ, கம்பிளி கிம்பிளி, ஏதாவது கொண்டு வர்லே.''

''இல்லே.'' பிறகு அவனே கேட்டுக்கு உள்ளே இருந்த சுபேதாரைக் கேட்டு மூன்று, நான்கு கம்பளிகள் வாங்கி இரும்புக் கம்பிகளின் இடுக்குவழியாகக் கொடுக்கிறான். அதில் இருக்கும் புழுதியைத் தட்டுவது போல் பாவனை செய்துவிட்டு, நான்காக மடித்துக் கைப்பிடிச் சுவர் மேலே வைக்கிறேன். என்னிடம் சொல்லுகிறான்: ''பாபூ இங்கேயே உட்காருங்க.''

பிறகு கேட் பக்கத்தில் இருக்கும் ஸெண்ட்ரி, சுபேதார் இருவரிடமும் குரலை உயர்த்தாமல் என்னைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்லுகிறான், விடியற்காலையில் தூக்கு போடப்பட இருப்பவன் தம்பி நான் என்று.

''இரவு பூராவும் இங்கேயே தங்க விரும்புகிறார், தொந்தரவு எதுவும் செய்ய வேண்டாம்.'' சுபேதாருக்கு இது பிடிக்கவில்லை என்று தோன்றுகிறது. ஜெயில் கேட்டுக்குள்ளே ஹெட்வார்டர் யஜமான். கேட்டுக்கு வெளியே, தடியும் கையுமாக நிற்கிற சுபேதார்தான் யஜமான். இவனுடைய சரியான பெயர், 'கேட் வார்டர்'. சண்டைக்குப் போய்விட்டு வந்திருப்பதால் 'சுபேதார் ஸாஹேப்' பட்டம். யார் உள்ளே வருகிறார்கள், வெளியே போகிறார்கள்—இவற்றுக்

கெல்லாம் கடைசி வார்த்தை இந்தச் சுபேதாருடையது தான். இந்த வருவோர் போவோரிடம் இருக்கும் பணம், கிணம், சாமான் 'ஸர்ஜா' எல்லாவற்றையும் சோதனை போடுவது, கடைத்தெரு வியாபாரம், கண்ட்ராக்டர்கள் ஏற்பாடு செய்வது போன்ற எல்லா விஷயங்களிலும் தீர்ப்பு அளிப்பவன் இந்தச் சுபேதார்தான். இப்படிப்பட்ட மாபெரும் மனிதரான சுபேதாரிடம் ஒரு சாமான்ய வார்டர், கேட்கககூடாத ஓர் உதவியைக் கேட்கிறுனே? இதிலே ஏதோ இருக்கிறது.

கொஞ்ச நேரம் கழித்துச் சுபேதார் கேட்கிறுன், ''உனக்கு எவ்வளவு கொடுத்தான்?'' என்று.

நிஹால் ஸிங் கொஞ்ச நாளாகவே என்னிடமிருந்து பணம் சாப்பிட்டுக்கொண்டு இருக்கிறுன். தினமும் என்னிடம் வந்து ஒரு 'லிஸ்ட்' கொடுப்பான். இன்று இன்னின்ன சாமான்கள் அண்ணுவுக்குச் சாப்பிடக் கொடுத்திருக்கிறேன் என்று. ''கடையிலிருந்து வாங்கிப் போய், மறைத்து மூடி ஜெயிலுக்குள்ளே அனுப்புகிறது சுலபமா என்ன?'' என்று சொல்லுவான். இந்தச் சுபேதார் பேராசை பிடிச்சவன். ஒவ்வொரு சாமானுக்கும் உள்ளே போறதுக்கு ஒரு ரூபாய் கொடுக்கவேண்டியிருக்கும். சம்பளம் என்னவோ ஐம்பத்திரண்டு ரூபாய் தான். ஆனுல் ஒரே மிலிடெரி 'தர்பார்'. சண்டைக்குப் போய்விட்டு வந்திருக்கான் இல்லியா?

இப்படி அப்படின்னு அவன் தன் கஷ்டத்தை எல்லாம் சொல்லிக் கொண்ட பிறகு, அசட்டுச் சிரிப்புடன், ''ஐயா தானே எனக்குத் தாய், தகப்பன் மாதிரி! நீங்க கொடுக்கிற பிச்சையிலே தானே குழந்தை குட்டிங்களை விட்டுவிட்டு இவ்வளவு தூர தேசத்திலே வயத்தை கழுவ வந்திருக்கேன்'' என்பான். இப்படிப் பேசியே என்னிடமிருந்து பணம் பிடுங்கிவருகிறுன். சுபேதார், நிஹால் ஸிங் இரண்டு பேருக்கும், இங்கே தங்க வேண்டுமென்றுல் கொஞ்சம் செலவு செய்ய வேண்டியிருக்கும் என்கிற விஷயத்தை நான் புரிந்துகொள்ள வேண்டும் என்கிற எண்ணம். இல்லையென்றுல் இவ்வளவு உரக்கப் பேசுவானேன்? வேண்டுமென்றே என் காதில் விழும்படி பேசுகிறுர்கள்.

''என்ன கொடுப்பாரு? தர்ம நியாயம்னு இப்பவும் ஒன்று இருக்கு. என் பிள்ளை மேலே ஆணையாச் சொல்றேன். ஒண்ணும் கொடுக்கல்லே. துரை இவருக்குப் பிணத்தை எடுத்துக்கிட்டுப் போக அனுமதிச்சு உத்தரவு போட்டிருக்காரு.''

''பிணத்தை எடுத்துக்கிட்டுப் போக உத்தரவு போட்டிருந்தா போட்டிருக்கட்டும். இங்கே தங்கறதுக்கு உத்தரவு போடல்லியே? வெளி மனுஷங்களை இங்கே தங்கவிடற பொறுப்பை நான் எடுத்துக்க முடியாது.''

இன்னும் என்னவெல்லாமோ 'கடகடன்னு' சொல்லிக் கொணடே இருக்கிருன், சுபேதார். நான் நிஹால் ஸிங்கைக் கூப்பிட்டு அவன் கையிலே ஒரு ரூபாயை வைத்து அமுக்கினேன். சுபேதார் துரை பார்த்துக்கொண்டே இருக்கிருர். ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லே. பங்கு போட்டுக்கொள்வது பின்னர் நடக்கும்.

சுபேதார் ஸெண்ட்ரிக்குச் சொல்லிவிட்டான்: ''இந்தப் பாபுவை யாரும் ஒண்ணும் செய்யக்கூடாது. டியூட்டி மாத்தும் போது, புதுசா வரவங்க கிட்டே சொல்லிவிடு.''

நிஹால் ஸிங் கையைக் கூப்பிக்கொண்டு 'ப்ரணும்' என்று சொல்லி விட்டுப் போகிருன். இந்த ஊரில் 'நமஸ்கார்' என்று சொல்வதில்லே. அதற்குப் பதிலாகச் சமய சந்தர்ப்பம் இல்லாமல் 'ப்ரணும்' என்று சொல்லும் வழக்கம் இவர்களுக்கு. நாங்களும் இந்த ஊரில் இருந்து இருந்து இந்த வார்த்தையையும் இதே மாதிரி பல வார்த்தைகளேயும் உபயோகிக்கப் பழகிக் கொண்டுவிட்டோம்.

ஸிசீர் எழுதிய கடிதம் இப்பொழுது கூட ஞாபகம் இருக்கிறது. எனக்கு முன்னடியே ஜெயிலிலிருந்து அவனே விடுதலே செய்து விட்டார்கள். ஜெயிலில் இருப்பவர்கள் எல்லாரும் எப்பொழுதுமே சொல்லும் ஒரு வார்த்தை; ஜெயிலே விட்டு வெளியில் போகிறவர்கள் உள்ளே இருப்பவர்களேப்பற்றிக் கவலேப்படுவதை விட்டு விடுவார்கள் என்பது. நிஜமாகவே இப்படித்தான் எல்லாத் துறைகளிலும் நடக்கிறது போலும். ஜெயிலிலேயே மாதக் கணக்கில், வருஷக்கணக்கில் புழுங்கி மக்கிப் போனவர்களுக்கு எல்லாம் வெளியுலகத்துச் செய்திகள் எவ்வளவு தேவை தெரியுமா? இவர்களது பொங்கி எழும் நெகிழ்ச்சிகள் எல்லாம் விதிகளால் கட்டப்பட்டு வற்றிச் சுருங்கிப் போய் விடுகின்றன—சீன தேசத்துப் பெண்மணிகளின் பாதங்களேப் போல.

வாழ்க்கை தடங்கலில்லாமல் இயற்கையாக வளர்ந்து வசிப்பதற்கு வாய்ப்புகள் ஜெயிலில் கிடையாது. அதனுலேதான் ஜெயிலுக்குள் ஒரு புதுக் கைதி வந்து சேர்ந்தால் அவன் இருளடைந்த யக்ஷபுரிக்குள் ஒரு மெல்லிய ஒளிக்கிரணம் நுழைய அநுமதிக்கும் ஒரு சின்ன ஜன்னலாகக் காட்சியளிக்கிருன். பரபரப்புடன் சுழலும் வெளி உலகில் கிட்டும் மதுர நுகர்ச்சிகளிலிருந்து பலாத்காரமாக இழுத்து வரப்பட்டு, ஜெயிலுக்குள் அடைக்கப்பட்ட கைதிகள், சீக்கிரம் விடுதலே அடைந்து வெளியில் செல்லவிருக்கும் கைதிகள் மூலம் தாங்கள் இழந்த வெளி வாழ்வுடன் தொடர்புகொள்ள ஏங்குகிருர்கள். ஒரு யந்திரம் போல் சுழலும் ஜெயில் வாழ்க்கைக்கு இந்த விடுதலேயடைந்த கைதிகள் தான் 'ஸேஃப்டி வால்வ்'. இந்த ஜெயிலுக்குள்ளே தான் எத்தனே ஏமாற்றங்கள், எத்தனே கட்டுக்கடங்காத ஆக்ரோஷங்கள், முடிவற்ற

கண்ணீர்ப் பெருக்குகள், தீர்க்க முடியாத தாபங்கள்! இவற்றுக்கெல்லாம் தாற்காலிக நிவாரணத்துக்கு வழிவகுத்துக் கொடுக்கிறான், வெளியே செல்லும் கைதி. அவன் ஜெயிலைவிட்டுப் போகும்போது, கடிதம் எழுதுவதாக எத்தனை வாக்குகள்! 'இண்டர்வியூவு'க்கு ஏற்பாடு செய்து கொள்வதாக எத்தனை சத்தியங்கள்! கேட்டுக் கொண்டதும், கேட்டுக் கொள்ளாததுமான காரியங்களைக் கட்டாயம் செய்து முடிப்பதாக எத்தனை பிரதிக்ஞைகள்! வெளியே போகும் தினம் பூமாலைகள், விடைபெற்றுக்கொள்ளும் தழுவல்கள், ப்ரணாம்—நமஸ்காரங்கள், ஆதாப்—ஆலிங்கனங்கள், தேடாத அறிமுகங்கள், கேட் வரை ஊர்வலமாகப் போய் வழி அனுப்புதல்! இவையெல்லாம் ஜெயில் வாழ்க்கையின் சம்பிரதாயங்களாகப் போய்விட்டாலும், வெறும் வெளிவேஷத்துக்காகச் செய்யப்படுபவை அல்ல. இதில் எழும் உள்ள நெகிழ்ச்சி உண்மையானதுதான். ஆனால் இதற்கெல்லாம் பிறகு என்ன நடக்கும் என்று கண்ணை மூடிக்கொண்டு சொல்லிவிடலாம்.

தபாலாபீஸில் வேலை செய்கிறவர்களால் சுமாராகக் கணக்குச் சொல்ல முடியும், அட்ரஸ் இல்லாமல் கடிதம் எழுதுபவர்கள் எத்தனை பேர் என்று. விடுதலை அடைந்த கைதி கேட்டுக்கு வெளியே போன நிமிஷமே உள்ளே இருப்பவர்களை மறந்து விடுகிறார்கள் என்ற உண்மையை அரசியல் கைதிகள் அதேமாதிரி சொல்லமுடியும். என்னுடைய கணிப்பு தப்பு என்று நிரூபிப்பதற்காகவே ஜெயிலைவிட்டு வெளியே போனவுடனே ஸிரீர், அண்ணாவுக்குக் கடிதம் எழுதினான். அதில் சில வரிகளை அண்ணா, 'அண்டர்லைன்' பண்ணியிருந்தான். இப்பவும் ஞாபகம் இருக்கிறது. "மற்றவர்கள் மாதிரி என்னை நினைக்காதே. ஜெயிலை விட்டு வந்த ஏழு நாட்களுக்குள்ளாக உனக்குக் கடிதம் எழுதுகிறேன். இவர் இவர்களுக்கு எனது 'ப்ரணாம்' தெரிவிக்கவும்."

ஹர்தா தூபேஜியின் மனைவி கிழவி. அவளும் எனக்குப் 'ப்ரணாம்' சொல்கிறாள். மேலும் அண்ணாவைத் தனது 'வளர்ப்புப் பிள்ளை' என்று சொல்லிக் கொள்கிறாள். ரொம்பவும் ஏழைக் குடும்பம். இருந்தாலும் அன்று பார்த்தபோது தன் 'பிள்ளை'க்கு வழக்காடுவதற்காகப் புடைவைத் தலைப்பிலிருந்து மூன்று ரூபாய் எடுத்து, செலவுக்காகக் கொடுத்தாள். அவளுடைய இரண்டு கண்களிலும் ஜலம்.

தூபேஜியே ரொம்பத் தயக்கப்பட்டுக் கொண்டு சங்கோசத்துடன் என்னிடம் சொன்னார்: "பணத்துக்கு அவசியம் இருந்தால் நான் கொஞ்சம் சேகரித்துக் கொடுக்க முடியும்" என்று. தூபேஜி மேலும் சொன்னார்: "பகவான் எங்கே கோபித்துக் கொண்டு விடுவாரோ என்ற பயத்தில் என்னையும் என் மனைவியையும் போலீஸ்காரர்கள்

கைது செய்யவில்லை. நானும் தான் ஊர்வலத்திலே கலந்து கொண்டேன். என் கையில் தான் எல்லாருடைய கொடிகளையும் விடப் பெரிய கொடி இருந்தது. ஆகவே எப்போது பகவான் நான் ஜெயிலுக்கு வெளியே இருக்க வேண்டும் என்று நினைத்து விட்டாரோ, அப்போது காங்கிரஸ்காரன் என்கிற முறையில் பீலு பாபுவின் வழக்குக்காக என்னாலான உதவி செய்ய வேண்டியது என் கடமை.''

நான் அப்போது பணத்தை வாங்கிக் கொள்ள மறுத்து விட்டேன். தூபேஜி இந்தச் செய்கையை, நான் அண்ணா வழக்கை நடத்த இஷ்டப்படவில்லை என்று தவருக அர்த்தம் பண்ணிக் கொண்டு விட்டார். உண்மையில் நான் பணம் வாங்கிக் கொள்ளாததற்குக் காரணம் பெரியம்மா எங்கிருந்தோ எனக்குத் தெரியாமல் முந்நூறு ரூபாய் இந்த வழக்குக்காக வாங்கிக் கொடுத்திருந்தாள். பெரியம்மா சொன்னது இவ்வளவுதான்: ''இந்தப் பணத்தை வக்கீல் ஹரேன் பாபுவுக்குக் கொடுத்துவிடு.'' பணத்தை என்னிடம் கொடுக்கும்போது அவள் முகம் தூபேஜியின் மனைவியின் முகத்தைப் போலவே இருந்தது. இதற்குப் பிறகு தூபேஜி தனியாகவே வக்கீல் வீட்டுக்குப் போய் வந்து கொண்டிருக்க ஆரம்பித்து விட்டார்.

குதிரை மேலே தூபேஜி. சிவப்புக் குதிரை, நொண்டி நொண்டிக் கொண்டு சென்று கொண்டிருந்தது. இறங்கும்போது சாட்டையால் ஓர் அடி கொடுத்தார். குதிரை முதுகிலிருந்த சாக்கை எடுத்து மடித்து வைத்து விட்டு, ஹரேன் பாபு கேட்டுக்குப் பக்கத்தில் இருந்த யூகலிப்டஸ் மரத்தில் குதிரையைக் கட்டினார். தூபேஜி நிறையப் பணம் செலவழித்திருக்க வேண்டும். நானும் பெரியம்மா கொடுத்தனுப்பிய பணத்தை ஹரேன் பாபுவுக்குக் கொடுத்து விட்டேன். அவர் அப்பாவின் ஆப்த நண்பர். இருந்தாலும் பெரியம்மா கொடுத்த பணத்தைத் தவிர, தூபேஜி கொடுத்த பணத்தையும் வாங்கிக் கொள்வதில் ஒருவிதத் தயக்கமும் அவர் காட்டவில்லை.

பின்னர் தூபேஜியின் மனைவி தன் மனத்தில் உள்ளதை உடைத்தே சொல்லி விட்டாள். ''எங்கள் வீட்டுக்காரர், தன் பிள்ளையின் வழக்குக்காக யதேஷ்டமாகக் 'கிம்பளம்' எல்லாம் கொடுத்துப் பார்த்தார். காசை, பானை ஓடு மாதிரி நினைத்துக்கொண்டு செலவு செய்தார். ஆனால் என்ன பிரயோஜனம்? கடைசியில் போலீஸ் யார் பக்கமோ அவர்கள் பக்கந்தான் ஜயம். நீ சொன்னால் போலீஸ்காரா கேட்பா. கேள்விப்பட்டேன், கலெக்டர் துரை, உனக்கு ரொம்ப வேண்டியவர்னு. உன்னைக் கேட்காமல் ஒன்றும் செய்ய மாட்டார் என்று. உங்கள் கட்சியைச் சேர்ந்த நோகேலாலைத்தான் எடுத்துக் கொள்ளேன். ஹர்தர் பஜாரில் உள்ள எல்லா வியாபாரிகளையும் பிடுங்கித் தின்னுண்டு

சாகடிச்சிண்டு இருக்கான். ஆனால் இன்ஸ்பெக்டர் அவன் கையில். சர்க்கார் உங்கள் கட்சி ஆட்களுக்கு மாதச் சம்பளம் கொடுக்கிறார்களாமே, நிஜமாகவா?''

இப்போ புரிகிறது தூபேஜி ஒளிவு மறைவாகப் பணம் கொடுப்பதின் அர்த்தம். பீலு பாபு அவர்களுடைய வளர்ப்புப் பிள்ளை. அவனைக் காப்பாற்றுவதற்காக அவர்களுடைய எளிய புத்திக்கு எது தேவை என்று படுகிறதோ அதைச் செய்யத் தயங்குவதில்லை. இவர்கள் எல்லாரும் நான் போலீஸின் கையாள் என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அதற்காக இவர்களைக் குற்றம் சொல்ல முடியுமா என்ன? வேறு என்ன தான் இவர்கள் நினைத்துக் கொள்ள முடியும்? நாடு பூராவும் இதே மாதிரி தான் நினைக்கிறது.

தூபேஜியின் மனைவி சூதுவாது தெரியாதவள். ஆகவே அநேக நாட்களில் பரிச்சயத்தின் பேரில், பளிச்சென்று நேரடியாகச் சொல்லி விட்டாள். ரூபாயை அவள் முகத்தில் விட்டெறிந்து விடலாமா என்று தோன்றியது. ஆனால் வாயில் வந்த வார்த்தை: ''தீர்ப்பு என்னவோ சொல்லியாகி விட்டது. பணத்தினால் இப்பொழுது என்ன பயன்?''

கலெக்டரோ அல்லது கவர்னர் துரையோ இனிமேல் ஒன்றும் செய்ய முடியாது என்று அவள் நம்பவே இல்லை என்பது எனக்கு நன்றாகத் தெரிகிறது. அவள் முகத்தில் தோன்றிய ஏமாற்றத்தைப் பார்த்தவுடன் அவள் கொடுக்க வந்த பணத்தை வாங்கிக் கொள்வதுதான் உசிதம் எனப்படுகிறது. ''சரி, பணத்தைக் கொடுங்கள்'' என்று சொன்னேன். குழந்தை இல்லாத ஒரு பெண், வேறு யாரோ ஒருவருடைய பிள்ளையின் மேல் காட்டும் வாத்ஸல்யத்தின் முன்பு எனது வாதங்கள், சித்தாந்தங்கள் எல்லாம் தலை குனிந்தன.

ஆனால் வழக்கு நடந்த சமயத்தில் சாட்சி சொன்னபோது தன் அரசியல் கொள்கையைக் கொஞ்சம் இறக்கி வைத்தால் என்ன மோசம் போயிருக்கும்? அந்தச் சமயத்தில் நான் ஒரு சாதாரண மனிதனாகவே இல்லை. அந்தச் சமயத்தில் பொதுஜன விருப்பத்துக்கு விரோதமாக, தெரிந்தவர்கள் யாராயினும் சரி, அவர்கள் எல்லாருக்கும் எதிராக என் தலை மட்டும் நிமிர்ந்து நிற்க வேண்டும் என்ற பிடிவாதம். என்னை நிந்திப்பவர்களுக்கும், எதிரியாகக் கருதுபவர்களுக்கும் எனது கொள்கைகளில் அசைக்க முடியாத நம்பிக்கையைக் காட்ட வேண்டும் என்கிற எண்ணம். அரசியல் ஈடுபாட்டை ஒதுக்கி வைத்தாலும், என்னுடைய பிடிவாத குணம் குறுக்கே வந்து தடுத்திருக்கும். கெடுபிடி பண்ணிக் கொள்கைகளை மாற்றுமளவுக்கு என் நம்பிக்கைகள் ஆட்டம் கண்டவை அல்ல. என் மன ஆழத்தில் என்ன இருந்தது என்று மக்களுக்கு என்ன தெரியும்? தூபேஜியின் மனைவியின் அபிப்பிராயத்தைவிட மோசமான

அபிப்பிராயம் சாதாரண மக்களுக்கு என்னைப்பற்றி. இதற்குக் கண் கூடான பிரமாணத்தைத் தினமும் பார்த்துக்கொண்டுதானே இருக் கிறேன்.

அன்று புட்பால் மைதானத்துக்குப் பக்கத்தில் சில பையன்கள் சிகரெட் குடித்துக் கொண்டு நின்றிருந்தார்கள். அவர்களைத் தாண்டிக் கொண்டு சைக்கிளில் போகும் என்னைக் கண்டவுடன் கனைத்துக் கொள் கிறார்கள். பேட்டையில் உள்ள குழந்தைகள், ஆச்சரியமும் சந்தேகமும் கலந்த கண்களுடன் என்னைப் பார்க்கிறார்கள். பால்ய சிநேகிதன் ஸௌரீன் என்னைப் பார்க்காத மாதிரி தாண்டிச் செல்கிறான். அடித்துக் கொன்று போட்டு விடுவோம் என்று மொட்டைக் கடிதங்கள் எனக்கு வருகின்றன. என்ன அர்த்தமற்ற கடிதங்கள்! முதல் பாகத்தில் மதிப்புக் குரிய பிதாவின் ஒப்பற்ற புத்திரன் என்று அண்ணாவை வர்ணித்து விட்டுக் கடைசி வரியில் நான் யாருக்குப் பிறந்தவன் என்பதில் தங்களுக்குள்ள சந்தேகத்தை வெளியிட்டிருக்கிறார்கள்! அத்தை, பெரியம்மா இரண்டு பேரும் கூட அவசியமானாலொழிய என்னுடன் பேசுவதில்லை.

ஒருநாள் ஜில்லா போர்ட் மெம்பர் ஒருவர் மற்றொரு ஜில்லா போர்ட் மெம்பரிடம் சொன்னார்: ''அண்ணன் தம்பி இரண்டு பேருக்கும் சகா தேவின் தங்கை மேலே காதல். அந்தப் பொறாமையில்தான் நான் அண்ணாவுக்கு எதிராகச் சாட்சி சொன்னேனாம். இல்லாவிட்டால், தூக்குப் போடும் கேஸில் சொந்த அண்ணாவுக்கு விரோதமாகச் சாட்சி சொல்லுவானா?'' சரஸ்வதி பற்றி இந்த மாதிரி ஒரு நாளும் நான் நினைத்ததில்லை. அண்ணாவின் நடத்தையிலும் அவன் அவளை விரும்பிய தாக ஒரு நாளும் தோன்றியதில்லை. இருந்தாலும் உலகத்தின் வாயை யாரால் மூட முடியும்?

அண்ணாவின் வழக்கில் நான் சாட்சி சொன்ன தினம், ஜெயிலுக்கு வெளியில் என்ன கூட்டம்! ஜெயிலுக்குள்ளே தான் வழக்கு நடந்தது. இந்த மாதிரி ஆபத்தான கைதியைத் திறந்த கோர்ட்டில் விசாரிக்க முடியுமா என்ன? நான் ஒரு போலீஸ் வானில் வந்து இறங்கினேன். கூட இன்ஸ்பெக்டர், கான்ஸ்டபிள் இத்யாதி. மக்கள் பக்கம் கண்ணை ஓட்ட முடியவில்லை. ஆனால் குற்றம் சாட்டும், இழித்துக் கூறும் காட்சியை அவர்களின் கண்களைப் பார்க்காமலே உணர முடிந்தது. பிறகு மந்தை போன்ற இந்த மக்களின் கண்டனத்தை நான் துச்சமாக மதிப்பதை அவர்களுக்குத் தெரிவிப்பதற்காகவே என்னை நானே வலுக் கட்டாயப்படுத்திக்கொண்டு தலையை உயர்த்தி அவர்களைப் பார்த் தேன். ஆனால் அலை பாயும் என் மனோநிலையில் ஒரு தனி மனிதனின் முகத்தை ஆடாமல் அசையாமல் பார்ப்பதற்கு வேண்டிய மனோ

தைரியம் வரவில்லை. ஜெயில் வார்டர்கள் ஜூவில் இருக்கும் மிருகங்களைப் பார்ப்பதுபோல அன்று என்னைப் பார்த்தார்கள். நீதிபதி ஒருவரின் பார்வை மட்டுந்தான் என்னைப் பாராட்டுவது போல் இருந்தது. பழைய கைதிகள் என்னை மெத்தன நோக்குடன் பார்த்தனர். மற்றவர்கள் ஒருவர் கண்ணும் இப்படியில்லை. ஜெயிலில் இருந்த அரசியல் கைதிகளின் கண்களும் அந்தச் சமயத்தில் என் கண்களும் எதிர்ப்படவில்லை. பட்டிருந்தால் அவர்கள் கண்களிலிருந்து தெறிக்கும் வெறுப்புணர்ச்சியையும் இகழ்ச்சியையும் பார்த்திருக்க முடியும்.

இந்த வழக்கில் அண்ணாவுடன் மற்றும் இரண்டு பிரதிவாதிகள்— ஸூரஜ்தேவ், ஹரிச்சந்தர். நான் சாட்சிக் கூண்டில் ஏறியவுடன், ஹரிச்சந்தர் தான் இருந்த இடத்திலிருந்து ''சீ! சீ! சீ!'' என்று உரக்கச் சத்தம் போட்டான். நான் திரும்பி அவனைப் பார்த்தேன். ஆனால் அவனுடைய தீட்சண்யமான குரலில் வறுத்தெடுக்கும் ஏளனத்தை விட, பயனற்ற ஆக்ரோஷமே அதிகமாக இருந்தது.

ஒரு சமயம் ஆசிரமத்தில் ஒரு பச்சைப் பாம்பை இடுக்கியால் பிடித்து எடுத்துக்கொண்டு வந்து அண்ணாவிடம் கொடுத்தேன். அண்ணா அப்போது தோட்டத்தில் வேலை செய்து கொண்டிருந்தான். இந்தப் பாம்பின் வெளுப்பான அடிவயிற்றைத் திடீரென்று பார்த்த போது அண்ணாவின் முகத்தில் தோன்றிய பாவத்தை இன்று ஸூரேஜ்தேவின் முகத்தில் பார்த்தேன். சகிக்கமுடியாத அருவருப்புடன் தன் கண்களைத் திருப்பிக்கொள்வது போல் இருந்தது. அண்ணா கைதிக் கூண்டுக்குக் கீழே ஒரு ஜமக்காளத்தைப் பரப்பி அதில் உட்கார்ந்து கொண்டு ஒரு சிவப்புப் பைண்டிங்குடன் கூடிய புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தான். அவன் முகத்தில் ஒருவித பாவமும் இல்லை. உண்மையில் அந்தப் புத்தகத்தின் மேல் அவனுக்கு லயிப்பு இல்லை. தன் கண்களை மேலே எழுப்ப இஷ்டமில்லாமல் வேணுமென்றே கீழே புத்தகத்தின்மேல் வைத்திருப்பது போல் பட்டது எனக்கு. அப்படியில்லையென்றால் கட்டாயம் அண்ணா ஹரிச்சந்தரை ஒன்றும் சொல்லாமல் தடுத்திருக்கக்கூடும். பிறகு ஒன்றன்பின் ஒன்றாக, சர்க்கார் தரப்பு வக்கீல் ஜட்ஜிடம் ஹரிச்சந்திரனின் நடத்தைப்பற்றி முறையிடுவது, ஜட்ஜ் கோபத்துடன் ஹரன்பாபு பக்கம் திரும்பித் தம்முடைய எரிச்சலை வெளியிடுவது; ஹரேன்பாபு தன்னுடைய சங்கடத்தை மறைத்துக் கொள்வதற்காக இருமிக்கொள்வது; அஸிஸ்டண்ட் ஜெயிலர் ஆன் ட்யூடி, இன்ஸ்பெக்டர் இரண்டு பேரும் பரபரப்படைவது; 'கோர்ட் ரூம் மட்டும் இல்லாதிருந்தால், இந்த மாதிரி ஆசாமிகளை ஒரு கை பார்த்திருப்போம்' என்று சொல்வது போன்ற அர்த்தபுஷ்டியான பார்வைகளை இவர்கள் மாற்றிக் கொள்வது; இந்தக் காட்சிகள் எல்லாம் படம் போல என் கண் முன்

நிழலாடின. ஹரிச்சந்தர், சாகவிருப்பவனின் துணிச்சலுடன் பேசுகிறன்: ''என்னடா செய்வீங்க? தூக்குக்கு மேலே என்னதான் செய்யமுடியும் உங்களாலே?''

வார்டர்கள், போலீஸ்காரர்கள் கைதிக் கூண்டைச் சுற்றிக்கொள்கிறர்கள். இதனிடையே என் பக்கம் திரும்பி உரக்க, ''சீ, பற நாயே'' என்று திட்டுகிறன். நீதிபதி தமது மூக்குக் கண்ணுடியைத் துடைத்துக் கொள்கிறர். கோர்ட் குமாஸ்தா ஓடி வந்து ஹரிச்சந்தரிடம் ஏதோ சொல்கிறன். இதற்குள் அண்ணுவின் கண்களும், ஹரிச்சந்தரின் கண்களும் ஒன்றை ஒன்று சந்தித்து விட்டன. அண்ணுவின் பணிவு கலந்த கெஞ்சும் பார்வை, 'போதும் ஹரிச்சந்தர், நிறுத்திவிடு. ஒரு நாடகமே நடந்துவிட்டது இங்கு' என்று சொல்வதுபோல் தோன்றுகிறது. ஹரிச்சந்தர் ஓய்ந்து விட்டான். மறுபடியும் வழக்குத் தொடங்குகிறது.

சரளையடித்த சாலையில், சேர்ந்தாற்போல் பூட்ஸ் சத்தம். இருட்டில் ஒன்றுமே தெரியவில்லை. தூரத்தில் வார்டர்களின் நீளமான 'பேரக்ஸ்'. வராந்தாவிலிருந்து கருப்பு ஷேட் போட்ட விளக்கின் ஒளி மாத்திரம் லேசாகத் தெரிகிறது. டோலக், ஜால்ரா சகிதம் பஜனை நடக்கிறது. வார்டர்களின் உரத்த குரல்கள் காதில் விழுகின்றன. 'விழுகின்றன' என்று சொன்னல் போதாது. கர்ண கடூரமான இடியாக இடிக்கிறது என்று சொல்ல வேண்டும். ஆனல் இந்தச் சப்தத்தையும் மேலோங்கி வருகிறது, 'டக் டக்' என்று சேர்ந்து நடந்து வரும் பூட்ஸ் சப்தம். வார்டர்கள் ஒரு தரம் கேட்டருகில் வருவதைப் பார்க்கிறேன். முக்கால் வாசிப் பேர் காலில் காபூலி சப்பல் அணிந்திருக்கிறர்கள். யுத்தத்தின் காரணமாக முழு பூட்ஸ் கிடைக்கவில்லை என்று நினைக்கிறேன்.

ஜெயில் கேட்டின் இரண்டாவது மாடியில் இருந்து ஒரு வார்டர் பதினென்று மணி ஆனதற்கு அடையாளமாகப் பெரிய மணியை அடிக்கிறன். முதலில் வேகமாக இரண்டு ஐந்து மணிகள், பிறகு தனியாக ஒரு மணி அடிக்கிறன். இங்கு வந்து இரண்டு மணி நேரம் கழிந்து விட்டது. பத்து மணி அடித்ததை நான் கவனிக்கவில்லை. வார்டர்கள் அணி கேட்டுக்கு முன்னல் வந்துவிட்டது. 'யார் இங்கே வந்திருக்கிறது?' என்ற பாவனையில் என்னைப் பார்க்கிறர்கள். ஒருவன் என்னிடம், ''நெருப்புப் பெட்டி இருக்கா?'' என்று கேட்கிறன். இல்லை என்று பதில் சொன்னேன். இதற்குள்ளேயே உள்ளே இருந்த வார்டர் கதவைத் திறந்து கொண்டு வெளியே வருகிறன். வார்டர்கள் சத்தம் போட்டுக் கொண்டே உள்ளே நுழைகிறர்கள். அவர்கள் பெயர் எல்லாம் எழுதப்படுகிறது.

சிரித்துக்கொண்டே சுபேதார் கேட்கிறன், ''என்ன, ஏதாவது கடத்தல் சாமான் எடுத்துக் கொண்டு வந்திருக்கீங்களா?'' என்று.

''ஹுஜூர், வேணும்னு ஸர்ச் பண்ணிக்கிங்க'' என்கிருன் ஒருவன்.

''ஆமாம், அப்புறம் வீட்டுக்குப் போய் முழுக வேண்டாமா? உங்களைத் தான் எனக்குத் தெரியுமே. திருட்டுச் சாமான்களைப் பாக்கட்டிலேயா வெச்சிருப்பீங்க?'' என்கிருன் சுபேதார்.

ரெஜிஸ்டரில் பெயர்கள் எழுதப்படுகின்றன. ஜெயிலின் உள் கேட், இரும்புக் கதவு திறந்திருக்கிறது. முழுதும் இல்லே, கேட்டின் நடுவில் இருந்த சிறிய கதவு மாத்திரம் திறக்கப்படுகிறது. ஜெயிலுக்குள்ளே ஒரே இருள். ஒரு வார்டர் தவிர, மற்ற வார்டர்கள் ஒருவர் பின் ஒருவ ராகப் பிரகாசமான வெளியிலிருந்து இருளடைந்த ஜெயிலுக்குள் புகுந்து மறைகிருர்கள். கேட் காவல்காரன் கதவைப் பூட்டுகிருன். அவன் கையிலிருக்கும் பிரம்மாண்டமான சாவிக் கொத்தில் நூற்றிற்கும் மேலாகப் பெரிய பெரிய சாவிகள் இருந்தன. பூட்டின பிறகு சரியாகப் பூட்டி இருக்கிறதா என்று இழுத்துப் பார்க்கிருன். இந்தச் செய்கை ஏதோ reflex action மாதிரி இருக்கிறதே ஒழிய யோசித்துச் செய்கிற காரியமாகப் படவில்லே. இப்பொழுது நான் இருக்கும் பக்கத்தில் என் எதிரே நிற்கிருன். கேட்டுக்கு வெளியில் இருக்கும் துப்பாக்கிக் காவல் காரன் மாற்றப்பட்டிருக்கிருன். இதற்கு முன்பு இருந்தவன் அதிகம் பேசாத கம்பீரமான பிரகிருதி. இப்பொழுது வந்தவன் இதற்கு நேர் விரோதம். உள்ளே இருக்கும் ஜமேதார் வெளியே இருக்கும் 'ஆயுத பாணி'யிடம் புகையிலே கேட்கிருன். பிறகு ஏதோ 'கிசுகிசு'வென்று பேசிக் கொண்டிருக்கிருர்கள். என்னேப் பற்றி என்று நினைக்கிறேன்.

புதிதாக வந்த காவல்காரர்களில் பின் தங்கிய ஒரே காவல்காரன் சுபேதாருடன் வம்பளந்து கொண்டிருக்கிருன். சுபேதார் ஒரு பெரிய நோட்டுப் புஸ்தகத்தால் தன்னை விசிறிக் கொண்டிருக்கிருன். ஒருவேளை இன்றைய வரவு செலவு, லாப நஷ்டங்களைப் பற்றிய பேச்சாக இருக்கும். இல்லே, ஜெயில் ஸ்டோர் ரூமிலிருந்து எதைக் கடத்திக் கொண்டு போகலாம் என்பதைப் பற்றி இருக்கலாம். இது ஒருவன் தனியாகச் செய்யக்கூடிய காரியம் அல்ல. ஜெயிலுக்குள்ளே நிலவும் நியமக் கட்டுப்பாடுகள் அப்படி. சங்கிலியில் உள்ள ஒவ்வொரு முடிச்சும் சேர்ந்து ஒத்துழைத்தாலன்றி, சாமான்களைத் திருடிக்கொண்டு போவது என்பது சாத்தியம் இல்லே. ''சாப்பிடு, ஆனல் கூடி, கலந்து சாப்பிடு.'' மிகவும் கீழே இருப்பவனைக்கூட அலட்சியப்படுத்துவது என்பது முடியாது.

கலெக்டர் ஆபிஸ் கூண்டுக் கடிகாரம் 'டங் டங்' என்று பதினென்று அடிக்கிறது. எப்போதுமே பார்த்திருக்கிறேன்—ஜெயில் கடிகாரங்கள் 15 நிமிஷம் ஃபாஸ்ட்!

ஜெயிலுக்கு முன்னால் சாலை. இதன் இருபுறமும் ஜெயிலில் வேலை செய்பவர்களின் குவாட்டர்ஸ்கள். திரைகள் இடப்பட்ட ஜன்னல் களுக்குப் பின்னால் தெளிவில்லாத ஓர் ஒளி தென்படுகிறது. ஓரிடத்தில் மட்டும் இந்த அறையிருட்டிலிருந்து திடீரென்று வெடித்துக் கொண்டு பிரகாசமான ஒளி கிளம்புகிறது. ஏதோ ஒரு குவாட்டர்ஸின் கதவு திறக்கப்படுகிறது போலும். மிகவும் மெல்லிய ஒளிரேகைகள். திரண்ட இருளில் ஒளிமயமான ஒரு சிறிய ட்ரபிஸியம். இந்த ட்ரபிஸியத்தின் நான்கு பக்கங்களில் கேட்டுக்கு அருகில் இருக்கும் பக்கந்தான் சிறியது.

அடிவானத்திலிருந்து கிளம்பி வரும் தண்டவாளங்கள் ஒன்றை ஒன்று நெருங்க முயற்சிப்பது போல் தோன்றும் அல்லவா? அதேபோல் இந்த ட்ரபீஸியத்தின் இரண்டு parallel lines ஒன்றை ஒன்று நெருங்க முயற்சி செய்வது போலிருக்கிறது. திறந்த கதவு வழியாக உருவம் வெளி வருகிறது. அதனுடைய ஸில்ஹூட் (Silhoutte) கதவு வரை தெரிகிறது. இரண்டாவது உருவம் கதவைச் சாத்துகிறது. இந்த ஜெயிலின் ஆழ்ந்த அந்தரங்கத்தை இவ்வீடுகளின் மெல்லிய ஒளிகள் அகற்றப் பார்க்கின்றனவா? வெளியே செல்ல முயற்சிக்கும் ஒளியைக் கட்டாயப் படுத்தித் தன் எல்லைக்குள் வைத்து அடைக்கும் யந்திர சாதனந்தான் கதவு போலும்.

ஓங்கி உயர்ந்த டாக்டர் பாபு கேட்டின் பக்கம் வருகிறார். மேல் உடம்பில் ஒரு பனியன், வெற்றிலையைக் குதப்பிக் கொண்டிருக்கிறார். வெற்றிலையை ரொம்ப நேரம் வாயில் அடக்கிக் கொண்டிருந்தால் நிஜமாகவே கான்ஸர் வருமா என்ன? தோளில் ஒரு காக்கி நிஜார், ஓரிரண்டு சொக்காய்கள். நடக்கும்போது காலை உதறிஉதறி முன்னாலே வைக்கிறார். 'ஆயுதபாணி' காவல்காரன் 'டக்'கென்று கால்களைச் சேர்த்து 'அட்டென்ஷன்' நிலையில் நிற்கிறான். இவர்களுடைய 'காபூலி' சப்பல் இன்னும் எத்தனை நாட்கள் வரும்? காவல்காரன் 'ஸல்யூட்' அடிக்கிறான். உள்ளிருக்கும் வார்டர் 'ஆதப்', மரியாதை செய்து கதவைத் திறக்கிறான். டாக்டர் பாபு வணக்கத்தைப் பெற்றுக் கொள் ளும் வகையில் தலையை ஆட்டி விட்டு உள்ளே நுழைகிறார். கேட் பூட்டப்படுகிறது. சுபேதார் ஸ்டூலில் உட்கார்ந்தபடியே டாக்டர் பாபுவைக் கேட்கிறான்: ''தோளில் துணிமணிகள் எதற்காக?'' என்று.

டாக்டர் பாபு சொல்கிறார்: ''எனக்கு ஆஸ்பத்திரியில்தான் வேலை இன்று! ஆனால் யாருக்குத் தெரியும்? விடியற்காலையிலேயே பெரிய டாக்டர், மாஜிஸ்ட்ரேட், கம்பௌண்டர் எல்லாரும் வருவார்கள். என்ன தேவைப்படுமோ? யார் கண்டா? அப்போ லுங்கியைக் கட்டிக் கொண்டு துரைமார்கள் முன்னால் வர முடியுமா? தூக்குப் போடும் சமயத்தில் பெரிய டாக்டருக்குத்தான் வேலை, எனக்கு இல்லை.

இருந்தாலும் எப்போ, என்ன அவசியம் ஏற்படும் என்று யார் சொல்ல முடியும்? ஓ, என்ன வெக்கை!''

டாக்டர் பேச்சில் செல்லம் கொடுத்து வளர்த்த குழந்தையின் பேச்சிலிருக்கும் சிணுங்கலும், கொஞ்சும் தொனியும் கேட்கும். சுபேதாரிடம் மிகவும் மரியாதையாகப் பேசுவது தெரிகிறது. அதற்குக் காரணம் சுபேதார் கோபித்துக் கொண்டால் ஜெயிலிலிருந்து கிடைக்கும் நல்ல கெட்டிப் பசும்பால் கிடைக்காமல், அவர் குழந்தைகள் நோயாளிகளாகி விடுவார்கள். ஆஸ்பத்திரி மாமிசம் ஒரு துண்டுகூட டாக்டர் வீட்டுக்குப் போகாது. கெரோசின் காசு கொடுத்துக் கடைத் தெருவிலே வாங்க வேண்டியிருக்கும். இது தவிர, தங்களுடைய சம்பளத்தில் ஒரு பகுதியாக மதிக்கும் பலவிதச் சாமான்களெல்லாம் நாளையிலிருந்தே நின்று விடும். ஆஸ்பத்திரியிலிருந்து கொசுவலை, படுக்கை, ஜமுக்காளம், பருத்தி, சர்க்கரை, பழைய அரிசி போன்று எத்தனை தேவைகள் இவர்களுக்கெல்லாம்!

விடியற்காலையில் வெளியில் காங் கமாண்ட் (Gang command) வேலையில் இருப்பவர்களில் ஒருவன், தினமும் கேட்டுக்கு வெளியே வரும் போது பூ சேகரித்து டாக்டரின் மனைவியின் பூஜைக்காகக் கொடுப்பது வழக்கம். பூக்களுடன் ஒரு விளாம்பழம், சில எலுமிச்சம்பழங்கள் கொடுப்பான். ஜெயிலில் வேலை செய்து, தம் வைத்திய ஞானத்தையே மறந்து விட்டார் டாக்டர்.

தினமும் அதே வழக்கமான வேலைகள்—கணக்கு, அட்டென்டன்ஸ், பைல், ஆபீஸ், எடை எடுத்தல், ரிடர்ன்ஸ் அனுப்புவது, பெரிய டாக்டர், துரைகளுடன் 'ரவுண்ட்ஸ்' போவது, ஆஸ்பத்திரியில் வேலை செய்யும் மேட்டிலிருந்து எல்லாரையும் குஷாமத் செய்வது—இவற்றுக்கெல்லாம் இடையில் வைத்தியம் செய்வதற்குப் போது ஏது?

நான் ஜெயிலில் இருந்தபோது ஒரு தடவை ஒரு டாக்டர் என்னை வைத்து ஒரு 'ரிடர்ன்' அனுப்பி வைத்தார். டாக்டரின் பெயர் நரேன் பாபு என்று நினைக்கிறேன். ரிடர்னிலிருந்த பல பத்திகளிடையே spleenic index என்று ஒன்று இருந்தது. இதை எப்படிக் கணிப்பது என்று எனக்குத் தெரியாது. டாக்டரைக் கேட்டேன். அவருக்கும் தெரியவில்லை. ''இப்போ காலியாக விட்டுவிடு. போன வருஷத்து ரிடர்ன்களைப் பார்த்து நான் ஒரு மாதிரி தோராயமாக எழுதிக் கொள்கிறேன்'' என்றார்.

ஜெயில் கேட்டிற்குள்ளே நுழைந்தவுடனே இடப் பக்கத்துச் சுவரில் ஒரு ப்ளாக் போர்ட்; ரெயில்வே ஸ்டேஷன்களில் 'டயம்டேபிள்' எழுதியிருக்கிற மாதிரி சதுரமான பலகை. இந்த ப்ளாக்போர்டில், இந்த ஜெயிலில் எத்தனை கைதிகளுக்கு இடம், இன்றைய தினம் எத்தனை கைதிகள் இருக்கிறார்கள், இவர்களில் 'அண்டர் ட்ரயல்' எவ்வளவு

பேர்—இத்யாதி எழுதியிருக்கும். இவற்றுக்கெல்லாம் கீழே அன்றைய தினம் டியூட்டியில் இருக்கும் டாக்டரின் பெயர்.

டாக்டர் ஒரு சாக்குக் கட்டியால் தம் பெயரைப் போர்டில் எழுதுகிறார். அதன் பக்கத்திலேயே இரவு ஒன்பது மணியிலிருந்து தம் டியூட்டி என்றும் எழுதுகிறார். பிறகு சிரித்துக்கொண்டே சுபேதாரைக் கேட்கிறார்: ''ஆபீஸ் ரூமில் ஃபான் இருக்கே, உங்களுக்கு இங்கே ஃபான் கிடையாதா?'' சுபேதார் துரை தம் நெற்றியில் கையை வைத்துக் கொண்டு, ''தலைவிதி'' என்று சொல்லுகிறார். அவர் நெற்றியின் நடுவே தடித்த நரம்பு இங்கேயிருந்தே தெரிகிறது.

ஜிதேனுக்குப் பூணூல் போட்டபோது பெரியம்மாவின் படுக்கையிலே படுத்துக் கொண்டபடியே ஓர் ஏழை நெசவாளியைப்பற்றி ஒரு கதை கேட்டது ஞாபகம் வருகிறது. இந்த நெசவாளியின் நெற்றியில் ராஜ லட்சணம் இருந்ததாம். அன்றைய தினத்திலிருந்து கொஞ்ச நாள் வரை எல்லாருடைய நெற்றியையும் கவனிப்பேன். ஒரு நாள் நெற்றியில் தோலே உரிந்து போகிற அளவுக்கு நானும் அண்ணாவும் எதையோ போட்டுத் தேய்த்துக் கொண்டோம். முகத்தில் 'ராஜ திலகம்' வர வேண்டும் என்ற முயற்சி. அம்மாவின் கோபத்தினாலும், பக்கத்து வீட்டுக்காரர்களின் கேலியினாலும், சில தினங்கள் வீட்டை விட்டே கிளம்ப முடியாமல் போயிற்று!

கதவு திறக்கிறது. டாக்டர் பாபு உள்ளே போகிறார். திறந்த கதவு வழியாக உள்ளே பல பூட்ஸ்கள் நடக்கும் சப்தம் கேட்கிறது. உள்ளிருந்து பல பேர் 'மார்ச்' பண்ணிக் கொண்டு கேட் பக்கம் வருகிறார்கள் என்று தோன்றுகிறது. மறுபடியும் கதவு மூடப்படுகிறது. ஆனால் சில விநாடிகளுக்குள்ளேயே கதவின் நடுவில் இருக்கும் குட்டிக் கதவை அரை இஞ்ச் அளவுக்கு மாத்திரம் திறந்து கொண்டு உள்ளே யாரோ ஒருவன் போஜ்பூரி பாஷையில் பெரிய கதவைத் திறக்குமாறு கேட்டுக் கொள்கிறான். பிறகு கதவின் பூட்டு திறக்கப் படுகிறது. கதவைத் திறப்பது, சாத்துவது இவை இரண்டிலிருந்தும் வார்டர்களுக்கு ஓய்வு என்பதே இல்லை. இதனால் அவர்கள் சோர்வு அடைவதும் இல்லை. இப்போதுதான் டாக்டர் பாபு உள்ளே போகும்போது கதவு திறக்கப்பட்டது. அப்போதே யாரோ வரும் சப்தம் காதில் விழுந்தது. கதவை இன்னும் சில விநாடிகளுக்குத் திறந்து வைத்திருக்கக் கூடாதா? மறுபடியும் திறந்து மூடும் கஷ்டத்தைத் தவிர்த்திருக்கலாமே? இயந்திரங்கள் மாதிரி இவர்கள் வேலை செய்கிறார்களே? இது ஜெயிலின் நியமனத்தினாலா அல்லது சொந்தப் பழக்கத்தினாலா? கதவைத் திறந்து மூடும் நியமங்கள் வேடிக்கையானவை. கேட்டிற்குள்ளே இரண்டு கதவுகள். ஒன்று

நான் உட்கார்ந்திருக்கும் இடத்துக்கு நேர் எதிரில். மற்ருென்று கேட்டிலிருந்து பத்துப் பதினைந்து அடி தூரத்தில். இந்த இரண்டு கதவுகளுக்கிடையே உள்ள 'பாஸேஜ்' ஒரு பரந்த இடம். ஜெயிலுக் குள்ளேயும் வெளியேயும் நடக்கும் காரியங்கள் சந்திக்கும் முச்சந்தி இந்த 'பாஸேஜ்'. நாலு மாட்டு வண்டிகள் செங்கல் எடுத்துக் கொண்டு ஜெயிலுக்குப் போகவேண்டும் என்று வைத்துக் கொள்வோம். வார்டர் முன் கதவைத் திறந்து முதல் இரண்டு வண்டிகளை உள்ளே விடுவான். பிறகு கதவை மூடுவான். பிறகு உள் கதவைத் திறந்து விட்டு இந்த இரண்டு வண்டிகளையும் உள்ளே விடுவான். ஒரே சமயத்தில் இரண்டு கதவுகளைத் திறந்து வைத்து நாலு வண்டிகளை யும் உள்ளே விட்டால் மகாபாரதம் அசுத்தமாகிவிடுமா என்ன?

உள்ளே வார்டர்கள் கொம்மாளம் அடிக்கிருர்கள். அவர்களில் ஒருவரிடம் இன்று 'கண்டெம்ட்' ஸெல்லில் யாருக்கு டியூட்டி என்று கேட்கட்டுமா? அவனிடமிருந்து அண்ணு என்ன செய்து கொண்டிருக் கிருன் என்று தெரிந்து கொள்ளலாம். வேண்டாம், அவன் என்ன நினைத்துக் கொள்வானே? ஒரு வேலை கேவலமாகப் பேசலாம். நான் சாட்சி சொன்ன விஷயம் அவனுக்குத் தெரிந்திருக்கலாம்.

எல்லாருக்கும் பாரக்ஸுக்குத் திரும்பிப் போக வேண்டும் என்கிற அவசரம். இரவு நேரம் அதிகமாகி விட்டது. சுபேதார் மேஜையின் கீழ் வழியாக அவன் கையில் ஏதோ கொடுக்கிருன் ஒரு வார்டர், யாரும் இதைப் பார்த்துவிடக் கூடாது என்ற கவலையுடன். ஒவ்வொரு வராக எல்லாரும் வெளியில் வருகிருர்கள். சிவப்பாக ஓர் இளம் வார்டரை மட்டும் கூப்பிட்டுச் சோதனை போடுகிருன் சுபேதார். அவனுடைய தலைப்பாகையை எடுக்கச் சொல்கிருன். அவனது இடுப்பு, நிஜார் பாக்கெட் எல்லாம் சோதனை செய்கிருன். ஒன்றும் கிடைக்க வில்லை. வார்டர் வெளியே வரும்போது கோபத்தில் பொரிந்து தள்ளுகிருன்: ''என் பேரில் மாத்திரம் இத்தனை ஆக்ரோஷம். நான் ஹெட் வார்டர் கட்சியைச் சார்ந்தவன் என்று நினைத்துக் கொண்டி ருக்கிருன், இந்தச் சுபேதார். அவர்களுக்குள் ஏதோ சண்டை என்ருல் நடுவிலே எங்களைப் பிடித்துக் கொண்டு இரண்டு பக்கமும் இழுக்கி ருர்கள். இரு, இரு. ஜெயிலர் கிட்டச் சொல்லி இவனைப் பழி வாங் காமல் விடுகிறேனு பார். இதனுல் வேலை போய் விட்டால் கூடப் பரவாயில்லை.''

பிறகு கொச்சையாக அவனைத் திட்டிவிட்டுச் சொல்கிருன்; ''என் வேலையைப் பற்றி மட்டும் ஏதாவது சொல்லட்டும்......''

பஜனைப் பாட்டில் ஒரே மாதிரியான சப்தம் காதில் விழுகிறது. ஒரு வார்த்தை கூடப் புரியவில்லை. நடு நடுவே ''ராமா ஹோ ராமா''

என்ற வார்த்தைகள் மாத்திரம் உரக்கக் கேட்கின்றன. சிறுவனுக இருந்தபோது படித்த ஒரு கவிதையில் ஒரு வரி வரும். ''ஓ தர்வான்— ராமா ஓ...''—கவிதை முழுதும் இப்பொழுது ஞாபகம் இல்லை. முதல் வரி மட்டும் 'பொழுது புலர்ந்தது! எழுந்திரு குழந்தாய்' என்கிற மாதிரி என்று நினைக்கிறேன்.

ஜிதேன் அண்ணு—பெரியம்மாவின் பெரிய பிள்ளை—அவள் பெட்டியி லிருந்து பணம் திருடி, பல கதைப் புஸ்தகங்கள் வாங்கிக் கொண்டு வருவான். கல்கத்தாவிலிருந்து பார்ஸல் வந்தபோது விஷயம் தெரிந்து போயிற்று. ஜிதேன் அண்ணு வீட்டை விட்டு எங்கள் ஆசிரமத்தில் இரண்டு நாள் தங்கியிருந்தான். பெரியப்பா இனி அவனை வீட்டுக்குள் நுழைய விடமாட்டேன் என்று சொன்னுர். இந்தப் பார்ஸலில் வந்த புஸ்தகங்களிலிருந்து இரண்டை அண்ணன், தம்பி எங்கள் இருவருக்கும் கொடுத்தார். அதில் ஒன்றில் தான் இந்தக் கவிதை இருந்தது. ஜீதேன் அண்ணு பணம் திருடி வரவழைத்த பார்ஸல்களுக்குக் கணக்கேயில்லை. பாட்மிண்டன் ஸெட், காரம் போர்ட், புட்பால் பம்ப்—இன்னும் எவ்வளவோ? ஏதோ ஒரு விளையாட்டில் சில தினங்களுக்கு அவனுக்கு உற்சாகம் இருக்கும். ஆனுல் ஒரு விளையாட்டிலாவது அவன் பிகாசித்த தில்லை. அதே ஜிதேன் இன்று எவ்வளவு கம்பீரமான ஆகிருதி உடைய மனிதனுகி விட்டான்! காண்ட்ராக்ட் பிஸினஸில் எத்தனை பணம் பண்ணுகிருன்? எங்களையெல்லாம், அதாவது அரசியலில் உழலும் ஏழை மக்களை, உதாசீனம் கலந்த கருணையுடன் பார்க்கிருன். யார் அவனுக்குப் புரிய வைக்க முடியும், நாங்கள் முயற்சி செய்தால் அவனை விட அதிகமாகப் பணம் சம்பாதிக்க முடியும் என்று.

உள் கேட்டின் சின்னக் கதவு கொஞ்சம் திறக்கப்படுகிறது. யாரோ வார்டரிடம் என்னவோ சொல்கிருன். இருட்டில் அவன் முகம் கொஞ்சங்கூடத் தெரியவில்லை. அலிபாபாவின் குகை, 'ஓபன் ஸீஸமே!' அலிபாபாவின் குகையில் மூட்டை மூட்டையாகப் பணத்தைத் தவிர வேறு என்ன இருந்தது? ஆனுல் இந்தக் குகையின் கதவைத் திறந்தால், குற்றுயிராக வாழும் எத்தனை எத்தனை மக்களை உயிர்ப்பிக்க முடியும்.

ஜெயிலெல்லாம் சுவர் அல்ல. உள்ளே அகன்ற காலியிடம் உண்டு. திறந்த வெளியில் வீசும் காற்றைச் சுவாசிக்க முடியும். சாதாரண வீட்டின் தாழ்வாரத்தை விட ஜெயிலின் தாழ்வாரம் மிகவும் பெரியது. ஆனுல் என்ன பிரயோஜனம்? ஜெயிலுக்குள்ளே பூந்தோட்டம், இரண்டு பக்கமும் அடர்ந்து வளர்ந்த வேப்பமரங்களுடன் கூடிய அவனியூ, நிழல் தரும் விளா மரங்கள், ஆல மரங்கள். இவையெல்லா

மிருந்தும் என்ன பயன்? சூழ்நிலை என்னவோ துன்பம் நிறைந்தது, உயிரற்றது, கடூரமானது, அழுகிப் போனது, அழுக்கம் நிறைந்தது.

ஆலிவர் லாட்ஜ், லெட்பீட்டர், கானன் டாயில் இவர்கள் எல்லாரும் psychic phenomena என்ற மனோ விஞ்ஞான நிகழ்ச்சிகளைப் பற்றிச் சரியாகத்தான் சொல்லியிருக்கிறார்களோ? ஆழ்ந்து சிந்திக்கும்போதோ அல்லது கிளர்ச்சியுற்று சஞ்சலப்படும் நேரங்களிலோ நமது சிந்தனைகளின், பாவங்களின் உருவங்களை நாம் இருக்கும் இடங்களில் விட்டு விடுகிறோமோ? எண்ணங்களை வெங்காயத்தைப் போல் ஒவ்வொரு தோலாக—சிலது மெல்லியது, சிலது தடித்தது,– உரித்துக் கீழே போட்டுக் கொண்டே போக முடியுமா என்ன? இதன் காரணமாகத், தானோ என்னவோ நாம் ஒரு மிகப் பழைய வீட்டுக்குள் நுழையும் போது நமது உடல் படபடவென்று அடித்துக் கொள்கிறது.

உள்ளேயிருந்து வெளி வந்தான் ஆஸ்பத்திரிக் கம்பவுண்டர். மனுஷன் குஷால் பேர்வழி, சுகபுருஷன். கையில் ஒரு ஹரிக்கேன் விளக்கு. பாம்பு பயமோ? ஊஹூம்! உண்மையில் ஜெயிலுக்குள் நுழையும் போது விளக்கில் எண்ணெயே இல்லாமல் காலி. வீட்டுக்குத் திரும்பும் போது இடமுள்ள வரை கெரோஸின் நிரப்பிக்கொண்டு போகிறான். இது எல்லாருக்கும் புரிந்ததுதான். ஆனால் ஒருவரும் ஒன்றும் சொல்வதில்லை. இந்த மாதிரி சிறிய அதிகப்படிகள் தங்களுடைய சம்பளத்தின் ஒரு பங்கு என்றே இவர்கள் கருதுகிறார்கள். சம்பளம் என்னவோ 25 ரூபாய் இருக்கலாம். இதில் எப்படி இத்தனை துணிமணி, செருப்பு, சொக்காய் எல்லாம் வாங்க முடியும்? தவிர, டாக்டரோடு வேறு இந்த வரும்படியைப் பங்கு போட்டுக் கொள்ள வேண்டும்.

''என்ன, கம்பவுண்டர் பாபுவுக்கு இன்று ரொம்ப நேரமாகிவிட்டது போலிருக்கே?'' சுபேதார் அநுதாபம் நிறைந்த குரலுடன் கேட்கிறான்.

''அதை ஏன் கேட்கிறாய் சுபேதார் ஸாஹேப்! இந்த ஜெயில் உத்தியோகம் இருக்கே, அது சாணி அள்ளும் உத்தியோகம். ஒரு நிமிஷம் ஓய்வு உண்டா? விடியற்காலையிலே வந்தேன். இப்போ ராத்திரி மணி 12. மத்தியானம் வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டு விட்டு வந்தேன். லிங்கேச்வர் பாபு ஒன்பது மணிக்கு டியூட்டிக்கு வரவேண்டியது. இப்போதான் 12 மணிக்கு மெதுவாச் சாப்பிட்டு முடித்து, வெத்தலை போட்டுக் கொண்டு வருகிறார்.''

பிறகு ஒரு கொச்சையான சாபம். தன் தலைவிதி மேலா, லிங்கேச்வர் பாபுவின் மேலா அல்லது தம் சட்டைக்குள் புகுந்துவிட்ட பூச்சியின் மேலா என்று புரியவில்லை. சற்று நேரம் முன்னால் உள்ளே சென்ற டாக்டரின் பெயர் லிங்கேச்வர் பாபு என்பது மட்டும் புரிந்தது.

சட்டையிலிருந்த பூச்சியை வெளியில் கொண்டு வந்து விட்டான் கம்பவுண்டர். முகத்தைப் பார்த்தால் சிரிப்பு வருகிறது.

கம்பவுண்டர் பாபு தன் சுக துக்கங்களை விமரிசித்துக் கொண்டே இருக்கிறன். ''மித்திர் ஸாஹேப் நைட் டியூட்டியில் இருந்தால் சௌக்கியம். வந்தால் ஒன்பது மணிக்கு வருவார். இல்லாவிட்டால் வரவேமாட்டார்.''

இருவரும் கண்களாலே பேசிக் கொண்டு சிரிக்கின்றனர். மறுபடியும் வம்புப் பேச்சு ஆரம்பமாகிறது.

ஜெயிலர் துரைக்கு எல்லாம் தெரியும். எவ்வளவு நாட்கள் ராத்திரி ரவுண்டில் டாக்டர் அறைக்குள் நுழைந்து அது காலியாக இருப்பதைப் பார்த்திருக்கிறர். கண்ணுல் பார்க்காவிட்டால் கூட ஜெயிலில் நடக்கும் விஷயங்கள் எல்லாம் அவருக்குத் தெரியும். இவருக்கு முன்னுல் இருந்த ஜெயிலர் மித்திரை ஒரு தடவை பிடித்து விட்டார். டாக்டர் மித்திர் என்ன பதில் சொன்ஞர் தெரியுமா? ''என்ன பண்ணுவது? டாக்டர் டியூட்டியில் இருக்கும்போது தூங்குவதற்கான அறைக்குக் கதவு இல்லை. ராத்திரி வேளையில் யாராவது வந்து அடித்துப் போட்டுவிட்டால் என்ன செய்வது என்ற பயத்தில் இங்கே தூங்குவ தில்லை'' என்ருர். அந்த ஜெயிலர் கெட்டிக்கார மனுஷன். ''ராத்திரி யில் தான் கைதிகளை எல்லாம் பூட்டிப் போட்டிருக்கிறர்களே, எப்படி உன்னை வந்து அடிப்பார்கள்?'' என்று கேட்டார். ''இப்பொழு தெல்லாம் மேட்டுகளுக்கு வார்டர் டியூட்டி கொடுத்திருக்கிறது. அவர்கள் பூட்டப்படுவதில்லையே'' என்ருர் டாக்டர்.

இது நடந்த சில நாட்களுக்கு முன்புதான் ஜெயிலில் ஒரு கலகம் நடந்திருந்தது. அதனுல் ஜெயிலர் மேலும் ஒன்றும் அதிகமாகச் சொல்ல முடியவில்லை. ''ஆனுல் இப்போதோ?—முஸர்பூர் ஜெயிலி லிருந்து சில அரசியல் கைதிகள் தப்பி ஓடிச் சென்றதிலிருந்து மேட்டு களை வார்டர் டியூட்டிக்குப் போடுவதில்லை. இவர்கள் அந்தக் கைதி களுக்கு உதவியிருப்பார்கள் என்ற சந்தேகம். ஆகவே இந்தச் சாக்கு இப்போது செல்லாது. புதிதாக ஒன்று கண்டுபிடிக்க வேண்டும். ''போகட்டும் விட்டுத் தள்ளு, சிகரெட் ஒண்ணு கொடு பார்ப்போம். ஒரே அசதி, எலும்பெல்லாம் ஒரே வலி.''

சுபேதார் ஒரு சிகரெட்டை எடுத்துக் கொடுக்கிறன். கம்பவுண்டர் அதைப் பற்ற வைத்துக் கொள்கிறன். குரலைத் தாழ்த்திக் கொண்டு மேலும் அக்கப்போர் நடக்கிறது. கொஞ்ச நேரம் கழித்து, கம்பவுண்டர் விளக்கின் திரியைக் கொஞ்சம் உயர்த்திக் கொண்டு விளக்கைக் கையில் எடுத்துக் கொள்கிறன். பாதி பிடித்த சிகரெட்டை இன்னும் ஓர் 'இழுப்பு' இழுத்து விட்டுச் சுபேதார் கையில் கொடுக்

கிறுன். கேட்டுக்கு வெளியே வரும்போது, ''நீ அதைப்பற்றி யோசிக்காதே. நானே கொடுத்து விடுகிறேன்'' என்கிறுர். இத்தனை நேரம் எதைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர்? எதைக் கொடுப்பான்? இன்ஜெக்ஷனு? சுபேதாருக்கும் கம்பவுண்டருக்கும் இடையே நல்ல 'அந்தரங்கம்' இருக்கிறது என்பது தெரிகிறது. கேட்டுக்கு வெளியில் வந்த பிறகு, கம்பவுண்டர் சுபேதாரைக் கேட்கிறுன்: ''இன்று இங்கேயா தூங்கப் போகிறுய்?''

''ஆமாம், ஆபீஸ் ரூம்லே படுக்கை விரித்திருக்கிறேன், கிளம்ப வேண்டியது தான்.''

கம்பவுண்டரின் பின் தலைமயிர்தான் எவ்வளவு அடர்த்தி! முக்கால் வாசி நரை. எத்தனை கைதிகள் தூக்கிலிடப்படுவதைப் பார்த்திருக்கிறுன்! விடியற்காலையில் நடக்க இருக்கும் தூக்கைப் பற்றி அவன் மனசில் ஒன்றும் பட்டிருக்காது. எல்லாக் கம்பவுண்டர்களின் பின் தலைமயிரும் இவ்வளவு அடர்த்தியாகவா இருக்கும்?

அந்த ஹரிஷ் கம்பவுண்டர். அவன் தலையில் அரைகுறையாக வெட்டி விடப்பட்ட மயிர். மாதவ் பாபுவின் குடும்பத்துக்காக மருந்து கலந்து கொண்டிருந்தான். மாதவ் பாபு ஒரு மாதிரி மனுஷர். மேலும் சந்தேகப் பேர்வழி. பின்னுலேயே நின்று கொண்டிருந்தார், அளவு சரியாக இருக்கிறதா இல்லையா என்று பார்ப்பதற்காக. கொஞ்ச நேரம் கழித்துப் பொறுமையிழந்து கோபத்துடன் ஹரிஷ் பாபுவின் தலைமயிரைச் சேர்த்துக் கையில் பிடித்துக் கொண்டு தலையை ஆட்டியபடி, ''தலைமயிரைச் சின்னதாக வெட்டிக்கக் கூடாதா? பின்னுல் இருந்து நீ மருந்து கலக்கிறது ஒன்றுமே தெரியமாட்டேன் என்கிறது'' என்கிறுர். இந்த விஷயத்தை நான் அண்ணுவிடமும் அம்மாவிடமும் சொன்னேன். எல்லாரும் எப்படிச் சிரித்தோம்! அம்மா தன் சிரிப்பை அடக்க முயன்று பார்த்து, விட்டுவிட்டாள். ''ஏண்டா, உன் கண்ணில் படாதது ஒண்ணுமே இல்லியா?'' என்றுள். அம்மா சிரித்தாள் என்றுல் கண்ணிலே நீர் வந்துவிடும். அண்ணுவோ சப்தமே இல்லாமல் சிரிப்பான். இடக் கன்னத்தில் ஒரு குழி விழும். இரண்டு கன்னத்திலும் அல்ல. ஒரு கன்னத்தில் மட்டுந்தான். இது ஓர் அதிசயம். அவன் சிரிக்கும்போது கண்கள் பாதி மூடியிருக்கும். அண்ணுவின் சிரிப்பு என் கண் முன்னே நிழலாடுகிறது.

ஹரிக்கேன் விளக்கின் ஒளி கொஞ்சம் கொஞ்சமாகத் தொலைவில் சென்று கொண்டிருக்கிறது. இப்படியும் அப்படியும் ஆடிக்கொண்டே இருக்கிறது. கம்பவுண்டர் பாபுவின் விளக்கு. இந்தக் கம்பவுண்டர் இப்படிக் கொரில்லா மாதிரி ஏன் ஆடிக்கொண்டே போகிறுன்? கிட்ட இருந்தபோது இதை நான் கவனிக்கவில்லை. இவ்வளவு தூரம் ஏன்

போகிறுன்? அரசுக் குடியிருப்பு கிடைக்கவில்லை போலிருக்கு. தூரத்தில், ஹரிக்கேன் விளக்கின் ஒளிக்கும், சாதாரண அகல் விளக்கின் ஒளிக்கும் ஒரு வித்தியாசமும் தெரிவதில்லை.

ராணிபாத்ராவில் ஒரு குடியானவன் கேஸைப்பற்றி விசாரிப்பதற்காக ஒரு தடவை போய்விட்டுத் திரும்பும்போது அண்ணு, நான், சகாதேவ் மூவரும் ஒரே அசதியாக இருந்தோம். இருட்டு. இரவில் தூரத்தில் மினுக் மினுக்கென்று பிரகாசிக்கும் ஒரு சிறிய ஒளி தென்பட்டது. அவ்விடத்திலேயே இரவைக் கழிப்பதென்று முடிவு செய்தோம். மின்மினிப்பூச்சியின் ஒளியைப்போல் மிருதுவான வெளிச்சம். நெருங்கிப் போய்ப் பார்த்ததில் அது ஒரு Dietz விளக்கு என்று தெரிந்தது. மிகவும் பழையது. துருப் பிடித்துப் போனது.

'மஹாத்மாவின்' மனிதர்கள் என்பதற்காக எங்கள் இருவருக்கும் கட்டில்கள், கம்பளி, தலையணை இத்யாதி ஏற்பாடு செய்யப்பட்டன. 'வாலன்டியர்' என்ற முறையில் சகாதேவுக்கு ஒரு பாய் கொடுக்கப்பட்டது. கட்டிலை வீட்டுக்கு வெளியே உள்ள ஒரு ஷெட்டில் கொண்டு வந்து போட்டார்கள். ஷெட்டைச் சுற்றிச் சுவர், வேலி என்று ஒன்றுமே இல்லை. இந்தப் பிரதேசத்தில் இதற்கு 'ஹவா துங்கி' என்று சொல்லுவார்கள்.

கம்பளியின் மேலே இருந்த அழுக்கையும், எண்ணெய் ஊறிய தலையணையையும் பார்த்தவுடனேயே என் உடம்பு உதறிற்று. எத்தனை வியாதிகளின் கிருமிகள் இதன் நடுவில் இருக்கின்றனவோ? நான் கட்டிலிலிருந்து இவற்றை நீக்கிவிட்டுக் கம்பளி மேலேயே படுத்துக் கொண்டேன். கம்பளியிலே இருக்கிற அழுக்கு கண்ணுக்குத் தெரியாது என்பதில் ஒரு திருப்தி.

எங்களுக்குச் சாப்பிடுவதற்குப் பொரியும், தயிரும் கொடுத்த மனிதனின் கண்களிலிருந்த ரணத்திலிருந்து தண்ணீர் வடிந்து கொண்டே இருநதது. அண்ணு இந்தப் பொரியையும், தயிரையும் சாப்பிட்டுவிட்டு ஒருவிதக் கவலையும் இல்லாமல் இந்தப் படுக்கையில் படுத்துக்கொண்டு தூங்கினுன்! விதியின் விளையாட்டில் அண்ணுவுக்கு எப்போதுமே ஓரளவு நம்பிக்கை உண்டு என்று எனக்குத் தெரியும். தான் இருக்கும் சூழ்நிலையில் ஒன்றிவிடும் அண்ணுவின் தன்மை ஆச்சரியமானது. இதைப்பற்றிக் கேட்டால், அண்ணு சொல்லுவான்: ''மூல சித்தாந்தங்கள், கொள்கைகளுக்கு ஒருவித ஹானியும் இல்லையென்ருல் மற்றவர்களுடன் தோழமையுடன் இருப்பதில் என்ன கஷ்டம்?''

தன் ஆத்மாவின் அந்தரங்கத்திலேயே திளைக்கும் அவன் மனசு, எந்த விதமான நிலையிலும் தன் எண்ணங்களின் நடுவிலேயே இருக்கப் பழகிக் கொண்டு விட்டது. எல்லாப் பிரச்னைகளையும் தானே சிந்தித்துத் தீர்வு

காண்பான். எல்லா விஷயங்களையும் மயிரிழையைப் பிளப்பது போன்ற தன்மையுடன் அலசும். சூட்சுமமான எந்த விஷயத்திலும் என்னைவிடத் தெளிவாகச் சிந்திக்கக் கூடியவன் அண்ணு. ஆனல் அன்ருட வாழ்க்கையில், தனி மனிதன் என்கிற முறையில் அவனுடைய நடத்தை அவனுடைய சித்தாந்தங்களுக்கு முரணுக இயங்கும். என் உடம்பெல்லாம் நெருப்பாகப் பற்றி எரியவைக்கும் ஒரு விஷயத்தை அண்ணு மிருதுவாகச் சிரித்துவிட்டு ஒரே வார்த்தையில் ஒதுக்கி விடுவான். ஆலகாலத்தை விழுங்கும் நீலகண்டன் அண்ணு. அவனது தைரியத்துக்கு எல்லையே கிடையாது. செய்யவேண்டிய எந்தக் காரியத்தையும் பயத்தின் காரணமாகச் செய்யாமல் அவன் தள்ளிவிட்டான் என்று இன்றுவரை நான் அவனிடம் பார்த்ததில்லை. ஆனல் அவனுடைய ரத்தம் ஒரு நாளும் கொதிப்பதில்லை. புத்தி தீட்சண்யம், அநுபூதியின் தீவிரம் இரண்டும் இருந்தும் அவனது உத்வேகங்களில் ஆவேசம் இல்லை. பொங்கி எழும் பிராண சக்தியின் புயலை அவனிடம் கண்டதில்லை. ஒவ்வோர் அடியும் அளந்து வைத்தவை. ஏதோ வழுக்கல் நிறைந்த பாதையில் ஜாக்கிரதையுடன் நடக்கும் ஒரு பிராணியைப் போல்...

'த்ரீலெக்ட்' ரேஸில் அண்ணு எவ்வளவு விறைப்பாகத் தன் காலை வைத்துக்கொள்வான்! குமார் பொஹேப் மேளாவில் நடக்கும் சிறுவர்கள் ஸ்போர்ட்ஸில் நானும் அண்ணுவும் ஒரு தடவை 'த்ரீ லெக்ட் ரேஸில் பார்ட்னர்ஸ்'. நாங்கள் ரொம்பப் பின்னல் தங்கிவிட்டோம். ஜெயிக்க முடியவில்லை. 'அயிட்டம்' முடிந்தவுடன் கோபத்திலும், துக்கத்திலும் அண்ணுவிடம் சொன்னேன்; ''உன்னுடன் சேர்ந்து ஓடுவது கழுத்தில் ஒரு பெரிய ட்ரம்மைக் கட்டிக்கொண்டு ஓடுவது மாதிரி'' என்று.

''நான் தான் முன்னலேயே சொன்னேனே, நீ எல்லா ஸ்போர்ட்ஸிலும் முதல். அநாவசியமாய் என்னைக் கட்டாயப்படுத்தி இழுத்துக் கொண்டாய். பான்னுவின் கூட நீ ஓடியிருக்கலாம்.'' அண்ணு இவ்வளவு வெட்கப்பட்டு நான் பார்த்ததேயில்லை.

இருபத்தோர் ஆண்டுக்குமுன் நடந்த சம்பவம். அதாவது, 1922-ஆம் வருஷத்திய நிகழ்ச்சி. வேர்வையில் நனைந்து, ஓடிக் களைத்த முகம். இங்கும் அங்குமாக அலைபாயும் புழுதிப் படிந்த மயிர்—மூச்சு வாங்க தன் வேஷ்டியால் கால்களின்மேல் படிந்திருக்கும் புழுதியைத் துடைத்துக்கொண்டு நிற்கிருன். எனக்கு மிகவும் துக்கம். வேறு பல ரேஸ்களில் நான் ஜெயித்த பரிசுகளை அம்மாவிடம் காட்டவேண்டும் என்ற ஆனந்தம் இல்லை. அண்ணு தான் காட்டினன். அடுத்த நாள் எல்லா நண்பர்களுக்கும் காட்டினன். அம்மாவிடம் சொன்னன்: ''அம்மா, நீலுவைச் சொல்லச் சொல்லி நீ கேட்கணும், ரோஜாரியோ

துரை செய்த அமர்க்களத்தை! என்னாலே அதைச் சரியாச் சொல்லத் தெரியாது.'' என்னுடைய மனோநிலை அண்ணாவுக்கு நன்றாகப் புரிந்திருக்கிறது என்பதை உணர்ந்தேன். அவனுடைய தீட்சண்யமான அன்பு கலந்த கண்கள் மற்றவர் மனத்தின் அந்தரங்கமான மூலை முடுக்குகளுக்கெல்லாம் ஊடுருவிச் செல்லும் தன்மையுடையது. என்னுடைய துக்கத்தை லேசாக்க முயற்சி செய்கிறான். என் சார்பிலிருந்து அவனுடன் முரட்டுத்தனமாக நடந்துகொண்டதற்குப் பிராயச்சித்தமாக ஏதாவது செய்திருக்க வேண்டும்.

ரோஜாரியோ துரையின் கதையை அம்மாவிடம் சொல்ல வேண்டியதாயிற்று. ரோஜாரியோ, குமார் சாஹேப்பின் மானேஜர். ஸ்போர்ட்ஸ் அவருடைய மேல் பார்வையில்தான் நடக்கும். நூறு கஜ ரேஸில் கோகன்தாவை எவரும் தோற்கடிக்க முடியாது. அவனுடைய நிஜப் பெயர் கிரிங்கரி ரஞ்சன் தத்தா. அவன் முதலாவது, நான் இரண்டாவது. சிறுவர்களுக்கான ரேஸ்களில் சட்டைகளில் நம்பர் எழுதி ஒட்டும் வழக்கம் இல்லை. பந்தயம் முடிந்த இடத்தில் ரோஜாரியோ துரை ஜெயித்தவர்கள் பெயர்களைக் கேட்டு ஒரு காகிதத்தில் எழுதிக்கொள்வார். கோகன்தாவின் பெயரைக் கேட்டார். சுற்றி ஒரே கூட்டம், இரைச்சல். ஒவ்வொரு ரேஸ் முடியும்போதும் இப்படித்தான். கோகன்தா தன் பெயரைச் சொன்னான். துரை இரண்டு, மூன்று தடவைகள் திருப்பிக் கேட்டும் கூடப் பெயரைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. அடுத்ததாக என் பெயரை எழுதிக்கொண்டார். பரிசு கொடுத்தபோது பார்த்தால் எனக்கு முதல் பரிசு! கோகன்தாவின் பெயரே இல்லை. அவனுக்குக் கண்ணில் ஒரே ஜலம். ஜிதேன்தா அவனைக் கேலி பண்ணினான். ''கிரிங்கரி ரஞ்சன் தத்தா வெல்லாம் துரையாலே எழுதிக்கொள்ள முடியுமா என்ன? அப்பா—அம்மா கொடுத்த பெயரால் பரிசு கிடைக்காமல் போய் விட்டது. நாளைக்குக் காலையில் குமார் ஸாஹேப்பிடம் போய்ச் சொல்'' என்றான்.

கதையைக் கேட்டு அம்மா சிரிப்பாள் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் கதையின் பலன் அதற்கு நேர் மாறாகப் போய்விட்டது. எனக்கு வந்த பரிசான டீ பாட்டை மறுநாளே கோகன்தாவிடம் கொடுக்கும்படி ஆயிற்று. என்னுடைய இரண்டாவது பரிசின் வாயிலும் மண்! இப்பொழுது கூட ரொஜாரியோ துரையைப் பார்க்கும் போதெல்லாம் எனக்குத் துக்கமாக வரும்.

இதற்குப் பிறகு ஒரு தடவைகூட என்னுடன் பார்ட்னராக இருந்து விளையாட அண்ணா ஒத்துக்கொள்வதில்லை. ஒன்று இல்லாவிட்டால் மற்றொரு சாக்கு சொல்லித் தப்பித்துக்கொள்வான். அண்ணாவுக்கு

விளையாட்டில் என்றுமே அதிக ஊக்கம் கிடையாது. பாட்மிண்டன் தவிர எந்த விளையாட்டும் சரியாக ஆடத் தெரியாது. ஆனால் இதிலும் ஒரு மாட்ச்கூட விளையாடியது கிடையாது. அளவற்ற அன்பு, பரிவு, மென்மை இவற்றுக்கெல்லாம் இடையே எல்லையற்ற திடமான மனோ பலம். தீர்மானமாக ஒரு நிலைக்குச் சென்று விட்டான் என்றால், அவனை அசைக்க முடியாது. எவ்வளவு நெருக்கம் இருந்தாலும், கொஞ்சம் தள்ளி நின்று பற்றற்ற மனிதனாய், சுதந்தர புருஷனாய்க் காட்சியளிப் பான். அன்று ஏற்பட்ட அந்தக் காயத்தை இந்த இருபத்தோர் ஆண்டு களில் பலதடவை முயற்சி செய்தும் என்னால் மறக்கடிக்க முடியவில்லை.

'பாரக்'கில் பஜனை இன்னமும் நடந்த கொண்டிருக்கிறது. சத்தத்தி லிருந்து பஜனை களைகட்டிவிட்டது என்று தெரிகிறது. இப்பொழுது 'சீதா ராமனின்' பெயர் வரவில்லை. நீட்டி இழுத்த ஒரே சுரத்தில் 'நா—ரா—ஆ—யண—ஆ' என்ற வார்த்தைதான் காதில் விழுகிறது. இந்த மாதிரி நாம கீர்த்தனையுடன் சாதாரணமாக இவர்களுடைய பஜனை முடிந்து விடுவது வழக்கம். தன்னுடைய வீட்டுக்கு இவ்வளவு பக்கத்தில் இருந்துவரும் இந்தச் சப்தத்தைச் சூப்பிரண்ட் துரை எப்படிச் சகித்துக் கொள்கிறார்? ஒரு வேளை வார்டர்களைப் பகைத்துக்கொள்ள விரும்பவில்லையோ என்னவோ? அவர்களுடைய முழுமனதான ஒத்துழைப்பு இல்லாமல் ஜெயிலில் கட்டுப்பாட்டை அமல் செய்ய முடியாது.

எப்போதோ நடந்த சம்பவம். நீதிபதி ஸ்பீலர், ஒரு நோயாளி. எப்பொழுதும் எரிந்து விழும் சுபாவம். அரைப்பைத்தியம் என்றே சொல்லலாம். தினமும் உடற்பயிற்சி என்கிற முறையில் கட்டை பிளப்பார். ஜெர்மானிய அரசர் கைஸருக்குக் கூட இப்படி ஒரு வழக்கமாம். நீதிபதிக்குக் கட்டைத் தேடிக் கொடுப்பதற்காக நஸீர் ஃபைஸல்மியா பட்ட பாடு! வக்கீல் பஜ்ரங் பிரஸாத் கல்யாணத்தின் போது இந்த நீதிபதி ஸ்பீலர் செய்த அமர்க்களம்!

இரவு கல்யாண சங்கீதம் நன்றாகக் களைகட்டி நடந்தது. ஸ்பீலருக்குத் திடீரென்று தோன்றிற்று, இவர்கள் எல்லாரும் தம் நிம்மதியைக் குலைக்கிறார்கள் என்று. உடனே ஒரு கையில் லாட்டி, மற்றொரு கையில் 'புல்ஸ்ஐ (Bull-eye) லாண்டர்ன்' எடுத்துக்கொண்டு பஜ்ரங்க பாபுவின் வீட்டுக்கு வந்து விட்டார். ஒருவரிடமும் ஒரு வார்த்தை கூடச் சொல்லாமல் டோலக் வாத்தியத்தின் தோலில் லாட்டியை நுழைத்து ஓட்டை ஆக்கிவிட்டுப் போய்விட்டார். மறுநாள் பஜ்ரங் பாபு அவர் பேரில் கேஸ் போட்டார். சில தினங்களுக்குப் பிறகு கேஸ் 'ராஜி' செய்யப்பட்டது. கோபம் சற்றுத் தணிந்தவுடன் வக்கீல் பாபுவுக்கு மனத்தில் பட்டது: வக்கீல் தொழிலால் வயிற்றைக் கழுவும்

ஒருவன் நீதிபதியுடன் சண்டை போட்டுக் சொண்டால் பிழைப்பது எப்படி? நெருங்கிய பந்துக்கள் முன்னிலையில் நடந்த அவமானம் நடந்துபோய் விட்டது. விஷயத்தை வளர்த்து என்ன பிரயோஜனம்?

நம் தேசத்து மக்களை மட்டும் எப்படிக் கோபித்துக் கொள்வது? எல்லாத் தேசத்து மக்களும் ஒரே மாதிரிதான். இந்தத் துரைமார்கள் எல்லாரும் கூட நம் மாதிரி உப்புக்குச் சப்பாணிகள். காங்கிரஸ் மந்திரி சபை அமைத்துக் கொஞ்ச நாட்கள் ஆட்சியில் இருந்த காலத்தில் டிஸ்ட்ரிக்ட் மாஜிஸ்ட்ரேட் வெர்னன் துரை அடிக்கடி எங்கள் ஆச்ரமத்துக்கு வந்து 'டால் பாத்' (அரிசி பருப்புடன் சாப்பாடு) சாப்பிட்டு விட்டுப் போவார். கையால் சாப்பிடும்போது மிஸஸ் வர்னனுக்கு வாய் வரை சாதத்தைக் கொண்டுபோக முடியாது. ஸ்பூனில் எப்படிச் சாதம் எடுத்துக் கொள்வார்களோ அப்படியே கையில் சாதத்தை எடுத்துக் கொள்வாள். பிறகு ஸ்பூனை வாயில் வைத்துக்கொள்வது போலவே கைவிரல்களையும் வாயில் வைத்துக் கொள்வாள். வாயிலிருந்து சாதம், பருப்பு வழியும்.

காரணம் இல்லாமல் அடிக்கடி வெர்னன் துரை வந்து போய்க் கொண்டிருந்தார். கதர்த் துணிக்கும், காந்திக் குல்லாவுக்கும் தான் எத்தனை மரியாதை! அவர் பெண் ஒரு கீரிப்பிள்ளை வளர்த்துக் கொண்டிருந்தாள். ''வீட்டில் மிகவும் தொந்தரவு கொடுக்கிறது. ஆசிரமத்தில் வைத்துக் கொள்வதானால் உங்களிடம் கொடுத்து விடுகிறேன்'' என்று அண்ணாவிடம் கீரிப்பிள்ளையைக் கொடுத்துவிட்டார். பிறகு இந்தக் கீரிப்பிள்ளையைப் பார்க்கிற சாக்கில் மனைவியையும் பெண்ணையும் அழைத்துக் கொண்டு, நேரம் பொழுதின்றி எப்போது பார்த்தாலும் ஆசிரமத்துக்கு வர ஆரம்பித்து விட்டார்கள். அவர் பெண் 'ரிக்கியை'ப் பார்க்க வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தாளாம்! அப்புறம் அந்த ரிக்கியைக் குழந்தை மாதிரி வைத்துக் கொண்டு எத்தனை கொஞ்சல், எவ்வளவு அமர்க்களம்!

இழையோடும் என் எண்ணங்களை அறுத்துக் கொண்டும், சுற்றியுள்ள இருளையும் நிசப்தத்தைத் தகர்த்துக் கொண்டும், சூழ்நிலையை நடுங்க வைத்துக் கொண்டும் பன்னிரெண்டு மணி அடிக்கிறது. டாக்டரின் அறையில் இருக்கும் ஒரு நாய் 'லொள் லொள்' என்று குலைக்கிறது. அதனுடைய சுக நித்திரை கலைந்து விட்டது போலும். 'ஹூவாஹை' (முடிந்துவிட்டது) என்ற நாராசமான கோஷத்துடனும், பெரிய ஜாலராக்கள், டோலாக்கள், இத்யாதி இடி முழக்கத்துடனும் வார்டர்களின் பஜனை முடிந்து விட்டது. கடிகாரம் கட்டிக்கொண்டு பஜனை பண்ணுகிறார்களா என்ன? சரியாக எப்படி 12 மணிக்கு முடிக்கிறார்கள்? காக்கி அரைக்கைச் சொக்காயிலிருந்து வெளிவரும் இரு கைகள்

டமாரம் ஒன்றில் மெதுவாகத் தாளம் போட்டுக் கொண்டே இருக் கின்றன. இடக்கை மணிக்கட்டுக்கு மேல் ஒரு மலிவான கடிகாரம். இதற்குக் கொஞ்சம் மேலே சிவப்பு, நீல வர்ணங்களில் பச்சை குத்திய ஒரு பெண்ணின் உருவம் தெரிகிறது.

அப்பாவின் பஜனை சரியாக எட்டு மணிக்கு முடிந்துவிடும். மகாத்மா வுக்குப் பிடித்த 'ரகுபதி ராகவ ராஜாராம், பதீத பாவன சீதாராம்' கடைசியில் பாடப்படும். ஆசிரமத்தில் இருக்கும் எல்லாக் காங்கிரஸ் தொண்டர்களும் இதில் பங்கு கொள்வார்கள். இப்படிச் செய்தால் அப்பாவுக்குத் திருப்தி என்பது இவர்கள் எண்ணம். ஜில்லாவிலுள்ள எல்லா மக்களுக்குமே தெரியும், அப்பாவுக்குப் பஜனை என்றால் உயிர் என்று. கூட்டம் நடக்கும் அறையில்தான் பஜனை நடக்கும். சிமெண்ட் தரை, களிமண் சுவர், ஓலைக் கூரை. அம்மா தன் கையாலேயே பசுஞ் சாணியால் மெழுகிச் சுத்தமாக்கிய சுவர்கள். நடு நடுவே கதவில்லாத சிறிய ஜன்னல்கள், அரசியல் தலைவர்களின் படங்கள். ஒரு பக்கத்தில் இரண்டு காங்கிரஸ் கொடிகள். ஒன்றோடு ஒன்று குறுக்குவாட்டில் 'கிராஸ்' மாதிரி சேர்த்துக் கட்டப்பட்டவை. அதற்கு மேல் ஒரு நீளத் துணித் துண்டில் நாகரி லிபியில் வெண்மையான பஞ்சாலான 'ஸ்வாகதம்' என்ற வார்த்தை. அதற்குக் கீழே காந்தியின் ஒரு பெரிய படம். அறையின் கிழக்கு, வடக்கு மூலைகள் கொஞ்சம் அசுத்த மாக இருக்கும். மரச்சக்கரம் பொருத்திய ஒரு பிரம்மாண்டமான பெட்டி. இதில் காஸ்டிக் ஸோடா, இரும்பு வாளி, இன்னும் துணிக்குப் போடுகிற சோப்பு தயாரிக்கத் தேவையான பல பொருள்கள் வைக்கப் பட்டிருக்கும்.

பூல்காஹார் ஊரைச் சேர்ந்த நந்தலால் திவாரிக் காங்கிரஸ் கமிட் டிக்கு வழங்கியது இந்தப் பெட்டி. மற்றொரு மூலையில் பஞ்சடிக்கும் வில் சுவரில் சாத்தியிருக்கும். மற்றொரு வில் கூரையில் உள்ள கட்டை யில் மாட்டியிருக்கும். பகல் வேளையில் பஞ்சடிக்கும்போது இரண்டு வில்களும் சேர்த்துக் கட்டப்படும்.

பஜனை ஆரம்பித்து விட்டது. இந்நாட்டுச் சிறுவர்கள் காந்திஜியைப் பற்றித் தெரிந்து கொள்ளவில்லை, புரிந்து கொள்ளவும் இல்லை என்று அங்கலாய்க்கும் பாட்டுடன் தொடங்குகிறது. அப்பாவே எழுதியது. அம்மா சாம்பிராணி இட்ட கலசம் ஒன்றை எடுத்துக் கொண்டு நுழை கிறாள். காந்தியின் படத்துக்கு ஒரு பூமாலை சார்த்திவிட்டு, அதற்கு முன்னால் அந்தத் தூபக் கலசத்தை வைத்துவிட்டு ஒரு பக்கத்தில் கையைக் கூப்பிக் கொண்டு உட்காருகிறாள். அப்பா விளக்கின் திரியைக் கொஞ்சம் இறக்கி விட்டுப் பாட ஆரம்பிக்கிறார். சகாதேவ் முதலியோர் இந்தப் பெங்காலி பஜனையைத் தப்பாக உச்சரித்துக் கொண்டு,

வார்த்தைகளைச் சிதைத்துக் கொண்டு பாடுகிருர்கள். முதல் பாட்டு முடிகிறது. அம்மா தலை குனிந்து வணங்கிவிட்டு எழுந்திருக்கிருள். இவ்வளவு பேர்களுக்கும் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்ய வேண்டுமே? பஜனையில் உட்கார்ந்து விட்டால், சமையல் செய்வது யார்? நானும் அண்ணுவும் சின்ன வயதில் பஜனையில் பங்கெடுத்துக் கொள்வோம். பூணூல் போட்ட பிறகும் பல வருஷங்கள் பஜனைக்குப் போனேம். அண்ணு பஜனைக்குப் போவதை நிறுத்திய சில நாட்களுக்குப் பிறகு நானும் நின்று விட்டேன். இதற்காக அம்மா எவ்வளவு அழுதாள் தெரியுமா? ''நீங்கள் பஜனைக்கு வரவில்லை என்ருல் அவருக்கு ரொம்பக் கஷ்டமாக இருக்கும். உங்களுக்குப் பிடிக்கவில்லை என்ருல் கூட, அவருக்காகவாவது கொஞ்ச நேரம் உட்காரக் கூடாதா?'' என்ருள். அண்ணு ஒரு பதிலும் சொல்லவில்லை.

வீட்டில் நடக்கும் பஜனைகளுக்கு அண்ணு போவதில்லை. ஆனல் காங்கிரஸ் காரியமாகக் கிராமங்களுக்குப் போகும்போது, பெரிய கிராம வாசிகள் எங்களைக் களிப்புறச் செய்வதற்காகப் பஜனைகள் ஏற்பாடு செய்வார்கள். அப்பாவுக்காக இந்த ஏற்பாடு செய்து பழக்கம். அதனலேயே 'மாஸ்டர்' ஐயாவின் பிள்ளைகளுக்கும் தங்கள் கடமையைச் செய்கிருர்கள். ஆனல் இந்தப் பஜனைகள் விஷயமாக அண்ணு ஒருவிதமான வெறுப்பையும் காட்டமாட்டான். என் வெறுப்பைக் காட்ட நான் முயற்சி செய்தால், சைகையால் என்னைப் பொறுமையாக இருக்கும்படி செய்து விடுவான்.

பைஸி தாணுவில் இருக்கும் காக்ஹா கிராமத்தில் ஒரு மீட்டிங். கூட்டம் சேரவில்லை. சகதேவ் காங்கிரஸ் கொடியை நட்டு விட்டு 'இங்கிலாப் ஜிந்தாபாத், காந்திஜிக்கு ஜே' என்று கோஷம் எழுப்பிக் கொண்டிருக்கிருன். டமாரம் கொட்டுவது, மணி அடிப்பது, இன்னும் கிராமவாசிகளைச் சந்தைக்கு அழைப்பதற்கு உபயோகிக்கப்படும் பல வழிகளையும் கையாண்டு பார்த்தாகி விட்டது. ஊஹூம், மக்கள் கூடவில்லை. அப்போது ராம்தத்த மண்டல் என்ற அந்த ஊர்க் காங் கிரஸ் ஊழியர் பால்காரர்களின் பஜனை கோஷ்டிக்குச் சொல்லியனுப்பி வரவழைத்தார். கூடவே ஒரு ஸிங்கிள் ரீட் ஆர்மோனியம். பத்து நிமிஷத்தில் சந்தைக்கு வந்த அத்தனை மக்களும் இந்த இடத்தில் வந்து குவிந்தார்கள். இதற்குப் பிறகு எங்கள் சொற்பொழிவுகளைச் சீக்கிரமாக முடித்துக் கொண்டோம். மக்களுக்குச் சந்தையில் தங்கள் தங்கள் வேலை. சந்தையில் தழும்புக்கு மருந்து விற்பவனின் பேச்சும் காந்திஜியின் சிஷ்யர்களின் பிரசங்கமும் அவர்களுக்கு ஒன்றேதான். சந்தைக்கு வந்திருக்கிருர்கள், பலவிதத் தமாஷாக்களில் மகாத்மா தமாஷாவையும் இரண்டு நிமிஷம் பார்த்துவிட்டுத்தான்

போகலாமே என்ற நோக்கு. அவர்களில் சிலர் மகாத்மாஜியைத் தரிசனம் செய்தவர்கள். உப்புச் சத்தியாகிரகத்தில் கூடப் பங்கேற்ற வர்கள். 'இந்த பச்சைக் குழந்தைகளிடமிருந்து புதிதாகத் தெரிந்து கொள்ள என்ன இருக்கிறது?' என்ற எண்ணம். இந்தப் பசங்கள் சொல்வதில் ரூபாய்க்கு 15 அணு புரியப் போவதில்லை.

'மேய்ச்சல் உரிமைக்கு ஏற்பாடு செய்', 'கிஸ்தியைக் குறை'' 'தாசில்தாரின் எருமைமாடு எங்கள் விளைச்சல்களை மேய்ந்து விடுகின் றன, இதை நிறுத்து' என்ற விஷயமெல்லாம் புரியும். ஆனல் நாங்கள் இவை பற்றிப் பேசாமல் மெம்பர், சந்தாவைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்போம். பணம் பிடுங்கும் தந்திரம். மந்திரி சபை அமைத்து ஆட்சி பீடத்தில் உட்கார்ந்தவுடன் கிஸ்தி பாக்கி வசூலுக்குச் சட்டம் இயற்றியாயிற்று. சந்தைச் சொற்பொழிவுகளில் எடுத்துச் சொன் னேம், ''சர்க்காருக்கு மனு எழுத நாலணுவுக்கு மேல் செலவு செய்யத் தேவையில்லை'' என்று. உண்மையில் அவர்களுக்கு இதைப் போல் இருபது மடங்கு செலவு. பாதிக்கு மேல் அவர்களுடைய மனுக் கள் தள்ளப்பட்டன. மகாத்மாவின் சிஷ்யன், புண்யதேவ்ஜியிடம் கொடுத்திருந்தோம்—இந்த மனுக்களைச் சரியான இடத்தில் கொடுத்து ஏதாவது ஏற்பாடு செய்வதற்காக. இந்த நல்ல மனிதர் மனு ஒன்றுக்கு எட்டணு 'சிரமத்துக்குக் கூலி'யாக வசூல் செய்தார். 'மாஸ்டர்' ஐயா இருக்கிருர் என்பதால் இந்த ஜில்லாவில் காங்கிரஸின் பணிகள் ஏதோ கொஞ்சம் நடக்கின்றன. மற்றவர்களில் பாதிக்குமேல் குண்டர்கள். காங்கிரஸ் ஸ்தாபனம் பூராவும் பணக்கார விவசாயிகளின் கையில் இருக்கிறது என்பது என்னவோ உண்மைதான். பெரிய ஜமீன்தார் களின் சுரண்டலிலிருந்து தங்களுக்கு விடுதலை கேட்கிருர்கள். ஆனல் தங்களுக்குக் கீழேயிருக்கும் குத்தகைக்காரர்கள், குடியானவர்கள், நிலமில்லாத கூலிச் சாகுபடி செய்பவர்களை எல்லாம் தாங்கள் சுரண்டு வதற்குத் தயங்குவதில்லை. காங்கிரஸ் ஆட்சி புரிந்த நாட்களில் குடி யானவர் நலனுக்காக நிறைவேற்றப்பட்ட எத்தனையோ சட்டங்களை இவர்கள் பலனற்றதாக்கி விட்டார்கள். சகாதேவ் போன்ற காங்கிரஸ் ஊழியர்கள் கூடக் குத்தகை குடியானவர்களுக்குக் கிடைக்கவிருந்த விடுதலையைத் தவிர்ப்பதற்காகப் 'பொய்ப் பத்திரங்கள்' தயார் செய்து கையெழுத்து வாங்கிக் கொண்டார்கள்.

தஹிபாத் கிராமத்திலிருந்து அடிக்கடி காங்கிரஸ் ஆபீஸுக்கு வருவாளே ஒரு கிழவி—தொண்டையில் பெரிய கட்டி—ஒரு தடவை வரும்போதே அழுது கொண்டு வந்தாள். அண்ணுவிடம் சொன்னுள்: ''உன்னை விட்டால் எனக்குக் கதியில்லை. வேறு யாரும் என்னுடைய பிரச்னையைத் தீர்த்து வைக்க மாட்டார்கள். ஆகாசத்தில் இன்னமும் சந்திரன், சூரியன் இருக்கும்போதேயா இந்த மாதிரி அக்கிரமம்?

சகாதேவின் அண்ணு கபில்தேவ் என்னுடைய நிலம் முழுவதையும் எடுத்துக்கொள்ளப் பார்க்கிறுன். கிட்டத்தட்ட ஐம்பது ஏக்கர் நிலம், அவன் வீட்டுக்குப் பக்கத்திலேயே இருக்கு இல்லையா? புகையிலை ரொம்ப நல்லா விளையும் இந்த நிலத்தில். அதனுல்தான் இந்த நிலத்தின் மேல் அவனுக்குக் கண். என் புருஷன் ஒரு வாணியன். பெரிய பையன், வயசு வந்தவன், என் புருஷன் இருக்கும்போதே போயிட்டான். அவன் பெண்சாதிக்கு அப்போ வயத்திலே பிள்ளை. ஒரு வருஷத்துக்குள்ளேயே என் புருஷனும் போய்விட்டான். அப்புறம் என் மருமகளும் போயிட்டா. பேரப்பிள்ளைக்கு ஒரு வயசு கூட ஆகல்லே, அதுவும் 'வாயு' வந்து போயிடுச்சு. 24 மணி நேரமும் பாட்டி மடியிலே கிடந்தது. எத்தனை மருந்து! எத்தனை வைத்தியம்! வலி ரொம்ப இருக்குமேன்னு ஊசி குத்த விடல்லே நான். ஒரு வேளை ஊசி போட்டிருந்தாப் பொளைச்சிருப்பானே என்னவோ? மேலேயும் அவனைப் பிடிச்சு நிறுத்தி வைத்துக்கொள்ள முடியவில்லை என்னுலே. பேட்டையிலே இருக்கிற பால்காரன் மகனும்—கோரேன்னு பேரு—அவனும் செத்துப் போயிட்டான். அப்போ கபில்தேவ் ஒரு பஞ்சாயத்துக் கூட்டி நான் ஒரு சூனியக்காரின்னு குற்றம் சாட்டினுன். தன் குடும்பம் முழுதை யும் ஒழிச்சுட்டு, இந்தப் பால்காரன் பிள்ளை மேலே சூன்யம் ஏவி விட்டுட்டா, அப்படியிப்படி என்று, கதை கட்டிவிட்டான். 'அட, முட்டாப் பசங்களா, நான் தான் புருஷன், பிள்ளை, அவ பெண்சாதி, பேரன் எல்லாரையும் முழுங்கிவிட்டு உட்கார்ந்து கொண்டிருக்கேனே? என் வவுத்துலே இன்னும் ஏதுடா இடம்?' அப்புறம் என்னைக் கிராமத்தை விட்டு விரட்டுவதற்காக அதே ராத்திரி கபில் தேவின் தூண்டுதலின் மேல் ராதோ, சனிச்சரா, சேதி இவர்கள் எல்லாருமாச் சேர்ந்து என் குடிசைக்கு நெருப்பு வைத்துச் சாம்பலாக்கிவிட்டானுக. ஒரு பிடி நெல்லு கூடக் காப்பாத்த முடியல்லே என்னுலே. ஆனுல் காதிலே வுழுந்தது, கபில்தேவ் மறுபடியும் என் பேரில் கோர்ட்டிலே 'டிக்ரி' வாங்கியிருக்கான்னு, நிலத்தை தான் எடுத்துக்கிட. நான் என்ன பச்சைப் பாப்பாவா இதையெல்லாம் நம்ப? நிலம் இருக்கு தஹிபாத் கிராமத்திலே. டிக்ரி பூர்ணியாலே எப்படி வாங்கமுடியும்?''

இந்த மாதிரி என்னவெல்லாமோ சொல்லிக்கொண்டே போனுள். நடு நடுவிலே தலையிலே 'டக்டக்'னு அடிச்சிண்டு அழுது கொண்டே இருந்தாள். ''வாத்தியார் ஐயாவுக்கு நேரமே இல்லே. இல்லேன்னு அவரைத் தஹிபாத்துக்கு ஒரு தடவை அழைச்சிக்கிட்டே போயிருப்பேன். ஆகவே, பீலு பாபுவை விட்டா வேறு கதியே இல்லை எனக்கு'' என்று அடம் பிடித்தாள். அண்ணுவும் நானும் எவ்வளவு முயற்சி செய்தோம்? ஆனுல் கபில்தேவின் இந்த அநியாயத்தை நிறுத்த

முடியவில்லை. நாங்கள் தஹியாத்துக்குப் போனால் கபில்தேவ் எங்களுக்கு நல்ல சாப்பாடு, விருந்து எல்லாம் ஏற்பாடு செய்வான். ஆனால் வந்த காரியத்தைக் கொஞ்சங்கூட விட்டுக் கொடுக்க மாட்டான். சுற்றி வளைத்து, ''நானும் மகாத்மாஜியின் பக்தன் தான், ஜில்லா காங்கிரஸ் கமிட்டி மெம்பர். ஆசிரமத்துக்குத் தேவையான அரிசியில் ஒரு பங்கு வருஷா வருஷம் தவறாமல் கொடுத்து வருகிறேன். ஏன், காங்கிரஸுக்காக ஒரு தம்பியையே தானம் செய்திருக்கிறேன்'' என்று எத்தனையோ சொல்லுவான்.

உண்மையிலே பெரிய 'அவிபக்த' ஹிந்துக் குடும்பங்களில் எல்லாருமே நிலம் நீச்சுக்களைப் பார்த்துக்கொள்ள வேண்டும் என்பதில்லை. கிராமத்தில் உட்கார்ந்து 'அன்ன த்வம்ஸம்' செய்துகொண்டு ஊரில் வம்பு வளர்ப்பதை விடச் சில பேர் காங்கிரஸில் சேர்ந்து வேலை செய்வது நல்லது அல்லவா? இது தான் பெரிய விவசாயிகளின் மனப் போக்கு. காங்கிரஸ் ஸ்தாபனத்தின் மூலம் கிடைக்கக்கூடிய செளகரியங்களை இந்த மாதிரி 'தானங்'களினால் நிச்சயப்படுத்திக் கொள்ள முடியும் என்ற நம்பிக்கை. தம்பி காங்கிரஸில் புகுந்து தலைவர்களின் நன்மதிப்பைப் பெற்றால் டிஸ்ட்ரிக்ட் போர்ட் மெம்பராகக் கூட ஆக முடியும். பிறகு ஒருவேளைக் காங்கிரஸ் பணம் படைத்த விவசாயிகளுக்குத் தொல்லை கொடுக்க ஆரம்பித்தால் அதைச் சட்டை செய்யாது இருந்துவிடலாம். தார்மிக முறைகளைத் தவிர வேறு எந்தவிதமான நடவடிக்கைகளையும் காங்கிரஸ் எடுக்காது என்ற தைரியம்.

இவை எல்லாம் நடந்த கொஞ்ச நாட்களுக்குப் பிறகு, அந்த வாணியன் மனைவி, கிழவி, ஒரு நாள் கோபத்திலும் துக்கத்திலும் சொன்னாள்: ''கபில்தேவ் போலீஸ் இன்ஸ்பெக்டரை விலைக்கு வாங்கி விட்டான் என்பது எனக்குத் தெரியும். ஆனால் உன்னையும் வாங்கி விட்டானா?''

இன்னும் என்னவெல்லாமோ சொல்லியிருப்பாள். ஆனால் அப்போது திடீரென்று சகாதேவ் அங்கு வந்துவிட்டான். என்ன விரோதியாக இருந்தாலும் சகாதேவ் 'பூமிகார்' பிராமணன். உயர்ந்த ஜாதிக்காரன், கிராமத்தில் பெரிய புள்ளி. அவன் முன்னால் வெறும் வாணியன் மனைவி அடித்துப் பேச முடியுமா என்ன? நாங்கள் சகாதேவுடன் இவள் விஷயமாக ஏதாவது கேட்டால், அவன், ''கபில்தேவ் அண்ணன்தான் குடும்பத்தின் கர்த்தா. எனக்கு இதெல்லாம் பற்றி என்ன தெரியும்?'' என்று சொல்லிவிடுவான்.

கழுத்தைப் பிடித்துக் காங்கிரஸ் ஆசிரமத்திலிருந்து வெளியே அவனைத் தள்ளிவிட வேண்டும்போல் இருந்தது எனக்கு. இது நடந்த

பல தினங்கள் வரை நான் அவனுடன் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. அண்ணு சொன்னுன், ''கோளாறு சமுதாய அமைப்பில் இருக்கும் போது இவனைக் கோபித்து என்ன பயன்?'' என்று.

1930—32 இயக்கத்தின்போது காம்ப் ஜெயிலில் இருந்த நாட்களில் தான் எங்களுடைய அரசியல் நோக்குகளின் வியர்த்தம் புரிந்தது. ஜெயிலில் தான் இதைப்பற்றி எத்தனை சர்ச்சைகள்! எத்தனை கருத்து வேற்றுமைகள்! இந்தப் பயனற்ற அரசியலைப்பற்றிப் பேசாதவர்களின் முகங்களிலும் நிராசையின் சாயை விழுந்திருந்தது. அன்று விதைத்த விதை உரிய காலத்தில் முளை விட்டு மரமாகி, காயாகி, பழமாகி விட்டது. அண்ணுவும் நானும் காங்கிரஸ் சோஷலிஸ்ட் பார்ட்டியில் சேர்ந்தோம்.

வாணியன் மனைவியின் சம்பவம், மறைந்திருந்த இந்த விதைக்குத் தண்ணீர் விட்டு முளைக்கச் செய்தது. அந்தக் கிழவி இப்போதும் தன் புருஷனின் காணி நிலத்தை விடாமல் பிடித்து வைத்திருக்கிருளா இல்லையா என்பது தெரியாது. ஆனுல் அவள் கண்களில் பெருக்கெடுத்த கண்ணீர் எங்கள் சந்தேகங்கள், தயக்கங்கள் எல்லாவற்றையும் அடித்துத் தள்ளிவிட்டன.

அதிகாலையில் ஜன்னல் வழியாகப் பாயும் உஷையின் கிரணங்களைப் போல் எங்கள் இதய ஆழத்தில் அரை விழிப்புடன் ஆர்வ நம்பிக்கை சுரந்தது. இதற்குப் பிறகு நானும் அண்ணுவும் ஒரே பார்ட்டியில் இருந்து கொண்டு எத்தனை உற்சாகத்துடன் உழைத்தோம்! அவன் கூட உழைக்கும் நண்பன்—காம்ரேட்—மட்டுமல்ல, என்னுடைய அண்ணன்! சேர்ந்து அநுபவித்த எத்தனை சுக துக்கங்களின் நினைவுகள், ஒன்ருேடு ஒன்று பின்னிக்கொண்டு எங்கள் வாழ்வை ஒன்ருக்கி விட்டிருக்கின்றன!

எனக்கு எது நல்லது, எதனுல் எனக்குக் கொஞ்சம் ஆனந்தம் கிடைக்கும் என்ற சிந்தனை அவன் மனத்தில் எப்போதும் இருக்கும். தான் கல்லூரியில் படிக்கவில்லை என்ற துக்கம் அண்ணுவுக்கு அதிகம். பூகம்ப நிவாரண பணியில் தனக்குக் கிடைத்த 'அலவன்ஸில்' என்னைக் கல்லூரியில் படிக்க வைத்தான். என் மூலமாகத் தன் ஆர்வங்களை யெல்லாம் அதிகம் பூர்த்தி செய்து கொண்டான். நிவாரண வேலை முடிந்து, பல சாமான்கள் ஏலம் போடப்பட்டபோது அண்ணு எனக்கு ஒரு சைக்கிள் வாங்கிக் கொடுத்தான். இதெல்லாம் துச்சமான சமாசாரங்கள். அண்ணுவின் அபிமானத்தைப் பற்றிச் சொல்லும் போது, இதையெல்லாம் கொண்டு வருவது அவனுடைய கரையில்லா அன்பைச் சிறுமைப்படுத்துவது ஆகும். எனக்குத் தலைவலி என்று வந்துவிட்டால் அண்ணு படும் கவலை சொல்ல முடியாது. ஜெயிலில்

'ஞாயிற்றுக் கிழமை' வெல்லம்னு கொடுப்பார்களே, அதை அவன் சாப்பிடுவதில்லை. சாப்பாட்டுக்குப் பிறகு ஒரு துண்டு வெல்லம் சாப்பிடவில்லை என்றால் எனக்குச் சாப்பிட்ட மாதிரியே இருக்காது என்று அவனுக்கு தெரியும். ஜெயிலில் என்னுடைய பனியன், நிஜார் ஆகியவற்றை அவன்தான் தோய்த்துப் போடுவான். நான் தடுத்தால், ''சும்மா இரு, உனக்கு இதெல்லாம் பழக்கமில்லை'' என்று சொல்லி விடுவான். நானும் கட்டாயப் படுத்தியதில்லை. இதெல்லாம் என் னுடைய நியாயமான உரிமை. இதில் தப்பு ஒன்றுமிருப்பதாக எனக்குப் படவில்லை. ஆனால் என் பேரில் அண்ணாவுக்கு ஒருவிதமான உரிமையும் கிடையாதா? இருந்திருக்கலாம் என்று சொல்லுவானேன்? இருக்கிறது. ஆனால் அவை அரசியல் களத்துக்கு வெளியே தான். அரசியலில் நான் நீலு, அவன் என் அண்ணா அல்ல. இந்தக் களத்தில், சொந்தப் பிரச்னைகளை ஒதுக்கிவிட்டு, அறிவு என்கிற உரை கல்லில் ஒவ்வொரு செயலையும் உரைத்துப் பார்த்தே மதிப்பிட வேண்டும்.

என்னுடைய பார்ட்டியின் நோக்கில் தான் எல்லாவற்றையும் ஆலோசித்து மதிப்பிட வேண்டும். உலகம் என்னைப்பற்றி என்ன வேணு மென்றாலும் நினைத்துக் கொள்ளட்டும். அண்ணா என்னுடைய மனோபாவத்தைச் சரியாகப் புரிந்து கொள்வான். அவனிடம் குறுகிய மனப்பான்மை என்பது கிடையவே கிடையாது.

1940-ஆம் வருஷம் நானும் அண்ணாவும் கைது செய்யப்பட்ட போது நாங்கள் இருவரும் சி. எஸ். பி. (காங்கிரஸ் ஸோஷலிஸ்ட் பார்ட்டி) மெம்பர்கள். ஆனால் ஜெயிலில் சில மாதங்களுக்குள் எத்தனை மாறுதல்கள்! அதே வார்டில் அந்தப் பலாமரத்தின் கீழேதான் சந்திரதேவுடன் எனக்கு முதல் பரிசயம் ஏற்பட்டது. அவனிடமிருந்து புஸ்தகங்கள் கடன் வாங்குவது, லெக்சர் வகுப்புக்குப் போவது, பலா மரத்தின் கீழே தான் கம்பளி விரித்து லெக்சர் கிளாஸ்-எல்லாம் கண்முன் வருகின்றன. அவனது தர்க்கத் திறனுக்கு முன்னால் நான் தலை குனிய வேண்டியதாயிற்று. என் கண் முன்னால் இருந்த திரை கொஞ்சம் கொஞ்சமாக விலகுவது போலத் தோன்றியது. அண்ணாவின் அரவணைப்பிலிருந்துகொண்டு நான் வளர்த்துக்கொண்ட அரசியல் நோக்கு விரிசலானது, சோகை பிடித்தது, மருட்சியுற்றது. சந்தர்ப்ப வாதிகளான கீழ் மத்திய வர்க்கத்தின் ஆழமற்ற உணர்ச்சியார்வம். தலையற்ற உத்வேகத்துக்கு அங்கு இடமில்லை. நாட்டுப் பற்றுக்கும் அப்பால் பார்க்கும் துணிவு அவர்களுக்கு இல்லை. சந்திர தேவுடைய பார்ட்டியில் சேருவதற்கு முன்னால் அண்ணாவுடன் கலந்து ஆலோசிக்கலாம் என்று நினைத்தேன். செய்யலாம், செய்யலாம் என்று நினைத்துக் கொண்டிருந்தேனே ஒழிய, கடைசியில் அது நடக்க

வில்லை. முக்கிய காரணம் சங்கோசம் என்றாலும், அவனுடைய வாதங்களுக்கு என்னால் பதில் சொல்ல முடியாது என்ற பயமும் இரண்டாம் பட்சமான காரணம். தவிர மனத்துக்குள்ளே அண்ணாவின் வாதம் தப்பு என்று ஓர் எண்ணம்.

ஒவ்வொரு வாதத்துக்கும் சந்திரதேஸிடம் வந்து பிரதிவாதத்தைத் தெரிந்துகொண்டு அண்ணாவிடம் சொல்வது என்றால், அண்ணாவுடன் கலந்தாலோசிப்பது சாத்தியமாக இருக்கும். கடைசியில் அண்ணாவிடம் சொல்லாமலேயே புதிய கட்சியில் சேர்ந்து விட்டேன். எதற்காக அவனைக் கேட்க வேண்டுமாம்? அரசியல் களத்தில் எப்போதுமே நான் 'மைனராக' இருக்க வேண்டுமா என்ன? அன்றைய தினத்திலிருந்து எங்கள் இருவருக்கும் இடையே ஒரு மடு ஏற்பட்டுவிட்டது. இன்று வரை இருந்து கொண்டிருக்கிறது.

ஓர் அரசியல்வாதியின் வாழ்க்கை அவனுடைய பார்ட்டிக்குள் தான்— கட்சிக்கு வெளியில் தனி வாழ்க்கை என்று ஒன்று இருக்க முடியாது. அதை அழித்து விட வேண்டும். இதற்குப் பிறகுதான் அண்ணாவிட மிருந்து ஒதுங்க ஆரம்பித்தேன். சொந்த விஷயங்கள் தவிர வேறு ஒன்றும் பேசுவதில்லை. எனக்கு எப்போதும் ஒரு பயம், என் கட்சிக் காரர்கள் என்ன நினைத்துக் கொள்வார்களோ என்று. அண்ணாவோ விரோதிக் கட்சியின் முக்கியமான தலைவர். அவனுடன் அந்தரங்க மாகப் பழகுவது கட்டாயமாக அவர்களுக்குப் பிடிக்காது. என்னிடம் ஒன்றும் சொல்ல மாட்டார்கள், வாஸ்தவம். ஆனால் தங்களுக்குள்ளே கட்டாயம் இதைப்பற்றி ஆலோசனை நடத்துவார்கள்.

இந்த இரண்டு கட்சிகள் தவிர இன்னும் பல சிறிய கட்சிகளின் ஊழியர்களும் ஜெயிலில் இருந்தனர். ஒவ்வொரு கட்சியினருக்கும் தங்கள் கட்சியில் வேறு கட்சிகளின் உளவாளிகள் இருக்கின்றனர் என்ற எண்ணம். இது உண்மையும் கூட. எவ்வளவு ரகசியமாக வைத்திருந் தாலும் ஒரு கட்சியின் விஷயங்கள் மற்றக் கட்சிகளுக்குக் கட்டாயம் தெரிந்து கொண்டிருந்தது. ஜெயிலில் சுவர்களுக்குக் கூட காது உண்டு என்னுடைய சங்கோசத்தைக் கவனித்து, அண்ணா என் கண்ணில் படாமல் இருக்க முயற்சி செய்தான்.

பார்ட்டி க்ளாஸ் முடிந்து திரும்பும்போது என் படுக்கை தட்டிப் போடப்பட்டிருக்கும். ஒரு சுருக்கமும் இன்றி அழகாகத் தட்டிப் போடப்பட்டிருக்கும். இந்தப் படுக்கையின் ஸ்பரிசத்தில் அண்ணாவின் அன்புக் கரங்களை உணர்வேன். அம்மாவிடம் அல்லது அப்பாவிட மிருந்து கடிதம் வரும் தினங்களில் மட்டுமே அண்ணாவிடம் பேசும் பாக்கியம் கிடைக்கும். அம்மாவின் போஸ்ட் கார்டை நான் படித்த வுடன் அண்ணாவின் படுக்கை மேல் வைப்பேன். ''யார் கடிதம், அம்மா

கிட்டயிருந்தா?'' என்பான். ''ஆமாம்'' என்றதும் அண்ணு கடிதத்தைப் படிப்பான்: ''வெறும் வயிற்றில் டீ குடிக்காதே. நடுவிலே, நடுவிலே த்ரிபலா *இஸபலா சாப்பிடு. போல்போடாவிற்கு* ஏற்பாடு செய்ய முடிந்தால் அதுதான் எல்லாவற்றையும் விட நல்லது. எனக்கு ரொம்பப் பயம்—ஜெயிலில் உங்கள் இருவருக்கும் ஒவ்வொரு தடவையும் ரத்தபேதி வந்து விடுகிறது. ஸெக்யூரிடி கைதிகளுக்கு இந்தச் சாமான்கள் எல்லாம் கிடைப்பது கஷ்டமில்லே. பணம் தேவை என்ருல் எழுதுவதற்கு வெட்கப்படாதே. எப்படியாவது அனுப்புகிறேன்.''

'இந்த அம்மா படுத்தும் பாடு!' என்று சொல்லிக்கொண்டு அண்ணு மெதுவாகச் சிரிக்கிருன். இடக் கன்னத்தில் குழி விழுகிறது. எத்தனே விஷயங்கள் மனசைத் திறந்து பேசவேண்டும் என்று தோன்றுகிறது! முன்பு மாதிரி இருந்தால் அம்மாவைப் பற்றி எவ்வளவு வம்பு பேசியிருப்போம்! இப்போது ''ஆமாம்'' என்று மட்டும் சொன்னேன். அநேக விஷயங்கள் என் நெஞ்சை அழுத்திக் கொண்டிருக்கின்றன. ஆனுல் சங்கோசத்தினுல் இவை எல்லாம் உறைந்து கட்டியாகப் போய் விட்டன. குழந்தைகளாக ஒரே போர்வையின் கீழ் தூங்குவோம். காலே நாலு மணியிலிருந்து முடிவில்லாத பேச்சு! ஆனுல் இப்பொழுதோ ஒரு சிறிய 'ஆமாம்' என்றவுடன் மேற்கொண்டு சொல்வதற்கு ஒன்றுமில்லாமல் போய்விட்டது. பேசுவதற்கு ஒன்றுமில்லே என்ற உணர்வின் வெட்கம் எங்கள் கண்களில் தெரிந்தது. இதை மறைப்பதற்காகவே ஏதோ ஒரு சாக்கு சொல்லிக்கொண்டு அந்த இடத்தை விட்டு நகர்ந்து விட வேண்டியிருக்கிறது.

இதற்குப் பிறகுதான் நான் தியோலிக்கு மாற்றப்பட வேண்டிய நாள் வந்தது. எங்களில் சிலரை மட்டும் தியோலிக்கு அனுப்ப முடிவு செய்யப்பட்டு இருந்தது. அண்ணு இதில் இல்லே. நான் புறப்படும் தினம் அண்ணு என்னுடைய பெட்டி படுக்கைகளேக் கட்டிவைத்தான். பெட்டியின் அடியில் பனே ஓலே விசிறி வைத்திருந்தது. அதைச் சுற்றி அம்மா கையால், ''நீலு பீலு பீல் பீலு'' என்று எம்பிராய்டரி செய்யப்பட்டிருந்தது. ஏதோ ஞாபகத்தில் எதை நினேத்துக்கொண்டு ''பீலு பீலு'' என்று அம்மா எழுதிவிட்டாள் என்று தெரியவில்லே. அண்ணு தன் பவுண்டன் பேனுவை என்னுடைய பாக்கெட்டில் செருகிவிட்டான். இப்பொழுதும் என் பாக்கெட்டில் அந்தப் பேனு இருக்கிறது.

''ஐயா, தூங்கிட்டிங்களா?''—என்று ஹிந்தியில். பார்த்தால் பக்கத்தில் சுபேதார் வந்து நிற்கிருன்.

---

* குடல் இளக்குவதற்கான நாட்டு மருந்துச் சாதனங்கள்.

''ஊஹூம் ஏன், என்ன சமாசாரம்?'' டியூட்டியை விட்டு வெளியே ஏன் வந்திருக்கிறுன் இவன்? ''டியூட்டி முடிஞ்சு போச்சா?''

''ஆமாங்க, எனக்கு நைட் டியூட்டி கிடையாதுங்க. விடியற் காலேயிலே ஆபீஸர், கீபீஸர் வரப் போறாங்க. ஆனுல் இன்னிக்கு இங்கேயே தூங்கிடுவோம்னு நினேச்சேன். இதுக்கு முன்னுடி தூக்குப் போட்டபோது, துரை ரவுண்டில வந்தானுங்க. தூக்குமேடையைச் சுற்றிப் பெரிய பெரிய விளக்குப் போட்டு ராவைப் பகலாக்கி விட்டானுவ. நாலு வார்டர்கள் பாரா சுத்திக்கினு இருந்தானுவ. சனியன், ஜெயில் விவகாரம் பாருங்க. பல விதமான கைதிங்க, பலவிதமான வார்டருங்க, இல்லியா? யாராவது பணம் கிணம் வாங்கிக் கிட்டு மேடையில் ஏதாவது 'கோல்மால்' பண்ணிட்டான்னு, சமயத்தில் கண்டுபிடிக்க முடியாது, பாருங்க. அதுக்காகத்தான் அவ்வளவு உஷார். ஒரு தூக்குலே ஏதாவது 'கோல்மால்' ஆயிடுச்சுன்னு, துரையிலிருந்து வார்டர் வரைக்கும் எல்லோருடைய புஸ்தகத்திலேயும் ஒரு கரும்புள்ளி வந்துடுமில்லிங்களா? இந்த விஷயத்தில் முழுப் பொறுப்பும் உள்ளே இருக்கிற ஹெட் வார்டருக்கில்ல கொடுத்திருக்கணும்? இந்த நவாப் பிள்ளே இந்தப் புது துரை கிட்ட என்ன சொல்லி வைச்சானே தெரியலே, இந்தத் துரை என் பேர்லே ரொம்பக் 'காரமா' யிருக்கான். துரை புதுசா இந்த டிபார்ட்மெண்டுக்கு வந்திருக்கான். ஜெயில்ல என்ன சட்டம், என்ன விதி, ஒரு எளவும் தெரியாது இவனுக்கு. புரியவும் இல்லே. சண்டை சமயத்திலே இவன் மாதிரி எத்தனேயோ துரைங்க வாரானுவ, போரானுவ. எத்தனேயோ துரைசாணிகிட்ட ஆரஞ்சுச் சாப்பிட்டாச்சு. இப்போ என்னடான்னு, வவுத்துக்காகத் தப்புச் செய்யாதபோதே வாங்கிக் கட்டிக்க வேண்டியிருக்கு.''

ஜமேதார் ஏதோ சொல்வதற்காக இத்தனே பீடிகை போடுகிறுன் என்று தெரிகிறது.

''அப்போ, இப்போ எங்கே போய்க்கொண் டிருக்கீங்க?''

''என்ன கொசு! என்ன கொசு! தூங்க முடியுங்களா இங்கே? ஆபீஸ் ரூம்லே படுக்கையை விரிச்சேனே ஒளியத் தூங்கலீங்க. ஒரே வெக்கை. உங்களேயும் தான் கொசு கடிச்சுக்கிட்டிருக்கும். அதான் வீட்டாண்டே போய் ஒரு கப் டீ அடிச்சுட்டு வரலாம்னு. சண்டைக்குப் போனதில் இருந்து இந்தக் கெட்ட பழக்கம் வந்துடுச்சுங்க. நீங்களுந்தான் வாங்களேன்? கொசு பிடுங்கிச் சாவானேன்? நோகசிங் தனியாத்தான் இருக்கான். வூட்லே யாரும் இல்லே. அவனுடைய குவார்ட்டர்ஸில் ராவை ஓட்டிடலாம். ஒங்க மனசுலே இருக்கிற பாரத்தை எங்களால் குறைக்க முடியாது. ஆனுல் ஏதோ கொஞ்சம் உங்களுக்குச் சேவை

செய்ய முடிஞ்சா ஏன் செய்யக் கூடாது? எங்களுக்கும் பிள்ளை குட்டி இருக்குது. நாங்க என்ன வெள்ளைக்காரனுகளா என்ன?''

''ஒன்றும் வேண்டாம். நான் சௌகரியமாகவே இருக்கிறேன். கொசு ஒண்ணும் அப்படி ரொம்ப இல்லை. மறுபடியும் இந்த ராத்திரியில் இங்கேயும் அங்கேயும் யார் ஓடிக் கொண்டிருப்பா?'' என்றேன் நான்.

அவனுடைய 'கருணை' என்னை அப்படியே திணற அடித்துவிட்டது. என்னுடைய அரைகுறை மறுப்புக்களை உதறித் தள்ளிவிட்டு என்னைப் பலவந்தமாக இழுத்து நிறுத்தி விட்டான். நான் கம்பளிகளை எடுத்துக் கொள்ளத் தொடங்கினேன். சுபேதார் சொன்னான்: ''நீங்க விடுங்க, எங்கிட்ட ரெண்டு மூணு கொடுங்க. இரண்டு பேருமாத் தூக்கிக்கிட்டுப் போவோம்.''

நான் சொன்னேன், ''இது அப்படி ஒண்ணும் பளு இல்லை'' என்று. நாலு கம்பளிகளில் அவன் மூன்றை எடுத்துக் கொண்டான். என் கையில் ஒன்று.

''இதோ பக்கத்திலே தான் குவாட்டர்ஸ்'' என்றான்.

பாதையைக் கடந்து, டாக்டர்கள் குவாட்டர்ஸ்களையெல்லாம் தாண்டி வார்டர்கள் குவார்ட்டர்ஸ்கள் முன்னால் வந்து நின்றோம். குவாட்டர்ஸ்கள் அப்படி ஒன்றும் அதிகமில்லை. சீனியர் வார்டர்களுக்கு மாத்திரமே குவாட்டர்ஸ் கொடுப்பது வழக்கம். மற்றவர்கள் பெரிய 'பாரக்'கில் தங்குவார்கள். ஒரு கதவுக்கு முன் போய்ச் சில தடவை தட்டிவிட்டுச் சுபேதார் சொன்னான்: ''அடே, கதவு பூட்டியில்லே இருக்குது? பாபு, நான் ஒரேடியா மறந்து போயிட்டேனுங்க.''

நான் சொன்னேன்: ''அதனால் என்ன? நான் திரும்பிப் போய் விடுகிறேன். அப்படி எத்தனை தூரம்?''

''இருங்க, நான் விளக்குக் கொண்டு வருகிறேன்.''

''வேணும், வேணும். விளக்கு தேவை இல்லை.''

எங்கிருந்தோ முரட்டுக் குரலில் 'லெப்ட் டேர்ன்' என்ற சொற்றொடர் இரவின் நிசப்தத்தைப் பிளந்து கொண்டு வந்தது. தூரத்திலிருந்து வந்ததால், குரலின் கடுமை சற்றுக் குறைந்திருந்தது. குரல் ஜெயிலின் உள்ளிருந்து வந்திருக்கிறது. வார்டர்கள் அணி மாற்றப் படுகிறது போலும். இரண்டு மணி முன்னால் கேட்டுக்கு முன்னால் உட்கார்ந்திருந்தபோது நடந்த வார்டர்கள் ட்யூட்டி மாற்றம் என் காதில் விழவில்லை. இப்பொழுது கேட்டிலிருந்து கொஞ்ச தூரத்தில் இருப்பதால் இந்தச் சப்தம் காதில் படுகிறது. கேட் ஒரு வேளை "Sound-proof" செய்யப்பட்டதோ என்னவோ?

மறுபடியும் ஜெயில் கேட்டிற்குத் திரும்பி வந்து பழைய இடத்தில் கம்பளியை விரிக்கிறேன். ஒரே ஒரு கம்பளி. பாக்கி மூன்றும் சுபேதார் கூடவே தங்கிப் போயிற்று. சுபேதாரின் இத்தனை அநு தாபம் இதற்காகத் தானோ? இரவு இரண்டாம் ஜாமத்தில் வீட்டுக்குப் போகவேண்டும் என்ற எண்ணம் அவருக்கு உண்டானது இதனால் தானோ? ஜெயிலிலிருந்து ஒரு கம்பளியை வெளியே 'தள்ளிக் கொண்டு' போக வேண்டும் என்றால், அதற்கு ஒத்தாசை செய் வோருக்கு மூன்று கம்பளிகள் கொடுக்கவேண்டி வரும். எந்த ஜெயில் சாமானையும் வெளியே 'தள்ளிக்கொண்டு' போவதற்கான இந்த நியமம் எல்லாருமே அறிந்ததுதான். இல்லையென்றால் பிடிபட்டுப் போவதற்கு வாய்ப்புக்கள் பல. இந்த மாதிரி தொந்தரவுகள் இல்லாமல் மூன்று கம்பளிகளை வீட்டுக்குத் தள்ளிக்கொண்டு போகும் சந்தர்ப்பத்தை இழப்பதற்கான திடசித்தம் சுபேதாருக்கு இல்லை. தவிர, இது யுத்த காலம்.

மறுபடியும் பழைய இடத்துக்கு வந்து உட்கார்ந்து கொண்டேன். ஆட்சியாளரின் பரந்த அடக்குமுறை யந்திரத்தில் ஜெயிலுக்கு முக்கிய இடம் உண்டு. 'சக்கரத்தில் சக்கரம்'— இப்படி ஒரு சக்கரத்தில் முன்னால் உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். ஜெயில் கேட் பிரமாண்ட மானது, கொடூரமானது, உயிரற்றது. ஒவ்வொன்றும் கடிகாரத்தின் முட்கள் போல் தவிர்க்க முடியாத கதியில் இயங்குகிறது. மேலும் கடிகாரங்களில் முக்கியமான இடங்களில் 'ஜ்வெல்ஸ்' வைக்கப்பட்டிருக்கிற மாதிரி, அடக்கி ஆளும் சித்ரவதை செய்யும் இந்த யந்திரத்திலும் 'ஜ்வெல்'கள் வைக்கப்பட்டிருக்கின்றன. கேட் வெளியே இருக்கும் சுபேதாரும் சென்ட்ரல் டவர் மேலே இருக்கும் ஹெட் வார்டரும் அத்தகைய 'ஜ்வெல்கள்'.

நாலைந்து மணிகளுக்குள்ளாகவே இந்த ஜெயில் கேட் சகிக்க முடியாத சலிப்பை ஊட்டுகிறது. இந்த இருட்டில் வார்டர்களின் குடியிருப்பு வரை போய் வந்ததில் என் மனச்சுமை கொஞ்சம் குறைந்தது. மறு படியும் ஒரு புதிய வார்டர்களின் அணி. கதவு திறந்து மூடுகிறது, மணிப்பிரகாரம். கேட் வார்டருக்குப் பதிலாக ஒரு மெஷின் மூலம் இதையெல்லாம் செய்தால் என்ன தப்பு? ஒரே காரியத்தைத் திருப்பித் திருப்பிச் செய்ய வேண்டிய போதெல்லாம் ஒரு மெஷினைப் போட்டு வேலை வாங்குவது சாத்தியம் என்பது மட்டுமல்ல, சௌகரியமும் கூட.

கேட்டின் மேல் மாடியிலிருந்து ஒரு வார்டர் கீழேயிறங்கி வந்து கொண்டிருக்கிறான். கேட்டில் இரண்டாவது மாடியில் தான் ஜெயிலர் துரையின் குவாட்டர்ஸ். இதற்கு முன்னால் திறந்த வராந்தா. இதில் துப்பாக்கி தரித்த வார்டர் நேரம் தவறாமல் மணி

அடிக்கிறான். வெயில், மழை என்று பார்க்காமல், இரவு, பகல் என்று பார்க்காமல், முறை தவறாமல் அடிக்கிறான். ஒவ்வொரு மணிக்குப் பிறகும் அடிப்பது என்பது இருக்கவே இருக்கு. இது தவிர, துரை உள்ளே நுழையும்போது ஒரு மணி. மதிப்புக்குரிய பெரிய மனிதர் ஜெயிலுக்கு வந்தால் இரண்டு மணி என்று அடிப்பான். உள்ளே இருப்பவர்கள் ஏதாவது தப்புத் தண்டா செய்து கொண்டிருந்தால் அதை நிறுத்துவதற்கான உஷார் என்று கொள்ளலாம். இது தவிர 'பைத்தியக்கார மணி' என்ற அபாய அறிவிப்பு மணி ஒன்று உண்டு. விடாமல் அடிக்கும். தூரத்திலிருந்தால், ஞாயிற்றுக்கிழமை மாதா கோவிலில் அடிக்கும் மணி போல் இருக்கும். மாதாகோவில் தன் இனத்தவரைக் காப்பாற்றுவது போல, இந்த ஜெயில் மணி தன் சுயநலத்தைக் காத்துக் கொள்கிறது போலும்.

மணி அடிக்கும் வார்டர் இரண்டு மணி நேரம் இந்தப் பெரிய பொறுப்பைச் சரியாக நிர்வகித்து முடித்த இறுமாப்புடன் கேட்டுக்கு வெளியே வருகிறான். கேட்டுக்கு வெளியில் இருக்கும் 'ஆயுதபாணி' கேட்கிறான்: ''ஏன் தம்பி இவ்வளவு நேரம்? மாத்து வார்டர் ரொம்ப நேரம் முன்னாலேயே வந்துட்டானே?''

''அந்த எளவை ஏன் கேக்கறே அண்ணே? டியூட்டி ஆரம்பிக்கும் முன்னால் பழைய வார்டர் சொல்லிவிட்டுப் போனான், சரியா ஒரு மணிக்கு ஜெயிலர் துரையை எழுப்பிடுன்னு. ஒரு வேளை துரை 'ரவுண்டில்' போவார்னு நினைச்சேன். நான் முதல் தடவை கதவை தட்டினப்போ, துரைக்கு ஒரே கோபம். 'ஏண்டா சும்மா கத்தரே'ன்னு கேட்டான். அவன் பெரிய ஆபீசர், அவன் எது செஞ்சாலும் அது சரிதான். முதல்லே கோவிச்சுக்கிட்டான். பிறகு 'புது வார்டர் கிட்டே என்னை மூணு மணிக்கு எழுப்பச் சொல்லிட்டுப் போ' என்றான். புது ஆளு எழுப்பல்லேன்னா எனக்கென்ன? துரையே எழுந்து வந்து அவனை எழுப்புவான். அப்பல்ல இருக்கு வேடிக்கை!''

கேட் காவல்காரன் 'ஆயுதபாணி' சொல்கிறான்: ''எங்கே போறே? என்ன அவசரம்? நின்னு கொஞ்சம் புகையிலைப் போட்டுக்கிட்டுக் போவியா?''

''இல்லே அண்ணே, போய்க் கட்டையைப் போடணும். இம்மா ராவுலே புகையிலை போட்டுக்கினு என்ன ஆவணும்?'' சொன்னானே ஒழிய, புகையிலைக்காக நின்று கொண்டிருக்கிறான். தலையில் இருந்த குல்லாவைக் கழற்றி விடுகிறான். தலையெல்லாம் ஒரே சூடாயிருக்கிறது போல் இருக்கிறது. தலை ஒரே வழுக்கை.

'ஆயுதபாணி' சொல்கிறான்: ''தலையிலே கொஞ்சம் எண்ணெய் வெச்சுத் தேய்டா. சில்லுனு இருக்கும். ஜமேதார் கொஞ்சம்

எண்ணெய் வெச்சுட்டுப் போயிருக்கான். 'பி' டிவிஷன் கைதிகளுக்குக் கொடுக்கிற எண்ணெய்ன்னு நினைக்கிறேன். கட்டாயமா கண்டராக்டருடைய 'தக்ஷிணை' யாகத்தானிருக்கும். மண்டையில் தடவிக்கோ. கொஞ்சம் மயிறு முளைச்சா, கொசு பிடுங்காது.''

இவன் தலை வழுக்கையாக இருக்கும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. மேரி ஸ்டூவர்ட்டின் சுருள் மயிர் உலகப் பிரசித்தம். சிரச்சேதம் செய்யுமிடத்துக்கு அவளை அழைத்துச் சென்றபோதே தெரிந்தது, அது அவளுடைய சொந்த மயிர் அல்ல, 'டோப்பா' உபயோகித்துக் கொண்டிருந்தாள் என்று. வழுக்கைத் தலைப் போலீஸ்காரன் ஒருவனைக் கூடப் பார்த்ததாக ஞாபகம் இல்லை. சந்நியாசி தலையிலுள்ள ஜடை போல இவர்கள் தலையில் போலீஸ் குல்லா!

நானும் அண்ணுவும் ஒரு தடவை அந்த ஜமீன்தார் அதோரி ஸிங் வீட்டுக்குப் போயிருந்தோம். அவனுடைய மானேஜர் எங்களை வரச் சொல்லிக் கடிதம் எழுதி இருந்தான். ஒரு குயுக்திக்காரச் சந்தால் குடியானவன் தன் நிலம் ஜமீன்தார் கையில் மாட்டிக் கொள்வதைத் தடுப்பதற்காக, அதை மகாத்மா காந்திக்குத் 'தானம்' பண்ணிவிட்டான். இந்த நிலம் ஜமீன்தாரின் 'மேளா' நடக்கும் நிலத்துக்குப் பக்கத்தில் இருந்தது. மேளா நடக்கும்போது இந்த இடத்தில்தான் வரிசை வரிசையாகப் பல கூடாரங்கள் போட்டிருப்பார்கள். இந்தக் கூடாரங்களில்தான் பெண்களின் ரூப லாவண்யங்கள் பேரம் பேசி விலை போகும். இந்த வியாபாரம் வலுத்து இடத்துக்குப் பற்றாக்குறை ஏற்பட்டு விட்டது. ஆகவே ஜமீன்தாரின் கண் இந்தச் சந்தாலின் நிலத்தின் மேல் விழுந்தது. குடியானவனின் எண்ணம் என்னவென்றால், மகாத்மாஜியின் ஆட்கள் ஜமீன்தாருடன் முதலில் சண்டை போடட்டும், அதற்குப் பிறகு நிலத்தை இவர்களுக்குச் சாசனம் செய்து கொடுக்காமலே ஏமாற்றி விடலாம் என்று.

முதலில் இந்தச் சூழ்ச்சிகளெல்லாம் எங்களுக்குப் புரியவில்லை. அப்பா கூடக் கேட்டார், ''இந்த நிலத்தைப் பெற்றுக்கொள்வதில் என்ன பிரயோஜனம்? என்ன அவசியம்?'' என்று. நான் மானேஜருக்குக் கடிதம் எழுதியிருந்தேன். அதற்குப் பதிலாகத்தான் இந்த அழைப்பு.

அவர்கள் வீட்டுக்குள் முதல் தடவை நுழைந்தபோது அதோரிஸிங்கை அடையாளமே கண்டுகொள்ள முடியவில்லை. அவன் தலையில் 'டோப்பா' இல்லை. தலை முழுவதும் மினுமினுக்கும் வழுக்கை. பின் தலையில் மட்டும் ஒரு கொத்து மயிர் நீளமாக வளர்க்கப் பட்டிருந்தது. அதை 'பிரில்லியண்டைன்' தடவி, ஒரு மாதிரி சுற்றி வளைத்துத் தலைக்கு முன்னால் வைத்திருந்தது. வழுக்கைத் தலையர்கள் எல்லாரும் நிஜமாகவே பணக்காரர்களாக இருப்பார்களோ? கணக்கு ஆசிரியர் ரமேஷ்வர்

பாபு ஜியாமெட்ரி சொல்லிக் கொடுப்பார். தலையின் நடு மையத்தில் அவருக்கு வழுக்கை. போர்டில் 'டேக் தி மிடில் பாயிண்ட்' என்று எழுதினார். கிளாஸ் முழுதும் கொல்லென்று சிரித்து விட்டது. இதனால் தான் பழைய நாட்களில் 'விக்' உபயோகித்து வந்தார்களோ?

அதோரிஸிங், மானேஜரிடம் ஆங்கிலத்தில் சொன்னான். மானேஜர் பாபு கேட்டார்: ''ஓஹோ, நீங்கதான் மாஸ்டர் சாஹேப்பின் (வாத்தியார் ஐயாவின்) பிள்ளைகளா? காங்கிரஸ் வாலண்டியர்கள், இந்தக் குடியானவன் நிலத்தில் ஒரு குடிசை போட்டுக் கொண் டிருக்கிறார்களாம். மேளாவில் இருக்கிற கூடாரங்களையெல்லாம் 'பிக்கெட்' செய்யப் போவதாகக் காதில் விழுந்தது. நேற்றிரவு இரண்டு வாலண்டியர்களைப் போலீஸ் பிடித்துக்கொண்டு போய்விட்டார்கள் என்று தெரியுமா உங்களுக்கு? இவர்கள் இருவரும் அந்தக் கூடாரத்தி லிருந்து வெளியில் வந்துகொண் டிருந்தார்கள். உங்களுக்கு இந்த மேளாவுக்கான போலீஸ் விதிகள் தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன். இரவு 12 மணிக்குப் பிறகு யாரும் கூடாரங்களிலிருந்து வெளியே வரக்கூடாது. '12 மணிக்கு முன்னால் கிளம்பிவிடு அல்லது காலை வரை அங்கேயே தங்கு'—இதுதான் சட்டம். யார் கையிலே விழுந்துட்டீங்க நீங்க? தவிர, யாருக்காக நீங்க சண்டை போடறீங்க? இந்தக் குடியான வனுக்கு இரண்டு, மூன்று பிகா நிலம் வேறு எங்கேயாவது நாங்கள் கொடுத்துவிட்டால் எங்க பக்கம் சாஞ்சுடுவான். காங்கிரஸுக்குப் பெரிய சந்தா வேணுமென்றால், நாங்கள் கொடுத்துவிட்டுப் போகிறோம். அதை விட்டுட்டு, உங்கள் இஷ்டம்போல் இந்த வம்பில் தலையைக் கொடுத்தீர்களானால் அப்புறம்...''

''ஆதாப், பாபு ஸாஹேப்.''

மணி அடிக்கும் வார்டர் வீட்டுக்குப் போகும்போது ஏன் மறுபடியும் எனக்கு 'ஆதாப்' செலுத்துகிறான்?

அவன் சொல்கிறான்: ''முந்தா நாள் மத்தியானம் தூக்கு ஸெல்லில் எனக்கு டியூட்டி இருந்தது. பாபுஜி நியூஸ் பேப்பர் படித்துக் கொண் டிருந்தார்.'' அவனாகவே அண்ணாவைப் பற்றிய சமாசாரம் சொல் கிறான். ரொம்ப நேரமா யோசித்துக் கொண்டிருந்தேன், அண்ணாவைப் பற்றிய இந்த வார்டர்கள் யாரிடமாவது விசாரிப்போமா வென்று.

ஒவ்வொரு தடவையும் வார்டர்கள் அணி மாற்றலாகி வெளியே வரும் போது அவர்களிடம், 'யாருக்கு தூக்கு ஸெல்லில் டியூட்டி?' என்று கேட்கலாமாவென்று தோன்றும். ஏதோ தயக்கத்தினால் கேட்க முடியாமல் போய்விட்டது. இவர்கள் எல்லாருக்குமே ஒரு வேளை நான் சாட்சி சொன்னது தெரிந்திருக்கும். ஜெயிலில் தானே விசாரணை

நடந்தது? என்னைப் பற்றி இவர்கள் என்ன நினைக்கிறார்களோ யாருக்குத் தெரியும்?

அண்ணா சம்பந்தமான விஷயங்களைத் தெரிந்து கொள்வதற்கு, இந்த எதிர்பாராத வாய்ப்பு எனக்கு மிகவும் ஆனந்தத்தைக் கொடுத்தது.

எவ்வளவு விஷயங்களை இந்த வார்டரை நோண்டி நோண்டிக் கேட்டேன்? நிஹால் ஸிங்கிடம் இருந்து கேட்டறிந்து கொண்ட ஒவ்வொரு விஷயத்துக்கும் இவனிடமிருந்து ஆதாரமும் ஒப்புதலும் பெற முயற்சி செய்தேன். தனிச் சாப்பாட்டுக்கு ஏதாவது ஏற்பாடு செய்யப் பட்டுள்ளதா என்று விளங்கவில்லை. அப்படி என்றால் இந்த நிஹால் சிங் எல்லாப் பணத்தையும் தானே சாப்பிட்டு விட்டானா? அண்ணாவுக்காக ஒருவிதமான ஏற்பாடும் செய்யவில்லையா என்ன? பாபுஜி எத்தனை நேரம் ஸெல்லில் குறுக்கும் நெடுக்குமாக நடக்கிறார், எப்பொழுது எழுந்திருக்கிறார், எப்பொழுது ஸ்நானம் செய்கிறார், எப்பொழுது தூங்கப் போகிறார்—எல்லா விஷயங்களுக்கும் வார்டர் பதில் சொன்னான். ஆனால் முக்கால்வாசிப் பதில்கள் ஏதோ ஊகிக்கப்பட்டதாகவே எனக்குப் பட்டன. விசேஷமாக எதையும் அவன் கவனித்திருந்ததாகத் தெரியவில்லை. ஒரு நாள் பாபுஜி பூனைக்குத் தயிர் வார்ப்பதைப் பார்த்தானாம். நிஜமாக இருக்கலாம். இவன் சொல்வதில் எது நிஜம், எது பொய் என்று கணிப்பதில் ஆனந்தம் இல்லாவிட்டால்கூட இவன் அண்ணாவைப் பார்த்திருப்பது என்னவோ உண்மை. வார்டர் போய்விட்டான். காலில் பட்டியோ, ஸாக்ஸோ இல்லை. ஒரே உஷ்ணம்! காக்கி நிஜாருக்குக் கீழே கால்கள் இரண்டும் வில் மாதிரி வளைந்திருந்தன.

சைனாக்காரனின் கால்கள்! 'அசுரனின் நிழல் முடியுமிடத்தில் நடக்கும் கால்கள் தொடங்குகின்றன'. ஒரே இருள்—கேட்டிலிருந்து வரும் விளக்கின் ஒளியில் பிரகாசிக்கும் சாலையின் ஒரு சிறு துண்டு தவிர. சுவரெல்லாம் இருள் மயம்—கேட்டின் இரும்புக் கம்பிகள்—மறுபடியும் கேட்டுக்கு உட்புறம்—என் திருஷ்டி திரும்புகிறது. மறுபடியும், மறுபடியும் இந்த ஒரு சிறு பிரகாசமான பாகத்துக்கே என் கண் இழுக்கப்படுகிறது. இந்தச் சிறிய உள் வெளிச்சத்துக்கு எதிராக வெளியில் தான் எவ்வளவு பரந்த இருள்! நட்சத்திரங்கள் பொறிக்கப் பெற்று பல மைல்கள் வியாபித்துள்ள ஆகாயம். என் திருஷ்டியையும் என் மனத்தையும் இவற்றால் இழுத்து நிறுத்த முடியவில்லை.

கேட்டுக்குள் நுழைந்தால் நடுவில் இந்த வெளிச்சம் நிறைந்த இடம். வலக் கைப்பக்கம் ஜெயில் ஆபீஸ், இடக் கைப்பக்கம் ஜெயிலர், சூப்பிரண்டெண்ட் ஆகியவர்களின் அறைகள். ஜெயில் ஆபீஸுக்கு வெளிப்

பக்கம் இரும்புக் கம்பிகளின் மேல் இரும்பு வலே போட்டிருக்கிறது. கைதிகளின் உறவினர்கள் வரும்போது இந்த வலேக்கு வெளியில்தான் நிற்க வேண்டும். இந்த ஜெயில் ஏற்பாடுகள் தான் எத்தனே விநோதம்! கொளுத்தும் வெயில், கொட்டும் மழை ஆகியவற்றிலிருந்து காத்துக் கொள்ள ஒரு கூரைகூடக் கிடையாது. எவ்விதமான 'கொடுக்கல் வாங்கலும்' நடந்துவிடக்கூடாது என்பதற்காக இந்த இரும்பு வலே. ஜெயில் விவகாரங்களில் அநுபவமற்ற மக்களுக்கு, ஜெயில் கேட்டிற்கு வந்தடைவதற்குத் தான் எத்தனே செலவு, எத்தனே சிரமங்கள்! வந்தடைந்த பிறகு இன்டர்வியூக்கான மனு எழுதிக் கொடுப்பதில் தான் எவ்வளவு கஷ்டங்கள்! எழுதிய மனுவை ஏற்றுக் கொள்ளச் செய்வதற்காகப் படும் சிரமம், செலவுகள் தான் எத்தனே! பைத்தியமே பிடித்துவிடும்.

இந்தப் பயங்கரத்தை யெல்லாம் கடந்து வந்த பிறகு, மணிக்கணக் காகக் காத்துக் கிடக்க வேண்டும். பிறகு சில நிமிஷங்களுக்கு இந்த வலேயிடுக்கு வழியாகப் பார்த்தால், ஒரு கைதியின் உடையில் பல காலம் எண்ணெய் பார்த்திராத தலே மயிருடன் வற்றி உலர்ந்த உருவம் தென்படும். நன்கு பரிசயமான ஆப்தரின் உருவந்தான் இது என்று பிடிபடவே கொஞ்ச நேரம் ஆகும். சாதாரண வார்டர்கள், மேட்டு கள் ஆகியோரின் பேச்சுக்கள் இவர்கள் மேல் வர்ஷித்துக் கொண்டே யிருக்கும். கைதியின் உடை, காக்கி யூனிஃபார்ம், போலீஸ் குல்லா இரும்புக் கம்பிகள், பூட்டு, சி. ஐ. டி.கள் எல்லாம் சேர்ந்து இவர்களேக் குழப்பும். இத்தனேக்குப் பிறகும் இவர்கள் மனம் பேதலித்துப் போகாமல் இருப்பது தான் ஆச்சரியம்!

இந்த நிலேயில் சில வார்த்தைகள் பேசுவதற்குள் 'டயம் ஆயிடுத்து' என்று சொல்லிவிடுவார்கள். திரும்பிப் போகும்போது இன்டர்வியூவுக் காக வந்தவர்கள் மனத்தில் இரண்டு உருவங்களே நிலேத்து நிற்கும்: ஒன்று இரும்புக் கம்பிகளின் முன்னுல் வந்து நிற்கும் கைதியின் உருவம்! பொங்கி எழும் ஆவல், சங்கோசம் கலந்த லஜ்ஜையின் கீறல்—இவை இரண்டும் கலந்த முகம். இரண்டாவது உருவம்: கைதித் திரும்பிப் போகும்போது தெரிவது:- பரிதாபம் தேங்கிய, செயலிழந்த, நம்பிக் கையற்ற முகம். கஷ்டப்பட்டுச் சிரிப்பை வரவழைத்துக் கொள்ளும் விஞன முயற்சி. புரண்டு அழுவதைவிட மனத்தை உருக்குவதாக இருக்கும்.

**1933**-இல் அப்பாவை ஹஜாரிபாக் ஜெயிலில் பார்க்கப் போயிருந் தேன். பெரியம்மா அப்பாவுக்காக ஒரு டிபன் காரியர் முழுதும் சாப் பாடு கொடுத்திருந்தாள். போய்ச் சேர்ந்த பிறகுதான் அன்று, அப்பா டிவிஷன் கைதிகளுக்கு இன்டர்வ்யூ கிடையாது, 'ஸி' கிளாஸ் கைதி

களுக்குத் தான் என்று தெரிந்தது. ரெயில்வே ஸ்டேஷனில் டிக்கெட் கொடுக்கும் ஜன்னலின் பக்கத்தில் கூடும் கூட்டம் போல், இண்டர்வியூவுக்காக வந்திருக்கும் மக்கள் இடித்துத் தள்ளிக் கொண்டிருந்தனர். இரும்புக் கம்பிகளுக்குப் பின்னாலேயும் கம்பிக்கு அருகில் வருவதற்காகவும் கைதிகள் ஒருவரை ஒருவர் தள்ளிக் கொண்டிருந்தனர். யார் யாரிடம் என்ன சொல்லுகிறார்கள் என்று இந்த இரைச்சலில் புரிவது மிகவும் கஷ்டம். ஒரு கிழவி அழுது பிடித்துக்கொண்டு தன் கிராமிய பாஷையில் ஏதோ சொல்லிக் கொண்டிருக்கிறாள். அவள் சொன்னது ஒரு வார்த்தையாவது அவளுடைய மகன் கைதிக்குப் புரிந்ததா என்பது சந்தேகம். ஒரு முண்டா ஜாதிக் கிழவி சில கொய்யாப் பழங்களும், ஒரு காகிதப் பையில் பக்கோடாக்களும் கொண்டு வந்திருக்கிறாள். இதைத் தன் பிள்ளைக் கைதிக்குச் சாப்பிடக் கொடுப்பதற்காக ஒரு வார்டரிடம் கெஞ்சிக் கொண்டிருக்கிறாள். வார்டர் விலையை உயர்த்திக் கொண்டிருக்கிறான். ''டாக்டர் ஐயா உத்தரவு இல்லாமல் நான் எப்படிக் கொடுக்க முடியும்? 'ஸி' கிளாஸ் கைதிகளுக்கு வெளியிலிருந்து சாமான் கொடுப்பதற்கு உத்தரவு இல்லை. ஒரு ரூபாய்க்குக் குறைஞ்சு நான் 'ஸி' கிளாஸ் கைதிக்குச் சாப்பாடு கொடுக்க முடியாது. டாக்டர் ஐயா பர்மிஷனுக்காக இன்னும் ஒரு ரூபாய், என் வேலை போய் விடுமாக்கும். காசு இல்லாமல் நான் இதெல்லாம் செய்ய முடியாது.'' ரொம்பக் கெஞ்சி, கையைக் காலைப் பிடித்த பிறகு ஒரு ரூபாய்க்கு ஒத்துக்கொண்டான். இந்த ஏழை முண்டாவின் ஒரு வருஷத்தியச் சேமிப்பு இந்த ரூபாய். தன் குல்லாவுக்குள் ரூபாயைச் செருகிக் கொண்டான் வார்டர். ஆனால் அந்தப் பக்கோடா பொட்டலம் சேர வேண்டிய இடத்தில் போய்ச் சேர்ந்ததா என்று யாருக்குத் தெரியும்?

கேட்டுக்கு இடப் பக்கம் சுவரில் ஒரு கண்ணாடி போட்ட நோட்டீஸ் போர்ட். கறுப்புப் பலகையின் மேல் பல வெள்ளைக் காகிதங்கள் ஒட்டியிருக்கின்றன. எதைப் பற்றிய அறிவிப்புக்கள் என்று தெரியவில்லை. வேறு ஜெயில்களில் பார்த்திருக்கிறேன். அநேகமாக, ஜெயில் கமிட்டியின் மெம்பர்களின் பெயர்கள் மட்டுந்தான் இருக்கும். எவ்வளவு நோட்டீஸ்கள்! ஐ.ஜி. சீக்கிரமே வரப் போகிறார் போல் இருக்கிறது. நோட்டீஸ் போர்டுக்குக் கீழே டெலிபோன். இதற்கு மேற்கே எடை பார்க்கும் ஒரு மெஷின்—ரெயில்வே ஸ்டேஷன்களில் இருப்பவை போன்றது. சரியாகக் கேட்டின் நடுவில் ஒரு ரெயில்வே தண்டவாளம்—நேரோ கேஜ் லைன் அளவுக்கு அகலம். இதே மாதிரி டி. எச். ரெயில்வேயைச் சேர்ந்த கிஷன்கஞ்ச் லைனில் ஒரு தடவை இன்ஜின் ஒரு பசு மாட்டோடு முட்டிக் கொண்டது ஞாபகம் வருகிறது.

சுங்கிபாடாவுக்குப் பக்கத்தில் ரெயில் தடம் புரண்டு விட்டது. ஜெயில் ஃபாக்டரியில் தயாராகும் சாமான்களை எடுத்துச் செல்லும் ட்ராலி இந்த கேட் நடுவே செல்லும் தண்டவாளத்தில் போகும் என்று நினைக்கிறேன். தண்டவாளங்களுக்கு இடையில் சில இடங்களில் சாணி விழுந்து கிடக்கிறது. காளைமாட்டு வண்டி வந்து போயிருக்க வேண்டும். ஜெயிலர் துரையும், கலெக்டரும் வரப் போகிறார்கள் என்று எல்லாரும் குதித்துக் கொண்டிருக்கிறார்கள் என்றாலும் இந்தச் சாணியை அப்புறப் படுத்திச் சுத்தம் செய்ய வேண்டும் என்று ஒருவருக்கும் தோன்றவில்லை. ஒரு வேளை தோன்றியிருந்தாலும் காலையில் கைதிகள் வருவதற்கு முன்னால் யார் சுத்தம் செய்வார்கள்? மதிப்புக்குரிய பெரிய மனிதர் களான வார்டர்கள் இத்தகைய காரியங்களைச் செய்வார்களா என்ன?

ரெயில் தண்டவாளம், நோட்டீஸ் போர்ட், வேயிங் மெஷின், டெலி போன், உருளைக் கற்களான தரை இவை எல்லாம் இந்த இடத்தை ரெயில்வே ஸ்டேஷன் மாதிரி ஆக்கியிருக்கின்றன. பிளாட்ஃபாரத்தில் கம்பளியை விரித்துப் போட்டுக் கொண்டு ரெயில் வருவதற்காகக் காத்திருக்கும் பிரயாணியைப் போன்ற பிரமை தட்டுகிறது.

சௌரீனிடம் சொல்லி வைத்திருக்கிறேன் : ராமகிருஷ்ண மிஷன் ஸத்கார் கமிட்டியிடம் சொல்லி வைக்கும்படி, அவர்கள் எல்லாரும் நாளைக் காலை கடியாபாத் படித்துறையில் வந்திருக்க வேண்டும் என்று.

சிறிய ஊர். முக்கால்வாசி மக்கள் ஏதாவது ஒரு வகையில் சர்க்காரு டன் தொடர்பு உடையவர்கள், வக்கீல்கள், ப்ளீடர்கள், குமாஸ்தாக் கள்—அவர்கள் எல்லாருக்கும் அரசின் தாற்காலிக நோக்குகளைக் கணித்து அதற்கு இசைந்தவாறு நடந்துகொள்ள வேண்டிய நிர்பந்தம். ஒருவேளை அவர்கள் வராவிட்டால்? போலீஸுக்குப் பயந்து வராமலும் இருக்கக் கூடும். அப்பொழுது, ஜெயில் அதிகாரிகள் தகனம் செய் வார்கள். ஐந்து ரூபாய், ஒரு மோட்டார் லாரி எல்லாருக்குமே கொடுப் பார்கள். ஓர் ஊர்வலம் எடுக்க வேண்டும் என்று சௌரீனுடைய எண்ணம். வியாழக்கிழமை கலெக்டர் துரையைப் பார்க்கப் போயிருந்தேன்.

'ஊர்வலம்' அது, இது என்று ஒன்றும் ஏற்பாடு செய்யக் கூடாது என்ற நிபந்தனையின் பேரில் பிணத்தை என்னிடம் கொடுப்பதற்குச் சம்மதம் தெரிவித்தார். மக்கள் ஒப்புக் கொள்ள மாட்டார்கள் என்று நினைக்கிறேன். மக்கள் சுடுகாட்டுக்கு நேரே போய்விட்டார்களானால் அங்குஎவ்வளவு கூட்டம் கூடியிருந்தாலும் பரவாயில்லை. என்னுடைய வாக்கு தடைப்படாது. ஆனால் யாரை என்று நிறுத்துவது? ஜூட் வொர்க்கர்ஸ் யூனியன் காரியதரிசி, எக்கா ட்ரைவர் யூனியன் பிரசி டெண்ட்—இந்த யூனியன் அங்கத்தினர்களை எல்லாம் தடுத்து நிறுத்து

வது யார்? மேலும் கலெக்டர் துரையிடம் நான் என்ன ஒப்புக் கொண்டேன், என்ன ஒப்புக்கொள்ளவில்லை என்பனவெல்லாம் அவ்வளவு முக்கியமா? நடக்கும் ஊர்வலம், அண்ணுவின் உடல், பீலு பாபுவின் உடல், தியாகியின் உடல், 'வாத்தியார் ஐயாவின்' பிள்ளை யின் உடல் இதற்கு ஊர்வலம் எடுக்கக்கூடாது என்றால் வேறு எதற்கு எடுப்பார்களாம்? வண்டிகள், மோட்டார்கள், பிரம்மாண்ட மக்கள் கூட்டம், பூமாலைகள், தேவதாரு இலைகள், ஒவ்வொரு வீட்டிலிருந்தும் தெளிக்கப்படும் கங்கா ஜலம், இரண்டாம் மாடியிலிருந்து போடப்படும் பனை ஓலை விசிறிகள்—இந்த விசிறிகளுக்காக இடித்து நெறுக்கிக் கொள்ளும் கூட்டம், முடிவில்லாத பாம்புபோல் வளைந்து செல்லும் ஜனப்பிரவாகம், நிசப்தம் — 'காந்திஜிக்கு ஜெய்' கிடையாது, 'பீலு பாபுவுக்கு ஜெய்' கிடையாது. சோக கீதம் கிடையாது. கட்டுக் கடங்காத கூட்டத்தின் முரட்டுத்தனமான நடவடிக்கை ஒன்றும் இருக்காது. அதற்குப் பதிலாக மாபெரும் துக்கத்தின் அழுக்கம் இருக்கும். ஒரு தேச பக்த குடும்பத்தின்—அதில் ஒரு நபரைத் தவிர— எல்லையற்ற அநுதாபம் இருக்கும். உறங்கிய தேசபக்தியின் வார்த்தை யில்லாத சாபம் இருக்கும். நீர்த்து அணைந்து போய்விட்டது போல் தோன்றும் சாம்பலின் அடியில் பயனற்ற ஆக்ரோஷத்தின் பொறி அணையாது எரிந்து கொண்டிருக்கும்.

திராணியற்ற அமைதி நிறைந்த கூட்டம் ஒரு சிறிய சைகையினால் வெறிபிடித்து, மூர்க்கமான கூட்டமாக மாறி என்னைத் துண்டுத் துண் டாகப் பிய்த்து எறிந்து விடக்கூடும். பூர்ண ஹர்த்தால். பெரியம்மா வீட்டுக்கு முன்னால் ஊர்வலம் ஒரு நிமிஷம் நிற்கும். உடலை மறைக்கும் புஷ்பங்களை ஒதுக்கிவிட்டு ஒரு நிமிஷம் அண்ணுவைப் பார்க்க முடியுமா அவளால்? முகம் மாத்திரம் புஷ்பங்களால் மறைக்கப்படாமல் இருக்கும். கழுத்தைச் சுற்றி ஒரு துணியைக் கட்டி மறைத்திருப்பேன். புஷ்பங்களும், சந்தனமும் முகத்தின் பயங்கரத்தை மறைத்திருக்கும். வாயின் ஓரத்திலிருந்து கொஞ்சம் ரத்தம் கசிந்து உறைந்து போயிருக் கலாம். பார்த்தால் சிவப்புச் சந்தனம் தடவியது போல் இருக்கும். ஊஹூம்! பெரியம்மாவின் வீட்டுக்கு முன்னால் ஊர்வலத்தை நிறுத்தக் கூடாது.

சுடுகாடு பெரிய மக்கள் சமுத்திரமாக இருக்கிறது. எங்கே பார்த் தாலும் சிவப்புக் குல்லாவாக இருக்கிறது. துப்பாக்கி தரித்த பாடி கார்ட் சூழ மாஜிஸ்ட்ரேட், போலீஸ் சூப்பிரண்ட், இரண்டு பேரும் மோட்டார் காரில் வந்து இறங்குகிறார்கள். எத்தனையோ தானங்கள் செய்த அநுபவஸ்தன் மனதி தா சிதையை அடுக்குகிறான். உணர்ச்சி கொந்தளிப்புகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவன் அவன்.

''முனிசிபாலிடி கட்டைதானே? சுடுகாடு ஆரம்பித்த நாளில் வாங்கி ஸ்டாக் பண்ணினது. நான்தான் பார்த்துக்கொண்டு வருகிறேனே? ஒரேடியா அரிச்சுப் போயிருக்கு. ஏன் அரிச்சுப் போகாது? இதுவோ 'தேர்ட் கிளாஸ்' முனிசிபாலிடி. கட்டைச் செலவுக்கு அதுக்கு ஏது பணம்?'' என்கிறான் அவன்.

தகனம் செய்யும் நாட்களில் மனதி தாவுக்கு ஒரு புட்டி நாட்டுச் சாராயம் வாங்கிக் கொடுக்க வேண்டும். எல்லாருக்கும் தெரிந்த விஷயம். இன்றைக்கும் என்னிடமிருந்து மனதி தா இதை எதிர்பார்ப்பானு? சாம்பலை எடுத்துக் கொள்வதற்குத் தான் எத்தனை நெரிசல்? பெண்கள் தங்கள் புடைவைத் தலைப்புக்களில் கொஞ்சம் வைத்துக் கட்டிக் கொள்கிறார்கள்—வேறு சிலர் தங்கள் குழந்தைகளின் நெற்றியில் தடவுகிறார்கள். இந்தச் சமயத்தில் எந்தத் தாயாராவது தன் குழந்தையைப் பார்த்து, 'நீயும் பீலு பாபு மாதிரி ஆகணும்' என்று ஆசீர்வாதம் பண்ணுவாளா? ஒரு நாளும் நடக்காது.

ஒரு தடவை சின்ன அம்மாவுடன் நானும் அண்ணுவும் ஆசிரமத்துக்கு வந்து சேர்ந்தோம். அம்மாவின் கையில் விசிறி. இரண்டு கட்டில்களில் அண்ணுவும் நானும் படுத்துக் கிடந்தோம். மனத்தில் எழுந்த கவலையையும் வேதனையையும் மறக்கும் முயற்சியில் அம்மா எங்களைப் பார்த்து, ''என்னைப் பைத்தியமாக அடித்துவிட்டுத் தான் போகப் போகிறீர்களா?'' என்று கேட்டாள். அம்மா சொன்னது சரிதான். ஒரு கணத்தில் கூட்டத்தின் தன்னடக்கம் உடைந்து போகிறது. ''ஜே!——காந்திஜிக்கு ஜே''—''ஜே! பீலு பாபுக்கு ஜே!'' ''அடிமை வாழ்வு நாசமாகட்டும்.''

ஜய கோஷத்தின் முரட்டுச் சப்தம் வானத்தை எட்டி எதிரொலிக்கும். மில்லில் வேலை செய்யும் அந்தக் கூலி வழக்கம்போல் சரியான சமயத்தில் இந்த 'கோஷம் போடும்' தலைமையை ஏற்றுக்கொள்வான். இவ்வளவு நலிந்த உடம்போடு கூடிய மனிதனுக்கு இவ்வளவு உரக்கக் கத்தும் சக்தி எங்கிருந்து வந்தது? அவன் 'வந்தே' என்று சொல்லுவான், கூட்டம் 'மாதரம்' என்று எதிரொலிக்கும். ''பீலு பாபுவுக்கு'' என்பான் அவன். ''ஜே'' என்று கத்தும் கூட்டம். கோஷம் எடுக்கும் ஒவ்வொரு தடவையும் வலக் கையை உயரத் தூக்குவான். ஆகாசத்தில் இருக்கும் யாரையோ சுட்டிக்காட்டுவது மாதிரி இருக்கும். போலீஸ் கூட்டத்தை ஒரு பக்கம் தள்ளிவிடுகிறார்கள். மெல்லிய 'லத்தி சார்ஜ்' செய்வதற்குக்கூடத் தேவைப்படவில்லை. கூலித் தலைவனின் தொண்டை வற்றிப் போய் விடுகிறது. மறுபடியும், மறுபடியும் கையை உயர்த்திக்கொண்டு ஏதோ சொல்கிறான். ஆனால் வாயிலிருந்து வரும் வார்த்தைகள் பஞ்சர் ஆன டயரிலிருந்து வரும் காற்றுப் போல் சப்தமற்றிருக்கிறது.

கேட்டுக்கருகில் இருக்கும் சூப்பிரண்ட் அறைக்குப் பக்கத்திலிருக்கும் சுவரில் நாலுவிதமான தண்டனைச் சாதனங்கள் தொங்குகின்றன. பல ரகமான கைவிலங்குகள், சங்கிலிகள், கட்டைகள். ஜெயிலுக்குள் யாராவது வார்டர்களிடம் எதிர்த்துப் பேசியிருப்பான். சாதம் போடும் கரண்டி ''5 சடாங் இல்லை $3\frac{1}{2}$ சடாங் அளவுதான் இருக்கிறது'' என்று யாராவது ஜெயிலர் துரையிடம் பிராது கொடுத்திருப்பான். வேறு யாராவது, ''மூன்று மாதமாகப் பரங்கிக்காய் கறியே கொடுக்கிறார்கள், வேறு ஏதாவது கறி ஏன் கொடுக்கக்கூடாது?'' என்று சண்டை போட்டிருப்பான். மற்றொருவன் ஒரு வேளை, பலாப்பழத்தைத் திருடி இருப்பான். இந்த மாதிரி கணக்கிலடங்காத 'ஜெயில் அஃபென்ஸஸ்'கள். இவற்றைத் தண்டிப்பதற்காகத்தான் இந்தச் சாதனங்கள் சேர்த்து வைக்கப்பட்டிருக்கின்றன.

பெரிய பெரிய பீப்பாய்களில் நூற்றுக்கும் மேலான தடியான மூங்கில் லாட்டிகள் வைக்கப்பட்டிருக்கின்றன. பக்கத்திலிருக்கும் ஸ்டாண்டில் உள்ள துவாரங்களில் இன்னும் பல பிரம்பு லாட்டிகள் செருகப் பட்டிருக்கின்றன. இந்த லாட்டிகளைக் கையிலே சுழற்றுவதற்குச் சௌகரியமாக இவற்றின் ஓரங்களில் ஒரு சிறிய துவாரம் செய்து அதில் ஒரு நாடா மாட்டியிருக்கிறது. இதற்கு மேலே சுவர்களில் அநேக போலீஸ் 'பேடன்'கள் மாட்டியிருக்கின்றன. வலப் பக்கத்துச் சுவர்களில் அடிக்கப்பட்ட கொக்கிகளிலிருந்து சில சிவப்பு வாளிகள் தொங்குகின்றன. அதன் மேல் வெள்ளை எழுத்தில் ''Fire'' என்று எழுதியிருக்கிறது. ஒரு மூலையில் மூங்கில் தடிகளின் ஓரத்தில் துணியைச் சுற்றி வைத்த தீப்பந்தங்கள் டஜன் கணக்கில் கிடக்கின்றன. இரவில் 'ரோல் கால்' எடுக்கும்போது யாராவது இல்லையென்றால், கெரோசினில் நனைத்துப் பற்றவைத்துக் கொண்டு கைதிகளைத் தேடுவதற்காக வார்டர்கள் உபயோகிக்கும் சாதனங்கள் இவை. ஒரு ஹரிக்கேன் விளக்கு அல்லது டார்ச் லைட் இவர்களுக்குக் கொடுத்திருந்தால் இதைவிடச் சௌகரியமாக இருக்கும்.

மற்றும் ஒரு முறை, கைதிகள் தப்பி ஓடும் காட்சி 'ரிஹர்ஸல்' நடந்தது. உஷார்! 'பைத்தியக்கார மணி' அடிக்கிறது. துரை சென்ட்ரல் டவரில் நின்று கொண்டிருக்கிறார். தங்களுடைய கெட்டிக் காரத்தனத்தைத் துரைக்குத் தெரியப்படுத்தும் ஆர்வத்தில் தீப்பந்தங்களை எடுத்துக் கொண்டு வார்டர்கள் இங்குமங்குமாக ஓடிக்கொண்டிருக்கின்றனர். கக்கூஸ்களையும், மரங்களையும் அவர்கள் விசேஷமாகக் கவனிக்கின்றனர். வார்டர் யோகிலால் சத்தம் போட்டுக்கொண்டு, ''சூப்பிரண்ட் சாஹேப், சூப்பிரண்ட் சாஹேப், நிஜமாகவே கைதி ஓடிப்போய் விட்டானா? அல்லது வெறும் ஒத்திகையா?'' என்று

கேட்கிறுன். ஒத்திகை முடிந்ததும் சூப்பிரண்ட் எங்கள் வார்டுக்கு வந்தார். நாங்கள் எல்லாரும் நல்ல குழந்தைகளாய் எங்கள் படுக்கைகளில் படுத்துக் கொண்டிருந்ததைப் பார்த்தார். பிறகு இந்த விவகாரம் பெரிதாக்கப்படவில்லை.

டங் டங் என்று 12 மணி அடிக்கிறது.

இன்னும் மூன்று மணி நேரந்தான். இப்போது வழக்கிலிருக்கும் புதிய டயம் பிரகாரம் 5½ மணிக்கு முன்னுல் சூரியோதயம் இருக்காது. பிறகு இவர்கள் எல்லா வேலைகளையும் சூரியோதயத்துக்கு முன்னரே முடித்துக்கொள்ள வேண்டும். ஏனென்றுல் சூரியோதயம் ஆனவுடனேயே ஜெயிலின் அன்றுடக் காரியங்கள் ஆரம்பித்து விடும். ஏழு மணிக்கு ஃபாக்டரி திறக்கிறது. அதற்கு முன்னதாகவே காலைக் கடன்களை முடித்தாக வேண்டும். 5½ மணிக்கு அடுப்பு மூட்டாவிட்டால் ஏழு மணிக்கு முன்னுல் காலை ஆகாரத்தை எப்படி முடிக்க முடியும்? ஜெயில் சமையலறையில் வேலை செய்யும் கைதிகள் தங்கள் காலைக் கடன்களை முடிப்பதற்கு டயம் கொடுக்க வேண்டாமா? ஆகவே ஐந்து மணிக்கு முன்னுலேயே காரியம் முடிந்துவிடும்.

அண்ணு இப்பொழுது என்ன செய்து கொண்டிருப்பான்? ஒரு வேளை இரும்புக் கம்பிகளைப் பிடித்துக்கொண்டு இருட்டில் நட்சத்திரங்கள் பொதித்த ஆகாசத்தைப் பார்த்துக்கொண்டு, வானுக்கும் பூமிக்குமிடையே உள்ள எல்லா விஷயங்களைப் பற்றியும் சிந்தித்துக் கொண்டிருப்பான். என்னை ஒரு தடவையாவது நினைப்பாஞு?

ஒருக்காலும் அண்ணு என்னைத் தப்பர்த்தம் செய்து கொள்ள மாட்டான்: இதைப்பற்றி அண்ணுவிடம் ஒரு தடவை மாத்திரம் மனம் விட்டுத் துப்புரவாகப் பேசியிருந்தால்! என்னுடைய நடத்தையை அண்ணுவுக்குச் சரியாகக் கணித்துப் புரியவைக்க வேண்டிய அவசியமே இல்லை என்று எனக்குத் தெரியும். ஆஞல் என் நெஞ்சை அமுத்தும் பாரம் அதஞல் கொஞ்சம் குறைந்திருக்கும்.

அவனுடைய பார்ட்டியின் ப்ரோக்ராம் செயல்படுத்தப்பட்டால் ஃபாஸிஸ்ட் சக்திகளைப் பலப்படுத்துவது ஆகும். இது அண்ணுவுக்குப் புரியவில்லையா? ஆஞல் என்னுடைய தர்க்கரீதியான வாதங்களையும் மீறி என் உள்ளத்தில் ஏதோ ஒன்று குத்திக்கொண்டே இருக்கிறது. பகுத்தறிவுக்கு அப்பாற்பட்ட அர்த்தமற்ற பச்சாதாபமாக இருக்கலாம். என்னுடைய பார்ட்டியின் இந்த ஊர்க்கிளையின் அங்கத்தினர்கள் கூட நான் அண்ணுவுக்கு எதிராகச் சாட்சி சொன்னது தப்பு என்று நினைக்கிறுர்கள். அண்ணுவுக்கு எதிராகச் சொன்னேன் என்பதற்காக அல்ல. நம் தேச மக்களுக்கு அவர்கள் தப்பை எடுத்துச் சொல்லி, அவர்கள் கண்களை மறைக்கும் பிரமையை நீக்கவேண்டும்.

தேவைப்பட்டால் அவர்கள் கண்ணைக் குத்திக்கூட இந்த மாயையை நீக்கவேண்டும் என்பதுதான் அவர்கள் சித்தாந்தம். ஆனால் அதற்காக நம்மவர்களைப் போலீஸுக்குக் காட்டிக் கொடுக்கவேண்டும் என்று அர்த்தமில்லை. உலகில் மற்றவர்கள் என்ன வேண்டுமானாலும் நினைத்துக்கொள்ளட்டும். ஆனால் என்னுடைய பார்ட்டி மனிதர்களே என் செய்கையைப்பற்றி இவ்வாறு நினைத்தால் அது மிக மிகத் துரதிர்ஷ்டமானது.

மார்க்ஸிய வாதத்தின் சூட்சுமங்களை நான் புரிந்து கொள்ளவில்லை போலும்! அண்ணாவின் பார்ட்டியில் இருந்தவரை அண்ணாவின் ஆணைகளையே சிட்சையாகக் கருதி வந்தேன். அவனுடைய ஒவ்வொரு வார்த்தையையும் வேதவாக்காக மதித்து வந்தேன்.

1942-ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் அண்ணா ஹஜாரிபாக் ஜெயிலிலிருந்து விடுதலை செய்யப்பட்டான். ஸெக்யூரிடிக் கைதிகளின் கேஸ்கள் பரிசீலனை செய்யப்பட்டன. ஹைகோர்ட் ஜட்ஜ் ஒருவருக்கு இந்தப் பொறுப்பு கொடுக்கப்பட்டது. அவர் பெயர்—ஏதோ மராட்டி பெயர்—ஆமாம்—ஜஸ்டிஸ் பாடே. அண்ணா விடுதலை அடைந்த பிறகு ஏப்ரல் மாதத்தில் எங்களில் சிலரைத் தேயூலிலிருந்து ஹஜாரிபாக் ஜெயிலுக்குக் கொண்டு வந்தார்கள். கைதிகளை அவரவர்கள் பிரதேசத்துக்கு அனுப்புகிறார்கள் என்று கேள்விப்பட்டேன். அதற்குப் பிறகு என்னை 15 ஜூனில் விடுதலை செய்தார்கள்.

ஃபாசிஸத்தை எதிர்க்கும் பார்ட்டிகளை மேலும் ஜெயிலில் வைக்க வேண்டிய அவசியமில்லை என்று சர்க்கார் நினைத்தது.

இந்தத் தடவை ஜெயிலிலிருந்து வெளியில் வந்த போதிருந்த ஆனந்தத்தைப் போல் வேறு ஒரு தடவையும் அநுபவித்ததில்லை. எல்லாம் இழந்த வர்க்கத்தின் விரோதியான ஃபாஸிஸத்தை எதிர்த்து நேராகவே சண்டை போடப் போகிறேன். இதில், தேவைப்பட்டால் சிரித்துக் கொண்டே உயிரைத் தியாகம் செய்யும் வாய்ப்பை அளித்த சர்க்கார் பேரில் என் மனதில் நன்றிப்பெருக்கு எடுத்தது

ஸ்பெயின் தேசத்துப் பாட்டாளிகளின் தியாகக் கதைகள், செஞ்சீனாவின் மரணத்தை வெல்லும் வீரத்தின் கதைகள், மாசேதுங்கின் வீரியமும், ஒரே குறிக்கோள் கொண்ட திண்ணமும், சந்திரதேவின் வகுப்பில் ஒவ்வொரு தினமும் கற்ற பாடங்கள்—இவையெல்லாம் என் ஒவ்வொரு நரம்பையும் உற்சாக வெறியில் சிலிர்க்கச் செய்தன.

எங்கள் ஜில்லாவில் எத்தனை பணிகள் காத்துக் கிடக்கின்றன? இந்த மக்களுக்கு மஹாத்மாஜியையும் 'வாத்தியார் ஐயா'வையும் தவிர வேறு யாரையும் தெரியாது. இந்தக் குருட்டு நம்பிக்கை நிறைந்த

பூமியில், பகுத்தறிவை விதைத்து, வளர்த்து, சாகுபடி செய்ய வேண்டும். ஆசிரமத்துக்குத் திரும்பிப் போய் ஒரு முறை அம்மாவைப் பார்க்காமல் இருக்க முடியாது. என்னுடைய ஆப்பரேஷனைப்பற்றி ரொம்பக் கவலைப்பட்டுக் கொண்டிருப்பாள் அவள். ஒரு முறை அங்கே போய் எல்லாரையும் பார்த்துப் பேசிவிட்டு என்னுடைய காரியத்தை ஆரம்பிக்க வேண்டும். மோட்டார் பஸ்; கோடர்மா ஸ்டேஷன்; கயா ஸ்டேஷன்; வெயிட்டிங் ரூமில் தான் எத்தனை கொசு! பிறகு கியூல், ஸாஹேப்கன்ஜ், மனிஹாரி காட், காடிஹார்—எனது பிரயாணத்துக்கு முடிவே இல்லை.

இந்த அளவுக்கு மீறின உற்சாகந்தான் இன்றைய நிலைக்கு என்னைக் கொண்டு வந்து விட்டுவிட்டது. அண்ணா, பொது மக்களின் அபிப் பிராயம்; இதையெல்லாவற்றையும்விடச் சகிக்க முடியாதது என்னுடைய பார்ட்டியின் இந்த ஊர் காம்ரேட்களின் அபிப்பிராயம். நான் செய்தது தவறா? ஒருக்காலும் இல்லை. உலகத்தில் எல்லாமே தவறாக இருக்கலாம், என் செயலில் தவறில்லை.

1942-இல் நடந்த சம்பவங்களை மனத்தில் வைத்துக்கொண்டு நான் செய்ததை எடை போடவேண்டும். தேசம் முழுவதும் திடீரென்று மின்சாரம் போன்ற ஒரு சக்தியால் தூண்டப்பட்டுத் திசை தடுமாறி வெறிபிடித்து நடந்து கொள்ள ஆரம்பித்துவிட்டது. எங்கே சென்றாலும் பைத்தியக்கார ஆஸ்பத்திரியின் கதவு திறந்து விட்டாற் போல் இருக்கிறது. உணர்ச்சி வசப்பட்டு வெறி பிடித்த மக்கள், என்ன செய்வது என்று புரியாமல் அலைந்தனர். மைல் கணக்கில் ரெயில் தண்டவாளங்கள் பிடுங்கி எறியப்பட்டன. இரும்புத் தண்ட வாளங்கள், கனமான ஸ்லீப்பர்கள், மற்றும் என்னென்னவெல்லாமோ பிடுங்கப்பட்டுத் தூரத்திலுள்ள நதியில் எறியப்பட்டன. தந்திக் கம்பிகளை அறுப்பது, தபால் ஆபீஸ், கள்ளுக்கடை இவற்றுக்கு நெருப்பு வைப்பது போன்றவை கிராமத்துச் சிறுவர்களின் பொறுப்பு. இவையெல்லாம் துச்சமான பணி என்று கணித்த பெரியவர்கள், தங்கள் கைகளை இதில் அழுக்காக்கிக் கொள்ளவில்லை.

தந்திக் கம்பிகள் எத்தனை மெல்லியது, அதை அறுப்பது எவ்வளவு சுலபம் என்று இத்தனை நாள் யாரும் நினைத்துப் பார்த்ததில்லை. ப்ளையர்ஸ், கத்திரிக்கோல், கத்தி போன்ற கருவிகள் ஏதும் தேவை யில்லை. கம்பி மேல் ஒரு கயிற்றைப் போட்டு சிறுவர்கள் ஊஞ்சல் ஆடினால் போதும். கம்பி அறுந்து போகிறது. வேறு இடங்களில் அதை முறுக்கினாலே அறுந்து போகிறது. பெரியவர்கள் இதைவிட முக்கிய மான புதிய பொறுப்புக்களை வேண்டினார்கள். வேறு என்ன செய்வது என்று யோசித்துப் பார்த்து ஒன்றும் பிடிபடவில்லை. ரெயில்வே

ஸ்டேஷன், தாசில்தார் ஆபீஸ், சப்-ரெஜிஸ்ட்ரார் ஆபீஸ், போலீஸ் ஸ்டேஷன் ஆகியவற்றின் கதை முடிந்துவிட்டது. கையில் வேறு ஒரு வேலையும் இல்லே. எங்கே சென்றாலும் அவர்கள் கண் முன்பே ஆட்சியின் தூண்கள் நொறுங்கி விழுந்தன. கொடுங்கோல்மையின் சின்னங்கள் தலை குனிந்தன. சர்க்கார் ஊழியர்கள் மக்களின் தயவைத் தேடிக் காலில் விழுந்து கொண்டிருந்தனர். மார்வாடிகள் கேட்பதற்கு முன்னரே கை நிறையச் சந்தா செலுத்துகிறார்கள். ஜமீன்தாரின் குமாஸ்தாக்கள் ஓர் ஆண்டின் கிஸ்தியைத் தள்ளுபடி செய்வதாக வாக்களிக்கிறார்கள். காரியஸ்தர்கள் விருந்துக்கு ஏற்பாடு செய்கிறார்கள். போலீஸ்காரர்கள் காந்திக் குல்லா அணிந்து கொண்டு மூவர்ணக் கொடியைக் கையில் பிடித்துக் கொண்டு மக்களை மகிழ்விக்க முயற்சி பண்ணிக் கொண்டிருக்கின்றனர். சௌகிதார் 'யூனிஃபார்மை'க் கொளுத்திவிட்டு, தன் வேலையை ராஜிநாமாச் செய்கிறான். ஏழைக் குடியானவர்களுக்கு ஒரே ஆனந்தம். இனிமேல் ஜமீன்தாருக்குக் கிஸ்தி செலுத்த வேண்டியதில்லே. சௌகிதாரி வரி கொடுக்க வேண்டாம். புதிதாகச் செய்வதற்கு வாய்ப்பு ஒன்றும் தோன்றவில்லே. ஃபார்பிஸ் கஞ்ச் லயனில் சரியாக இருந்த, அதாவது பிடுங்கி எறியப்படாமல் இருந்த தண்டவாளங்களின்மேல் மக்களின் ஆணைப்படி இஞ்சின் டிரைவரும், கார்டும் ரெயிலே ஓட்டினர். ஒவ்வொரு ஸ்டேஷனிலும், டிக்கெட் ஜன்னலுக்கு மேல் 'டிக்கெட் வாங்கக்கூடாது' என்று எழுதி ஒட்டியிருக்கிறது. கட்பநைலி ஸ்கூலிலிருந்து வந்த சில மாணவர்கள் விடாமல் கோஷமிட்டுக் கொண்டிருக்கிறார்கள்: ''யாருடைய ரெயில்? மக்களுடையது!''; ''யாருடைய ஸ்டேஷன்? நமது ஸ்டேஷன்!''; ''யாருடைய இன்ஜின்? நமது இன்ஜின்.''

ஒரு நபர் 'டிக்கெட் செக்கர்' வேலே செய்து கொண்டிருக்கிறார். யார் கையில் டிக்கெட் இருக்கிறதோ, அவர்களையெல்லாம் ரெயிலிலிருந்து இறக்கி விட்டுக்கொண்டிருக்கிறார்! யாரோ ஒரு பிரயாணி 'வீக் என்ட் ரிடர்ன் டிக்கட்டின்' (week end return ticket) ஒரு பாதி கையில் வைத்திருந்தார். ''உடனே இறங்கு. உனக்குச் சுய ராஜ்யம் வேண்டாம் இல்லே?'' அந்தப் பிரயாணி கையைக் காலேப் பிடித்து வேண்டிக்கொண்டான்; ''இது பழைய டிக்கெட், என்னே விட்டுவிடு.'' என்று. ஊ ஹூம். அவன் வார்த்தைகளை யார் கேட்கிறார்கள்? செயினைப் பிடித்து இழுத்து, வண்டியை நிறுத்தி, அவனைக் கீழே இறக்கி விட்டு விட்டனர். கொஞ்ச தூரம் சென்ற பிறகு மறுபடியும் ரெயில் நிறுத்தப்பட்டது. தேவுரியாஜி இந்தப் பக்கம் ஏதோ மீட்டிங்குக்குப் போயிருக்கிறார். அவருக்காகச் சில மணி நேரம் நின்ற இடத்திலேயே ரெயில் காத்துக் கொண்டிருக்கிறது. பிறகு தூரத்தில்

தேவுரியாஜி வரும் மாட்டு வண்டியின் மேல் காங்கிரஸ் கொடி கண்ணில் படுகிறது. தேவுரியாஜி வந்து வண்டியில் ஏறினுர். ''இன்கிலாப் ஜிந்தாபாத்'' என்ற கோஷம் வானைப் பிளந்தது. வண்டி புறப்பட்டது. ஸ்டேஷனுக்கு ஸ்டேஷன் நாற்காலி, மேஜை, கடிகாரம், ஸ்டேஷன் மாஸ்டர் என்று எழுதியிருக்கும் பலகை. பெரிய பெரிய கணக்குப் புஸ்தகங்கள் எல்லாம் குவிக்கப்பட்டுத் தீ வைக்கப்பட்டன. ரெயில்வே ஊழியர்களும் இந்தப் பணியில் ஒத்துழைத்தனர். இதையெல்லாம் தடுப்பதற்கு ஒருவிதமான முயற்சியும் இல்லை. பல இடங்களில் ஊழியர்கள் கூட ஒத்தாசை செய்கின்றனர். ஒரு மாணவன் பிளாட்பாரம் நடுவில் கையில் ஒரு விளக்கை வைத்துக்கொண்டு 'ராய் பேஷீ' நடனம் ஆடிக்கொண்டிருக்கிறுன். கஸ்பா ஸ்டேஷனில், ஸ்கூல்-காலேஜ் மாணவர்கள், டிக்கெட் கலெக்டர் பச்சி சிங்கை அடித்து உதைத்து, பல நாளைய வஞ்சத்தைத் தீர்த்துக்கொள்கின்றனர்.

சுக்ரீ தாணுவில் மகாத்மாஜியின் பெயரில் ஒரு கோர்ட்டையே திறந்து வைத்து விட்டார்கள். இனி யாரும் சர்க்கார் கோர்ட்டுகளுக்குப் போகமாட்டார்கள். ஒரு இன்ஸ்பெக்டரை அரஸ்ட் கூடச் செய்து 'ராஷ்ட்ரிய' ஜெயிலில் அடைத்தார்கள். இரண்டாவது டிவிஷன் கைதி. ''தினமும் பூரி சாப்பிடக் கொடு. அவனது மனைவியை எங்கு வேண்டுமோ மரியாதையாக அழைத்துப் போ'' என்று உத்தரவு. ஜெயில்கள் திறக்கப்பட்டுக் கைதிகள் விடுதலை செய்யப்பட்டார்கள்.

ஜெயில் கட்டிடத்தின் மேல் காங்கிரஸ் கொடி. சர்க்கார் கஜானுவில் இருந்த நோட்டுக்கள் எல்லாம் கொளுத்தி எரிக்கப்பட்டன. மேற்கே கோரக்பூர் ஜில்லாவில் ஆரம்பித்துக் கிழக்கே பூர்ணியா ஜில்லா வரை இதே நிலை. பூர்ண அராஜகம்—ஃபாஸிஸ்ட் சாம்ராஜ்யம்—பிரம் மாண்டமான தேசீய சக்தியைப் பாழாக்கும் செய்கை—கட்டுப் பாடற்ற, வெறிபிடித்த, குருகிய பார்வையால் பாதிக்கப்பட்ட முயற்சி என்றாலும் அதிசயமான தன்னலமற்ற தியாகத்தின் ஒளி பாயும் மாட்சி.

சிவப்புக் குல்லா தரித்த கருத்த முகம், ஹெல்மட் அணிந்த சிவந்த முகம், துப்பாக்கி, டாமி கன் இவை எதனுலும் மக்களைப் பயமுறுத்த முடியவில்லை. தூரத்தில் பீர்காம் சந்தையிலிருந்து டாமி கன்னின் சப்தம் கேட்கிறது. இங்கே சோளக் கொல்லைகளில் அந்தச் சப்தத்தை பரிகசிக்கும் வகையில் ஸ்டேஷனிலிருக்கும் பனி எச்சரிக்கைச் சங்குகளை (fog signal) ஊதுகின்றனர். ஏன் இப்படிச் செய்கிறோம் என்று அவர்களுக்கே தெரியாது.

ஹோலி தினத்தன்று கிராம மக்கள் முழுவதும் எப்படி உன்மத்தர்களாக மாறிவிடுகிறுர்களோ, அதே மாதிரி தான் இப்போதும் வெறி பிடித்து அலைந்தனர். இந்தக் கட்டற்ற வெறியைத்தான் அண்ணுவின்

கட்சிக்காரர்கள் 'புரட்சியின் ஒத்திகை' என்று சொல்லுகிறார்கள்! இதுதான் காந்தியின் முதல் முயற்சியாம்!

பிர்காமின் இந்தப் புரட்சியின் தலைவர் யார் தெரியுமா? விநாயக் மிஸ்ரா. அவன் சம்பந்தப்படாத விஷயமே கிடையாது. அக்கம்பக் கத்துக் கிராமங்களில் 'சத்தியதேவின் கதை' சொல்லுவான். கிராம விழாக்களில் பூசாரியாக இயங்குவான். ஹிந்து மிஷனில் லெக்சர் செய்வான். கிறிஸ்துவ ஸந்தால் ஜாதியினரைச் 'சுத்தி செய்து' மறு படியும் ஹிந்துக்களாக்குவான். காங்கிரஸ் ஆட்சியிலிருந்தபோது மந்திரிகள் சுற்றுலா வரும்போது காரில் அவர்களோடு உரசிக்கொண்டு உட்கார்ந்து கொள்வான். கை ரேகை பார்த்துச் சொல்லுவான். பஞ்சாங்கம் பார்த்துக் கல்யாணத்துக்கு நாள் சொல்லுவான். ஜாதகம் கணித்துக் கொடுப்பான். ஹோமியோபதி, ஆயுர்வேதம், நாட்டு வைத்தியம் எல்லாம் தெரியும் அவனுக்கு. கிராம மக்களுக்கு மருந்து கொடுத்து நல்ல வரும்படி. இந்தியில் எழுதப்பட்ட ஒரு கனமான புத்தகந்தான் அவனது முதல். இதில் ஆரூடங்களின் பலன் முதல் நாட்டு வைத்திய மருந்துகள் வரை எல்லாம் அடங்கியிருக்கிறது.

டாங்கர் பஸ்தியில் காளி பூஜை நடக்கும்போது இந்தப் புத்தகத்தில் இருந்து தான் ஹிந்தியில் ராமாயணக் கதை படிப்பான். இந்த மாதிரி யான தலைமை, இந்த மாதிரியான இயக்கம், இந்த மாதிரியான வேலை ஆகியவற்றிலிருந்தா புரட்சி தோன்றும்? யார் இதை அண்ணுவுக்குப் போதித்தது? நான் ஒருவிதமான அபராதமும் செய்யவில்லை. என் கடமையைத்தான் செய்தேன். நான் சாட்சி சொல்லாமல் இருந் தாலும் வேறு யாராவது சொல்லியிருப்பார்கள். சர்க்காருக்குச் சாட்சி சொல்வதற்குத் தேவையான மனிதர்களுக்குக் குறைவே இல்லை. நான எனது அரசியல் நம்பிக்கையின் அடிப்படையில் கடமை என்கிற பொறுப்பில் சாட்சி சொன்னேன். மற்றவர்கள் பணத்தாசையில் சொல்லியிருப்பார்கள். இது தான் வித்தியாசம். அண்ணுவிடம் இதைப்பற்றி மனம் திறந்து பேச மட்டும் முடிந்திருந்தால்? ஊஹூம். பயனற்று இருந்திருக்கும். நான் என்னவெல்லாமோ சொல்லுவேன். அண்ணு பொறுமையாக நடுவிலே புன்முறுவலுடன் கேட்டுக் கொள்வான். அதிகமாகப் போனால் சில வார்த்தைகள் நடுவில் சொல்லுவான். இந்த வார்த்தைகள் என் வாதங்களைக் குழப்பி விட்டுவிடும். அவனது இடக் கன்னத்துக் குழியுடன் கூடிய புன்முறுவல் தோன்றிய உடனேயே எனக்குப் புரிந்து விடும், என்னுடைய அதி தீட்சண்யமான தர்க்கவாதம் அவனுடைய அசைக்க முடியாத சித்தாந் தத்தின் மேல் ஒரு சிறிய கீறல்கூட ஏற்படுத்தவில்லை என்று. என்னை வாதத்தில் தோற்கடிக்க வேண்டுமென்பதற்காக அல்ல, அந்தப்

புன்னகை. என்னை நிராயுதபாணி ஆக்குவதற்காகவேதான். சில கேள்விகள் மூலம் நான் மிகவும் சாதுரியமாகக் கட்டின தர்க்கக் கோட்டையை அநாயாசமாகத் தகர்த்தெறிந்து விடுவான்.

போன வாரம் அண்ணாவைப் பார்த்தபோது இந்தக் கேள்வியை நான் கேட்கவில்லை. விவாதத்தில் தோற்றுப் போய் விடுவேனோ என்ற பயத்தினால் அல்ல. சங்கோசத்தினால் தான். இது ஒரு அபராதியின் மனத்தில் எழும் சங்கோசமா? இல்லை. நான் ஒரு விதமான அபராதமும் இழைக்கவில்லை. ஆகவே அபராதியின் மனத்திலிருந்து உதிக்கக் கூடிய சங்கோசம் எங்கிருந்து வரும்? இதையெல்லாம் பற்றி வியாக்கியானம் செய்வது உசிதமல்ல, நன்றாக இருக்காது. ஆமாம், இதுதான் என் சங்கோசத்தின் காரணம். கடைசி நேரத்தில் முற்றத்திலிருக்கும் துளசி மாடத்துக்கு அழைத்துச் செல்லப்படும் ஒருவரைப் போய், ''உயிலை எங்கே வைத்திருக்கிறீர்கள்?'' என்று விசாரிக்க முடியுமா என்ன? ஊஹூம். அண்ணாவுக்கு எதையும் புரிய வைக்க வேண்டிய அவசியம் இல்லை. என் நிலைமையை அவன் சரியாகவே புரிந்து கொள்வான்.

காக்கி நிஜார் அணிந்த ஓர் இளைஞன் கேட்டுக்குள் நுழைகிறான். அஸிஸ்டன்ட் ஜெயிலர் ராத்திரி ரவுண்டில் போகிறான் போலும்.

போன வாரம் அண்ணாவைப் பார்க்கப் போயிருந்தேன். அவன் ஸெல்லில் கூடவே ஒரு ஸி.ஐ.டி. ஆள், வார்டர் ஒருவன் முன்னாலேயே அங்கு நின்று கொண்டிருந்தான். இவர்கள் முன்னால் அதிகமாக என்ன பேச முடியும்? கையில் ஒரு கைக்குட்டையில் ஏதோ பழங்களைக் கட்டி எடுத்துக் கொண்டு போயிருந்தேன். உள்ளே போகும் சமயம் ஸி.ஐ.டி. கேலியாகக் கேட்கிறான்: ''என்ன ஸார், அதுக்குள்ளே 'பாம், கிம்' ஒண்ணுமில்லையே? கடைசிலே நம்ம வேலை போயிடும், ஆமாம். இப்போதெல்லாம் இந்த ஊர்லே வங்காளிகளின் நிலைமை தான் உங்களுக்குத் தெரியுமே? வேண்டுமென்றே இந்த டிபார்ட்மெண்டில் நான் வேலை தேடிக் கொள்ளவில்லை'' என்றான்.

நான் கைக்குட்டையை அவிழ்த்துக் காட்ட முயற்சி செய்தபோது, ''வேண்டாம், வேண்டாம், சும்மாச் சொன்னேன். மனுஷாளுக்கு மனுஷா வித்தியாசம் தெரியாதா என்ன? உங்களைத் தான் எனக்கு நன்றாகத் தெரியுமே?'' என்றான். ஆகவே ஸி.ஐ.டி. கூட என்னை நம்புகிறான். இதைவிட அரசியலில் இருக்கும் ஒருவனுக்கு வேறு என்ன சான்று இருக்க முடியும்? இந்தப் பாக்கியத்துக்கு நான் தயாராக இல்லை. அண்ணாவுக்கு எதிராகச் சாட்சி சொன்ன பிறகு இவர்களுக்கு என்மேல் இருந்த சந்தேகங்கள் எல்லாம் விலகிப் போய்விட்டன.

அண்ணா ஸெல்லின் கம்பிகளுக்குப் பின்னால் நின்று கொண்டிருக்கிறான். தலைமயிர் கலைந்து கிடந்தது; மிகவும் இளைத்துப் போயிருக்கிறான். மூக்கு கூர்மையான வாளைப் போல் உயர்ந்து நிமிர்ந்து நிற்கிறது. உடம்பு என்னவோ முன்பிருந்ததைவிட வெளிறி இருக்கிறது. கை, கால்களில் எல்லாம் சிரங்கு வந்து ஆறின தழும்புகள். புன்னகை மலர்ந்த முகம். ஆவல் நிறைந்த மெல்லிய அன்புப் பார்வை என் தயக்கத்தை எல்லாம் விரட்டி விட்டது. முதலில் அவனே பேசினான். ''கைக்குட்டையில் என்னடா?'' பேச்சு ஆரம்பிப்பதில் ஏற்படக்கூடிய சங்கோசத்தைத் தகர்த்து விட்டான். ''பெரியம்மா கொடுத்தனுப்பியிருக்கிறாள்'' என்றேன்.

''அப்படியா? எப்படியிருக்கா பெரியம்மா? ஏதாவது சொல்லி அனுப்பினாளா?''

முதலில் நினைத்தேன்—பெரியம்மா ஸ்நான பானங்களையெல்லாம் நிறுத்திவிட்டாள் என்கிற விஷயத்தைச் சொல்லிவிடுவோம் என்று. பிறகு 'வேண்டாம்' என்று தோன்றிற்று. அண்ணாவின் இளகிய மனத்தின் மேல் அநாவசியமாக இன்னொரு பாரத்தை ஏன் போட வேண்டும் என்று நினைத்து, ''இருக்கிறாள். அடிக்கடி உன்னைப் பற்றிப் பேசுகிறாள்'' என்றேன். அவன் முகத்திலிருந்து நான் ஏதோ மறைக்கிறேன் என்பதை அவன் புரிந்துகொண்டு விட்டான் என்பதை உணர்ந்தேன். ஸி.ஐ.டி. மனிதன் சொன்னான்: ''வேணும் என்றால் கதவைத் திறக்கச் சொல்லுகிறேன். உள்ளே போய் உட்கார்ந்து கொள்ளுங்களேன்'' என்றான்.

நான் ''வேண்டாம்'' என்றேன். இருந்தாலும், வார்டர் கதவைத் திறந்து விட்டான். நான் உள்ளே போய் அண்ணாவுடன் ஜமக்காளத்தில் உட்கார்ந்தேன். அன்று நானாகவே ஒரு கேள்விகூடக் கேட்க முடியவில்லை. எப்படியோ வார்த்தைகள் ஓடி ஒளிந்து கொண்டு விட்டன. அண்ணாவுக்கு என் நிலை நன்றாகத் தெரிந்து விட்டது. அவனே என்னை எத்தனை விஷயங்கள் கேட்டான்! நான் பதில் மட்டும் சொல்லிக் கொண்டிருந்தேன். திரும்பும் சமயம் அண்ணா கேட்டான்: ''அம்மாவைப் பார்த்துவிட்டுப் போ.'' இது தான் என்னிடம் அண்ணா சொன்ன கடைசி வார்த்தை. அவனுடைய இந்தக் கடைசிக் கோரிக்கையைக் கூட என்னால் நிறைவேற்ற முடியவில்லை. அம்மா அமுது, அமுது என்ன செய்வாளோ என்று நினைத்தாலே என் உடல் நடுங்குகிறது. இவ்வளவு என்னைப் புரிந்து கொண்டிருக்கும் அண்ணாவுக்கு, நான் எப்படி அம்மாவைப் பார்க்க முடியும் என்று புரியவில்லை. அவனுக்குத் தெரியும் எனக்கு எது பிடிக்கும் எது பிடிக்காது என்று. ஒரு தடவை எனக்குப் பிடித்த மாதிரி ஒரு கவிதை எழுதிக் கொடு என்று கேட்டேன். அமுது

புரளும் பாட்டுக்கள் எனக்குப் புரியாது, பிடிக்காது. ஆகவே எனக்குப் புரியற மாதிரி ஒரு கவிதை எழுதிக் கொடுத்தான்.

மேலும் ஞாபகம் இல்லை. முழுக் கவிதையும் ஒரு காலத்தில் எனக்கு மனப்பாடமாக இருந்தது. இரண்டு வருடங்களில் எத்தனை மாறுதல்கள் என்னிடத்தில்? அண்ணாவின் நிழலிலிருந்து என்னை விடுவித்துக் கொள்ள எவ்வளவு முயன்றேன்! அதனால் தான் என் உள் மனம் நன்கு கற்றுணர்ந்த இந்தக் கவிதையை ஞாபகத்திலிருந்து அழித்து விட்டது போலும். இந்தக் கவிதையை அம்மாவின் அறைக்குப் பக்கத்தில் இருந்த வராந்தாச் சுவரில் மாட்டி வைத்திருந்தேன். இப்போது கூட அங்கேயே இருக்கிறதோ என்னவோ, யாருக்குத் தெரியும்? இத்தனை நாள் இந்த விஷயத்தை மறந்து கூடப் போயிருந்தேன். இந்தத் தடவை கட்டாயம் போய் அதைத் தேடி எடுக்க வேண்டும்.

''தூங்கல்லிங்களா பாபுஜி?''

குவாட்டர்ஸிலிருந்து சுபேதார் திரும்பி வந்து விட்டான். அவனுடைய முகம், கண்களையெல்லாம் பார்த்தால் கொஞ்சம் தூங்கிவிட்டு வந்திருக்கிறான் என்று தெரிகிறது. சட்டென்று எழுந்து உட்கார்ந்தேன்.

''உட்காருங்க, உட்காருங்க, கொஞ்ச நேரம் நிம்மதியாக இருங்க'' என்கிறான்.

யாருடனும் பேச வேண்டும்போல் இல்லை. சுபேதார் கேட்டுக்குள் நுழைகிறான். ஆபீஸ் அறைப் பக்கம் போகிறான். ராத்திரி விரித்த படுக்கையைச் சுருட்டி வைக்கிறான் போலும். அண்ணா இப்போது என்ன செய்து கொண்டிருப்பான்? ஒருவேளை கடிதம் எழுதிக் கொண்டிருக்கலாம். கட்டாயம் சில கடிதங்களாவது எழுதி வைத்துவிட்டுப் போவான். நிஹால் சிங்கிடம் பணம் கொடுத்தேனே, அண்ணாவுக்கு நோட்டுக், பென்சில் வாங்கிக்கொடு என்று. வாங்கிக் கொடுத்தானோ இல்லையோ, யாருக்குத் தெரியும்? கொடுத்திருந்தாலும் ஸெல்லில் இவற்றை வைத்துக் கொள்வது கஷ்டம். நிச்சயமாகத் தினமும் சர்ச்சை நடக்கும். எழுதுவதற்கு வசதி இருந்தாலும் அண்ணா மற்றவர்கள் மாதிரி கடிதங்கள் எழுதி வைத்துவிட்டுப் போக மாட்டான்!

என்ன அதிசயப் பிறவி! எந்தக் காரியங்கள் நல்லதல்ல, செய்யக் கூடாதது, அசிங்கம் என்று நினைக்கிறான் என்று கூட என்னால் நிச்சயப் படுத்த முடிவதில்லை. கேள்விப்பட்டிருக்கிறேன்—மரண தண்டனை நிறைவேற்றவிருக்கும் தினத்துக்கு முன் இரவு மேரி அன்டோனியட்டின் தலைமயிரெல்லாம் நரைத்துவிட்டது என்று. நரைத்த மயிருடன் அண்ணாவைக் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியவில்லை. அப்படி ஆனால் கூட அண்ணா கவலையற்றுத் தூங்குவான். ஸர் வால்டர் ராலே தலையை வெட்டுக்கல்லில் வைப்பதற்கு முன் சிரச்சேதம் செய்பவரிடம்

தமாஷாகச் சொன்னும் : ''இதோ பாரு தம்பி, நான் கஷ்டப்பட்டு வளர்த்த தாடியை வெட்டித் தள்ளிவிடாதே'' என்று.

முன்பெல்லாம் இது மிகையான கதை என்று எனக்குத் தோன்றும். அண்ணு சம்பந்தப்பட்ட வரை இத்தகைய நடத்தை மிகையானது அல்ல. மேடை ஏறுவதற்கு முன்பு அரசியல் கைதிகளின் நடத்தை பற்றிப் பலவிதமாக கேள்விப்பட்டிருக்கிறேன். ஒருவன் மூர்ச்சை அடைந்து விழுந்துவிட்டான். மற்ருெருவன் சூப்பிரண்டைத் திட்டினுன்; இன்னும் ஒருவன் கடவுளைச் சபித்தான்; மற்ருெருவன் கடவுளைத் துதித்தான்; ஒருவன் 'பிரசங்கம்' செய்ய முயற்சி செய்தான்; மற்றுமொருவன் 'ஸர்ஃபரோஷ்கா தமன்ன' என்ற பாட்டைப் பாடிக் கொண்டே படிகள் ஏறித் தூக்கு மேடையில் ஒருவிதமான சலனமுமில்லாமல் நின்ருன். அண்ணுவுக்கு இவை எல்லாம் ஏதோ ஒரு விதத்தில் 'நாடக பாணி' நடத்தையாகப் படும். இது மாதிரி ஒன்றுமே செய்ய மாட்டான். அவனுக்கே உரித்தான மென்மையும் பரிகாசமும் கலந்த புன்னகையுடன் இருப்பான். அவனது இந்த ஏளனத்துக்கு முன் சூப்பிரண்டின் கண்கள் கீழே இறங்கிவிடும். மாஜிஸ்ட்ரேட்டின் விழிகள் வேருெரு பக்கம் திரும்பிவிடும். ஜெயிலர் அநாவசியமாக, கையிலிருக்கும் கடிகாரத்தில் மணி பார்ப்பதற்காக டார்ச்சை ஏற்றி அணைத்துக்கொண்டே இருப்பான். ஏதோ கொஞ்சம் 'ரெமிஷன்' கிடைக்கும் என்ற ஆசையிலும், ஐந்து ரூபா பணத்துக்காகவும் தூக்குக் கயிற்றை இழுக்கும் ஈனப் பணியை ஏற்றுக்கொண்ட கைதியின் நெஞ்சங்கூடப் படபடக்கும். வேறுவிதமாக அண்ணு நடந்துகொள்வான் என்று என்னுல் நினைக்கக்கூட முடியாது.

கட்! கட்! கட்! கேட்டின் இரண்டாவது மாடியிலிருந்து யாரோ படியிறங்கி வரும் சப்தம். தன் சக்தியிலே திளைத்துக் கொண்டிருக்கும் கண்மூடித்தனமான இறுமாப்புக்கொண்ட மனிதனின் நடை—'ஏ பூமியே! தெரிந்து கொள், இந்தக் காணி நிலத்தில் வேறு யாருடைய சக்தியோ ஆவேசமோ செல்லாது. இங்கு நான்தான் எல்லாருக்கும் மேலானவன்' என்ற உணர்வு. வெகு நேரமாகவே இந்த நடை எழுப்பும் ஒலியை எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறேன். கடைசியில் காக்கி ஜெயில் உடை தரித்த வாட்டசாட்டமான ஒரு மனிதர் இறங்கி வருகிருர். கேட்டில் நிற்கும் ஆயுதபாணியான வார்டர் இரு பாதங்களையும் சேர்த்துக் கொண்டு 'ஸல்யூட்' அடிக்கிருன். பிறகு நிமிர்ந்து 'அட்டென்ஷன்' நிலையில் நிற்கிருன். உள்ளிலிருக்கும் வார்டர்கள் 'சலாம்' செய்துவிட்டு கேட்டைத் திறக்கிருர்கள். சுபேதார் கேட்டிற்கு முன்னுல் நிற்கிருன். கருப்பும் வெள்ளையுமாக மாறியிருக்கும் அவன் முன்பற்கள் வெளிவந்து நிற்கின்றன. பல்லிளித்துக்

'கோஷாமத்' பண்ணிச் சரி கட்டும் முயற்சி நன்றாகத் தெரிகிறது. சுபேதார் ஸலாம் செய்ய, ஜெயிலர் கேட்கிறார்; ''எல்லாம் சரியாக இருக்கிறதா?'' என்று.

சுபேதார் சொல்கிறான்: ''ஹாங் ஹுஜூர்''—ஏதோ இரவு முழுவதும் இதற்கான ஏற்பாடுகளைச் செய்து களைத்தவன் மாதிரி.

ஜெயிலரின் பார்வை ட்ராலி லைனுக்கு அருகில் கிடக்கும் சாணிமேல் விழுகிறது. தம் பாதத்தால் அதைத் திருப்பிவிட்டு, தம் பூட்ஸைப் பார்க்கிறார். முகத்தில் எரிச்சல் ஏறுகிறது. சுபேதார் பயம் கலந்த பார்வையுடன் ஜெயிலரின் பூட்ஸைப் பார்க்கிறான். அப்பா! அதில் சாணி ஒட்டிக்கொள்ளவில்லை. அவன் நிம்மதியுடன் மூச்சு விடுகிறான்.

ஜெயிலர் கேட்கிறார்: ''இந்தச் சாணி ஏன் அப்புறப்படுத்தப்படவில்லை?''

''ஹுஜூர், கைதி ஒருவரும் கிடைக்கவில்லை.''

''ஏன்? கேட் மூடின பிறகு மாடு உள்ளே வந்திருக்க முடியாதே?''

மேலும் ஒன்றும் சொல்லத் தேவையில்லை. உள்ளேயிருக்கும் வார்டர் இந்தக் காரியத்தைத் தானே அவசர அவசரமாகச் செய்ய முற்படுகிறான். இன்று சுபேதாரின் நல்ல நாள் இல்லை. விடியற்காலையிலேயே இந்த அபசகுனம். உள் கதவைத் திறக்கச் சொல்லி உள்ளே நுழைகிறார் ஜெயிலர் துரை. போகும்போது சொல்லிவிட்டுப் போகிறார்: ''உள்ளே எப்படி இருக்கும் என்று போய்ப் பார்த்துவிட்டு வருகிறேன். உங்கள் மேல் எந்தப் பொறுப்பையும் போட்டுவிட்டு நிம்மதியாக இருக்கமுடியுமா என்ன? துரையின் அறை, என்னுடைய ஆபீஸ் அறை இரண்டும் சுத்தமாக இருக்கிறதா என்று பார்த்து வை.''

''கட்டாயமா ஹுஜூர்! ஒண்ணுமே சொல்லத் தேவையில்லீங்க. எல்லாம் சரியா இருக்குங்க.''

சுபேதார் வார்டர் பக்கம் திரும்பி, ''என்னடா ஆந்தை மாதிரி முளிச்சுக்கிட்டு நிக்கறே? போடா, போய் துரை ரூமைச் சுத்தம் செஞ்சாச்சா இல்லையான்னு பார். இந்தப் புதுப் புது ஆளுங்களை வெச்சுக்கிட்டு வேலை வாங்கறது பெரிய எளவு! இந்தக் காங்கிரஸ் தொல்லை வந்தாலும் வந்திச்சு, குடியானவன், மாட்டு வண்டிக்காரன், ஆடு மேய்க்கிறவன் எல்லாரும் இங்கே வந்து சேர்ந்து விட்டானுவ. இவங்களுக்கோ ஒரு வேலையும் தெரியாது. நாம சொல்ற வார்த்தை ஒரு எளவும் புரியாது. உயிரு போவுது.''

கீழேயிருந்து மேலே வரை, இவர்கள் எல்லாரும் தங்கள் கீழ் இருக்கும் ஊழியர்களை இப்படித்தான் நடத்துகிறார்கள்.

நாலு மணி அடிக்கிறது. மறுபடியும் புது வார்டர்களின் அணி வருகிறது. ஒவ்வோர் அணியிலும் 22 பேர். பழைய காட்சி மறுபடியும்

நடக்கிறது. ஒரே ராத்திரியில் இது எல்லாம் எனக்கு மனப்பாடம் ஆகிவிட்டது. ரெயில்வே ஸ்டேஷன் பிளாட்பாரம் மாதிரி—பல மக்கள் வண்டியிலிருந்து இறங்குகிறார்கள், சிலர் ஏறுகிறார்கள்—ஒரே சப்தம், குழப்பம்—பிறகு நிசப்தம். முன்பு இருந்த மாதிரியே—அண்ணா கம்பிகளின் பக்கத்தில் நின்றுகொண்டு தன் கடைசி விநாடிகளை எதிர் பார்த்துக்கொண்டு இருக்கிறானோ? இப்பொழுது நாலு மணி அடித்ததே, இது அவன் காதிற்கு எட்டியிருக்குமா? கேட் டவரிலிருந்து கிளம்பும் இந்தச் சப்த அலைகள் வாயுமண்டலத்தை அசைத்துக் கொண்டு 'கண்டெம்ட் ஸெல்' வரை போகும் என்றால், என்னுடைய எண்ண அலைகளையும் அண்ணாவிடம் சேர்த்து விடுமா? கடைசி நிமிஷத்தில் அண்ணா யாரைப்பற்றி நினைத்துக் கொள்வான்? அம்மா வையா, பெரியம்மாவையா அல்லது என்னையா?—எதற்காக என்னை நினைத்துக் கொள்ள வேணும்? கட்டாயம் நினைத்துக் கொள்வான்.

அவன் சிந்தனையில் சிறிதளவு பழிப்பும் துக்கமும் இருந்தாலும் என் பேரில் அபிமானந்தான் நிரம்பி வழியும். தர்க்க நியாயங்களுக்கு எல்லாம் அப்பாற்பட்டது இது. இதற்குப் பிறகு பூர்ணியாவில் நான் தங்குவது என்பது முடியாத காரியம். பெரியம்மாவுக்கு முகத்தை எப்படிக் காட்டுவேன்? பக்கத்து வீட்டுக்காரர்களைத் தாண்டி எப்படிப் போக முடியும்? சாட்சி கொடுத்த பிறகு இத்தனை நாட்கள் ஏதோ ஒரு மாதிரி ஓட்டியாயிற்று. ஆனால் அம்மாவின் முன்னால் போவது—இனிமேல் நடக்காத காரியம். அண்ணாவின் கடைசி நாளின் இந்தச் சித்திரம்—ஏதோ எதிர்பாராத, திடீரென்று தோன்றியது அல்ல. சென்ற சில மாதங்களாகவே இந்த நாளுக்காகத் தயாராக இருந்து கொண்டு வந்திருக்கிறேன். சமயாசமயம் என்று இல்லாமல் இந்தச் சித்திரம் என் மனத்தை அமுக்கிக் கொண்டிருக்கிறது.

ஒரு காலத்தில் 'பாகுர் மர்டர் கேஸ்' பற்றிய செய்தியைப் பற்றி எல்லாப் பத்திரிகைகளிலும் படித்து விட்டு அம்மா, அண்ணா இரண்டு பேருக்கும் விவரமாகச் சொல்லியிருக்கிறேன். அம்மா சொல்லுவாள்: ''ஐயோ! என்ன கண்றாவி! அண்ணனுக்கும் தம்பிக்கும் இடையே இப்படியும் ஒன்று நடக்குமா?'' என்று. இன்று? இவ்வளவு நாட்கள் சாதாரண மக்கள் என்னைப்பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பதைப் பற்றிப் பொருட்படுத்தியதில்லை. ஆனால் இன்று மட்டும் ஏன் என் நெஞ்சம் வெடித்துப் போகிறது? பொது ஜன அபிப்பிராயத்தை உதறித் தள்ளிவிட முடியும். ஆனால் அம்மாவின் நெஞ்சுக்குள்ளேயே வெதும்பும் ஏக்கம், வேதனை 'நிரம்பிய கண்கள். பெரியம்மாவின் வார்த்தைகளில் வடிக்கப்படாத கண்டனம் இவற்றை என்னால் நேரில் தாங்க முடியாது. ஏன் முடியாது? sentimental nonsense!

வேதனையால் கசக்கிப் பிழியப்படும் சமூகத்துக்குச் செய்யவேண்டிய பணிகள் கணக்கில்லாமல் எனக்கெதிரில் குவிந்து கிடக்கின்றன. யுகம் யுகமாகச் சேர்ந்திருக்கும் கண்ணீரைத் துடைக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்ட ஒருவன், குறுகிய தனது வீட்டிலிருப்பவர் கண்களிலிருந்து விழும் ஓரிரண்டு வெப்பக் கண்ணீர்த் துளிகளுக்காகக் கவலைப்பட முடியுமா என்ன? இத்துளிகளைக் கதர்ப் புடைவைத் தலைப்பால் துடைத்துக் கொண்டு விட முடியும். நைந்துபோன தலையணை, அல்லது ஓர் அழுக்குத் துணி இந்த ஒரு சில கண்ணீர்த் துளிகளைக் கொதிக்கும் மணலைப் போல் இழுத்துக் கொண்டுவிடும். இவற்றுக்காக நான் பின் தங்க முடியுமா என்ன? ஏற்கெனவே நான் எனது வருங்காலத்தைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறேன். எனக்கு என்ன ஆகும் என்பது தான் அண்ணுவுக்கு என்ன ஆகும் என்பதை விட எனக்கு முக்கியம்.

கனையாலாலின் மரித்த முகத்தின் போட்டோ ஞாபகம் வருகிறது. அண்ணுவையும் இரும்பு ஸ்டெரட்சரில் படுக்க வைப்பார்களோ? கண்கள் இரண்டும் பாதி திறந்திருந்தன. கடைசி மூச்சைக் கஷ்டப் பட்டு இழுக்கும் முயற்சியினால் முகம் அசிங்கமாகி விடவில்லை. கண் விழிகள் பிதுங்கி வெளியில் வரவில்லை. சாந்தமாக உறங்கும் நிலை. கழுத்து மாத்திரம் வீங்கியிருந்தது.

ஜெயில் டாக்டர் அகோர் பாபு ஜெயில் கேட்டுக்குள் நுழைகிறார். அவசரமாக வந்த சிரமத்தில் மூச்சு வாங்குகிறது. சுற்றிப் பார்ப்ப தற்கு அவகாசம் இல்லை. ஜெயிலில் ஐந்து அல்லது ஆறு டாக்டர்கள் இருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். ஆனால் பெரிய டாக்டர் சிவில் சர்ஜனுக்கு டவுனில் வீடு. இங்கு அவருக்குக் குவாட்டர்ஸ் கிடையாது. ஏனென்றால் சண்டைக்கு முன்னால் சிவில் சர்ஜன்தான் ஜெயில் சூப்பிரண்டாகவும் வேலை பார்ப்பது வழக்கம். அகோர் பாபு எதற்காக இப்பொழுது வந்திருக்கிறார்? சுபேதார் கேட்டான். ''டாக்டர் பாபு, நீங்க இப்போ எதற்காக?''

''சும்மா தான் வந்தேன்.''

சுபேதாருக்கு நிஜமான காரணம் புரிந்து விட்டது. இன்று எல்லா ருக்குமே துரைக்கு முன்னால் தங்களுடைய கடமை உணர்ச்சியைக் காட்டிக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வம். அகோர் பாபுவுடன் எனக்குப் பரிசயம் உண்டு. நல்ல வேளை, அவர் கண் என் மேல் விழ வில்லை. இல்லையென்றால் ஏதாவது கேட்டுக்கொண்டு உட்கார்ந்து விடுவார். ஆபீஸ் ரூமுக்குள் நுழைகிறார். ஜெயிலர் துரை திரும்பி வந்து விட்டார். அவர் அறையில் விளக்கு எரிகிறது. ஃபான் சுற்று கிறது. நிஜார், வெள்ளை அரைக்கைச் சட்டை அணிந்து கொண்டு

சூப்பிரெண்ட் துரை வந்து சேர்ந்து விட்டார். கூடவே வெள்ளையும் ப்ரவுனுமாகக் கலந்த கலரில் ஒரு புல் டெரியர். வார்டர்கள் முகத்தில் கவலை. 'ஸல்யூட்', 'அட்டென்ஷன்'. நாய் உள்ளே நுழையு முன்னால் ஒரு தடவை, என்ன நினைத்துக் கொண்டதோ என்னவோ, என் பக்கம் வந்து விட்டுத் திரும்பிப் போய்விட்டது. உள்ளேயிருக்கும் வார்டர், நாய்க்காகக் கதவைப் பாதி திறந்து வைத்து விட்டுக் காத்துக் கொண்டிருக்கிறான். துரையை விட அவருடைய நாயின் மேல் ஜெயில் ஊழியர்களின் பக்தி சிரத்தைக்குக் குறைவில்லை. இதைக் காட்டுவதற்கு எல்லாரும் முயற்சி செய்து கொண்டிருக்கின்றனர். ஜெயிலர் துரை தம் ரூமிலிருந்து வெளியே வந்து சூப்பிரண்ட் துரையை வரவேற்கிறார். அகோர் பாபுவும் வந்து நிற்கிறார். சுபேதார், துரையின் கௌரவத் துக்குப் பங்கம் வராமல் தம் உடலை ஒடுக்கிக் கொண்டு சற்றுத் தொலைவிலேயே நிற்கிறான். துரை சிரித்துக் கொண்டு ஏதோ கதை சொல்லிக் கொண்டிருக்கிறார். எதையோ நினைத்துக் கொண்டு கையில் இருக்கும் டார்ச்சை ஏற்றி அணைத்துக் கொண்டிருக்கிறார்.

நாய், ஆபீஸ் ரூம், பாஸேஜ் என்று இங்கும் அங்குமாகப் போய்க் கொண்டிருக்கிறது. ஓரத்தில் இருக்கும் பந்தங்களை முகர்ந்து பார்த்து விட்டு, துரையிடம் வந்து ஏதோ சொல்லி விட்டுப் போவது போல் இருக்கிறது.

திடீரென்று இரவின் நிசப்தத்தைத் தகர்த்தெறிந்து கொண்டு மோட்டார் லாரியின் ஹாரன் சப்தம். கிட்டவே வருகிறது— ''போங், போங்''—எவ்வளவு உரக்கக் கேட்கிறது! அண்ணா, அம்மா, அப்பா எல்லாருடைய காதிலேயும் விழுந்திருக்க வேண்டும். ஒரு மோட்டார் வேன் கேட்டுக்குக் கொஞ்ச தூரத்தில் வந்து நிற்கிறது. கதவு திறக்கப்பட்டு, 'ஆர்ம்ட் போலீஸ்' (armed police) ஒருவர் பின் ஒருவராக இறங்கி உள்ளே வருவார்கள் போலும். 'அபவுட் டர்ன், ரைட் வீல்!' ஊஹூம், ஒருவரும் இறங்கவில்லை. எல்லாரும் வண்டி யிலேயே உட்கார்ந்திருக்கின்றனர். டிரைவர் வண்டியின் விளக்கை அணைத்து விடுகிறான். சாலையும் குவாட்டர்ஸ்களும் மறுபடியும் இருளில் மறைகின்றன. துரையின் நாய் குரைக்கிறது. கம்பிகளின் இடுக்கில் புகுந்து வெளியில் வந்து விட்டது. தன் ராஜ்யத்தில் இருந்த சாந்தி எப்படிக் குலைக்கப்பட்டு விட்டது என்று கண்டுபிடிப்பதற்காகப் போலும்! ஏன் திடீரென்று வெளிச்சம் தோன்ற வேண்டும்? பிறகு ஏன் திடீரென்று அணைந்து போகவேண்டும். இதைப் பரிசீலிப்பதற் காகக் கேட்டுக்கு வெளியே வந்திருக்கிறது.

ஆட்சி என்ற சக்கரம் மெதுவாக, ஆனால் நிச்சயமாக, இரவு பகல் என்றில்லாமல் சுற்றிக் கொண்டிருக்கிறது. எப்பொழுதோ, என்றோ,

பல நாட்களுக்கு முன் யாரோ ஒரு துரதிருஷ்டக்காரன், முட்டாள், தன் தலையை உயர்த்தி இதற்கு எதிராக நிற்கும் பயனற்ற சாகசச் செயலைப் புரிந்தான். அதற்கு பிறகு, இந்த மாதிரி மறுபடியும் நடக்க விடக் கூடாது என்ற உத்தேசத்தில் தேசம் முழுவதும் சிறிதும் பெரியதுமாக இன்னும் பல சக்கரங்கள் சுற்றுமாறு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. இத்தகைய சம்பவத்தையும் அதன் காரண புருஷனையும் சின்ன பின்னமாக்கி ஒழித்துக் கட்டும் வரை, ஆட்சியாளருக்குச் சாந்தியோ, சுகமோ கிடையாது. இந்த அருந்தலைவன் ஊக்குவித்த, கனவுகள் நிறைந்த, பல இதயங்களை அடித்து நொறுக்கிப் பயத்தால் நிரப்பி, மரத்துப் போக வைத்துவிட வேண்டும் என்பதே ஆட்சியின் அடங்காத ஆர்வம். போலீஸ் ஸ்டேஷன், இன்ஸ்பெக்டர், பட்டாளம், ஸெஷன்ஸ் கோர்ட், சர்க்கார் தரப்பு வக்கீல், ஜட்ஜ், சர்க்கார் தரப்பு சாட்சி—நீலு, ஜெயில் ஊழியர்கள்—இவை போன்ற பல வண்ண மணிகளால் புனைந்த சங்கிலி. தாங்கள் முன் கூட்டியே நிர்ணயித்த லட்சியத்தைச் செயல்படுத்துவதற்காகத்தான் இந்தச் சங்கிலி. இந்த லட்சியத்தின் கடைசி நேரத்துக்கு இன்னும் எத்தனை நேரம் பாக்கியிருக்கிறது? தூக்கிலிடுபவனை மட்டும் குற்றம் சாட்டி என்ன பயன்? இந்தக் காட்டுமிராண்டித்தனத்துக்குத் தார்மிகப் பொறுப்பை ஜட்ஜிலிருந்து ஆரம்பித்து வார்டர் வரை எல்லார் பேரிலும் சமமாகச் சுமத்த வேண்டும்.

விசேஷஞர்கள் நிறைந்த இன்றைய உலகத்தில் தங்களுக்கு என்று வகுத்துக் கொண்ட களத்தைத் தாண்டி யாரும் போவதில்லை. ஒரு யந்திரத்தில் எந்த அம்சம் தனது பொறுப்போ, அதைச் சரிவரப் பார்த்துக் கொண்டாலே போதும். முழு இயந்திரத்தின் பிரம்மாண்டமான சக்தி எங்கிருந்து வருகிறது என்ற ஆராய்ச்சியில் வீணுக இறங்குவானேன்? என்ஜினிலிருந்து பெல்டிங் (belting) வழியாகத் தங்களிடம் வரும் சக்தியின் ஒரு பகுதியை மட்டும் கவனித்துக் கொண்டால் போதும். தன்னிடம் வந்த பாதி தயார் செய்யப்பட்ட கச்சாப் பொருளைத் தனக்கு அடுத்த ஸ்தானத்துக்கு அனுப்பி விட்டால், தன் கடமை முடிந்தது. ஆனால் இவை எல்லாம் ஓர் அசுர ஆட்சியில், அநாகரிகத்தின் நிர்வாணக் கோலம் என்பதை இதில் சம்பந்தப்பட்ட எல்லாரும் மூடி மறைக்க முயன்று கொண்டிருக்கின்றனர். ஆனால் இனிமேல் ஒளிவு மறைவு தேவையில்லை என்ற நிலையை வந்தடைந்து விட்டோம். (crush or be crushed)

புரி ஜகந்நாத ரதம் தனது வேகத்தின் இறுமாப்பிலேயே செல்லும். யாராவது அபாக்கியசாலி அதன் சக்கரத்தில் மாட்டிக்கொண்டு நவிடு பொடியாகிப் போனால் அதைப்பற்றி யாரும் கவலைப்படப் போவதில்லை.

இந்த ஆட்சி என்ற ரதம், வர்க்க சுயநலம் என்ற ஸ்டீம் ரோலர், சாலையில் மேலும் கீழுமாக எப்போதும் போய்க் கொண்டேயிருக்கும். சற்றேனும் அது விச்ராந்தியாக இருந்துவிட்டால் புல், பூண்டுகள் தலை எடுத்துவிடும். ஆசிரமத்துக்கு வந்தடைவதற்கான சாலை அண்ணா தம் கையாலேயே போட்டது. அதன் இரண்டு பக்கங்களிலும் 'ரஜனிகாந்தா'ச் செடிகள் வரிசையாகப் போடப்பட்டிருந்தன. சமயம் கிடைத்த போதெல்லாம் ஒரு மண்வெட்டியை எடுத்துக்கொண்டு பாதையில் வளரும் புல், பூண்டுகளை அவன் பிடுங்கி எறிந்து கொண்டிருப்பான். ஒரு வெள்ளைக் கதர் பனியன்.

மற்றுமொரு கார் வந்து நிற்கிறது. சீருடை அணிந்த ஒரு சப்ராஸி கதவைத் திறக்கிறான். கோட், ஹாட் அணிந்த கனவான், வாயில் ஒரு சுருட்டுடன் வெளி வருகிறார். இவர் தான் சிவில் சர்ஜன். சூப்பிரண்டும் மற்றவர்களும் அவரை வரவேற்கின்றனர்.

''நான் லேட்டா என்ன? எனக்காகக் காத்துக் கொண்டிருக்க வில்லையே?'' என்று கேட்கிறார், சிவில் சர்ஜன்.

''அதெல்லாம் ஒன்றும் இல்லை. மாஜிஸ்ட்ரேட் இன்னும் வந்து சேர வில்லை.''

சூப்பிரண்ட் துரை தம் ரிஸ்ட் வாட்சைப் பார்க்கிறார். முகத்தில் எரிச்சலின் சாயை. ''உள்ளே உட்காருவோம் வாருங்கள்.'' நாற்காலிகள் இழுத்துப் போடப்படும் சப்தம். அறைக்குள்ளிருந்து பேச்சு வார்த்தைகளின் மெல்லிய சப்தம் வருகிறது. மறுபடியும் மோட்டார் ஹாரன் சப்தம். ஒரு வண்டி வந்து நிற்கிறது. அரை நிஜார் அணிந்த ஓர் இளைஞன் வண்டியிலிருந்து குதித்துக் கொண்டு வெளி வருகிறான். ஓட்டமாக ஜெயில் கேட்டுக்குள் நுழைகிறான். ஜெயில் துரை அவனை வரவேற்கிறார். ''இல்லை, இல்லை. நீங்கள் தாமதம் இல்லை. நாங்கள் தான் சீக்கிரம் வந்துவிட்டோம். டாக்டர், சூப்பிரண்ட் இருவரும் அறையில் உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். வாருங்கள் உள்ளே உட்காருவோம்.''

அவர்கள் உள்ளே போகவேண்டிய அவசியமில்லாமல், சூப்பிரண்ட், சிவில் சர்ஜன் எல்லாரும் ஜெயிலுக்குள் போவதற்குத் தயாராக அறையிலிருந்து வெளியே வருகின்றனர். ஒவ்வொருவராக உள்ளே நுழைகிறார்கள். கதவு உயரம் குறைவு. தலையைக் குனிந்துகொண்டு நுழைய வேண்டியிருக்கிறது. டில்லி சர்க்கார் இந்த மாதிரி ஒரு கேட் கட்டி விட்டிருந்ததாகக் கதை கேள்விப்பட்டிருக்கிறேன். யாரோ ஒரு ராஜா இது தனக்கு அவமானம் என்று நினைத்துக் கொண்டு வரவில்லையாம்.

யக்ஷபுரியின் இருள் ஒவ்வொருவராய் எல்லாரையும் விழுங்குகிறது. இப்பொழுது இங்கிருந்து ஓடிப் போய்விட்டாலோ?

அண்ணாவின் மரித்த உடலை என்னால் பார்க்கமுடியாது. இப்போது ஓடிவிட்டேன் என்றால் யார் கண்ணிலும் படமாட்டேன். மாஜிஸ்ட்ரேட்டின் ஆர்டரை ஜெயில் அதிகாரிகளுக்குக் காட்டவேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் மரித்த தேகத்தை என்னிடம் ஒப்படைக்க மாட்டார்கள். எங்கே போய்விட்டது அந்தக் காகிதம்? ஒரு பாக்கெட்டிலும் காணோமே? என்ன ஆயிற்று? வீட்டிலேயே வீட்டு விட்டேனா என்ன? அப்படியென்றால் உடனே திரும்பிப் போயாக வேண்டும். விட்டுத் தள்ளு, நல்லதாகவே போயிற்று. அடுத்த ரெயிலிலேயே பாட்னா அல்லது பம்பாய் போய்விட்டால் என்ன? என்னுடைய பார்ட்டியைச் சார்ந்த இன்டலெக்சுவல் காம்ரேட்களை நேரில் பார்த்தால் மிகவும் உபயோகமாக இருக்கும்—ஊஹூம், இதோ அந்தக் காகிதம் பாக்கெட்டிலேயே இருக்கிறது. நேற்று என் கையாலேயே இந்த பாக்கெட்டில் தானே வைத்தேன். எங்கே போகும்? இருந்தாலும். இப்பொழுது தானே எல்லாப் பாக்கெட்களையும் தேடிப் பார்த்தேன்! எங்குமே கையில் படவில்லையே?

சுபேதார் பக்கம் திரும்பிப் பார்த்தேன். அவனும் என் பக்கம் திரும்புகிறான். ஆனால் என்னை நேராகப் பார்க்க முடியவில்லை அவனால்.

தூரத்தில் சில ஜனங்கள் வந்து நிற்பது போல் படுகிறது. 'ஆர்ம்ட் போலீஸ்' பயத்தில் ரொம்பப் பேர் வரவில்லை என்று நினைக்கிறேன். இல்லையென்றால் இத்தனை நேரத்தில் இந்த இடம் ஒரே ஜன சமுத்திரமாக ஆகியிருக்க வேண்டியது. ஒரு குவாட்டர்ஸ் கதவு திறக்கிறது. எல்லாருக்குமே மரித்த தேகத்தைப் பார்க்க ஒரு ஆவல். அண்ணாவின் கழுத்தில் ஒரு சிறிய மரு உண்டு. ஒவ்வொரு வருஷமும் குளிர் காலத்தில் காவித் துணியுடுத்திய பஞ்சாபி ஜோசியர்கள் பூர்ணியாவுக்கு வருவது வழக்கம். அதில் ஒருவன் ஒரு சமயம் ஆசிரமத்துக்கு வந்திருந்தான். சற்றுக் கொச்சையான பாஷையில் சிரித்துக் கொண்டே சொன்னான்; ''நான் ஒரு fortune teller'' என்று.

அண்ணா ஆட்சேபித்த போதிலும், அவன் கையைப் பார்த்து விட்டுச் சொன்னான்: ''உங்களுக்கு எண்பது வயதில் தான் சாவு'' என்று. வேஷம் போட்டுக் கொண்டு பொய்ச் சொல்லித் திரியும் கூட்டம்! அவன் சொன்னதைக் கேட்டுச் சிரித்து விட்டு அண்ணா சொன்னான்: ''இது காங்கிரஸ் ஆபீஸ், உனது இஷ்டத்துக்காகக் கொடுப்பதற்கு இங்கு ஒன்றுமில்லை'' என்று.

அது சரி! பயத்தினால் அண்ணா மூர்ச்சை அடைந்து விழுந்து விட்டாலோ? அந்த நிலையிலேயே அவனைத் தூக்கு மேடையில் நிறுத்தி விடுவார்களோ? அப்படியும் செய்வார்களா என்ன?

தூக்குக் கயிற்றைப் பற்றி மேட்டும் வார்டரும் சண்டை போட்டுக் கொள்கிறார்கள். ஜெயிலில் முன்பு ஒரு தரம் நடந்த சம்பவம் ஞாபகத்துக்கு வருகிறது. தூக்குக் கயிற்றைச் சிறுசிறு துண்டுகளாக வெட்டி எடுத்துக் கொள்வதற்காக முயற்சி செய்து கொண்டிருந்தார்கள். மழுங்கின கத்தியால் எண்ணெய் தடவிய கயிற்றை வெட்டமுடியவில்லை. நழுவி நழுவி வந்து கொண்டிருந்தது. அதிர்ஷ்டம் இருந்தவர்களுக்குச் சில துண்டுகள் கிடைத்தன. இது உடனே பலன் அளிக்கும் வசீகரணக் கவசமாகக் கருதப்படுகிறதாம்.

உள் கதவு திறக்கிறது. சூப்பிரண்டெண்ட், மாஜிஸ்ட்ரேட், சிவில் சர்ஜன், ஜெயிலர், வார்டர், வார்டர், வார்டர், நாய்க்குட்டி, வார்டர்.

எல்லார் முகத்திலும் வலுக்கட்டாயமாக வரவழைக்கப்படும் புன்னகை தெரிகிறது. வழக்கத்துக்கு மாறாக விசேஷமாக ஒன்றும் நடந்து விடவில்லை என்று காட்டிக்கொள்ள விரும்புகிறார்கள். தினமும் டீ குடிக்கும் நேரம் சிறிது தள்ளிப் போய் விட்டது. மாஜிஸ்ட்ரேட், சிவில் சர்ஜன் இருவரையும் தம் வீட்டில் டீ குடிக்க அழைக்கிறார் சூப்பிரண்ட். கேட் திறக்கப்படுகிறது. நாய் முன்னால் வழி காட்டிக் கொண்டு போகிறது. இரண்டு கார்கள் அதன் பின்னாலேயே போய்ப் பங்களாவின் முன் நிற்கின்றன. லாரி டிரைவர் தயாராக வண்டியில் ஏறி ஸ்டியரிங் வீலைப் பிடித்துக்கொண்டு உட்காருகிறான். வார்டர் உள் கதவைச் சிறிது திறந்து வைத்துக் கொண்டே இருக்கிறான். இப்பொழுது தான் வரும்... இதே கணத்தில்...

''அரே, நீலு பாபு! நமஸ்கார். இவ்வளவு விடியற்காலையில், இங்கே எப்படி? இண்டர்வியூ கேட்பதற்காகவா? ஸி.ஐ.டி. எட்டு மணிக்கல்லவோ வருவான்? அதற்குள் என் வீட்டுக்குப் போய்க் கொஞ்சம் டீ சாப்பிடலாம். என்ன சொல்கிறீர்கள்?''

அகோர் பாபு பதில் சொல்வதற்கு அவகாசமே கொடுக்கவில்லை. ரொம்பக் கஷ்டப்பட்டு ஒரு மாதிரியாகச் சொன்னேன்: ''ஹூம், இன்டர்வியூக்காக வரவில்லை. வேறு காரியமாக வந்திருக்கிறேன் இன்று. அண்ணா வந்து....'' இதற்கு மேல் பேச முடியவில்லை. உதடுகள் துடித்தன. ஆனால் வார்த்தைகள் வெளி வரவில்லை. ஏதோ ஒரு முரட்டுக் கை என் கழுத்தைப் பிடித்து அமுக்குவது போன்ற உணர்ச்சி. கண்களில் நீர் வந்துவிட்டது. வேறுபக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டு ஏதோ ஒருவிதமாக மாஜிஸ்ட்ரேட்டின் ஆர்டரை அவர் கையில் கொடுத்தேன். அகோர் பாபு கடிதத்தைப் படிக்கிறார். கண்களில் வடியும் நீரைத் துடைத்துக் கொள்கிறேன்.

''அரே! இதுவா! அப்போ உங்களுக்கு விஷயம் தெரியாதா?'' கைகளை என் கழுத்தைச் சுற்றி போட்டுக்கொண்டு ஆலிங்கனம் செய்கிறார்.

''கவர்மென்டின் கடிதம் வந்துவிட்டது. தூக்குத் தண்டனை ஆர்டர் வரையறையின்றித் தள்ளிப் போடப்பட்டுள்ளது.''

'ஆ! என்ன சொல்கிறார்? அகோர் பாபுவுக்குப் பைத்தியம் கியித்தியம் பிடித்து விட்டதா என்ன?' அவர் கைகள் இரண்டையும் கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறேன். அவர் சொல்லிக் கொண்டே போகிறார்: ''இராணுவ இலக்குகள் தவிர, பாரதத்தில் மற்ற எல்லா இடங்களிலும் 1942-ஆம் வருஷத்தின் இயக்கத்தின் விளைவாக நடந்த சதி வேலை காரணமாக விதிக்கப்பட்டிருந்த தூக்குத் தண்டனைகள் தவணையில்லாமல் ஒத்தி வைக்கப்பட்டுள்ளன. இந்த ஆர்டர் வருவதற்கு முன்பு சில இடங்களில் தூக்கு நிறைவேற்றப்பட்டுள்ளன. யார் பேரில் கொலைக்குற்றம் (மர்டர் சார்ஜ்) இருக்கிறதோ அவர்கள் தப்பிக்கவில்லை. இன்று ஒரு சாதாரண கைதிக்குத் தூக்குத் தண்டனை இருந்தது. அவன் மூன்றும் நம்பர் ஸெல்லில் இருந்தான். முந்தாநாள் தான் ஆர்டர் வந்தது. உங்கள் அண்ணா ஒன்றும் நம்பர் ஸெல்லிலிருந்து மாற்றப்படவில்லை. துரை சொன்னான்: 'வீணாக எதற்காக மாற்றிக்கொண்டு கஷ்டப்பட வேண்டும்' என்று. அதனால் தான் இந்த misunderstanding. தூக்குத் தண்டனை போடும் தேதியை முன்னதாகவே கைதிகளுக்குச் சொல்வது ஜெயில் விதி அல்ல. ஏதோ ஒரு குத்துமதிப்பில் ஜெயில் ஊழியர்கள் தங்களுக்குத் தானே ஊகித்து நிச்சயித்துக் கொள்கிறார்கள். அதனால் தான், யாரோ உங்களுக்குத் தப்பாகச் சொல்லியிருக்கிறார்கள்.''

என்னால் ஒன்றுமே பேச முடியவில்லை. ஒரே சாந்தம். நாடிகளில் ரத்தம் ஓடுவது நின்றுவிட்டது. மரங்களில் ஓர் இலைகூட அசையவில்லை. கிரகங்கள் தங்கள் கதியை மறந்து ஸ்தம்பித்துப் போய் நிற்கின்றன. வீரர்களை ஈன்றெடுக்கும் வஸுந்தரா அபர்ணா ரூபியாக என் கண்முன் நிற்கிறாள். இந்தத் தெய்விகக் காட்சி உடைந்து விடுமோ என்ற பயத்தில் மூச்சுக்கூட விடமுடியவில்லை.

நாளங்களில் ரத்தம் மறுபடியும் ஓட ஆரம்பிக்கிறது. சில மரங்களில் பறவைகள் ஒலிக்கின்றன. காலைக்காற்றில் ஒரு சில இலைகள் கூட அசைகின்றன. லாஸ்யமயமான பிருதிவி மறுபடியும் நானாவிதமான சத்தங்களுக்கு இசைவாக விளையாட ஆரம்பிக்கிறாள். கல்லால் ஆன ஜெயில் கேட்டின் மேல் உஷை தன் ரத்தமயமான கிரணங்களை அள்ளி வீசுகிறாள்.

---